மல்லிகை வெளியீடு : 35

முதற்பதிப்பு, ஜனவரி 1962

விலை ரூபா 7—50

அச்சிட்டோர் :

ஜெனரல் பிரிண்டர்ஸ்

பூவிருந்தவல்லி பெருஞ்சாலை,

சென்னை-3

# மகாவம்சம்

இலங்கைத் தீவின் புராதன வரலாற்றைக் கூறும் நூல் மகாவம்சம். இதை இயற்றியவர் மகாநாமன் என்பவர் என்றும், இயற்றப்பட்ட காலம் கி. பி. ஆறும் நூற்றாண்டு என்றும் ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.

இதனை முற்றிலும் ஆதார பூர்வமான வரலாறாக எடுத்துக்கொள்வது சரியல்ல. அக்கால மரபை ஒட்டி, வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு இயற்றப்பட்ட ஒரு புராண நூலாகக் கொள்வதுதான் பொருத்தமாகும் என்பது அறிஞர்கள் கருத்து.

பாரத நாட்டில் கிளைத்த பௌத்த மதம், அண்டை நாடான இலங்கையில் வேரூன்றித் தழைத்த விவரத்தை விரிவாகக் கூறுவதே இந் நூலை இயற்றியவருடைய நோக்கமாக இருந்திருக்க வேண்டும். மதச் சார்புள்ள வரலாறு என்னும்போது, பக்தி காரணமாக நம்ப முடியாத பல நிகழ்ச்சிகள் இடம் பெற்று விடுவது இயல்பேயாகும். அறிவுக்குப் பொருந்தாததை விலக்கி, பொருந்துவதும் பயன் படுவதுமான விவரங்களை ஏற்றுக்கொள்ளும் மரபை யொட்டிப் பார்த்தால், வரலாற்றுச் செய்திகளை அறிய மகாவம்சம் பெரிதும் துணை புரியும்.

பாரத நாட்டுக்கும் இலங்கைக்கும் பல நூற்றாண்டுகளாகவே தொடர்பு இருந்து வந்திருக்கிறது. இலங்கைக்கு ஆதியில் சென்று முறையான ஆட்சியை அமைத்தவர்களும் இந்தியர்களேயாவர்.

மகாவம்சத்தைப் பற்றிய குறிப்பு தமிழ் இலக்கியங்களிலும், வரலாற்று நூல்களிலும் காணப்படுகிறது. பாலி மொழியில் உள்ள மகாவம்சம் இதுவரை தமிழில் மொழி பெயர்க்கப் படவில்லை என்றே கருதுகிறேன். இது தமிழில் வருவது, ஆராய்ச்சியாளர்க்கும் அறிவுத்துறையில் ஈடுபாடு கொண்டவர்களுக்கும் பயன்படும் என்ற எண்ணமே இந்தப் பெரும் பொறுப்பைத் துணிந்து மேற்கொள்ள என்னைத் தூண்டி ஊக்கமளித்தது.

எனக்குப் பாலி மொழி தெரியாது. திரு. வில்ஹெல்ம் கெய்கர் என்பவரால் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டு இலங்கை சர்க்காரால் அதிகார பூர்வமான நூலாக வெளியிடப்பட்ட பதிப்பையே தமிழ்ப்படுத்தியுள்ளேன். இம் முயற்சியில் எனக்கு ஆலோசனைகள் கூறி, ஆதரவளித்த அறிஞர்கள் அனைவருக்கும் என் இதயபூர்வமான நன்றி உரியது.

குறைகளைப் பொறுத்து குணங்கண்டு ஆதரிக்குமாறு அனைவரையும் கேட்டுக் கொள்கிறேன்.

**எஸ். சங்கரன்**



# பொருளடக்கம்

# மகா வம்சம்

## முதல் அத்தியாயம்

## புத்தர் வருகை

1. புனித சம்புத்தரின் பொற்பாதங்களை வணங்கி எவ்விதத்திலும் குறையில்லாததும் எல்லாம் நிறைந்ததுமான மகா வம்சத்தைக் கூறத் தொடங்குகிறேன்.

2. புராதன முனிவர்களால் தொகுக்கப்பெற்ற அது (மகா வம்சம்) இங்கே விரிவாகக் கூறப்பட்டுள்ளது. பழைய நூல் சுருக்கமானது; பல இடங்களில் ஒரே விஷயம் திரும்பத் திரும்பச் சொல்லப்பட்டுள்ளது.

3. இப்போது சொல்வது அத்தகைய குறைகள் இல்லாதது. புரிந்துகொள்ளவும் நினைவில் வைத்துக்கொள்ளவும் எளிதானது. உற்சாகத்தையும் உள்ள மகிழ்வையும் அளிப்பது; வழிவழியாக வந்த வரலாறு.

4. உற்சாகத்தையும் உள்ள மகிழ்வையும் அளிக்கும் பகுதிகளைக் கவனமாகக் கேளுங்கள்.

5. பழங்காலத்தில் சம்புத்த தீபங்கரரைப் பார்த்து நமது வீரர் உலகத்தைத் தீமையின் பிடிப்பில் இருந்து விடுவிப்பதற்காகப் புத்தராகப் பிறக்க முடிவுசெய்தார்.

6. சம்புத்தரை வணங்கிய பிறகு, அதேபோல் கொண்டஞ்ஞர், மங்களர், சுமணர், புத்த ரேவதர், இவர்களைப் போன்ற மகா முனிவ ராகிய சோபிதர், சம்புத்த அனோமதர்சி,

7. பதுமர், நாரதர், சம்புத்த பதுமுத்தரர், ததாகத சுமேதர்,

8. ஸுஜாதர், பிரியதரிசி, ஆசான் அத்ததரிசி, தர்ம தரிசி, சித்தார்த்தர், திஸ்ஸர்,

9. புஸ்ஸர், விபாசி, சம்புத்தஸிகி, ஆற்றல் வாய்ந்த சம்புத்த வேஸபர், சம்புத்த ககு சந்தர்,

10. இவர்களைப் போன்ற கோணகமனர், அருள் ஞானி காசியபர்–ஆகிய இந்த இருபத்துநான்கு சம்புத்தர்களுக்கும் வணக்கம் செய்துவிட்டு,

11. அவர்களின் அருள்பெற்று, தாம் எதிர்காலத்தில் புத்த பதவியை அடையப்போவதைப் பற்றி அவர்களிடமிருந்து தீர்க்க தரிசனம் அருளப்பெற்று எல்லாக் கடமைகளையும் நிறைவேற்றி உன்னதமான போதி ஞானத்தை அடைந்த கோதம புத்தர் உலகைத் துயரத்திலிருந்து விடுவித்தார்.

12. மகத நாட்டிலுள்ள உருவேலாவில்* மகா முனிவர் போதிமரத்தின் கீழ் அமர்ந்து வைசாக பௌர்ணமியன்று மிகவுயர்ந்த ஞானோதயம் பெற்றார்.

13. தாம் உயர்ந்த புத்த ஞானம் அடைந்ததை அறிந்து அதனை மற்றவரும் உணரும்படி

* உருவேலா - புத்த கயா. வங்காளத்தில் உள்ளது.



தியானத்தில் அமர்ந்து ஏழு வார காலம் அவர் அங்கு தங்கியிருந்தார்.

14. பிறகு வாரணசிக்குச் சென்று தர்ம சக்கரத்தை உருட்டினார் (உபதேசம் செய்தார்). மாரிக்காலத்தில் அங்குத் தங்கியிருந்தபோது அவர் அறுபது பேரை அரகந்தர்களாகச் செய்தார்.

15. உலகத்தில் தர்மத்தைப் போதிப்பதற்காக இந்தப் பிக்குகளை அனுப்பிய பிறகு பத்தன் என்பவருடைய முப்பது தோழர்களையும் தமது மார்க்கத்தில் மாற்றி மாரிக்காலம் முழுவதும் உருவேல வனத்தில்,

16. காசியபரைத் தலைவராகக் கொண்டிருந்த ஆயிரம் ஜடிலர்களைத் தமது மார்க்கத்துக்கு மாற்றுவதற்காக வசித்தார்.

17. உருவேல வனத்தில் காசியபர் செய்த பெரிய யாகம் முடிவடையும் தறுவாயில் இருந்தது. அவர், இவரைத் தம்மிடம் வரக் கூடாதெனத் தீர்மானித்தார்.

18. பின்னர், எதிரிகளை எளிதில் வெற்றி கொள்ளும் ஏந்தல் உத்தரகுருவில் உணவு எடுக்கச் சென்று, அவ்வுணவை அனோதத்த ஏரிக்கரையில் மாலை நேரத்தில் அருந்திய பிறகு,

19. போதி ஞானமடைந்த ஒன்பதாவது மாதத்தில் பூச பௌர்ணமியன்று இலங்கையில் தமது

வாரணசி - காசி.

அரகந்த் - போதனை செய்யத் தகுதி வாய்ந்தவர்கள்.

ஜடிலர் - ஜடா முடி தரித்த சந்நியாசிகள்.

உத்தரகுரு - இந்தியாவுக்கு வடக்கே புராண புருஷர்கள் வாழும் இடம்.

அனோதத்த ஏரி - இமய மலையிடையே அமைந்துள்ள ஏழு பெரிய ஏரிகளில் ஒன்று.

தர்மத்தைப் போதிப்பதற்காகத் தாமே அங்குப் புறப்பட்டார்.

20. தமது மார்க்கம் பிற்காலத்தில் புகழுடன் திகழப் போகும் இடம் இலங்கை என்பது அவருக்கு அப்போதே தெரிந்திருந்தது. அப்போது இலங்கையில் யக்ஷர்கள் நிரம்பியிருந்தனர். அவர்களை அங்கிருந்து முதலில் விரட்ட வேண்டும் என்பதும் அவருக்குத் தெரியும்.

21. இலங்கையின் மத்தியில் அழகிய நதிக் கரையில் மூன்று யோசனை நீளமும் ஒரு யோசனை அகலமும் உள்ள, மனதுக்கு ரம்யமூட்டும் மகா நாகவனத்தில் யக்ஷர்கள் வழக்கமாகக் கூடும் இடம் உள்ளது என்பதும் அவருக்கு தெரியும்.

22. அப்போது தீவிலுள்ள எல்லா யக்ஷர்களும் அந்த இடத்தில் கூடியிருந்தனர்.

23. இந்த யக்ஷர்களின் பேரவைக் கூட்டத்துக்கு பகவன் புத்தர் சென்றார். அங்கு கூட்டத்தின் நடுவில்,

24. அவர்களுடைய தலைக்கு மேலாக, பிற்காலத்தில் மஹியங்கான ஸ்தூபம் அமைந்த இடத்தில் அவர் வானத்திலே நின்றார்.

25. வான வெளியில் இருந்து மழையையும், புயலையும் இருளையும் உண்டாக்கி அவர்கள் மனதில் அச்சத்தை உண்டாக்கினார். பயத்தினால் ஆட்கொள்ளப்பட்ட யக்ஷர்கள் தங்களுடைய பயத்தைப் போக்குமாறு அச்சமற்ற இவரை வேண்டினர்.

26. மிரண்டு போன யக்ஷர்களைப் பார்த்து பகவன் புத்தர், "யக்ஷர்களே! உங்களுடைய இந்த பயத்தையும் துயரத்தையும் போக்குகிறேன்.



27. "இங்கே நான் உட்காருவதற்கு ஓர் இடம் கொடுங்கள்" என்று கூறினார். யக்ஷர்கள். "இறைவனே எங்கள் தீவு முழுவதையும் வேண்டுமானாலும் தருகிறோம். எங்களுக்குப் பயத்திலிருந்து விடுதலை அளியுங்கள்" என்று கூறினார்கள்.

28. அவர் யக்ஷர்களுடைய பயத்தையும் குளிரையும் இருட்டையும் போக்கிய பிறகு அவர்கள் அவர் உட்காருவதற்காக அளித்த தோலைப் பரப்பி,

29. அதில் அமர்ந்து கொண்டு, அத்தோல் ஆசனத்தை எரிதழல் சூழ்ந்து கொண்டே பரவலாக வளரும்படிச் செய்தார். எரிதழலைக் கண்டு பயந்து போன அவர்கள் அப்புறமாகச் சூழ்ந்து நின்று கொண்டனர்.

30. பின்னர் பகவன் புத்தர் ரம்யமான கிரித்வீபத்தை அருகில் வரச் செய்தார். யக்ஷர்கள் யாவரும் அதில் போய் தங்கியதும் அதனை மீண்டும் பழைய இடத்துக்குத் திரும்பி போகச் செய்தார்.

31. பிறகு பகவர் தமது தோல் ஆசனத்தை மடித்து வைத்தார். தேவர்கள் வந்து கூடினர்.

32. தேவர்கள் கூட்டத்தில் பகவர் தமது தர்மத்தைப் போதித்தார். கோடிக் கணக்கான ஜீவர்கள் மதம் மாறினர். கணக்கற்றவர்கள் திரிசரண மடைந்து சீலத்தைப் பெற்றனர்.

33. சுமண கூட பர்வதத்தைச் சேர்ந்த தேவ குமாரன் மகா சுமணன் ஞான மார்க்கத்தைப்

**கிரித்வீபம்**—இது எதைக் குறிக்கிறது என்று நிச்சயமாகத் தெரியவில்லை. நாகர் மலைத்தீவு என்னும் நிக்கோபார் தீவாக இருக்கக் கூடும் என்பது சிலர் கருத்து.

**சுமண கூடம்**—ஆடம்ஸ் பீக்.

பின்பற்றியதுடன் வணங்கத்தக்க அவரை வணங்குவதற்கு ஏதேனும் தரும்படி கேட்டான்.

34. ஜீவர்களுக்கு நல்லதையே தரும் அவ்வள்ளல் தமது கருநீல நிறமுள்ள சிகையைக் கை நிறைய எடுத்து அவனிடம் கொடுத்தார்.

35. அதனை அற்புதமான தங்கக் கலசத்தில் பெற்றுக் கொண்ட சுமணன் குருநாதர் அமர்ந்திருந்த இடத்தில் ஏழு முழ உயரம் நவரத்தினங்களைக் குவித்து அதன் மீது சிகையை வைத்து,

36. அதன் மீது ஸ்தூபம் எழுப்பி அதனை வணங்கி வந்தான்.

37. சம்புத்தர் நிர்வாண மோட்சம் அடைந்த பிறகு சாரிபுத்ர தேரருடைய சீடரான சரபு தேரர் தமது இரித்தி சக்தியினால் எரிந்து கொண்டிருக்கும் சிதையிலிருந்து,

38. புத்தருடைய காறை எலும்பைப் பெற்று இங்கே (இலங்கை) கொண்டு வந்தார். பிக்குகள் சுற்றிலும் சூழ்ந்திருக்க அவர் அங்கே அதே சேதியத்தில்,

39. வைத்து பொன்னிறக் கற்களால் மூடி, அந்த சித்தி செய்யும் புருஷர் ஸ்தூபத்தைப் பனிரெண்டு முழ உயரமுள்ளதாக அமைத்து அங்கிருந்து போய்விட்டார்.

40. மன்னன் தேவனம்பிரிய திஸ்ஸனுடைய தம்பி மகனை உத்த சூளாபயன் அதிசயமான இந்த சேதியத்தைப் பார்த்து அதனை முப்பது முழ உயரமுடையதாகக் கட்டினான்.

---

**சேதியம்**—சைத்யம் - ஸ்தூபி.



41. துட்டகாமணி மன்னன் தமிழர்களுடன் போரிட்டபோது, இந்த இடத்தில் தங்கியிருக்க நேரிட்டது. அப்போது இந்தச் சேதியத்தை எண்பது முழ உயரமுள்ளதாகக் கட்டினான்.

42. இந்தவிதமாக மஹியங்கான தூபம் பூர்த்தி ஆயிற்று.

43. இவ்விதமாக மனிதர்கள் வசிக்க ஏற்ற இடமாக நமது தீவை செய்தபிறகு அம் மகாவீரர் உருவேல வனத்துக்குத் திரும்பிச் சென்றார்.

**மஹியங்கான விஜயம் இங்கே முடிகிறது.**

44. இரக்கமே உருவான பகவன் உலகமுழுவதும் புனிதமடைந்ததில் மன மகிழ்ந்து, ஞானமடைந்த ஐந்தாவது ஆண்டில் ஜேத வனத்தில் வசித்துக் கொண்டிருந்த போது,

45. ரத்தின சிம்மாசனத்துக்காக ஒரு யுத்தம் ஏற்படப்போகிறது என்பதைக் கண்டார்.

46. நாகர்களான மகோதரனும், குலாதரனும் மாமன் மருமகனவர். இவர்களுக்கிடையே போர் மூண்டது.

47. சம்புத்தர், சைத்ர மாதம் கிருஷ்ண பட்சத்தில் உபோசத தினத்தன்று அதிகாலையில் புனிதமான பிட்சா பாத்திரத்தையும் ஆடையையும் எடுத்துக் கொண்டு நாகர்களிடம் இரக்கம் கொண்டவராக நாகத்வீபத்தை யடைந்தார்.

---

**ஜேதவனம்**—கோசல நாட்டில் சாவதிக்கு அருகிலுள்ள ஒரு வனம்.

**உபோசத தினம்**—பௌத்தர்களுக்குப் புனிதமான தினம். இது மாதத்தில் நான்கு முறை வரும். அமாவாசை, பௌர்ணமி, அமாவாசை கழிந்த எட்டாவது நாள். பௌர்ணமி கழிந்த எட்டாவது நாள் ஆகியவை இவை.

**நாகத்வீபம்**—இலங்கையின் வடமேற்குப் பகுதி.

48. மகோதர நாகன் அப்போது அரசனாக இருந்தான். அதீத சக்திகள் அவனிடம் இருந்தன. நாகநாடு கடலில் ஐநூறு யோசனைக்குப் பரந்து இருந்தது.

49. கண்ணவர்த்தமான பர்வதத்திலிருந்த நாக மன்னனுக்கு மகோதரனுடைய தங்கையை மணம் செய்து கொடுக்கப்பட்டிருந்தது. அவளுடைய புத்திரன் தான் குலாதரன்.

50. அவனுடைய தாயாரின் தந்தை, அவன் தாய்க்கு அற்புதமான ரத்தின சிம்மாசனம் ஒன்றை அளித்திருந்தார்.

51. கண்ணவர்த்தமான நாகமன்னன் இறந்ததும் மாமனுக்கும் மருமகனுக்கும் இடையே இந்த சண்டை மூளும்போல் இருந்தது. மலைப் பகுதியிலிருந்த நாகர்களும் அற்புத சக்திகளால் பலம் பெற்றிருந்தனர்.

52. சமிதி சுமணன் என்ற தேவன் ஜேத வனத்தில் தன் இருப்பிடமாகக் கொண்டிருந்த ராஜாயதன விருட்சம் ஒன்றை எடுத்துக் கொண்டு,

53. அதனை புத்தர்மீது வெயில் படாமல் குடை போலப் பிடித்துக்கொண்டு அவருடைய அனுமதியுடன் முன்பு அவன் தங்கியிருந்த நாகத்வீபத்துக்கு வந்தான்.

54. அந்த தேவன் தன்னுடைய முன் ஜென்மத்தில் நாகத்வீபத்தில் மனிதனாக இருந்தான். இந்த ராஜாயதன விருட்சம் பின்னர் நிலைபெற்ற அந்த இடத்தில் பஸ்ஸிக புத்தர்கள் பலர் உணவு அருந்துவதை அவன் பார்த்தான்.

---

பஸ்ஸிக புத்தர்கள்—இவர்களும் நிர்வாணம் அடைந்தவர்கள்தாம். ஆனால் உபதேசகர்கள் அல்லாதவர்கள்.



55. அதனைக் கண்டதுமே மனம் மகிழ்ந்தவனாக அவர்கள் பிட்சா பாத்திரத்தைச் சுத்தப்படுத்த கிளைகளைக் கொடுத்தான்.

56. அதனால் மறு ஜென்மத்தில் ரம்மிய மிகு ஜேத வனத்தில் ராஜாயதன விருட்சத்தில் பிறவியெடுத்தான். அந்த மரம் கோட்டை வாயிலருகே இடம் பெற்றிருந்தது.

57. தேவ தேவரானவர் அந்தத் தேவனுடைய நலனைக் கருதியும், அதன் மூலம் நமது நாட்டுக்கு ஏற்படக்கூடிய நன்மையை உத்தேசித்தும், அவனை மரத்துடன் இங்கு (இலங்கைக்கு) அழைத்து வந்தார்.

58. போர்க் களத்துக்கு மேலாக வானவெளியில் சஞ்சரித்த வண்ணம் மன இருளை அகற்றும் மகானாகிய குருநாதர் நாகர்கள் மீது அடர்ந்த இருள் கவியச் செய்தார்.

59. பீதியினால் துயரமுற்றவர்களைத் தேற்றி மீண்டும் அங்கு ஒளி ஏற்படச் செய்தார். அருள் ஞானியைக் கண்டதும் அவர்கள் களிப்புடன் அவர்தம் பாதத்தைப் போற்றினர்.

60. பின்னர் அச்சந் தீர்க்கும் அண்ணல், அவர்களுக்குச் சமாதான நெறியைப் போதித்தார். போரிட்ட இரண்டு நாகர்களும் மகிழ்வுடன் ஒன்றுபட்டு தங்கள் சண்டைக்குக் காரணமாக இருந்த சிம்மாசனத்தை புத்தருக்கே அளித்தனர்.

61. புத்தர் கீழே இறங்கி அங்கிருந்த ஓர் ஆசனத்தில் அமர்ந்து கொண்டார். நாக மன்னர்கள் அளித்த அமுதன்ன உணவையும் பானத்தையும் அருந்தினர்.

62. சமுத்திரத்திலும் நிலத்திலும் வசித்த எண்பது கோடி நாகர்களுக்கு உபதேசம் செய்து திரி சரணமளித்து தமது பஞ்சசீலத்தில் ஈடு படுத்தினர்.

63. மகோதரனுடைய தாய் மாமனும் கல்யாணி மன்னனுமாகிய மணியக்கிகன் அந்தப் போரில் கலந்து கொள்ள அங்கு வந்திருந்தான்.

64. முன்பு புத்தர் முதல்முறை வந்திருந்தபோதே அவரது உபதேசத்தைக் கேட்டு திரிசரணத் தைத் தழுவி பஞ்சசீலத்தை ஏற்றுக் கொண் டிருந்த அவன் இப்போது ததாகதரிடம் இவ்வாறு வேண்டினன் :

65. "இறையே! எங்களிடம் தாங்கள் காட்டிய கருணை மகத்தானது. இங்கு தோன்ருமல் இருந் திருந்தால் நாங்கள் எல்லோரும் சாம்பலாகி மறைந்திருப்போம்.

66. "தங்களுடைய கருணை மேலும் அதிகமாக எனக் குக் கிட்டட்டும். அன்புருவானவரே! ஒப்பற்ற வரே! மீண்டும் ஒரு முறை எமது நாட்டுக்கு விஜயம் செய்யக் கருணை கூர்ந்து அருள் புரிய வேண்டும்."

67. அவனுடைய நாட்டுக்கு விஜயம் செய்யத் தம் முடைய சம்மதத்தை, புத்தர் மௌனத்தின் மூலம் தெரிவித்த பின்னர் அவன் அதே இடத் தில் புனித நினைவுச் சின்னமாக ராஜாயதன விருட்சத்தை நட்டான்.

68. பின்பு உலக நாயகர் அந்த விருட்சத்தையும், ரத்தின சிம்மாதனத்தையும் நாக மன்னர் களிடம் கொடுத்து அதே இடத்தில் வைத்து அதனைப் பூசித்து வருமாறு சொன்னர்.

69. 'இவை என்னல் உபயோகிக்கப்பட்டவை. அந்த ஞாபகார்த்தமாக இவற்றைப் பூசித்து



வருவீர்களாக. என்னல் நேசிக்கப்பட்ட இவை உங்களுக்கு மகிழ்வையும் ஆசியையும் அளிக் கும்.'

70. அருளாளர் இவ்வாறு சொன்னதுடன் மேலும் பல உபதேசங்களை நாகர்களுக்கு அருளிவிட்டு அகில உலகங்கட்கும் ரட்சகரான பகவான் ஜேத வனத்துக்குத் திரும்பினர்.

**நாகத்வீப விஜயம் இங்கே முடிகிறது.**

71. இதற்குப் பிறகு மூன்ருவது ஆண்டில் நாக மன்னன் மணியக்கிகன் சம்புத்தரிடம் வந்து அவரைச் சங்கத்தாருடன் தனது நாட்டுக்கு வருமாறு அழைத்தான்.

72. அவர் ஞானமடைந்த எட்டாவது ஆண்டில் ஜேத வனத்தில் தங்கி இருந்தபோது,

73. ஐநூறு பிக்குகள் சூழ வைசாக மாதம் இரண் டாம் நாள், பௌர்ணமியன்று உணவு கொள்ள வேண்டிய நேரம் அறிவிக்கப்பட்டதும்,

74. பயத்தை வென்றவர் – அறிஞர்க்கறிஞர் உத்த ரீயத்தைப் போர்த்துக்கொண்டு, பிட்சா பாத்திரத்தைக் கையிலேந்தி மணியக்கிக னுடைய கல்யாணி நாட்டுக்குச் சென்ருர்.

75. அங்கே ரத்தினங்கள் பதித்த மண்டபத்தின் கீழே பிக்குகளுடன் அமர்ந்தார். அங்கு அவருக்கு விலை மதிப்பற்ற சிம்மாதனம் அமைக் கப் பட்டிருந்தது. இந்த இடத்தில்தான் பின்னல் கல்யாணி சேதியம் கட்டப்பட்டது.

76. மிகவும் மகிழ்ச்சியடைந்த நாக மன்னனும் அவ னுடைய பரிவாரங்களும் சத்திய தேவருக்கும் அவருடைய சீடர்களுக்கும் அமுதன்ன உணவும் பானமும் படைத்து உபசரித்தனர்.

77. இரக்கமே உருவான பகவான் அங்கு உபதேசம் செய்த பின்பு எழுந்து அங்கிருந்து புறப்பட்டார். சுமணகூட பர்வதத்தில் கண்ணுக்குப் புலனுகுமாறு தமது பாதச்சுவடுகளைப் பதித்துச் சென்ருர்.

78. மலையடிவாரம் அவருக்கு விருப்பமளிப்பதாக இருந்ததால் அங்கு பிக்குகளுடன் அன்றையப் பொழுதைக் கழித்தபின்பு அவர் தீகவாபிக்குப் புறப்பட்டார்.

79. பின்னர் சேதியம் எழுந்த அந்த இடத்தைப் புனிதப்படுத்த அங்கு பகவான் தமது சீடர்களுடன் அமர்ந்து தியானம் செய்தார்.

80. பின்னர் மகாமுனிவர் அந்த இடத்திலிருந்து எழுந்தார். தாம் போவதற்குத் தகுதியான இடம் எது? தகுதியற்ற இடம் எது என்பதை அறிந்திருந்த அவர் பின்னல் மகாமேகவன ஆராமா எழுந்த இடத்துக்குச் சென்ருர்.

81. பின்னர் புனித போதி விருட்சம் நடப்பட்ட இந்த இடத்தில் அவர் தமது சீடர்களுடன் அமர்ந்து தியானத்தில் ஈடுபட்டார்.

82. தியானத்தில் அமர்ந்த இடத்தில்தான் பின்னல் பெரிய தூபம் எழுந்தது. அதன்பின் முன் போலவே தூபராமா அமைந்தது. தியானத்திலிருந்து எழுந்ததும் பின்னர் சிலாசேதியம் அமைந்த இடத்துக்குச் சென்ருர்.

83. பிக்குகளின் தலைவர் அங்கு கூடியிருந்த தேவர்களுக்கு உபதேசம் செய்ததும் அறிவொளியின்

**தீகவாபி** - இலங்கையின் கிழக்கு மாகாணத்திலுள்ள கண்டியக் காட்டு ஏரியாக இது இருக்கலாம் என்று கருதப்படுகிறது.

**மகா மேகவன ஆராமா** - அனுராதபுரத்துக்குத் தெற்கே இருந்த ஒரு வனம்



எல்லாப் பாதைகளையும் கடந்து பேரொளி பெற்ற பெருமான் ஜேத வனத்துக்குத் திரும்பினர்.

84. எதிர்காலத்தில் இலங்கையின் உய்வை யெண்ணி அப்போது இலங்கையில் இருந்த நாகர்களுக்கும் அசுரர்களுக்கும் அதிகமான அளவு நன்மைகளைச் செய்வதற்காக பேரருள் பெருந்தகை இவ்வாருக இந்த அழகிய தீவுக்கு மூன்று முறை விஜயம் செய்தார். உண்மையின் ஒளி வீசி ஜொலிக்கும் இத்தீவு அதனல்தான் பௌத்தர்களுடைய பெருமதிப்புக்கு உள்ளானதாயிற்று.

**மகாவம்சத்தில் முதல் அத்தியாயமான புத்தர் வருகை முற்றும்.**

## இரண்டாம் அத்தியாயம்

# மகா சம்மத வம்சம்

1. மகா சம்மதன் என்ற மன்னருடைய வம்சத்திலே உதித்தவர் மகா முனிவர். இந்த யுகத் தொடக்கத்தில் மகா சம்மதன் என்றொரு மன்னர் இருந்தார்.

2. ரோஜா, வரரோஜர்களும் இரு கல்யாணகர்களும் (கல்யாண, வரகல்யாண) உபோசதரும், இரு மாந்தாதர் மற்றும் இருவரான சரகா, உபசரா,

3. சேதிய, முகால, மகா முகால, முகாலிந்த, சாகரவும், சகரதேவன் என்ற பெயருடையவனும்,

4. பரத, அங்கீரஸ, ருஸி, சுருஸியும், பதாபனும், மகா பதாபனும், அவர்களைப்போலவே பநாத, மகா பநாதனும்,

5. சுதாஸன, மகாசுதாஸன, நேரு, மகா நேரு, அஸிமாவும்,

6. இந்த இருபத்தெட்டு பேர்களும் அவர்களுடைய பிள்ளைகளும் பேரர்களும் ஆவர். இவர்கள் அளவு கடந்த காலம் குஸாவதி, ராஜக்ரகம், மிதிலை ஆகிய இடங்களில் வாழ்ந்து வந்தனர்.

**குஸாவதி** - பின்னர் குஸிநகரம் ஆயிற்று. ராஜக்ரகம் இப்போது ராஜ்கீர் எனப்படுகிறது. மகத நாட்டின் தலைநகர். மிதிலை - விதேக நாட்டின் தலைநகர்.



7. இவர்களைத் தொடர்ந்து நூறு அரசர்கள் இருந்தனர். பிறகு ஐம்பத்தாறு பேரும். அதன் பின் அறுபது பேரும், பின்னர் எண்பத்து நாலாயிரம் பேரும்,

8. பிறகு முப்பத்தாறும், முப்பத்தியிரண்டும், இருபத்தெட்டும், மேலும் இருபத்தெட்டும், பதினெட்டும், பதினேழும், பிறகு பதினைந்தும், பதினான்கும்,

9. ஒன்பதும், ஏழும், பனிரெண்டும், மேலும் இருபத்தைந்தும், மீண்டும் இருபத்தைந்தும், பனிரெண்டும், மீண்டும் பனிரெண்டும், ஒன்பதும்,

10. மகா தேவனிலிருந்து தொடங்கி எண்பத்து நாலாயிரமும், கலாராஜ நாகனிலிருந்து தொடங்கி எண்பத்து நாலாயிரமும்,

11. ஒக்காகா வரை பதினாறு பேர்களும்—இவர்கள் யாவரும் மகா சம்மதன் வழி வந்தவர்கள். ஒவ்வொரு பிரிவைச் சேர்ந்த இவர்கள் முறையான வரிசைப்படி அவரவர்களுக்குரிய தலைநகரில் இருந்து ஆண்டு வந்தனர்.

12. ஒக்காகாவுடைய மூத்த மகன் ஒக்கா முகன் ஆவான். நிபுண, சந்திமா, சந்த முகா, சிவி சம்ஜய,

13. பேரரசன் வெஸந்தர, ஜாலி, சீகவாஹன, சீகாஸர, ஆகியவர்கள் இவர்களுடைய பிள்ளைகளும் பேரர்களும் ஆவர்.

**ஒக்காகா வரை பதினாறு பேர்**—விஜிதசேனன், தர்மசேனன், நாக சேனன், சம்மதன், திசம்பதி, ரேணு, குசன், மகா குசன், நவரதன், தசரதன், ராமன், பிலாரதன். சித்ர தரிசி, அத்ததரிசி, சுஜாதா, ஒக்காகா.

14. சீகாஸரனுடைய பிள்ளைகளும் பேரர்களும் எண்பத்திரண்டாயிரம் பேர்கள் ஆவர். இவர்களில் கடைசி அரசன் ஜயசேனன்.

15. இவர்கள் கபிலவஸ்துவை யாண்ட சாக்கிய மன்னர்கள் எனப்பட்டனர். சீஹஹானு என்பவன் ஜெய சேனனுடைய மகன்.

16. ஜய சேனனுடைய மகளுக்கு யசோதரா என்று பெயர். தேவதஹா என்ற இடத்தில் தேவ தஹ சாகன் என்ருெரு இளவரசன் இருந்தான்.

| | | முதல் அரசன் | கடைசி அரசன். |
|---|---|---|---|
| 100 | பேர் | பகுலா | அரிம்தனு |
| 56 | பேர் | அயுஜ்ஜா | துப்பசஹா |
| 60 | பேர் | பாராநசி | அஜிதஜனன் |
| 84000 | பேர் | கபில நகரன் | பிரமதத்தன் |
| 36 | பேர் | ஹத்தி புர | கம்பலவசபன் |
| 32 | பேர் | ஏக சக்கு | புரிந்தத தேவன் |
| 28 | பேர் | வஜிரா | சாதினு |
| 28 | பேர் | மதுரா | தம்ம குட்டன் |
| 18 | பேர் | அரித்த புரன் | சித்தி |
| 17 | பேர் | இந்த பட்டன் | பிரமதேவன் |
| 15 | பேர் | ஏக சக்கு | பலதத்தன் |
| 14 | பேர் | கோஸம்பி | பத்ர தேவன் |
| 9 | பேர் | கண்ண கோசன் | நரதேவன் |
| 7 | பேர் | ரோஜானநகரன் | மகிந்தன் |
| 12 | பேர் | சம்பா | நாக தேவன் |
| 25 | பேர் | மிதிலா | புத்ததத்தன் |
| 25 | பேர் | ராஜக்ரஹன் | தீபங்கரன் |
| 12 | பேர் | தக்க சீலன் | தாலிசரன் |
| 12 | பேர் | குஸி நாரா | புரிந்தன் |
| 9 | பேர் | மலித்தியன் | சாகர தேவன் |
| 84000 | பேர் | மகாதேவன் | நேமியன் |
| 84000 | பேர் | கலாராஜ நாகன் | விஜயன் |

**கபிலவஸ்து** – புத்தர் பிறந்த இடம். இப்போது நேபாளத்திலுள்ளது.



17. அஞ்சன, காஞ்சன ஆகிய இருவரும் அவனுடைய மக்கள். காஞ்சன சீஹஹானுவின் முதல் பட்டமகிஷியாவள்.

18. சாக்க அஞ்சனவுடைய ராணி யசோதரா ஆவாள். அஞ்சனவுக்கு இரண்டு பெண்கள் இருந்தனர். மாயா, பஜாபதி என்பது அவர்கள் பெயர்.

19. தண்டபாணி, சாக்கிய சுபபுத்தன் என்ற இரு புதல்வர்களும் இருந்தனர்.

20. ஆனல் சீஹஹானுவுக்கு ஐந்து பிள்ளைகளும் இரண்டு பெண்களும் இருந்தனர். சுத்தோதனன், தோதோனன், சக்கோதனன், சுக்கோதனன், அமிதோதனன் ஆகியவை ஐந்து பிள்ளைகளின் பெயர். அமிதா, பமிதா என்பவை இரு பெண்களின் பெயர்.

21. சக்க சுபபுத்தனுடைய பட்டத்து ராணி அமிதா. அவளுக்கு பத்ர காஞ்சன, தேவதத்தன் என்று இரண்டு குழந்தைகள்.

22. மாயா, பிரஜாபதி ஆகிய இருவரும் சுத்தோதனுடைய ராணிகளாவர். சுத்தோதனுக்கும் மாயாவுக்கும் பிறந்தவர்தான் நமது பகவன்.

23. மகா சம்மதனுடைய வம்சத்தில் - இப்படித் தொடர்ந்து இடையருது வந்த வம்சத்தில் நம்முடைய மகாஞானியும் தோன்றினர். அவர் உயர்ந்த குலத்துக்குத் தலைவராகவும் விளங்குபவர்.

24. போதி சத்துவராகிய இளவரசர் சித்தார்த்தருடைய ராணி பத்ர காஞ்சன. அவர்கள் மகன் ராகுலன்.

25. பிம்பிசாரனும் இளவரசர் சித்தார்த்தரும் நண்பர்கள். அவர்களைப் போலவே இருவருடைய தந்தையர்களும் நண்பர்களாக இருந்தனர்.

26. போதி சத்துவர், பிம்பிசாரனை விட ஐந்து வயது மூத்தவர். தந்தையின் வீட்டை விட்டுச் சென்றபோது அவருக்கு இருபத்தொன்பது வயது.

27. ஆறு வருட காலம் முயன்று அதன்பின் ஞானம் அடைந்ததும் அவரது முப்பத்தைந்து வயதில் பிம்பிசாரனைக் காணச் சென்றார்.

28. தந்தையினால் முடி சூட்டப்பட்டபோது ஒழுக்க சீலனான பிம்பிசாரனுக்குப் பதினைந்து வயது ஆகியிருந்தது.

29. அவன் பட்டமேற்றுப் பதினாறு வருடங்கள் கழிந்த பின்பு புத்தர் தமது மார்க்கத்தைப் போதித்தார்.

30. ஐம்பத்திரண்டு வருட காலம் அவன் அரசாண்டான். புத்தரை சந்திக்கு முன்பு அவன் ஆட்சியில் பதினைந்து ஆண்டுகள் கழிந்துவிட்டன. பின்னர் முப்பத்தேழு ஆண்டுகள் அவன் ஆட்சி செய்தான்.

31. பிம்பிசாரனுடைய மகன் அறிவிலி அஜாதசத்ரு. அத்துரோகி தன் தந்தையைக் கொன்றுவிட்டு பட்டத்துக்கு வந்து முப்பத்திரண்டு வருடம் ஆட்சி செய்தான்.

32. அஜாதசத்ரு ஆட்சிக்கு வந்த எட்டாவது வருடம் புத்தர் நிர்வாண மடைந்தார். அதன் பின்னர் அவன் இருபத்து நான்கு வருட காலம் ஆட்சி செய்தான்.



33. ஒழுக்கத்தின் உயர் நிலையை எட்டிவிட்ட புத்தர் நிலையாமையின் சக்திக்கு அடி பணிந்தார். நிலையாமையைப் பற்றி சிந்தித்துப் பார்ப்பவர்கள் துயரத்திலிருந்து விடுபடுவார்கள்.

**மகாவம்சத்தில் இரண்டாவது அத்தியாயமான மகாசம்மத வம்சம் முற்றும்.**

## மூன்றும் அத்தியாயம்

# முதல் மகாசபை

1. இணையிலாதவராகிய பகவான் - ஐந்து கண்களைப் பெற்றிருந்த அண்ணல்—எண்பத்து நான்கு வருடங்கள் வாழ்ந்து உலகில் தமது கடமைகள் அனைத்தையும் எல்லாவிதத்திலும் நிறைவேற்றி முடித்ததும்,

2. குஸிநாகரத்தில் இரண்டு சால விருட்சங்களுக்கு இடையேயுள்ள புனிதமான இடத்தில் வைசாக பௌர்ணமி தினத்தன்று உலக ஜோதி அணையலாயிற்று.

3. எண்ணிக் காண முடியாத அளவு பிக்குகள் அங்கு கூடியிருந்தனர்; அதேபோல் க்ஷத்திரியர்கள், பிராமணர்கள், வைசியர்கள், சூத்திரர்கள், தேவர்களும் கூடியிருந்தனர்.

4. எழுநூறாயிரம் பிரதான பிக்குகள் அவர்களிடையே இருந்தனர். மகா காச்யப தேரர் அப்போது சங்க தேரராக இருந்தார்.

5. அவர் குருநாதருடைய சடலத்துக்கும் அஸ்திக்கும் உரிய எல்லாச் சடங்குகளையும் செய்து முடித்ததும், பகவனுடைய போதனைகள் நெடுங்காலம் நிலைத்திருக்க வேண்டுமென்பதற்காக,

6. பத்து பெரும் சக்திகளைப் பெற்றிருந்த உலக நாயகரின் மறைவுக்குப் பின்பு ஏழு தினங்கள் கழித்து,

7. முதியவரான சுபத்தா சொன்ன தீய சொற்களை அவர் நினைத்துக் கொண்டார். குருநாதர் தமது சீவர உடையை கொடுத்து அதன் மூலம் தமக்கு சமானமானவராக தன்னைச் செய்ததையும் நினைத்துக் கொண்டார். தெய்விக உண்மையை உலகில் நிலைநாட்ட உலக உத்தமர் தமக்குக் கட்டளையிட்டிருப்பதையும் எண்ணிப் பார்த்தார்.

8. புனித தர்மக் கோட்பாடுகளைத் தொகுக்க சம்புத்தருடைய அனுமதி இருந்ததையும் அவர் அறிந்தார்.

9. இதற்காக சிறந்தவர்களான ஐநூறு பிக்குகளை நியமித்தார். இவர்கள் ஆசவங்களை வென்றவர்கள். ஒன்பது அம்சக் கொள்கையை உறுதியாகப் பின்பற்றுகிறவர்கள். அவை ஒவ்வொன்றிலும் நன்கு தேர்ச்சியும் பெற்றவர்கள். ஆனந்த தேரர் இல்லாததினால் ஐநூறுக்கு ஒருவர் மட்டும் குறைவாக இருந்தனர்.

10. பிக்குகளால் திரும்பத் திரும்ப வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளப்பட்ட ஆனந்த தேரர் தர்மக் கோட்பாடுகளைத் தொகுக்கும் பணியில் அவர்களுடன் சேர முடிவு செய்தார். அவர் இல்லாமல் அதைச் செய்வது முடியாததாக இருந்தது.

11. உலகத்திடம் இரக்க சிந்தனையுள்ள இந்தத் தேரர்கள் ஏழு நாட்கள் அந்திமக் கிரியை

---

**புத்தர் பெற்றிருந்த ஐந்து கண்கள்** = 1. இயல்பான கண். 2. தெய்வீகக் கண் - இதன் மூலம் பிரபஞ்சத்தில் நடைபெறும் எல்லாவற்றையும் காணமுடியும். 3. அறிவுக் கண். 4. எல்லாவற்றையும் அறியும் சக்தி பெற்ற கண். 5. புத்த கண் - உயிர்களைக் கடைத்தேற்றும் சத்தியத்தைக் காண உதவுவது.

**குஸிநாகரம்** - இப்போது நேபாளத்தில் உள்ளது.

களிலும் ஏழு நாட்கள் புனித அஸ்தியை வழி படுவதிலுமாக அரை மாத காலத்தைக் கழித்ததும்,

12. இவ்வாறு முடிவு செய்தனர்: "மழைக் காலத்தை ராஜக்ரகத்தில் கழித்துவிட்டுத் தர்மக் கோட்பாடுகளைத் தொகுக்கத் தொடங்குவோம். வேறு எந்தத் துறவியையும் அங்கு வசிக்க அனுமதிக்கக் கூடாது."

13. ஜம்புத்வீபம் முழுவதும் யாத்திரை மேற்கொண்டு ஆங்காங்கே துயரில் ஆழ்ந்து கிடந்த மக்களைத் தேற்றிய பிறகு,

14. நன்மை நெடுங்காலம் நிலைக்க வேண்டும் என்று விரும்பியவர்களாக ஆஷாட மாதம் சுக்கில பட்சத்தில் தேவையான நான்கும் ஏராளமாக அளிக்கப்பட்டிருந்த ராஜக்ரகத்தை அடைந்தனர்.

15. சீலத்தில் நிலை குலையாதவர்களும் சம்புத்தருடைய எண்ணங்களை நன்கறிந்தவர்களுமான பிக்குகள் மகா காசியபருடைய தலைமையில் மழைக்காலத்தை அங்கு கழிக்க ஒன்று கூடினார்கள்.

16. மழைக்கால ஆரம்ப மாதங்களில் அவர்கள் அஜாதசத்ருவுக்குத் தெரிவித்து விட்டுத் தமது தங்குமிடங்களைப் பழுதுபார்த்து செப்பனிடுவதில் ஈடுபட்டிருந்தனர்.

17. விகாரையில் பழுதுபார்க்கும் வேலை முடிந்ததும் அவர்கள் அரசனிடம் 'இப்போது நாம் சங்கத்தைக் கூட்டுவோம்' என்றார்கள்.

**தேவையான நான்கு** - உடை, பிட்சை, தங்குமிடம், மருந்து.
**ஜம்புத்வீபம்** - நாவலந்தீவு - இந்தியத் துணைக்கண்டம்.



18. 'என்ன செய்யவேண்டும்?' என்ற (அரசன்) கேள்விக்கு அவர்கள் பதில் சொன்னார்கள்: 'சபை நடத்த ஒரு இடம் அமைத்துத்தர வேண்டும்.' 'எங்கே?' என்று அரசன் கேட்டதற்கு அவர்கள் இடத்தைச் சுட்டிக் காட்டினார்கள்.

19. விபார மலையின் பாரிசத்தில் சதபாணி குகை வாயிலில் அற்புதமான ஒரு மண்டபத்தை (அரசன்) அதிவிரைவில் கட்டிக்கொடுத்தான்.

20. தேவர்களின் சபா மண்டபம் போல் அது இருந்தது. எல்லாவிதமான அலங்காரங்களும் செய்து முடித்ததும் பிக்குகளின் எண்ணிக்கைக்கு ஏற்ப உயரிய பாய்களை விரிக்க ஏற்பாடு செய்தான்.

21. தென் பகுதியில் வடதிசையை நோக்கினாற் போல் உன்னதமான உயர்ந்த ஓர் ஆசனம் தேரருக்காக அமைக்கப்பட்டது.

22. மண்டபத்தின் மத்தியில் தர்ம வாசகங்களைப் படித்துக் கூறுபவருக்காக உயரமான மேடை அமைக்கப்பட்டிருந்தது. பகவனுடைய பெருமைக்கேற்ற வகையில் கிழக்குத் திசையை நோக்கி இது இருந்தது.

23. 'என்னுடைய வேலை முடிந்து விட்டது' என்று அரசன் தேரர்களுக்குக் கூறும்படி ஆணையிட்டான். தேரர்கள் இதனை உயிரினங்களுக்கு இன்பம் தருபவரான ஆனந்தரிடம் சொல்லலானார்கள்:

24. 'ஆனந்தரே! நாளை சபை கூடப் போகிறது. தங்களை அருகதையுடையவராகச் செய்து கொள்வதற்காக இன்னமும் முயன்று கொண்டிருக்கிறீர்கள். அதனால் தாங்கள் கலந்து கொள்ள முடியாது. எனவே சீலத்தில்

சோர்ந்து விடாமல் பாடு படுவீர்களாக' என்றனர்.

25. இதனல் தூண்டப்பட்ட ஆனந்தர் நான்கு நிலை களில் எதிலும் நிலையாக நின்றுவிடாமல் தீவிர மாக முயன்று தம்மை அரஹந்தராகச்* செய்து கொண்டார்.

26. மழைக் காலத்தின் இரண்டாவது மாதம் இரண்டாவது நாள் பிக்குகள் அம் மகத்தான மண்டபத்தில் கூடினர்.

27. ஆனந்தருக்குத் தகுந்த ஓரிடத்தை ஒதுக்கி வைத்து அரஹந்தர்கள் தமது அந்தஸ்துக் கேற்ப உரிய ஆசனங்களில் முறையாக அமர்ந் தனர்.

28. ஆனந்த தேரர் தாம் அரஹந்த நிலையை அடைந்து விட்டதை மற்றவர்கள் அறியச் செய்ய விரும்பியதால் அவர்களுடன் சேர்ந்து மண்டபத்துக்குப் போகவில்லை. 'ஆனந்த தேரர் எங்கே?' என்று ஒருவர் கேட்டபோது,

29. ஆகாயமார்க்கமாகவோ பூமிக்குள்ளிருந்தோ வந்து தமக்கென அமைக்கப்பட்டிருந்த ஆசனத் தில் அமர்ந்தார். **

---

அரஹந்தர் என்பது பிக்குகள் அடையக்கூடிய உன்னத மான நிலையாகும். இதற்குத் தகுதியுடையவர் என்று பொருள். இந்த நிலையையடைவதற்கு ஏழு கட்டங் களைத் தாண்டியாக வேண்டும். இந்தக் கட்டங்களில் ஏதாவது ஒன்றில் இருப்பவருக்கு சேக என்று பெயர். இதற்குக் கற்றுக்கொள்பவர் என்று பொருள். துறவி களுக்கான நான்கு நிலைகள்-நிற்றல், அமர்தல், நடத்தல் படுத்தல் ஆகியவையாகும். ஆனந்தர் நான்காவது நிலையான படுத்த நிலையில் அரஹந்தர் ஆனர்.

அரஹந்தர்களுக்குரிய விசேஷ சக்தியைத் தாம் பெற்று விட்டதை இதன் மூலம் மற்றவர்களுக்குப் புலப் படுத்தினர்.



30. தேரர்கள் யாவரும் விநயத்தைப்பற்றிப் பேச உபாலி என்பவரை ஒருமனதாகத் தேர்ந் தெடுத்தனர். பிற தர்மங்களுக்கு ஆனந்தரைத் தேர்ந்தெடுத்தனர்.

31. விநயம் பற்றிய கேள்விகளைக் கேட்கும் பணியை மகா தேரரான மகா காச்யபர் தாமே மேற் கொண்டார். உபாலி தேரர் அதனை விளக்கு வதற்குத் தயாரானர்.

32. மகாகாச்யபர் தமக்குரிய ஆசனத்தில் இருந்து கொண்டு விநயம் பற்றிய கேள்விகளைக் கேட்க லானர். உபாலி தேரர் உபதேசகருடைய ஆசனத்தில் இருந்துகொண்டு விளக்கம் தந்தார்.

33. விநயம் பற்றித் தேர்ந்த அறிவுள்ளவரான அவர் ஒவ்வொரு அம்சத்தையும் விளக்கிச் சொல்வதை, மரபினை அறிந்த பிக்குகள் எல்லோ ரும் தெரிந்துகொண்டு அவரைத் தொடர்ந்து திருப்பிக் கூறினர்.

34. பிறகு மகா காச்யபர் தர்மத்தைப் பற்றிக் கேள்வி கேட்கும் பணியை மேற்கொண்டு, புத்தருடன் இருந்து அவருடைய உபதேசங் களை மற்றவர்களைவிட அதிகமான அளவுக்குக் கேட்கும் பாக்கியம் பெற்றிருந்தவரும் தர்மப் பொக்கிஷதாரராக விளங்கியவருமான (ஆனந் தரை) கேள்விகள் கேட்கலானர்.

35. பதில் கூறும் பணியை மேற்கொண்ட ஆனந்த தேரர் உபதேசகருக்கான ஆசனத்தில் அமர்ந்து தர்மங்களை விளக்குவாரானர்.

---

**விநயம்** - துறவு நெறியின் கட்டுப்பாடுகள் அடங்கியது

**தர்மம்** - போதனைகள்.

தர்மப் பொக்கிஷதாரர் – **கோசாரகர்.**

36. தர்மக் கோட்பாட்டில் அடங்கியுள்ள தனைத்தையும் அறிந்தவர்களான எல்லா தேரர்களும் விதேக நாட்டு முனிவரான ஆனந்தர் கூறியதைத் தொடர்ந்து அவற்றைத் திருப்பிக் கூறினர்.

37. இவ்வாறாக ஏழுமாத காலத்தில் உலகத்தைக் காப்பதற்காகத் தர்மக் கோட்பாடுகளைத் தொகுக்கும் பணி, உலகை உய்விக்கும் பணியை மேற்கொண்ட அந்தத் தேரர்களால் நிறைவேற்றப்பட்டது.

38. அருள்ஞானி புத்தருடைய அன்பு மொழிகளை ஐநூறு வருட காலத்துக்கு நிலைத்திருக்கும்படியாக மகா காசியப தேரர் செய்துவிட்டார்.

39. சபை முடிந்ததும் இந்த எண்ணத்தினால் பெருமகிழ்வடைந்த கடல் சூழ்ந்த பூமி, ஆறு முறை அதிர்ந்தது.

40. உலகெங்கும் பல வழிகளில் பலவிதமான அற்புதத் தோற்றங்கள் எழுந்தன. இப்போது இந்தக் கோட்பாடுகள் தேரர்களால் தொகுக்கப்பட்டதாகையால் இது தேரவாதம் என்று கூறப்படுவதாயிற்று.

41. முதல் சங்கத்தை நடத்திய தேரர்கள் – இதன் மூலம் உலகுக்குப் பெரும் நன்மையை அருளியவர்கள் அவரவர்களுக்குரிய வாழ்நாளைக் கழித்த பின்பு எல்லாரும் நிர்வாண நிலையை அடைந்தனர்.

42. அக ஒளியினால் மன இருளை வென்ற தேரர்கள் – உலக இருளை வெற்றி கொள்ளும் உயர்ந்த ஒளிவிளக்குகளாகத் திகழ்ந்தவர்கள் பயங்கரமான மரணப் புயலில் அணைக்கப்பட்டுவிட்டனர். அதனால்தான் அறிஞர்கள் உலக இன்பத்தை மறுக்கிறார்கள்.

**மகாவம்சத்தில் மூன்றாவது அத்தியாயமான முதல் மகாசபை முற்றும்.**

### நான்காம் அத்தியாயம்

# இரண்டாவது மகாசபை

1. அஜாத சத்ருவினுடைய மகன் உதய பத்ரகன். இத் துரோகி தந்தையைக் கொன்றுவிட்டு பதினாறு வருடம் ஆண்டான்.

2. உதய பத்ரகனுடைய மகன் அனிருத்ரகனும் தனது தந்தையைக் கொன்றான். அனிருத்ரகனுடைய மகன் முண்டன் என்பவனும் அதே போல் செய்தான்.

3. துரோகிகளும் முட்டாள்களுமான இந்த குமாரர்கள் ஆட்சி நடத்தினர். இந்த இரண்டு பேர்களுடைய ஆட்சியில் எட்டு வருடங்கள் கழிந்தன.

4. முண்டனுடைய மகன் நாகதாசகன் தனது தந்தையைக் கொன்றான். இந்தக் கொடுமையைச் செய்தவன் பிறகு இருபத்து நான்கு ஆண்டுகள் ஆட்சி நடத்தினான்.

5. பிரஜைகள் வெகுண்டெழுந்தனர். 'தந்தையைக் கொல்பவர்கள் வம்சமாக இது இருக்கிறதே' என்ற கருதிய அவர்கள் நாகதாசகனை நாடு கடத்தினர்.

6. பிறகு அவர்கள் கூடிப் பேசினர். சிசுநாகன் என்ற பெயருடைய மந்திரி தகுதியுள்ளவனாக அவர்களுக்குத் தோன்றியதால் எல்லோருடைய நன்மையையும் மனத்தில் கொண்டு அவனை அரசனாகப் பட்டாபிஷேகம் செய்தனர்.

7. அவன் பதினெட்டு வருட காலம் ஆட்சி செய்தான். அவனுடைய மகன் காலசோகன் இருபத்து எட்டு வருடம் ஆட்சி செய்தான்.

8. காலசோகன் ஆட்சியின் பத்தாவது வருட முடிவில் சம்புத்தர் பரி நிர்வாணமடைந்து நூறுண்டுகள் கழிந்திருந்தன.

9. அச்சமயம் வைசாலியில் வஜ்ஜி பிரிவைச் சேர்ந்த பிக்குகள் பத்து அம்சங்கள் நியாயமானவை என்று வெட்கம் இன்றிப் பிரசாரம் செய்து வந்தனர்.

10. அதாவது 'கொம்பில் உப்பு' 'இரண்டு விரல் அகலம்' 'கிராம விஜயம்' 'வாசம்' 'சம்மதம்' 'உதாரணம்' 'கடையாத பால்' 'புளிக்காத கள்'

**பத்து அம்சங்கள் - 1.** சிங்கிலோண கப்பா - உப்பில்லாமல் கிடைக்கும் உணவுப் பொருள்களைப் பக்குவப்படுத்துவதற்காக கொம்பில் உப்புப் போட்டு வைத்திருக்கும் வழக்கம். 2. த்வாங்குல கப்பா - உரிய நேரத்துக்குப் பின்பும் சூரிய நிழல் காலடியில் இரண்டு விரல் அகலத்துக்கு அதிகமாவதற்கு முன்னுல் மதிய உணவை அருந்தும் வழக்கம். 3. கிராமந்தர கப்பா - அழைக்கப்பட்டால் உணவுண்ட பின்பும் கிராமத்துக்குச் சென்று மீண்டும் உணவருந்தும் வழக்கம். 4. ஆஜார கப்பா - அந்தந்த வட்டத்தில் வசிக்கும் பிக்குகள் உபோசத விருந்தை ஒருங்குகூடி தனித்தனியே நடத்தும் வழக்கம். 5. அனுமதி கப்பா - முடிவான அனுமதியின்றி வராத பிக்குகளின் இசைவைப் பின்னர் பெற்றுவிடலாமென்ற அனுமானத்துடன் அதிகார பூர்வமான நடவடிக்கைகளை செய்வது. 6. ஆசிணகப்பா - போதகரின் நடைமுறை என்பதனுல் சில காரியங்களைச் செய்யும் வழக்கம். 7. அமாதித கப்பா - உணவு நேரம் கடந்த பின்னரும் கடையாத பாலை அருந்தும் வழக்கம். 8. ஜலோஜி கப்பா - புளிக்காத கள்ளைச் சாப்பிடுவது. 9. அதசகம் நிசிதனம் - நிர்ணயிக்கப்பட்ட முறையில் இல்லாத பாய்களை உட்கார உபயோகிப்பது. 10. ஜாதரூப ராஜதம் - தங்கம் வெள்ளியைப் பெற்றுக் கொள்வது.



11. 'நூல் இல்லாத ஆசனம்' 'தங்கம்' ஆகியவை. இது யாச தேரரின் காதுக் கெட்டியபோது, காசந்தகர் என்ற அந்தணரின் புதல்வரும்,

12. அதீத சக்திகள் ஆறும் அமையப் பெற்றவரும் வஜ்ஜி நாட்டில் நடமாடிக் கொண்டிருந்தவருமான அவர், இந்த விஷயத்துக்கு முடிவு கட்டும் உறுதியுடன் மகாவன விகாரையை அடைந்தார்.

13. உபோசத மண்டபத்தில் அத்துறவிகள் உலோகப் பாத்திரம் ஒன்றை வைத்து அதில் நீரை நிரப்பினர். பின்னர் கூடியிருந்த பாமர மக்களிடம் 'சங்கத்துக்கு கர்சப்பணமும் பிறவும் கொடுங்கள்' என்று சொன்னுர்கள்.

14. யாச தேரர் 'இது சட்டத்துக்கு விரோதமானது. எதுவும் கொடுக்க வேண்டாம்' என்று கூறித் தடுத்தார். பதிசார நியாகம விரதத்தை (பாமரமக்களிடம் மன்னிப்புக் கேட்பது) ஏற்க நேருமென அத்துறவிகள் யாச தேரரை மிரட்டினர்.

15. தம்முடன் ஒருவரை வருமாறு அவர் கேட்டுக் கொண்டு பின்பு அவருடன் நகரத்துக்குச் சென்று தாம் சொல்வதுதான் தர்மக் கோட்பாடுகளுக்கு உட்பட்டது என்று மக்களிடையே பிரகடனம் செய்தார்.

16. யாசதேரருடன் போனவர் வந்து சொன்னதைக் கேட்ட பிக்குகள் அவரை அங்கிருந்து வெளியேற்றும் எண்ணத்துடன் அவருடைய வீட்டைச் சூழ்ந்து கொண்டனர்.

**கர்சப்பணம்** - சதுர வடிவிலுள்ள செப்பு நாணயம். 9.48 கிராம் எடையுள்ளது.

17. தேரர் அந்த இடத்தை விட்டு வானத்திலெழுந்து ஆகாய மார்க்கமாகச் சென்று கோஸாம்பியில் தங்கிக் கொண்டு பாவா அவந்தி ஆகிய இடங்களிலுள்ள பிக்குகளுக்கு உடனே தூதுவர்களை அனுப்பினார்.

18. அவர், தாமே அகோகங்க பர்வதத்துக்குச் சென்று எல்லாவற்றையும் சம்புத்த சாணவாசி தேரரிடம் சொன்னார்.

19. பாவாவிலிருந்து அறுபது மகாதேரர்களும், அவந்தியிலிருந்து எண்பது மகா தேரர்களுமாக – ஆசவங்களைக் கடந்த இவர்களனைவரும் அஹோகங்க பர்வதத்துக்கு வந்து கூடினர்.

20. எல்லாப் பகுதிகளிலும் இருந்து இங்கு வந்து கூடிய பிக்குகளின் தொகை தொண்ணூறாயிரமாகும். அவர்களனைவரும் கூடிப் பேசினர்.

21. ஸோரயாவைச் சேர்ந்த பேரறிஞரும் ஆசவங்களைக் கடந்தவருமான ரேவத தேரர்தான் அப்போது அவர்களுக்குள் முதன்மையானவர் என்பதையறிந்த அவர்கள் அவரிடம் சென்றனர்.

22. தமது தெய்விகக் காதுகளினால் இம் முடிவைக் கேட்ட ரேவத தேரர் எளிதான பயணத்தை விரும்பி உடனே வைசாலியை நோக்கிப் புறப்பட்டார்.

23. அவர் காலையில் விட்டுச் செல்லும் இடங்களுக்கு நாள்தோறும் அவரைப் பின்பற்றி

கோஸாம்பி - யமுனை நதிக்கரையிலுள்ள கோஸாம்பி வத்ஸர்களது தலை நகராக இருந்தது. பாவா - மல்லர்களின் தலை நகரம். அவந்தி - உஜ்ஜயினி இருந்த பிரதேசம்.

ஸோரயா - இந்தியாவின் வடமேற்கில் தட்ச சீலத்துக்கு அருகில் இருந்தது.



வந்து கொண்டிருந்த தேரர்கள் முடிவில் சஹஜாதி என்ற இடத்தில் ரேவத தேரரைச் சந்தித்தனர்.

24. தேவபாராயணத்துக்குப் பின்னால் சம்புத்த தேரர் பணித்தபடி யாசதேரர் அவ்விடத்தே பத்து அம்சங்கள் குறித்து ரேவததேரரிடம் வினவினார்.

25. ரேவத தேரர் அவற்றை நிராகரித்தார். நடந்த விஷயத்தைக் கேள்விப்பட்டதும், 'இந்தப் பிரச்னைக்கு முடிவு செய்வோம்' என்றார்.

26. தவறான வழியில் நடந்த பிக்குகளும் ரேவத தேரருடைய ஆதரவைப் பெறும் நோக்கத்துடன் அவர் இருக்குமிடம் நோக்கி வந்து கொண்டிருந்தனர். ரேவதருக்குக் காணிக்கையாக, துறவிகளுக்குத் தேவைப்படும் பொருள்களை ஏராளமாக எடுத்துக் கொண்டு,

27. அவர்கள் சஹஜாதிக்கு மிக வேகமாக விரைந்து வந்தனர். வரும் வழியில் உணவு நேரத்தில் ஆடம்பரமாக உண்டனர்.

28. ஆசவங்களிலிருந்து விடுபட்டவரும், சஹஜாதியில் வசித்தவருமான சால்ஹதேரர் இவ்விஷயத்தைப் பற்றி யோசித்து 'பாவா பிக்குகள் தான் உண்மையான கொள்கையைக் கடைப்பிடிக்கிறவர்கள்' என்பதைக் கண்டார்.

29. பெருந்தெய்வமான பிரமதேவர் அவரிடம் (சால்ஹர்) வந்து 'கொள்கையில் உறுதியாக இரு' என்று சொன்னார். 'எப்போதும் கொள்கையில் உறுதியுடன் இருப்பதாக' அவர் பதிலளித்தார்.

30. அவர்கள் (தவறான வழியில் நடந்தவர்கள்) தாங்கள் கொண்டு வந்த காணிக்கைப்

பொருள்களுடன் ரேவததேரரிடம் சென்றனர். ஆனால் அவர் அவர்களுடன் சேர மறுத்தார். சேர்ந்து கொண்டவனை (ஒரு சீடனை) தம்மிட மிருந்து விலக்கினர்.

31. பிறகு அவர்கள் வைசாலிக்குச் சென்றனர். அங்கிருந்து வெட்கமின்றி புஷ்பபுரம் சென்று காலசோக மன்னனிடம் கூறினர்:

32. 'பெருமானின் மணம் திகழும் அறையைப் பாது காத்துக் கொண்டு வஜ்ஜி பிரதேசத்திலுள்ள மகாவன விஹாரையில் நாங்கள் வசிக்கிறோம்.

33. 'பேரரசனே! நாடெங்கிலுமுள்ள பிக்குகள் விஹாரையை நாங்கள் எடுத்துக் கொள்வோம் என்று வந்து கொண்டு இருக்கிறார்கள். அவர்களைத் தடுப்பாயாக' என்றனர்.

34. அரசனைத் தவறான வழியில் திருப்பிவிட்டு அவர்கள் வைசாலிக்குத் திரும்பிச் சென்றனர்.

35. சஹஜாதியில் 1190 ஆயிரம் பிக்குகள் ரேவத தேரர் தலைமையின் கீழ் கூடியிருந்தனர் - கருத்து வேறு பாட்டைச் சமாதானமாகத் தீர்ப்பதற்காக.

36. கருத்து வேறுபாட்டைக் கிளப்பி விட்டவர்கள் முன்னிலையில் அல்லாமல் அதனைத் தீர்த்து வைக்க முடியாது என்றார் ரேவத தேரர். எனவே எல்லா பிக்குகளும் அதன்பின் வைசாலிக்குச் சென்றனர்.

37. தவறான வழியில் திருப்பிவிடப்பட்ட மன்னனும் அதைப் போலவே தனது மந்திரிகளை (வைசாலிக்கு) அனுப்பி வைத்தான். ஆனால்

**புஷபபுரம்** - பாடலிபுரத்துக்கு மற்றொரு பெயர். மகத நாட்டின் தலைநகர். இப்போது பாட்னா எனப்படுகிறது.



தேவர்கள் சூழ்ச்சியால் அவர்கள் வழி தவறிப் போய் விட்டார்கள்.

38. அவர்களை அனுப்பி வைத்த அன்றிரவு அரசன், தான் லோககும்பி என்ற நரகத்தில் தள்ளப் படுவது போல் ஒரு கனவு கண்டான்.

39. அரசன் மிகவும் கலங்கினான். அவனுடைய பயத்தைத் தணிப்பதற்காக, அவனது சகோதரியும் ஆசவங்களை வென்றவளுமான தேரி நந்தா ஆகாய மார்க்கத்தில் அவனிடம் வந்தாள்.

40. 'நீ செய்த இந்தச் செயல் மிகவும் தவறானது. உண்மை நம்பிக்கையாளரான வணக்கத்துக் குரிய பிக்குகளுடன் ஒத்துப் போய்விடு. அவர்கள் பக்கம் இருந்து அவர்கள் நெறியினைப் பாதுகாப்பாயாக.

41. 'இவ்வாறு நீ செய்தால் அருள்பெற்றவனாவாய்' என்று கூறிவிட்டு அங்கிருந்து அவள் மறைந்து விட்டாள். பொழுது விடிந்ததும் அரசன் வைசாலிக்குப் புறப்பட்டான்.

42. மகா வன விஹாரைக்குச் சென்று மன்னன் பிக்குகளின் மகாசபையை அங்குக் கூட்டினான். இருதரப்பாரும் சொன்ன கருத்துக்களைக் கேட்டான்.

43. உண்மையான கொள்கையை ஆதரிப்பதென அரசன் முடிவுக்கு வந்தான். உண்மையில் நம்பிக்கையுடைய பிக்குகள் அனைவருடனும் ஒத்துப் போனவுடன், தான் உண்மைக் கொள்கைக்கு ஆதரவாக இருப்பதாக அறிவித்த பிறகு,

44. 'இந்த நெறி வளர்வதற்கு நன்மையானதென்று நீங்கள் நினைப்பதையெல்லாம் செய்

யுங்கள்' என்றான். அவர்களுடைய பாதுகாவலனாக இருப்பதாக வாக்களித்து விட்டுத் தலைநகருக்குத் திரும்பினான்.

45. இதற்குப் பிறகு அந்த அம்சங்கள் பற்றி முடிவு செய்ய பிக்குகளின் சபை கூடியது. சபையில் பொருளற்ற பேச்சுக்கள் பல பேசப்பட்டன.

46. ரேவத தேரர் சபையின் நடுவே சென்று உபாஹிக முறையில் இப்பிரச்னையைத் தீர்த்துக் கொள்ள முடிவு செய்தார்.

47. தகராரைத் தீர்க்க உபாஹிகாவுக்கு கிழக்கிலிருந்து நான்கு பிக்குகளையும், பாவாவிலிருந்து நான்கு பேரையும் அவர் நியமித்தார்.

48. சப்தகாமி. சால்ஹர், குஜ்ஜ சோபிதர், வாசபகாமிகர் ஆகிய தேரர்கள் கிழக்கிலிருந்து நியமிக்கப்பட்டனர்.

49. ரேவதர், சாண சம்புத்தர், காகந்தரின் புதல்வரான யாசர், சுமணர்—இவர்கள் பாவாவிலிருந்து நியமிக்கப்பட்டவர்கள்.

50. ஆசவங்களை வென்ற இந்த எட்டு தேரர்களும் பிரச்னைக்கு முடிவு காண்பதற்காக தனிமையும் அமைதியும் சூழ்ந்த வாலிகாராமாவை அடைந்தனர்.

51. அஜிதனால் ஏற்பாடு செய்யப்பட்ட அழகிய இடத்தில் மகா முனிவரின் (புத்தர்) கருத்துக்களை அறிந்தவர்களான இந்த மகா தேரர்கள் தமது வாசத்தை அமைத்துக் கொண்டனர்.

52. கேள்வி கேட்பதில் தேர்ந்தவரான ரேவத மகா தேரர் ஒவ்வொரு அம்சம் குறித்தும் சப்தகாமி தேரரைப் பல கேள்விகள் தொடர்ந்து கேட்டார்.

---

**உபாஹிக முறை** - சங்கத்திலிருந்து குறிப்பாகத் தெரிந்தெடுக்கப்பட்ட சிலரிடம் பிரச்னையை விட்டு முடிவுக்கு வருவது.



53. அவரால் வினவப்பட்ட மகா தேரர் சப்தகாமி இவ்வாறு தீர்ப்புச் சொன்னார்: 'இவை யாவும் மரபுக்கும் சட்டத்துக்கும் புறம்பானவை.'

54. முறைப்படி அவர்கள் அந்த இடத்தில் தமக்குள் முடிவு செய்து கொண்டதும், பிக்குகளின் சபையில் கேள்வியும் பதிலும் என்ற முறையில் மீண்டும் இதனைக் கூறினர்.

55. இவ்வாறாக மகாதேரர்கள், பத்து அம்சங்களைக் கைக் கொண்டிருந்த—தவறான வழியில் சென்ற பத்தாயிரம் பிக்குகளின் உபதேசங்களை மறுத்தனர்.

56. சப்தகாமி அப்போது உலகில் சங்க தேரராக இருந்து வந்தார். உபசம்பதத்துக்குப் பின்னர் நூற்றிருபது ஆண்டுகள் அவர் இருந்தார்.

57. சப்தகாமி, சால்ஹர், ரேவதர், குஜ்ஜ சோபிதர், காகந்தகர் மகனை யாசர், சம்புத்த சாண வாசிகர் ஆகிய ஆறு தேரர்களும் ஆனந்த தேரரின் சீடர்களாவர்.

58. ஆனால் வாசபகாமிகா, சுமணர் ஆகிய இருவரும் அனிருத்ர தேரரின் சீடர்களாவர்.

59. இந்த எட்டு தேரர்களும் கடந்த காலத்தில் ததாகதரைத் தரிசிக்கும் பாக்கியம் பெற்றவர்கள்.

60. நூற்றிப் பன்னிரெண்டாயிரம் பிக்குகள் அப்போது ஒன்றுபட்டனர். இந்த பிக்குகள் அனைவருக்கும் தலைவராக அப்போது ரேவத தேரர் இருந்தார்.

61. அச்சமயம் உண்மையான நெறியை நீண்ட காலம் நிலை பெற்றிருக்கச் செய்வதற்காக ஒரு மகா சபையைக் கூட்ட ரேவத தேரர் அவர்களிடையேயிருந்து எழுநூறு பேரைத் தேர்ந்தெடுத்தார்.

62. இந்த பிக்குகள் எதையும் புரிந்து கொள்வது முதலான விசேஷ கலைகள் நான்கிலும் வல்லவர்களான அரஹந்தர்கள்; திரி பிடகத்தையும் அறிந்தவர்கள்.

63. இவர்கள் எல்லாம் காலசோகனுடைய பாதுகாப்பில் வாலிகாராமாவில் ரேவத தேரர் தலைமையில் கூடி தர்மக்கோட்பாடுகளைத் தொகுத்தனர்.

64. ஏற்கனவே நிர்ணயிக்கப்பட்டு பின்னால் பரப்பப்பட்டு வந்த தர்மக் கோட்பாடுகளை ஏற்றுக்கொண்டவர்கள் ஆகையால் இவர்களுடைய வேலையை எட்டு மாதங்களில் முடித்து விட்டனர்.

65. பெரும் புகழ் பெற்ற இந்தத் தேரர்கள் இரண்டாவது மகா சபையை நடத்தியதும் அவர்களிடமிருந்து தீயவையெல்லாம் அழிந்துபோக காலக்ரமத்தில் நிர்வாண நிலையடைந்தனர்.

66. பூரணமான உள்ளொளியடைந்த பேறு பெற்றவர்களும் அடைவதற்குரிய எல்லாவற்றையும் அடைந்து விட்டவர்களும், மூவகையாக நிலவும் அனைத்துலதக்கும் அருள் பாலித்து உதவியவர்களுமான உலக போதகரின் இந்த புத்திரர்களுடைய மறைவை எண்ணும்போது நாம் இந்த உலகங்களின் முற்றிலும் பொய்யான தன்மையை மனதில் இருத்தி விமோசனம் அடைவதற்காக விழிப்புடன் பாடுபடுவோமாக.

**மகாவம்சத்தில் நான்காவது அத்தியாயமான**
**இரண்டாவது மகாசபை முற்றும்.**

## ஐந்தாம் அத்தியாயம்

# மூன்றாவது மகாசபை

1. ஆரம்பத்தில் மகா காச்யப தேரரும் மற்றவர்களும் கூடித் தொகுத்த உண்மையான தர்மக் கோட்பாடுகள் தேரவாதம் எனப்பட்டது.

2. இந்த தேரவாத மரபு முதல் நூறு வருடத்தில் ஒன்றாகவும் ஒன்றுபட்டதாகவும் இருந்தது. ஆனால் அதன்பின் பிற தர்மக் கோட்பாடுகள் எழுந்தன.

3. இரண்டாவது மகாசபையை நடத்திய தேரர்களால் அடக்கப்பட்ட, தவறான வழியில் நடந்த பத்தாயிரம் பிக்குகளும்,

4. மகா சம்ஹிகை என்ற ஒன்றை அமைத்தார்கள். இதிலிருந்து கோகுலிகா, ஏகவியோகாரிகா பிரிவுகள் ஏற்பட்டன.

5. கோகுலிகாவிலிருந்து பண்ணதி பிரிவும், பஹுலிகா பிரிவும் ஏற்பட்டது. இவற்றிலிருந்து சேதியப் பிரிவு ஏற்பட்டது. இவ்வாறாக மகா சம்ஹிகையுடன் சேர்ந்து ஆறு பிரிவுகள் ஏற்பட்டன.

6. தேர வாதத்தைப் பின்பற்றியவர்களிடையே மேலும் இரண்டு பிரிவுகள் ஏற்பட்டன. மஹிம்சாஸகா, வஜ்ஜி பூடக பிக்குகள் என்பவர்கள் அவர்கள்.

7. இதேபோல் இவர்களிடமிருந்து பிரிந்து தம்முதாரியா, பத்ரயானிகா பிக்குகளும் சந்திரகாரிகா, சம்மிதி, வஜ்ஜி பூடிய பிக்குகளும் தோன்றினர்.

8. மஹிம் சாஸக பிக்குகளிடையே யிருந்து இரண்டு பிரிவுகள் ஏற்பட்டன. இவர்கள் சப்பத்த பிக்குகள், தர்ம கூடிக பிக்குகள் எனப்பட்டனர்.

9 சப்பத்த பிரிவிலிருந்து, காசப்ரிய பிரிவு ஏற்பட்டது. இவற்றிலிருந்து சம்கன்டிக பிக்குகள் தோன்றினர். இதிலிருந்து கடைசியான சுத்த பிரிவு ஏற்பட்டது.

10. தேர வாதத்தைப் பின்பற்றிய பிக்குகள் உட்பட இவர்கள் மொத்தம் பனிரெண்டு பிரிவுகள் ஆவர். அத்துடன் மேலும் சொல்லப்பட்ட ஆறு பிரிவுகளும் சேர்ந்து மொத்தம் பதினெட்டாகும்.

11. இவ்வாருக இரண்டாவது நூற்ருண்டில் பதினேழு பிரிவுகள் ஏற்பட்டன. மற்ற பிரிவுகள் பின்னர் தோன்றின.

12. ஹேமவதா, ராஜகிரியா அதேபோல் சித்தார்த்தகா, முதலாவது சேலிய பிக்குகள், இதர சேலியர்கள், வாஜிரியா,

13. இந்த ஆறு பிரிவினரும் ஜம்புத்வீபத்தில் மற்றவர்களிடமிருந்து பிரிந்தனர். தர்மருஸி, சாகலியா பிரிவினர் மற்றவர்களிடமிருந்து இலங்கைத் தீவில் பிரிந்தனர்.

**ஆசாரிய பிரிவுகளின் கதை இங்கு முடிகிறது.**

14. காலசோகனுடைய பத்துப் பிள்ளைகளும் இருபத்திரண்டு வருட காலம் ஆட்சி செய்தனர்.

15. பிறகு நவநந்தர்கள் அடுத்தடுத்து ஆட்சி செய்தனர். இவர்களும் இருபத்திரண்டு வருட காலம் ஆண்டனர்.



16. பிறகு சாணக்யன் என்ற பிராமணன் சந்திர குப்தன் என்ற பெருமை மிக்க இளைஞனுக்கு ஜம்புத்வீபம் முழுவதற்கும் மன்னனுக முடி சூட்டினுன்.

17. மோரிய உயர் குடியில் பிறந்தவன் இவன். கடும்பகை உணர்வினல் உந்தப்பட்டு அவன் ஒன்பதாவது நந்த மன்னனை தன நந்தனைக் கொன்று விட்டான்.

18. இருபத்தி நாலு வருடம் அவன் ஆண்டான். அவனுடைய மகன் பிந்துசாரன் இருபத்தியெட்டு வருடம் ஆண்டான். பிந்து சாரனுக்கு நூற்றியொரு பெருமைமிக்க பிள்ளைகள்.

19. இவர்கள் எல்லோரிலும் வீரத்திலும், பலத்திலும், புகழிலும், அதிசய சக்திகளிலும் சிறந்தவனக அசோகன் என்பவன் விளங்கினுன்.

20. பல்வேறு தாய்மார்களுக்குப் பிறந்த தொண்ணூற்றி ஒன்பது சகோதரர்களையும் கொன்று விட்டபின் அவன் ஜம்புத்வீபம் முழுமைக்கும் பிரிவினையற்ற அரசுரிமையைப் பெற்று விட்டான்.

21. அசோகன் முடி சூட்டிக் கொண்ட போது புத்தர் நிர்வாணமடைந்து இருநூற்றிப் பதினெட்டு வருடங்கள் ஆகிவிட்டன என்பதை அறியவும்.

22. புகழ் பெற்ற அசோகன் பிரிவினையற்ற அரசுரிமையை அடைந்த நான்கு வருடங்களுக்குப் பிறகு பாடலிபுத்திர நகரத்தில் தன்னை மன்னனுக முடி சூட்டிக் கொண்டான்.

23. முடிசூட்டிக் கொண்ட பிறகு அவனுடைய ஆணை நேரடியாக ஆகாயத்திலும் பாதாளத்திலும் கூட ஒரு யோசனை அளவுக்குப் பரந்திருந்தது.

24. நாள்தோறும் தேவர்கள் அநோதத ஏரியிலிருந்து எட்டு மனிதச் சுமை நீர் கொண்டு வருவார்கள். அரசன் அதைத் தன்னுடைய குடிமக்களுக்குக் கொடுப்பான்.

25. இமாலயத்திலிருந்து தேவர்கள் அநேக ஆயிரம் பேர்களுக்குப் போதுமான நாகக் கொடியின் குச்சிகளைப் பல் துலக்கக் கொண்டு தருவார்கள்.

26. நிறத்தாலும் மணத்தாலும் சுவையாலும் நிறைவுற்ற, உடல் நலனுக்கு உகந்த மாம்பழம் முதலான கனிகளையும் அங்கேயிருந்து கொண்டு வருவார்கள்.

27. மாருத தேவதைகள் பஞ்சவர்ணத்தாலான உடைகளையும், துண்டுகளுக்கான மஞ்சள் பொருளையும், சந்திரகாந்த ஏரியிலிருந்து தேவ பானத்தையும் கொண்டு வந்தார்கள்.

28. நாக நாட்டிலிருந்து நாகர்கள் மல்லிகை மலர் போன்றதும் இழை தெரியாததுமான உயர்ந்த ஆடைகளையும், தெய்விகத் தாமரை மலர்களையும், சாந்து வகைகளையும் கொண்டு வருவார்கள்.

29. கிளிகள் தினந்தோறும் சந்திர காந்த ஏரியிலிருந்து தொண்ணூறாயிரம் வண்டி பாரம் நெல் மணிகளைக் கொண்டு வந்தன.

30. சுண்டெலிகள் இந் நெல்மணிகளை உமி நீக்கித் தவிடு போக்கி நொறுங்காமல் சுத்தமான அரிசியாகச் செய்தன. அதைக்கொண்டு அரச குடும்பத்தினருக்கு உணவளிக்கப்பட்டது.

31. தேனீக்கள் இடைவிடாது அவனுக்காகத் தேனைச் சேகரித்துத் தந்தன. பட்டறைகளில் கரடிகள் சம்மட்டி அடித்தன.



32. ஒயிலும் இனிய குரலும் படைத்த காரவீகப் பறவைகள் வந்து அரசனுக்கு இன்னிசை அளித்தன.

33. தான் அரசனானதும் அசோகன் தன் தாய் வயிற்றில் பிறந்த தம்பியான தீசனை ராஜப் பிரதிநிதியாக நியமித்தான்.

பக்திமானான அசோகன் பட்டாபிஷேகம் இங்கு முடிகிறது.

34. அசோகனுடைய தந்தை பிரம்ம கொள்கையில் தேர்ச்சி பெற்ற அறுபதாயிரம் பிராமணர்களுக்கு உணவளித்து வந்தான். அதே போல் அசோகனும் மூன்று வருடகாலம் அவர்களைப் பேணி வந்தான்.

35. உணவு வினியோகிக்கும் போது அவர்களிடம் தன்னடக்கம் இல்லாததைக் கண்ட அசோகன் ‘இனிமேல் நான் விரும்புகிறவர்களுக்கு மட்டுமே கொடுப்பேன்’ என்று தனது மந்திரிகளிடம் உத்தரவிட்டான்.

36. அதன்பின் தீட்சண்யம் மிக்கவனான மன்னன் பல்வேறு கொள்கையையும் பின்பற்றுகிறவர்களைத் தன் முன் கொணரும்படிப் பணித்தான். இந்தக் கூட்டத்தை சோதனை செய்து உணவளித்து அவர்களை உபசரித்த பின்பு அனுப்பி வைத்தான்.

37. ஒரு சமயம் அரண்மனை சாளரத்தருகில் நின்று கொண்டிருந்தபோது சாந்த சொரூபியான நிக்ரோதன் என்ற துறவி வீதி வழியே போகக் கண்டான். அவரிடம் அவனுக்கு அன்பு ஏற்பட்டது.

38. அந்த இளைஞர் பிந்துசாரனுடைய குமாரர்களுள் மூத்தவரான சுமண ராஜ குமாரனுடைய புதல்வர்.

39. பிந்துசாரன் நோய்வாய்ப்பட்டபோது அசோகன் தந்தையினால் தனக்கு வழங்கப்பட்ட உஜ்ஜயினி அரசை விட்டு விட்டுப் புஷ்பபுரம் வந்தான்.

40. தந்தை இறந்த பிறகு தன்னை நகரத்தின் தலைவனாகச் செய்து கொண்ட அவன் தனது மூத்த சகோதரனை (சுமணனை) கொன்றுவிடச் செய்து அந்த அற்புத நகரத்தின் அரசுரிமையைத் தானே எடுத்துக் கொண்டான்.

41. கர்ப்பிணியாக இருந்த சுமணனுடைய தேவி உடனே கீழ வாசல் வழியாகத் தப்பி வெளியேறிச் சண்டாளர்கள் இருந்த கிராமம் ஒன்றை அடைந்தாள்.

42. அங்கே நிக்ரோத (ஆல) மரத்தின் காவல் தேவதை அவளைப் பெயர் சொல்லித் தன்னருகே அழைத்து ஒரு குடிசையை அமைத்து அவளுக்குக் கொடுத்தது.

43. அதே நாளில் அவள் அழகிய ஆண் மகவு ஒன்றைப் பெற்றாள். நிக்ரோத மரக் காவல் தேவதையின் பாதுகாப்பில் பிறந்த அவனுக்கு நிக்ரோதன் என்றே பெயரிட்டாள்.

44. சண்டாளர்களின் தலைவன் அவளைக் கண்டதும் அவளிடம் ஆதரவு காட்டி, சொந்த மனைவியைப் போல் ஏழு வருட காலம் கௌரவமாக வைத்துக் கொண்டான்.

45. பிறகு மகா வருண தேரர் அப்பையனைப் பார்த்தபோது அவனிடம் எதிர்காலத்தின் லட்சணங்கள் இருப்பதைக் கண்டார்.

46. அந்த தேரர் அவனைப் பற்றித் தாயிடம் விசாரித்து புத்த சங்கத்தில் சேர்த்துக் கொண்டார். அவன் சிகை நீக்கிய அந்த அறையிலேயே அவன் அரஹந்த நிலையையடைந்து விட்டான்.



47. தனது தாயைப் பார்க்க அப்போது போய்க் கொண்டு இருந்த நிக்ரோதன், தெற்கு வாசல் வழியே அப்பெரு நகரில் நுழைந்தான். கிராமத்துக்குப் போகும் சாலை வழியே சென்று கொண்டிருந்த அவன் அரசவை வழியே சென்றான்.

48. அவனுடைய அமைதியான தோற்றத்தினால் மகிழ்ச்சியடைந்த மன்னனுக்கு பூர்வ ஜென்மத்தில் இருவரும் ஒன்றாக வசித்ததின் காரணமாகவும் ஒருவிதப் பாச உணர்ச்சி எழுந்தது.

49. முன்னொரு காலத்தில் தேன் வியாபாரம் செய்து வந்த மூன்று சகோதரர்கள் இருந்தனர். ஒருவன் தேனை விற்பதும் இரண்டு பேர் சேகரித்து வருவதும் வழக்கம்.

50. ஒரு பஸ்ஸிக புத்தர் காயமுற்று கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார். மற்றொரு பஸ்ஸிக புத்தர் அவருக்காகத் தேன் கொண்டுவர விரும்பினார்.

51. அப்போதும்கூட பிட்சை பெறுவதற்காக வழக்கம் போல் அவர் நகரத்துக்குச் சென்றார். ஆற்றங்கரைக்கு நீர் கொண்டு வரச்சென்ற ஓர் இளநங்கை அவரைக் கண்டாள்.

52. அவர் தேனை விரும்பி வந்திருக்கிறார் என்பதைக் கேட்டுத் தெரிந்து கொண்ட அவள் ஓரிடத்தில் சுட்டிக்காட்டி 'அங்கே ஒரு தேன் கடை இருக்கிறது அங்கே போங்கள் ஐயா' என்றாள்.

53. நம்புகின்ற உள்ளமுடைய அந்தத் தேன் விற்பவன் தன்னிடம் வந்த பஸ்ஸிக புத்தருக்கு பிட்சா பாத்திரம் நிரம்பி வழியத் தேன் கொடுத்தான்.

54. பாத்திரம் நிறைந்து தேன் விளிம்பு வழியே வழிந்து தரையில் கொட்டுவதைக் கண்டவாறு

அவன் முழு நம்பிக்கையுடன் இப்படி விரும்பினான் :

55. 'இந்த தானத்தினால் ஜம்புத்வீபம் முழுவதையும் பிரிவின்றி அரசாளும் உரிமை எனக்குக் கிடைப்பதாக. என்னுடைய ஆணை ஆகாயத்திலும் பாதாளத்திலும் ஒரு யோசனை தூரம் வரை செல்லுமாக.'

56. அவனுடைய சகோதரர்கள் வந்தபோது அவர்களிடம் 'இன்னின்னபடியான ஒருவருக்கு நான் தேன் கொடுத்தேன். அது உங்களுக்கும் சொந்தமாகையால் இதை நீங்களும் அங்கீகரிக்க வேண்டும்' என்றான்.

57. மூத்த சகோதரன், 'அவன் நிச்சயமாக சண்டாளனே தான்; சண்டாளர்கள் தான் எப்போதும் மஞ்சள் உடை தரிப்பார்கள்' என்றான் வெறுப்புடன்.

58. இரண்டாவது சகோதரன், 'உன் பஸ்ஸிக புத்தருடன் கடல் மேல் ஒழிந்து போ' என்றான். ஆனால் தான் பெறப் போகும் பயனில் இவர்களுக்கும் பங்கு தருவதாக வாக்குறுதி அளித்ததைக் கேட்டு அவர்களும் இசைவு தந்தனர்.

59. தேன் கடையைச் சுட்டிக்காட்டிய அந்த இளம் பெண், தான் சகோதரர்களில் முதல்வனுடைய பட்டமகிஷியாக வேண்டுமென்றும் கவர்ச்சியான உறுப்புகளுடனமைந்த அழகியாகப் பிறக்கவேண்டுமென்றும் விரும்பினாள்.

60. அசோகன் தான் தேன் கொடுத்தவன். ராணி அசந்தி மித்தாதான் அந்தப் பெண். சண்டாளன் என்று சொன்னவன்தான் நிக்ரோதன். கடல்மேல் போகுமாறு சொன்னவன்தான் தீஸன்.



61. சண்டாளன் என்ற வார்த்தையைச் சொன்னவன் (அதற்கு பரிகாரமாக) சண்டாள கிராமத்தில் வசித்தான். ஆனால் அவன் விமோசனம் அடைய விரும்பியதால் ஏழாவது ஆண்டிலேயே விமோசனமடைந்தான்.

62. நிக்ரோதனிடம் பாச உணர்வு கிளர்ந்து எழுந்த அரசன் உடனடியாக அவனைத் தன் முன்னால் அழைத்துவர ஏவினான். ஆனால் அவனோ மிகவும் நிதானமாகவும் அமைதியாகவும் வந்தான்.

63. 'அன்பனே! தகுந்த ஆசனத்தில் அமர்க' என்றான் அரசன். அங்கு யாரும் பிக்குகள் இல்லாததைக் கண்ட நிக்ரோதன் அரச சிம்மாதனத்தை நெருங்கினான்.

64. பின்பு சிம்மாதனத்தை நோக்கி அடியெடுத்து வைத்த அவனைக் கண்ட அரசன் 'இவன் இன்று என் வீட்டின் எஜமானனாக இருப்பான்' என்று எண்ணினான்.

65. அரசனுடைய கைத் தாங்கலில் சிம்மாதனத்தில் ஏறிய அத்துறவி வெண் கொற்றக் குடையின் கீழ் அரியணையில் அமர்ந்துகொண்டார்.

66. அங்கு அவர் அமர்ந்திருப்பதைக் கண்ட அசோகன் அவரது தகுதிக்கேற்ப (இருக்கையளித்து) கௌரவித்து விட்டோம் என்று பெரிதும் களிப்படைந்தான்.

67. தனக்கெனத் தயாரிக்கப்பட்ட உணவுகளைத் துறவிக்கு கொடுத்துப் பசி தீர்த்ததும் சம்புத்தர் போதித்த உண்மைகள் சம்பந்தமாகக் கேட்டான்.

68. பிறகு, துறவி அரசனுக்கு 'அப்ப மாத வர்க்க'த்தை உபதேசம் செய்தார். இதைக் கேட்ட உலக நாயகன் (அசோகன்) புத்தருடைய கொள்கைகளுக்கு வசமானுன்.

69. அரசன் அவரிடம் சொன்னுன்: 'அன்புக்குரியவரே! தங்களுக்கு நிரந்தரமாக எட்டு உணவு கிடைக்கச் செய்கிறேன்!' 'இவற்றை நான் எனது குருநாதருக்கு சமர்ப்பிக்கிறேன்' என்று துறவி திருப்பிச் சொன்னுர்.

70. திரும்பவும் எட்டு உணவு அளிக்கப்பட்ட போது அவற்றை இவர் தமது ஆசாரியருக்கு அர்ப்பணித்தார். மீண்டும் எட்டு அளிக்கப் பட்ட போது அதைப் பிக்கு சங்கத்துக்கு அர்ப் பணித்தார்.

71. மீண்டும் எட்டு அளிக்கப்பட்ட போது பூரணமாக உணர்ந்தவராக அதனை ஏற்றுக்கொள்ள சம்மதித்தார்.

72. முப்பத்திரண்டு பிக்குகளுடன் மறுநாள் அவர் சென்ருர். அரசன் தன்னுடைய கையினுலேயே அவர்களுக்கு உணவளித்ததும் அவர் அவனுக்கு புத்த மார்க்கத்தைப் போதித்தார். புத்த சரணத்தின் பல கொள்கைகளையும் கடமைக் கோட்பாடுகளையும் அரசனுக்கு உரிமையாக்கினுர்.

73. பிறகு அரசன் மகிழ்ச்சியுடன் ஒவ்வொரு நாளும் பிட்சை பெறும் பிக்குகளை அறுபதாயிரம் பேர் ஆகும் வரை இரட்டிப்பாக்கிக் கொண்டு வந்தான்.

**நிக்ரோத விஜயம் இங்கு முடிகிறது.**

**அப்ப மாத வர்க்கம்:** சம்யுக்த நிகாயத்திலுள்ள பதினேறு வர்க்கங்களில் ஒன்று. 'தளராத முயற்சி' என்பது இதன் பொருள்.



74. பொய்யான தத்துவத்தைப் போதித்து வந்த அறுபதினுயிரம் பேர்களையும் ஒதுக்கி விட்டு தன் வீட்டில் நிரந்தரமாக அறுபதினுயிரம் பிக்குகளுக்கு பிட்சையளித்து வந்தான்.

75. உயர்வான உணவு வகைகளை விரைவாகத் தயார் செய்ய ஏற்பாடு செய்து அறுபதினுயிரம் பிக்குகளுக்கு விருந்தளிப்பதற்காக நகரை அருமையாக அலங்கரிக்கவும் ஏற்பாடு செய்த பிறகு,

76. அரசன் சங்கத்துக்குச் சென்று பிக்குகளைத் தன் இல்லத்துக்கு வருமாறு அழைத்தான். அவர்கள் வந்ததும் அன்புடன் உபசரித்துத் துறவிகளுக்குத் தேவையான பொருள்களைத் தாராளமாக வழங்கிக் கௌரவித்தான்.

77. 'புத்தர் போதித்த தர்மத்தின் தன்மை எவ்வளவு மகத்தானது?' என்று அவன் கேட்டதற்கு மாகாளி புத்திர தீஸதேரர் இவ்விஷயமாக அவனுக்குப் பதிலளித்தார்.

78. எண்பத்திநாலு (ஆயிரம்) பிரிவுகளைக் கொண்டது தர்மம் என்று அவர் சொல்லக் கேட்ட அரசன், 'அவை ஒவ்வொன்றையும் பெருமைப் படுத்தும் முறையில் ஒரு விகாரையை எழுப்புவேன்' என்ருன்.

79. பிறகு எண்பத்திநாலாயிரம் நகரங்களுக்கு தொண்ணூற்ருறு கோடி பணம் அளித்தான்.

80. புவியெங்குமுள்ள மன்னர்களை விகாரை கட்டும் வேலையைத் தொடங்குமாறு பணித்து விட்டுத் தானே அசோகாராமாவைக் கட்டத் தொடங்கினுன்.

81. மும்மணிகள், நிக்ரோதன், உடல் நலமற்ருேர் ஆகியவர்களுக்கு, கொள்கைக்கு ஆதரவளிக்

**மும்மணிகள் -புத்தம், தர்மம், சங்கம்.**

கும் முறையில் ஒவ்வொருவருக்கும் அன்றாடம் நூறாயிரம் பணம் வழங்கினான்.

82. புத்தருக்காகச் செலவிட்ட தொகையைக் கொண்டு பிக்குகள், பலவிதமான தூப பூஜைகளைத் தொடர்ந்து பல விகாரைகளிலும் நடத்தினர்.

83. தர்மத்துக்காகச் செலவிடப்பட்ட தொகையைக் கொண்டு மக்கள், கொள்கைகளைக் கற்றுத் தேர்ந்த பிக்குகள் உபயோகத்துக்குத் தேவையான நான்கு பொருள்களையும் தொடர்ந்து தயார் செய்தனர்.

84. அனோதத ஏரியிலிருந்து கொண்டு வரப்பட்ட நீர்ச்சுமைகளிலிருந்து நான்கு சுமைகளைப் புத்த சங்கத்துக்கு அளித்தான். திரிபிடகத்தை அறிந்த அறுபது தேரர்களுக்கு தினந்தோறும் ஒரு சுமை நீரைக் கொடுத்தான்.

85. ஒரு சுமை நீரை ராணி அசந்திமித்தைக்குக் கொடுத்து விட உத்திர விட்டான். எஞ்சியுள்ள இரண்டு சுமையை அரசன் தனது சொந்த உபயோகத்துக்கு வைத்துக் கொண்டான்.

86. அறுபதினாயிரம் பிக்குகளுக்கும் அரண்மனையிலுள்ள பதினாறாயிரம் பெண்களுக்கும் ஒவ்வொரு நாளும் 'நாகலதா' எனப்பட்ட பல் குச்சியைக் கொடுத்தான்.

87. நான்கு புத்தர்களைத் தரிசித்தவரும் அற்புத சக்தி படைத்தவருமான மகாகாலன் என்ற நாக மன்னனைப் பற்றி அரசன் ஒரு நாள் கேள்விப்பட்டான்.

88. அவன் ஒரு யுக காலம் வாழ்ந்தவன். தங்கச் சங்கிலியிட்டு மகா காலனைத் தன் முன்பு



கொண்டு வரச் செய்தான். அவரை வெண் கொற்றக் குடையின் கீழ் சிம்மாதனத்தில் அமர வைத்தான்.

89. பலவகை மலர்களைக் கொண்டு பூசித்ததும் அரண்மனையிலுள்ள பதினாறாயிரம் பெண்களையும் அவரைச் சூழ்ந்திருக்கச் செய்து அரசன் இவ்வாறு சொன்னான்:

90. 'எல்லாம் அறிந்தவரும், எல்லையற்ற ஞானம் படைத்தவரும், சத்தியத்தின் சக்கரத்தைச் சுழலச் செய்தவரும், மகாமுனிவருமான புத்தரின் உருவத்தைத் தரிசிப்போமாக.'

91. நாக மன்னன் புத்தருடைய அழகான உருவத்தைப் படைத்தான். முப்பத்திரண்டு பெருலட்சணங்களும் எண்பது சிறுலட்சணங்களும் ஒளி வீசும்படியாக அது இருந்தது.

92. சுற்றிலும் ஆறடிக்கு பேரொளிக் கதிர்களால் சூழப்பட்டதும், ஒளி எரிக்கும் திருமுடியால் அலங்கரிக்கப் பட்டதுமாக அது திகழ்ந்தது.

93. இதனைக்கண்ட அளவிலே அரசன் வியப்பும், மகிழ்வும், சிந்தனையும் நிரம்பியவன் ஆனான். 'மகா காலனால் சிருஷ்டிக்கப்பட்ட உருவமே இப்படி இருக்குமானால் ததாகதருடைய உண்மை உருவம் எப்படி இருந்திருக்க வேண்டும்' என்று அரசன் எண்ணினான்.

94. அவன் மென்மேலும் மகிழ்ச்சியினால் உந்தப் பட்டான். அதிசய சக்தியுள்ள அந்தப் பேரரசன் ஏழு தினங்களுக்கு இடைவிடாது 'கண்களுக்கு விருந்து' எனப்படும் அப்பெரிய விழாவை இருக்கும்படி செய்தான்.

95. வல்லமையாளனும் நம்பிக்கையுள்ளவனுமான அரசனும் மாகாளிபுத்திர தேரரும் முன் காலங்

களிலேயே தூயவர்களால் காணப்பட்டவர் களாவர்.

96. இரண்டாவது மகாசபை கூடியபோது எதிர் காலத்தை நோக்கிய தேரர்கள் அந்த அரச னுடைய காலத்தில் நம்பிக்கை வீழ்ச்சியடையும் என்பதைக் கண்டார்கள்.

97. அத்தகைய வீழ்ச்சி ஏற்படாமல் தடுக்கக்கூடிய ஒருவருக்காக உலகெங்கும் தேடியவர்கள் பிரம்ம சொர்க்கத்தில் அதிக காலம் இருக்க வேண்டியிராத பிரம்ம தீசனைக் கண்டார்கள்.

98. அறிவுச் செம்மலான அவரிடம் சென்று மனிதர் களிடையே மறுபிறவி யெடுத்து இந்த வீழ்ச்சி ஏற்படாமல் தடுக்குமாறு பிரார்த்தித்துக் கொண்டார்கள்.

99. நம்பிக்கை மேலும் ஒளிபெற்று விளங்கவேண்டு மென்று விரும்பிய அவர் பிரார்த்தனைக்கு இணங்கினர். இளைஞர்களாக இருந்த சிக்கவா, சந்தவாஜி என்பவர்களிடம் முனிவர் இவ் வாறு கூறினர்:

100. 'நூற்றிப் பதினெட்டு வருடங்கள் கழிந்ததும் நமது மதத்தின் வீழ்ச்சி ஆரம்பமாகும். அதைக் காண நாங்கள் உயிரோடு இருக்க மாட்டோம்.

101. 'பிக்குகளாகிய உங்களுக்கு இவ்விஷயத்தில் (இரண்டாவது சபையின் வேலையில்) எந்த பங்கும் கிடையாது. எனவே நீங்கள் தண்டனை பெற வேண்டியவர்கள்.

102. 'உங்களுக்குரிய தண்டனை இதுதான். நம்பிக்கை மீண்டும் ஒளிபெற்றுத் திகழ்வதற் காக அறிவுச் செம்மலான பிரம்மதீசன், பிராமணரான மாகாளி வீட்டில் மறுபிறவி எடுப்பார்.



103. 'உரிய காலம் வந்ததும் உங்களில் ஒருவர் அவரைச் சங்கத்தில் சேர்ப்பீர்கள். மற்றொரு வர் கவனமாக சம்புத்தருடைய போதனைகளைக் கற்றுத் தருவீர்கள்.'

104. உபாலி தேரருடைய சீடரான தாசக தேரர் என்பவர் ஒருவர் இருந்தார். சோனகர் என்பவர் தாசகருடைய சீடர். (சிக்கவா, சந்தவாஜி ஆகிய) அந்த தேரர்கள் இருவரும் சோனகருடைய சீடர்களாவர்.

105. முன் காலத்தில் வைசாலியில் தாசகர் எனப் பட்ட கற்றறிந்த பிராமணர் ஒருவர் இருந்தார்.

106. முந்நூறு சீடர்களுக்கு மூத்தவராக அவர் தமது குருவுடன் வாழ்ந்தார். பனிரெண்டு வருடகால முடிவில் வேதங்களைக் கற்றுணர்ந்த பின், அவர் மற்றவர்களுடன் வாலிகா மடத்தில் வசித்துக்கொண்டு இருந்த உபாலி தேரரைச் சந்தித்தார்.

107. உபாலிதேரர் சத்திய வாக்குகளை இரண்டா வது மகாசபையில் நிலை நாட்டியபின் அவ் விடத்தில் இருந்தவர். வேதங்களில் உள்ள கடினமான பகுதிகளைப் பற்றி அவரருகே கீழே அமர்ந்து விளக்கம் கேட்டார் (தாசகர்). அவரும் அவற்றை விளக்கிச் சொல்லிப் புரிய வைத்தார்.

108. 'ஓ பிராமணரே! எல்லாத் தத்துவங்களுக்கும் பிறகு ஒரு தத்துவம் வந்திருக்கிறது. இருந் தாலும், எல்லாத் தத்துவங்களும் அந்த ஒன்றிலேயே சென்று முடிகின்றன. அத் தத்துவம் எதுவென்று தெரியுமா?'

109. இவ்வாறு தேரர் சொன்னர். உண்மைக் கொள்கையின் பெயர் பற்றி இளம் பிராமண

ருக்கு அது என்னவென்று தெரியவில்லை. 'அது என்ன மந்திரம்?' என்று கேட்டார். 'புத்தருடைய மந்திரம்' என்ற பதில் கிடைத்ததும் அவர் சொன்னார்.

110. 'அதை எனக்கு அருள்க' என்று பிராமணர் கேட்டுக் கொண்டதற்கு 'எங்கள் உடையை அணிபவர்களுக்கு மட்டுமே அதனை அருள்வோம்' என்று தேரர் பதிலளித்தார். தாசகர் தமது குருவையும், தந்தையையும், தாயையும் அந்த மந்திரத்தைப் பற்றிக் கேட்டார்.

111. தாசகரும், அவருடன் இருந்த முந்நூறு இளம் பிராமணர்களும் தேரரிடம் புத்த தீட்சை பெற்றனர். பிராமணர் உரிய காலத்தில் துறவியாக்கப்பட்டார். புத்தருடைய போதனைகள் அவர்களுக்குக் கற்றுத் தரப்பட்டன.

112. உபாலி தேரர் ஆசவங்களை வென்ற ஆயிரம் சீடர்களுக்கும், அவர்களில் ஒருவராக இருந்த தாசகருக்கும் திரிபிடகம் முழுவதையும் உபதேசித்தார்.

113. தேரரிடமிருந்து பிடகங்களைக் கற்றுக்கொண்ட, புத்த மதத்தில் சேராமல் விலகியிருந்த பிற ஆரியர்களுடைய தொகை மேலும் அதிகரித்துக் கொண்டே வந்தது.

114. காசி நாட்டில் வர்த்தகக் குழுவினருக்கு வழி காட்டியாக இருந்த ஒருவருடைய குமாரர் சோனகர். பெற்றோருடன் அவர் வாணிபம் செய்துகொண்டு கிரிவிரஜாவுக்கு வந்தார்.

115. பதினைந்து வயது இளைஞராக இருந்த அவர், அப்போது வேணுவன மடத்துக்குச் சென்றார்.

**கிரிவிரஜா:** மகத நாட்டின் பழைய தலைநகர். இது ஒரு மலையின் மீது கட்டப்பட்டது. பின்னர் மலையடிவாரத்தில் ராஜக்ரகம் கட்டப்பட்டது.



அவருடைய சகாக்களான ஐம்பத்தி ஐந்து பிராமண இளைஞர்களும் அவருடன் வந்தனர்.

116. சீடர்கள் சூழ இருந்த தாசக தேரரை அங்கு அவர் கண்டதும் நம்பிக்கை அவருக்கும் ஏற்பட்டது. தனக்கு தீட்சை அருளுமாறு அவரைக் கேட்டார். 'உன் குருவைக் கேள்' என்று கூறினார் தேரர்.

117. அதன் பிறகு இளைஞரான சோனகர் மூன்று வேளை பட்டினி கிடந்து, சங்கத்தில் சேரப் பெற்றோருடைய அனுமதி பெற்றுத் திரும்பி வந்தார்.

118. அதன் பிறகு, இதர இளைஞர்களுடன் தாசக தேரரிடம் புத்த தீட்சையும், துறவு தீட்சையும் பெற்ற அவர் மற்ற இளைஞர்களுடன் கூடி, திரிபிடகங்களையும் கற்றார்.

119. ஆசவங்களைக் கடந்தவரும் பிடகங்களை நன்கறிந்தவருமான தேரருடைய ஆயிரம் சீடர்களுக்கிடையே சோனக முனிவர் முன்னணியில் இருந்தார்.

120. பாடலி என்ற மலரின் பெயரையுடையதாக இருந்த நகரத்தில் (பாடலிபுத்ரம்) மந்திரியின் புதல்வரான சிக்கவா என்ற அறிஞர் ஒருவர் வசித்து வந்தார்.

121. ஆண்டின் மூன்று பருவங்களுக்கேற்ற மூன்று மாளிகைகளில் வாசம் செய்து வந்த அவனுக்குப் பதினெட்டு வயது. அவன்,

122. மற்றொரு மந்திரியின் மகனை சந்தவாஜி என்னும் தோழனுடன் ஐநூறு பேர்கள் தொடர்ந்து வர குக்குடராம மடத்துக்குச் சென்று சோனக தேரரைக் கண்டான்.

123. புலனையடக்கித் தியானத்தில் ஆழ்ந்திருந்த சோனகர் தன்னிடம் எதுவும் பேசாமல் இருக்கவே சங்கத்தினரிடம் அதுபற்றிக் கேட்டான்.

124. 'ஆழ்ந்த தியானத்தில் இருப்பவர்கள் பதில் பேசுவது இல்லை' என்று அவர்கள் சொன்னார்கள். 'தியான நிலையிலிருந்து எப்போது எழுந்திருப்பார்கள்?' என்று கேட்டான். பிக்குகள் சொன்னார்கள்:

125. 'குருநாதர் அழைக்கின்ற போதோ, சங்கத்தாருடைய அழைப்பு வந்த பின்னரோ, அல்லது தியானத்துக்குரிய நேரம் முடிந்த பிறகோ, மரணம் நெருங்கும் போதோ தான் அவர்களுடைய தியானம் கலையும்.'

126. இவ்வாறு பேசிக் கொண்டிருக்கும்போதே இந்த இளைஞர்கள் புனிதமான சேவைக்குப் பிறந்தவர்கள் என்பதைப் பிக்குகள் புரிந்து கொண்டனர். அதனால் சங்கத்தினரைக் கொண்டு அழைக்கச் செய்தனர். தேரர் தியானத்திலிருந்து எழுந்து அவர்களிடம் சென்றார்.

127. 'வணக்கத்துக்குரியவரே! என்னுடன் ஏன் பேசவில்லை?' என்று அந்த இளைஞன் (சிக்கவா) அவரிடம் கேட்டான். 'எங்களுக்குரிய தியான சுகத்தை நாங்கள் அனுபவித்துக்கொண்டிருந்தோம்' என்று தேரர் பதிலளித்தார். 'நாங்களும் கூட அதை அனுபவிக்கிறோம்' என்று இளைஞன் சொன்னான்.

128. 'எங்களைப் போன்றவர்களுக்கே அந்தச் சுகத்தை அனுபவிக்க எங்களால் செய்ய முடியும்' என்றார் சோனகர்.



129. பின்னர் பெற்றோர் அனுமதியுடன் சிக்கவாவும் சந்தவாஜியும், அவர்களுடைய நண்பர்களான ஐநூறு பேரும் சோனக தேரரிடமிருந்து புத்த தீட்சையும், உபசம்பதா தீட்சையும் பெற்றனர்.

130. சோனகரைக் குருவாகக் கொண்டு இருவரும் திரிபிடகங்களைக் கற்றுத் தேர்ந்து ஆறு அமானுஷ்ய சக்திகளையும் பெற்றனர்.

131. இதற்குப் பிறகு தீசன் இவ்வுலகில் பிறவி எடுத்திருக்கிறார் என்பதை சிக்கவா அறிந்து கொண்டார். அதுமுதல் அவர் ஏழு வருட காலத்துக்கு அவர் வீட்டுக்கு அடிக்கடி சென்று வந்தார்.

132. ஏழுவருட காலம் வரை 'மேலே செல்' என்ற வார்த்தையை அவர் கேட்கவில்லை. ஆனால் எட்டாவது வருடம் அவ் வீட்டில் 'மேலே செல்' என்ற அசரீரி வார்த்தையை அவர் கேட்டார்.

133. அவர் அதன்படி உள்ளே சென்றபோது பிராமணராகிய மாகாளி எதிர்ப்பட்டு 'எங்கள் வீட்டில் பிட்சை பெற்றுக்கொண்டீர்களா?' என்று கேட்டார். அதற்கு அவர் 'ஆம்' என்றார்

134. மாகாளி வீட்டுக்குள் சென்றதும் நடந்ததைக் கேட்டுத் தெரிந்துகொண்டார். மறுநாள் தேரர் வீட்டுக்கு வந்தபோது பொய் சொன்னதற்காக அவரிடம் கோபித்துக்கொண்டார்.

135. தேரருடன் பழகி அவருடைய வார்த்தைகளைக் கேட்கக் கேட்கப் பிராமணராகிய மாகாளிக்கு அதில் நம்பிக்கை ஏற்பட்டது. தமது உணவில் ஒரு பகுதியை அன்றாடம் பிட்சையாக அளித்து வந்தார்.

136. கொஞ்சங் கொஞ்சமாக அவர் வீட்டிலிருந்த எல்லோரும் புத்தமதப் பற்றுடையவர்களாயினர். பிராமணர் தேரரைத் தொடர்ந்து தமது வீட்டில் இருக்கையளித்து உபசரித்துப் பேணி வந்தார்.

137. காலக்ரமத்தில் இளம் தீசனுக்குப் பதினாறு வயது ஆயிற்று. மூன்று வேதங்களிலும் கரை கடந்தவராக அவர் விளங்கினார்.

138. தீசனுடன் பேச விரும்பிய தேரர் ஒரு வழியைக் கண்டுபிடித்தார். தீசனுடைய ஆசனம் தவிர அவ் வீட்டில் உள்ள இதர எல்லோருடைய ஆசனங்களையும் தேரர் மறையச் செய்தார்.

139. தீசன் பிரம்மலோகத்திலிருந்து வந்தவராகையால் அவர் சுத்தத்தை விரும்பினார். எனவே அவரது ஆசனம் தூய்மையாக இருக்கும் பொருட்டுக் கட்டித் தொங்கவிடப்பட்டிருக்கும்.

140. வீட்டில் வேறு ஆசனம் இல்லாததால் குழப்பமடைந்த வீட்டிலுள்ளவர்கள் தேரர் நிற்க வேண்டியிருப்பதை அறிந்து தீசனுடைய ஆசனத்தில் அவரை அமரச் செய்தனர்.

141. தீசன் தம்முடைய குருவின் வீட்டிலிருந்து திரும்பி வந்தபோது தேரர் தமது ஆசனத்தில் அமர்ந்திருப்பது கண்டு கோபம் அடைந்து அன்பற்ற முறையில் பேசினார்.

142. 'இளைஞனே! நீ மந்திரங்களை அறிவாயோ?' என்று தேரர் கேட்டார். பதிலுக்கு இளம் பிராமணர் அதே கேள்வியைத் தேரரிடம் திருப்பிக் கேட்டார்.

143. 'எனக்குத் தெரியும்' என்று தேரர் கூறவே, வேதத்திலுள்ள கடினமான பகுதிகளைக் குறித்து தீசன் அவரிடம் கேட்டார். தேரர் அவைகளை விளக்கிச் சொன்னார்.



144. துறவை மேற்கொள்ளுமுன் அவர் சாமானிய வாழ்க்கை நடத்தியபோது வேதங்களை முற்றவும் படித்து அறிந்திருந்தார். நான்கு விசேஷ ஆற்றல்களில் வல்லவரான அவர் வேதத்தை விளக்கிச் சொல்ல முடியாமல் இருக்க முடியுமா?

145. 'சிந்தனை யாருக்கு எழுகின்றதோ, அந்தச் சிந்தனை யாருக்கு அழிவற்றதாகவும் இருக்கின்றதோ அவர்கள் அந்தச் சிந்தனையும் அழிந்துபோக மீண்டும் பிறவியடையாத நிர்வாண நிலையையடைகிறார்கள். ஆனால் யாருக்குச் சிந்தனை அழிந்து போகிறதோ, யாருக்குச் சிந்தனையில் எழுச்சி ஏற்படாமல் சிதறிப் போகிறதோ அவர்களுக்கு மீளவும் சிந்தனை ஏற்படும். அவர்களுக்கு அந்த சிந்தனை அழிந்து போவதும் இல்லை.'

146. ஞானியான தேரர் சித்தயமகத்திலிருந்து இந்தக் கேள்வியைக் கேட்டார். தீசனுக்கு அது இரவின் அடர்ந்த இருளைப்போல் இருந்தது.

147. 'ஓ பிக்குவே! இது என்ன மந்திரம்?' என்று (தீசன்) கேட்டார். 'புத்தருடைய மந்திரம்' என்று தேரர் சொன்னார். 'அதை எனக்குப் போதியுங்கள்' என்று தீசன் கேட்டார்.

145—சத்தியத்தை அறிந்தவர்கள் (நிர்வாண நிலையடைகிறார்கள்) அதிலிருந்து திரும்பிச் செல்வது இல்லை. ஆனால் சரியானபடி சிந்திக்காதவர்களும், உண்மையான மார்க்கத்தைப் பின்பற்றாதவர்களும் ஒரு புதிய வாழ்வை மேற்கொண்டு விடுவார்கள். அவர்கள் விமோசனம் அடையமாட்டார்கள்.

'எங்கள் உடையை அணிந்தவர்களுக்கே நான் அதைக் கற்றுத்தர முடியும்' என்றார் தேரர்.

148. எனவே தாய் தந்தையருடைய அனுமதியுடன் இளைஞரான தீசன் அந்த மந்திரத்தைக் கற்பதற்காக புத்த தீட்சை பெற்றார். பிறகு தேரர் அவருக்குக் கர்மஸ்தானத்தை முறைப் படிக் கற்றுத் தந்தார்.

149. பெரும்பேறு பெற்றவரான இவர் தியானத்தைக் கையாண்டு விரைவில் சோடபதியின் பலனையடைந்தார்.

150. தேரர் இதையறிந்ததும் சுத்த பிடகம், அபிதர்ம பிடகம் ஆகியவற்றைக் கற்றுக்கொள்ள தீசனை சந்தவாஜி தேரரிடம் அனுப்பி வைத்தார். இவற்றையும் அவர் சந்தவாஜியிடமிருந்து கற்றுத் தேர்ந்தார்.

151. அதன் பின்னர் துறவியான சிக்கவா, தீசனை உபசம்பதராகச் செய்ததும் வினயத்தைக் கற்றுத் தந்தார். பின்னர் மற்றும் இரண்டு பிடகங்களைக் கற்றுத் தந்தார்.

152. தீசன் உண்மையான உள்ளுணர்வையடைந்ததும் அமானுஷ்ய சக்திகள் ஆறிலும் தேர்ச்சி பெற்று தேரர் நிலையைக் காலக்ரமத்தில் அடைந்தார்.

153. சந்திர சூரியனைப்போல் அவருடைய புகழ் எங்கும் ஒளி வீசியது. சம்புத்தருடைய வாக்காக மதித்து அவருடைய வாக்குக்கு உலகம் மதிப்பளித்தது.

**மாகாளியின் புதல்வரான தீச தேரரின் கதை இங்கு முடிகிறது.**

**சோடபதி:** புனிதமடைவதற்கு முதல் கட்டம்.

**கர்மஸ்தானம்:** செயல்படுவதற்கான அஸ்திவாரம். அதாவது தியானம் செய்வதற்கான சரியான முறை.



154. ஒரு நாள் உபராஜன் தீசன் வேட்டையாடச் சென்றிருந்தபோது காட்டில் களிப்புடன் கூடி வாழும் மான்களைக் கண்டான்.

155. 'காட்டிலிருக்கும் புல்லைத் தின்னும் மான்கள் கூட இவ்வளவு மகிழ்வுடன் வாழ்கின்றனவே. வசதியான உறைவிடமும் உணவும் கிடைத்தும் பிக்குகள் ஏன் மனமகிழ்வுடனும் உற்சாகத்துடனும் இல்லை' என்ற கேள்வி அவன் சிந்தனையில் எழுந்தது.

156. வீடு திரும்பி வந்து அவன் தன்னுடைய எண்ணத்தை அரசனிடம் தெரிவித்தான். இதை அவனுக்கு அனுபவ பூர்வமாக அரசன் உணர்த்த விரும்பினான். அரச பதவியை ஒரு வார காலத்துக்கு அவனுக்கு அளித்தான்.

157. 'ஒரு வார காலத்துக்கு அரசனாக இருந்து ஆனந்தத்தை அனுபவி. அதன் பின்னர் உன்னைக் கொன்று விடுவேன்' என்று அரசன் அவனிடம் கூறினான்.

158. ஒரு வாரம் சென்றது. 'இளைத்துத் துரும்பாகப் போய் விட்டாயே! ஏன்?' என்று அரசன் கேட்டான். 'மரணம் சம்பவிக்குமே என்ற பயம்தான் காரணம்' என்று தீசன் பதிலளித்தான். அதற்குப் பதிலாக அரசன் சொன்னான்:

159. 'இன்னும் ஒரு வாரத்தில் இறக்க நேருமே என்ற எண்ணத்தின் காரணமாக நீ ஆனந்தமாக வாழ முடியவில்லை. எப்போது பார்த்தாலும் மரணத்தைப் பற்றியே எண்ணிக் கொண்டிருக்கும் துறவிகள் எவ்வாறு ஆனந்தமாக இருக்க முடியும்?'

160. அண்ணன் இவ்வாறு சொல்லக்கேட்ட தீசன் புத்த மார்க்கத்தில் நம்பிக்கை கொண்டு அதை மேற்கொண்டான்.

161. பிறகு ஒரு நாள் அவன் வேட்டைக்குச் சென்றிருந்தபோது ஒரு மரத்தடியில் தன்னை அடக்கிய தவசீலர் மகா தர்மராக்கித தேரரைச் சந்தித்தான்.

162. மரத்தடியில் தியானத்தில் அமர்ந்திருந்த அவருக்கு சால விருட்சக் கிளையொன்றினால் நாகம் விசிறிக் கொண்டிருந்தது. 'இந்தத் தேரரைப்போல் நான் என்று ஆவேன்? புத்த மார்க்கத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டுக் காட்டில் இப்படி எப்போது வாழ்வேன்?' என்று அறிவுள்ள அவன் நினைத்தான்.

163. அவனை மாற்றுவதற்காகவே ககன மார்க்கமாகத் தேரர் அங்கு வந்திருந்தார். அவர் அசோகாராமாவிலுள்ள குளத்தின் நீர்மேல் நின்று கொண்டிருந்தார்.

164. தமது உடையைக் கழற்றி காற்றில் தொங்க விட்டு விட்டு நீரில் குதித்து ஸ்னானம் செய்தார்.

165. உபராஜனான இளவரசன் இந்த அதிசயத்தைப் பார்த்தபோது மகிழ்வும் நம்பிக்கையும் அடைந்தவனாக, 'இன்றே புத்த தீட்சை பெறுவேன்' என்று அறிவாளியான அவன் அறிவுடன் கூடிய முடிவு செய்தான்.

166. அரசனிடம் சென்று தன்னை தீட்சை பெற அனுமதிக்கும்படிப் பணிவுடன் வேண்டிக் கொண்டான். அவனுடைய உறுதியை அரசனால் மாற்ற முடியவில்லை.



167. அவனைத் தன்னுடன் அழைத்துக்கொண்டு பெரும் பரிவாரத்துடன் விகாரைக்குச் சென்றான். அங்கு இளவரசன், மகாதர்ம ராக்கித தேரரிடம் தீட்சை பெற்றான்.

168. இளவரசருடன் நானூறாயிரம் பேர் தீட்சை பெற்றனர். அதற்குப் பின்பு தீட்சை பெற்றவர்களுடைய எண்ணிக்கை தெரியவில்லை.

169. அக்னிபிரம்மன் என்பவன் அரசனுடைய மருமகனும், அரசகுமாரி சங்கமித்தையின் கணவனுமாவான்.

170. இவர்கள் இருவருக்கும் பிறந்த பிள்ளைக்கு சுமணன் என்று பெயர். அக்னி பிரம்மனும் அரசனுடைய அனுமதி பெற்று இளவரசனுடன் தீட்சை பெற்றான்.

171. இளவரசன் சந்நியாசம் பெற்றது அசோகன் ஆட்சிக்கு வந்த நான்காவது வருடத்தில் ஆகும்.

172. அதே வருடம் உபசம்பத தீட்சை பெற்றார். தெய்வப் பணிக்கென்றே பிறந்திருந்தபடியால் அவர் மேலும் முயற்சியுடன் பாடுபட்டு விசேஷ சக்திகள் ஆறும் படைத்த அரஹந்தராகவும் ஆயினர்.

173. எல்லா நகரங்களிலும் கட்டத் தொடங்கிய அழகிய விகாரைகள் மூன்று வருடங்களுக்குள் முறையாகக் கட்டப்பட்டு விட்டன.

174. அசோகன் பெயரால் கட்டப்பட்டு வந்த ஆராமம் இந்திரகுப்த தேரரால் மேற்பார்வையிடப்பட்டு வந்தது. அவர் தமது அதிசய சக்தியால் அசோகாராமா வேலையும் அதே சமயம் முடியும்படி செய்தார்.

175. புத்தர் தாமே விஜயம் செய்த இடங்களில் எல்லாம் அரசன் அழகிய சைத்யங்களை இங்கும் அங்குமாகக் கட்டினான்.

176. 'எண்பத்தி நாலாயிரம் நகரங்களிலிருந்தும் விகாரை கட்டி முடிந்துவிட்டது' என்ற செய்தி தாங்கிய கடிதங்கள் ஒரே நாளில் வந்து சேர்ந்தன.

177. ராஜ கம்பீரமும், அதிசய ஆற்றலும், வீரமும் படைத்த பேரரசன் கடிதங்களைப் பெற்ற போது உடனே எல்லா ஆராமாக்களிலும் விழா நடத்த முடிவு செய்தவனாக,

178. முரசறைவித்து நகரெங்கும் பிரகடனம் செய்தான்: 'இன்றிலிருந்து ஏழாவது நாள் எல்லா ராஜ்யங்களிலும் எல்லா வகையாகவும் ஆராமங்கள் விழாக் கோலத்துடன் திகழவேண்டும்.

179. 'இந்த உலகத்தில் எங்கும் பெரும் தானங்கள் கொடுக்கப்படட்டும். தெருக்களும் ஆராமங்களும் அழகு படுத்தப் படட்டும்.

180. 'எல்லா விகாரைகளிலும் சகல வகையான கொடைகளும், கொடுப்பவர்களின் நேரத்துக்கும் தகுதிக்குமேற்ப சங்கத்துக்கு தாராளமாக வழங்கப்படவேண்டும்.

181. 'அணிகள், சரவிளக்குகள், மலர் மாலைகள் இங்குமங்குமாகத் தொங்க விடப்படட்டும். மேலும் விழாவுக்குச் சிறப்பு தரும் எல்லாக் காரியங்களும் எல்லா வகையான வாத்திய கோஷங்களுடனும் பலபடியாக எங்கும் விழா நிகழட்டும்.

182. 'உபோசத தினத்தில் ஆற்றவேண்டிய கடமைகளை மேற்கொண்டு எல்லோரும் மத உபந்நி



யாசங்களைக் கேட்கவேண்டும். அன்று பலவிதமான காணிக்கைகளுடன் வழிபாடு நிகழவேண்டும்!'

183. எல்லா இடங்களிலுமுள்ள மக்கள் எல்லா விதமான மத விழாக்களையும் நடத்தினர். தேவலோகத்தைக் காட்டிலும் சிறப்பாகவும், செய்ய வேண்டுமென்ற அரசனுடைய ஆணைக்கும் அதிகமாகவும் விழா கொண்டாடினர்.

184. அன்று பேரரசன் ஆடையாபரணங்களை அணிந்துகொண்டு அரண்மனைப் பெண்களும், மந்திரி பரிவாரங்களும், ஏராளமான படை வீரர்களும் சூழ்ந்துவர,

185. தன் பெயரால் இருந்த ஆராமத்துக்கு விரைந்து சென்றான். வணக்கத்துக்குரிய புத்த சங்கத்தின் நடுவே அவன் தலை தாழ்த்தி நின்றான்.

186. அங்கு எண்பது கோடி பிக்குகள் கூடியிருந்தனர். இவர்களில்,

187. நூறாயிரம் துறவிகள் ஆசவங்களைக் கடந்தவர்கள். மேலும் தொண்ணூறு லட்சம் பிக்குணிகளும் இருந்தனர்.

188. இவர்களில் ஆசவங்களைக் கடந்தவர்கள் ஆயிரம் பேர். இந்த பிக்குகளும் பிக்குணிகளும் 'உலகைக் காட்டுதல்' எனப்படும் அதிசயத்தை, தர்ம அசோகன் மனமாற்றம் பெறுவதைக் குறிக்கோளாகக் கொண்டு செய்தனர்.

189. அவனுடைய கொடுஞ்செயல்களின் காரணமாக முன்பு அவனைச் சண்டாள அசோகன் என்று அழைத்தனர். பின்னால் அவனுடைய பக்திச் செயல்களின் காரணமாக அவன் தர்ம அசோகன் எனப் பெயர் பெற்றான்.

190. கடலால் சூழப்பட்ட ஜம்புத்வீபம் முழுவதும் அவன் சுற்றிப் பார்த்தான். விழாக்கோலத்தில் காட்சியளித்த எல்லா விகாரைகளையும் தரிசித்தான்.

191. இதனால் அளவு கடந்த மகிழ்வெய்திய அரசன் ஆசனத்திலமர்ந்து, புத்த சங்கத்தினரிடம் 'வணக்கத்துக்குரியவர்களே! புத்த மார்க்கத்துக்கு என்னைவிட அதிகமாகத் தர்மம் செய்திருப்பவர்கள் யாரேனும் உண்டா?' என்று கேட்டான்.

192. 'புத்தருடைய வாழ்நாளில்கூட உன்னளவு கொடுத்த ஒரு தர்மவான் இருக்கவில்லை' என்று மாகாளி புத்திர தேரர் பதிலளித்தார்.

193. இது கேட்ட மன்னன் மேலும் மகிழ்வடைந்தான். 'என்னைவிட புத்த தருமத்தில் அதிக ஈடுபாடுடையவர்கள் யாரேனும் உண்டா?' என்று கேட்டான்.

194. அரசனுடைய மகன் மஹிந்தன், மகள் சங்கமித்திரை ஆகியவர்களுடைய நல்லூழைத் தேரர் உணர்ந்தார்.

195. அவர்களால் புத்த மார்க்கம் செழிப்படையப் போகிறது என்பதையும் முற்படக் கண்டார். மேலும் அந்தக் கொள்கையின் பொறுப்பில் இருந்த மாகாளி தேரர் அரசனிடம் சொன்னர்:

196. 'உன்னைப்போல் தாராளமாக தர்மம் செய்பவர்களும் கூட மதத்தில் ஈடுபாடுடையவர்கள் ஆக மாட்டார்கள். தானம் செய்பவர்கள் என்று தான் அவர்கள் அழைக்கப்படுவார்கள்.

197. 'ஆனல் தன்னுடைய மகனையோ, மகளையோ துறவை மேற்கொள்ள அனுமதிப்பவன் தான் மத ஈடுபாடும் கொடையாளர்களில் சிறந்தவனுமாவான்.'



198. இதைக் கேட்ட அரசன் தன்னருகே நின்றிருந்த மஹிந்தனையும் சங்கமித்திரையையும் பார்த்து,

199. 'அன்புக்குரியவர்களே! நீங்கள் தீட்சைபெற விரும்புகிறீர்களா?' என்று கேட்டான். அது மிகவும் உயர்ந்ததாகக் கருதப்படுகிறது என்றும் சொல்லக் கேட்ட,

200. அவர்கள் 'அரசே! தாங்கள் விரும்பினல் இன்றே நாங்கள் புத்த மார்க்கத்தில் சேர்ந்து விடுகிறோம். எங்களுடைய தீட்சைப் பேறினல் உங்களுக்கும் எங்களுக்கும் நன்மை உண்டாகட்டும்' என்றார்கள்.

201. இளவரசன் தீசன் துறவை மேற்கொண்டதிலிருந்தே மஹிந்தன், தானும் புத்த சங்கத்தில் சேருவது என்று தீர்மானம் செய்து கொண்டிருந்தான். அக்னிபிரம்மன் துறவை மேற்கொண்ட பிறகு சங்கமித்திரையும் அதே முடிவுக்கு வந்திருந்தாள்.

202. அரசன் உபராஜனக மஹிந்தனைச் செய்ய எண்ணியிருந்த போதிலும் மகனுடைய விருப்பத்துக்கு இணங்கியதற்குக் காரணம் அதைவிட இது சிறந்த பெருமையளிப்பது என்று கருதியதேயாகும்.

203. அறிவிலும் அழகிலும் வீரத்திலும் சிறந்த அருமை மகன் மஹிந்தனையும், மகள் சங்கமித்திரையையும் பவித்ரமான முறையில் தீட்சைபெற அவன் அனுமதித்தான்.

204. அப்போது அரச குமாரன் மஹிந்தனுக்கு இருபது வயது. அரசகுமாரி சங்கமித்திரைக்கு பதினெட்டு வயது.

205. அதே நாளில் மஹிந்தன் தீட்சைப் பெற்று உபசம்பதனனன். அதே நாளில் சங்கமித்திரை

தீட்சைப்பெற்று ஒரு குருவிடம் ஒப்படைக்கப் பட்டாள் (போதிய வயதடையாததே இதற் குக் காரணம்)

206. இளவரசருடைய ஆசிரியர் மகாளிபுத்திரதீசன் ஆவார். மகாதேவ தேரர் இளவரசருக்குத் தீட்சை செய்து வைத்தார்.

207. மஜாந்திகர் கர்ம வாசகத்தைச் சொன்னார். உபசம்பத தீட்சைப்பெற்ற அதே இடத்தில் பெருமைமிக்க இளவரசர் அரஹந்த நிலையை சிறந்த ஞானங்களுடன் அடைந்தார்.

208. சங்கமித்திரைக்கு வழிகாட்டியாகப் புகழ் பெற்ற தர்மபாலாவும், ஆசானாக அயுபாலாவும் அமைந்தனர். உரிய காலத்தில் அவளும் ஆசவங்களைக் கடந்தவள் ஆனாள்.

209. புத்த தர்மத்தின் இரண்டு ஒளிவிளக்குகளான அவர்கள் – இலங்கைத் தீவுக்குப் பேரருளைக் கொண்டு வந்த அவர்கள் தர்ம அசோகன் ஆட்சியின் ஆறுவது ஆண்டில் தீட்சைப் பெற்றார்கள்.

210. இலங்கையை புத்த மதத்துக்கு மாற்றிய மஹிந்தன் தமது குருவிடம் மூன்றே ஆண்டு களில் திரிபிடகங்களையும் கற்றார்.

211. சம்புத்தருடைய கொள்கையாகிய வானத்தில் பிக்குணி சங்கமித்திரை முழு நிலவைப் போலவும், பிக்கு மஹிந்தன் சூரியனைப் போலவும் ஒளி பரப்பி நின்றார்கள்.

212. முன்னொரு காலத்தில் காட்டில் வாழும் ஒருவன் பாடலிபுத்திரத்திலிருந்து காட்டுக்குச்சென்ற போது குந்தி என்னும் பெயருடைய வன தேவதையைக் காதலித்தான்.



213. இருவரும் கூடியதன் விளைவாக அவள் இரண்டு குழந்தைகளைப் பெற்றாள். மூத் தவனுக்குத் தீசன் என்றும், இளையவனுக்கு சுமிதன் என்றும் பெயர்.

214. பின்னர் இருவரும் மகா வருண தேரரிடம் தீட்சைப் பெற்றனர். பின்னர் இவர்கள் ஆறு பெரும் சக்திகளை யடைந்து அரஹந்தர்க ளாயினர்.

215. ஒரு சமயம் மூத்தவருடைய காலில் ஏதோ விஷப் பூச்சி கடித்து வலியால் தவித்தார். இதற்கு என்ன செய்வது என்று இளையவர் கேட்டதற்கு, 'கை நிறைய நெய்தான் இதற்குப் பரிகாரம்' என்றார்.

216. ஆனால் அரசனிடம் நோய் தீர வேண்டிய பொருளைக் கேட்டுப் பெறுவதற்கோ, மதிய உணவுக்குப் பின்பு நெய்யைத் தேடிச் செல் வதற்கோ தேரர் இசையவில்லை.

217. 'பிட்சைக்குச் செல்லும்போது நெய் கிடைத் தால் கொண்டுவா' என்று தீச தேரர் சுமித தேரரிடம் கூறினார்.

218. அவர் பிட்சைக்குச் சென்றிருந்தபோது கொஞ் சங்கூட நெய் கிடைக்கவில்லை. இதற்குள் மூத்தவருடைய வலி மிகவும் அதிகமாகி விட்டது. நூறு பாத்திரம் நிறைய நெய் வந்தாலும் குணமாகாது என்ற நிலையை அடைந்தது.

219. இந்த வேதனையின் காரணமாகத் தேரர் மரணத்தை நெருங்கிக்கொண்டிருந்தார். இடை விடாது முயற்சி செய்யுமாறு மற்றவருக்குச் சொல்லி விட்டு அவர் நிர்வாணமடைய முடிவு செய்து விட்டார்.

220. உட்கார்ந்த நிலையில் காற்றில் மிதந்து கொண்டு, புலன்களை அடக்கி 'தேஜோ கான வாஸனத்' தியானத்தில் ஆழ்ந்தார். தமது விருப்பப்படி நிர்வாணமடைந்தார்.

221. அவரது உடலில் எழுந்த தீ தேரருடைய சதையையும் தோலையும் எரித்தது. எலும்புகளை மட்டுமே அவை எரிக்கவில்லை.

222. இவ்விதமாகத் தேரர் இறந்து விட்டார் என்பதைக் கேள்வியுற்ற அரசன் பரிவாரங்களுடன் அசோகாராமாவுக்குச் சென்றான்.

223. யானை மீது ஏறிக்கொண்டு, காற்றில் மிதந்து கொண்டு இருந்த எலும்புகளைக்கீழே கொண்டு வந்தான். அதற்கு உரிய மரியாதை செய்து அடக்கம் செய்ய ஏற்பாடு செய்த பின்பு தேரருடைய நோய் பற்றி பிக்குகளைக் கேட்டான்.

224. அதனைக் கேட்ட அவன் மிகவும் வேதனையடைந்தான். நகரவாயில்களில் மருத்துவ விடுதிகளை ஏற்படுத்தி அவற்றை நோயாளிகளுக்கான மருந்துகளால் நிரப்பிவைத்தான்.

225. பிக்குகளுக்குக் கிடைப்பதற்கரிய மருந்துகள் கிடைப்பதில் கஷ்டம் ஏற்படக்கூடாது என்ற எண்ணத்தில் அவ்வப்போது நிறைய மருந்துகளை நாள்தோறும் வழங்கினான்.

226. சங்கம மண்டபத்தில் தியான நிலையில் நடந்து கொண்டிருக்கும் போதே சுமிததேரர் நிர்வாணமடைந்தார். இதனாலும் ஏராளமான மக்கள் புத்த மதத்துக்கு மாற்றப்பட்டார்கள்.

**தேஜோ கான வாஸனம்:** தியானத்தில் ஈடுபடும் துறவி தமது சிந்தனை முழுவதையும் 'நெருப்பு' என்பதில் ஒருமுகப்படுத்துவது. இதனால் உடலுக்குள் அக்னி மூண்டு முழுவதும் எரித்து அழித்துவிடும்.

**சங்கம மண்டபம்:** இது ஒவ்வொரு விகாரையிலும் இருக்கும். உடற்பயிற்சிக்காகவும் தியானத்துக்காகவும் ஒதுக்கப்பட்டுள்ள இடம் இது.



227. உலகுக்குப் பெரும் நன்மை செய்தவர்களும், குந்தியின் புதல்வர்களுமான இந்த இருதேரர்களும் அசோகன் ஆட்சியில் எட்டாவது வருடம் நிர்வாணமடைந்தனர்.

228. அதுமுதல் சங்கத்தின் வருவாய் அளவுக்கதிகமாகப் பெருகியது. பின்னால் மதம் மாறியவர்களும் வருவாய் பெருக வழி செய்தனர்.

229. இதனால் தங்கள் பெருமையையும், வருவாயையும் இழந்துவிட்ட போலித் துறவிகள் தாங்களும் வருவாய்க்காக மஞ்சள் உடை தரித்துக் கொண்டு, பிக்குகளுடன் சேர்ந்து வசிக்கத் தொடங்கினர்.

230. தாங்கள் சொல்வதுதான் புத்தருடைய போதனை என்று அவர்கள் கூறியதுடன் தங்கள் இஷ்டம் போல் நடைமுறைகளையும் வகுத்துக் கொண்டனர்.

231. உண்மைத் தத்துவத்துக்கு ஊறுதேடும் வகையில் நாளுக்கு நாள் இத்தீமை வளர்ந்து வருவதை ஆத்ம உறுதியில் சிறப்புற்ற மாகாளி புத்திர தேரர் கண்டார்.

232. எதிர்காலத்தை உணர்ந்திருந்த அவர் அதைக் களைவதற்கு உரிய காலத்தைப் பற்றிச் சிந்தித்தார்.

233. தன்னுடன் இருந்த பெருவாரியான பிக்குகளை தேர மஹிந்தரிடம் ஒப்படைத்தபின், கங்கைக்கும் மேலே அஹோ கங்க பர்வதத்தில் தமது வாசத்தைத் தன்னந் தனியே அமைத்துக் கொண்டு ஏழு வருட காலம் வசித்தார்.

234. போலித் துறவிகளின் எண்ணிக்கை ஏராள மாகி விட்டதாலும், அவர்கள் முறை கேடாக நடந்ததாலும் பிக்குகள் அவர்களை சங்க விதி களின்படி கட்டுப்படுத்த முடியவில்லை.

235. எனவே ஜம்புத்வீபத்திலுள்ள பிக்குகள் ஏழு வருட காலத்துக்கு எல்லா ஆராமாக்களிலும் உபோச தசடங்கோ, பவாரண சடங்கோ நடத்த வில்லை.

236. புகழ் பெற்ற பேரரசன் தர்ம அசோகன் இதை அறிந்ததும் ஒரு மந்திரியை மகத்தான அசோகாராமாவுக்கு இத்தகைய கட்டளை யுடன் அனுப்பி வைத்தான்:

237. 'இந்தப் பிரச்னையைத் தீர்த்து வைத்து பிக்கு சங்கத்தார் என்னுடைய ஆராமாவில் உபோ சத விழாவை நடத்தச் செய்வாயாக!'

238. இந்த முட்டாளும் அங்கு சென்றான். பிக்குகள் அனைவரையும் கூட்டி அரசனுடைய கருத்தைத் தெரிவித்தான். 'உபோசத விழாவை நடத் துங்கள்' என்றான்.

239. 'போலித் துறவிகளுடன் நாங்கள் உபோசத விழாவை நடத்துவது இல்லை' என்று தவறாக நடந்த அம்மந்திரிக்கு பிக்குகள் கூறினர்.

240. அந்த மந்திரி தனது வாளினால் ஒன்றன் பின் னொன்றாக பல தேரர்களுடைய தலைகளை வெட் டினான். 'உபோசத விழாவை நடத்தும்படி கட்டாயப்படுத்துகிறேன்' என்று உறுமினான்.

241. அரசனுடைய சகோதரனை தீசன் இந்தக் கொடுமையைக் கண்டு விரைந்து வந்து மந்திரி யின் அருகில் இருந்த ஆசனத்தில் அமர்ந்து கொண்டார்.



242. தீசனைப் பார்த்துவிட்ட மந்திரி அரசனிடம் சென்று நடந்தது யாவையும் சொன்னான்.

243. இதைக் கேட்ட அரசன் மிகவும் வேதனை அடைந்தான். வேகமாக பிக்குகளின் சங்கத்தை அடைந்து 'இந்தச் செயலுக்கு உண்மையான குற்றவாளி யார்?' என்று மனங் கலங்கிக் கேட் டான்.

244. அறியாமையினால் சிலர் 'குற்றம் உன்னுடை யதுதான்' என்றனர். மற்றவர்கள் 'நீங்கள் இருவரும் குற்றவாளிகள்' என்றனர். ஆனால் அறிவிற் சிறந்த சிலர் மட்டும் 'நீ குற்றவாளி அல்ல' என்றனர்.

245. 'என்னுடைய சந்தேகத்தைப் போக்கி மதத் தைக் காப்பதற்கான பிக்கு ஒருவரும் இங்கு இல்லையா?' என்று அரசன் கேட்டான்.

246. 'அரசனே! மாகாளியின் புதல்வர் தீச தேரர் இருக்கிறார்' என்றனர் சங்கத்தார். அதன் பிறகு தான் அரசனுக்கு உற்சாகம் வந்தது.

247. அவன் நான்கு தேரர்களையும், அவர்கள் ஒவ் வொருவருடனும் ஆயிரம் பிக்குகளையும், நான்கு மந்திரிகளையும்,

248. அவர்கள் ஒவ்வொருவருடனும் ஆயிரம் பேரையும் அன்றே அனுப்பி வைத்தான். தீச தேரரை அழைத்து வரும் பொறுப்பு அவர் களுக்கு அளிக்கப்பட்டது. ஆனால் அவர்கள் வேண்டிக் கேட்ட போதிலும் அவர் வரவில்லை.

249. அரசன் இதையறிந்ததும் மீண்டும் எட்டு தேரர்களையும், எட்டு மந்திரிகளையும், ஒவ் வொருவருடனும் ஆயிரம் பேர்களுடன் அனுப்பிவைத்தான். ஆயினும் முன் போலவே இப்போதும் அவர் வரவில்லை.

250. 'பின் எப்படித்தான் அந்த தேரரை வரவழைப்பது?' என்று அரசன் கேட்டான். அவர் வரும்படி எவ்வாறு செய்யமுடியும் என்று பிக்குகள் அரசனிடம் கூறினர்.

251. 'பேரரசனே! அவரிடம், 'வணக்கத்துக்குரிய ஐயனே! எங்களுக்கு உதவியாக இருந்து மதத்தைக் காப்பாற்றுவீராக' என்று சொன்னால் தேரர் வருவார்' என்றனர்.

252. மீண்டும் அரசன் பதினாறு தேரர்களையும், பதினாறு மந்திரிகளையும், ஒவ்வொருவருடனும் ஆயிரம் பேர்களுடன் அதே பொறுப்புடன் அனுப்பி வைத்து,

253. 'தேரர் வயதானவர்; ஆகையால் சக்கரமிட்ட வண்டியில் ஏறமுடியாது. அவரை கங்கை வழியே கப்பலில் அழைத்து வாருங்கள்' என்றான்.

254. அவர்கள் அப்படியே சென்று வேண்டினார்கள். இதைக் கேட்டவுடனே தேரர் எழுந்தார். அவர்கள் அந்தத் தேரரை ஒரு கப்பலில் அழைத்து வந்தனர். அரசன் அவரை எதிர் கொண்டு அழைக்கச் சென்றான்.

255. முழங்காலளவு நீரில் இறங்கிச் சென்று அரசன் பணிவுடன் தனது கரத்தை நீட்டி அவரது கையைப் பிடித்து இறங்க உதவி செய்தான்.

256. அரசனிடம் கொண்ட இரக்கத்தினால் அவனுடைய வலது கரத்தைப் பற்றிக்கொண்டு அந்த தேரர் கப்பலிலிருந்து இறங்கினார்.

257. ரதிவதன எனப் பெயர் பெற்ற உல்லாசப் பூங்காவுக்கு அரசன் தேரரை அழைத்துச் சென்றான். அவரது பாதத்தைக்கழுவி ஆசனத்தில் அமர்த்தினான்.



258. தேரரின் சக்தியை சோதிக்க எண்ணிய அரசன் 'ஒரு அற்புதத்தைக் காண விரும்புகிறேன்' என்றான்.

259. 'எத்தகைய அற்புதம்?' என்று தேரர் கேட்டதற்கு 'ஒரு பூமியதிர்ச்சி' என்றான் அரசன். 'பூமி முழுவதும் நடுங்குவதைப் பார்க்க வேண்டுமா? ஒரு பகுதி மட்டும் நடுங்குவதைப் பார்க்க வேண்டுமா?' என்று தேரர் கேட்டார்.

260. 'இதில் எது கஷ்டமானது?' என்று அரசன் கேட்டான். 'ஒரு பிரதேசம் மட்டும் நடுங்கும் படியாகச் செய்வதுதான் கஷ்டம்' என்ற பதிலைக் கேட்டு, தான் அதையே பார்க்க விரும்புவதாகத் தெரிவித்தான்.

261. பின்னர் ஒரு யோஜனை எல்லைக்குள் தேரர் ஒரு வண்டி, ஒரு குதிரை, ஓர் ஆள், நீர் நிறைந்த பாத்திரம் ஆகியவற்றை நான்கு மூலைகளிலும் வைத்தார்.

262. அந்த எல்லைக் கோட்டுக்குள் தமது அற்புத சக்தியினால் நிலத்தை நடுங்க வைத்தார். வைக்கப்பட்ட பொருள்களில் ஒரு பாதி நடுங்கியது. அரசன் அந்த இடத்தில் அமர்ந்து இந்தக் காட்சியைக் காணச் செய்தார்.

263. மந்திரி, பிக்குகளைக் கொன்ற பாவத்தில் தனக்கும் பங்கு உண்டா? இல்லையா? என்று அரசன் தேரரைக் கேட்டான்.

264. தீய எண்ணத்துடன் செய்தாலன்றி அதன் தீய விளைவுகள் பாதிக்காது என்று தேரர் அரசனுக்குக் கூறி தித்திர ஜாதகத்தைச் சொன்னார்.

265. உல்லாசம் பொருந்திய இந்த அரசனுடைய பூங்காவில் ஒரு வார காலம் தங்கி அரசனுக்கு

சம்புத்தருடைய அன்பு மதத்தை விளக்கிச் சொன்னார்.

266. அதே வாரத்தில் அரசன் இரண்டு யக்ஷர்களை அனுப்பி உலகிலுள்ள எல்லா பிக்குகளையும் ஒன்று கூட்டினான்.

267. ஏழாவது நாள் அவன் அசோகாராமாவுக்குச் சென்று முற்றவும் உறுப்பினர்களால் நிறையப் பெற்ற புத்த சங்கக் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்தான்.

268. ஒரு புறத்தில் திரைக்குப் பின்னே அரசன் தேரருடன் அமர்ந்து கொண்டான். பல்வேறு பிரிவுகளைச் சேர்ந்த பிக்குகளை ஒவ்வொருவராக அழைத்துக் கேட்டான்.

269. 'ஐயன்மீர்! அருளாளர் என்ன போதித்தார்?' என்று கேட்டான். அவர்கள் ஒவ்வொருவரும் சசாத கொள்கை முதலான பல தவரான கொள்கைகளை எடுத்துரைத்தனர்.

270. பொய்யான மார்க்கத்தைப் பின்பற்றிய இவர்களை அரசன் சங்கத்திலிருந்து வெளியேற்றச்செய்தான். இப்படி வெளியேற்றப் பட்டவர்கள் மொத்தம் அறுபதாயிரம் பேர்களாவர்.

271. இப்போது நேரிய நம்பிக்கையாளராகிய பிக்குகளை 'அருளாளர் என்ன போதித்தார்?' என்று கேட்டான். 'விபாஜ வாதத்தை அவர் போதித்தார்' என்று அவர்கள் பதிலளித்தனர்.

272. அரசன் தேரரைக் கேட்டான்: 'சம்புத்தர் உண்மையில் விபாஜ வாதத்தைத் தான் போதித்தாரா?' இதற்கு தேரர் 'ஆம்' என்று பதிலளித்தார். இதை அறிந்ததும் மன்னன் மகிழ்ச்சி அடைந்தான்.



273. 'சங்கம் இப்போது புனிதப்பட்டு விட்டது. அதனால் புத்த சங்கம் உபோசத விழாவை நடத்தவேண்டும்' என்று கூறினான்.

274. தீச தேரரை சங்கத்தின் காவலராகச் செய்து விட்டு அழகிய தலைநகருக்குத் திரும்பினான். அதன் பிறகு சங்கம் அமைதியுடன் உபோசத விழாவை நடத்தியது.

275. ஏராளமான பிக்குகள் இருந்த சங்கத்திலிருந்து தேரர், அறிவிற்சிறந்த, ஆறு பெரும் சக்திகளைப் பெற்ற, திரிபிடகங்களையும் அறிந்த, விசேஷ சாஸ்திரங்களில் தேர்ச்சி பெற்ற ஆயிரம் பிக்குகளை,

276. உண்மையான போதனைகளைத் தொகுப்பதற்காகத் தேர்ந்தெடுத்தார். அவர்களுடன் சேர்ந்து அசோகாராமாவில் அவர் தர்மக் கோட்பாடுகளைத் தொகுத்தார்.

277. மகா காச்யப தேரரும், யசதேரரும் மகாசபை நடத்தியது போலவே தீச தேரரும் நடத்தினர்.

278. இந்த மகாசபைக் கூட்டத்தின் நடுவில் தேர தீசர் இதர கொள்கைகளை மறுதலித்து கதாவத்துப கரண என்ற கொள்கையை வகுத்தார்.

279. அசோகனுடைய ஆதரவில் நடைபெற்ற இந்த மகாசபையில் ஆயிரம் பிக்குகள் தமது வேலையை ஒன்பது மாதங்களில் முடித்தனர்.

280. அரசனுடைய ஆட்சியில் பதினேழாவது வருடத்தில் தேரருக்கு எழுபத்திரண்டு வயதாகி யிருந்தது. அப்போது அவர் பெரும் பவாரண விழாவுடன் மகாசபையை முடித்தார்.

281. புத்த மதம் புத்துயிர் பெற்றதில் பெரு மகிழ்வெய்தியதைப் புலப்படுத்துவது போல் மகாசபை முடிவில் பூமி அதிர்ந்தது.

282. மாட்சிபொருந்திய, உயரிய, பிரம்ம லோகத்தைக் கைவிட்டு, துயரம் நிறைந்த இந்த மக்கள் உலகத்திலே கொள்கையின்பொருட்டாக அவதரித்து வந்த அவர் தம் கடமைகளை முழுவதும் நிறைவேற்றியவராக, கொள்கையைக் குறித்த கடமைகளையும் நிறைவேற்றினர். யார் தான் கொள்கைக்கான கடமைகளைக் கைவிட முடியும்?

**மகாவம்சத்தில் ஐந்தாவது அத்தியாயமான மூன்ருவது மகாசபை முற்றும்**

## ஆரும் அத்தியாயம்

# விஜயன் வருகை

1. வங்கர்களுக்குச் சொந்தமான நாட்டிலே வங்கர்களின் தலைநகரில் ஒரு காலத்தில் ஒரு வங்க அரசன் இருந்தான். கலிங்கநாட்டு அரசனுடைய மகள் அந்த அரசனுடைய மனைவியாக இருந்தாள்.

2. தன் மனைவியிடம் அரசனுக்கு ஒரு பெண் பிறந்தது. 'அவள் மிருகராஜனைக் கூடுவாள்' என்று ஜோதிடர்கள் கூறினர்.

3. அவள் மிகுந்த அழகி; காமவெறி கொண்டவள். அவமானம் தாங்காமல் அரசனும் அரசியும் அவளைத் தம்முடன் வைத்துக் கொண்டிருக்க முடியாதவர்களாயினர்.

4. சுதந்திர வாழ்வின் சுகத்தை விரும்பியவளாக அவள் தன்னந்தனியே வீட்டை விட்டுப் புறப்பட்டாள். மகத நாட்டுக்குச் சென்று கொண்டிருந்த ஒரு வாணிப கோஷ்டியுடன் யாரும் அறிந்துகொள்ள முடியாத விதத்தில் சேர்ந்து கொண்டாள்.

5. லால நாட்டில் காட்டிலே ஒரு சிங்கம் அந்தக் கூட்டத்தைத் தாக்கியது. மற்றவர்கள் அங்கு மிங்குமாக ஓடி விட்டனர். ஆனல் அவள், சிங்கம் வந்த அதே பாதையில் ஓடினள்.

6. சிங்கம் உணவைத் தின்றுவிட்டு அந்த இடத்தை விட்டுப் புறப்படும்போது தூரத்தில் அவளைப் பார்த்தது. உடனே காமவெறி சிங்கத்தைப் பற்றிக்கொண்டது. வாலைக் குழைத்துக்

கொண்டும், காதுகளை மடக்கிக்கொண்டும் அவளை நோக்கி வந்தது.

7. சிங்கத்தைக் கண்ட அவளுக்கு ஜோதிடர்கள் சொன்னதைத் தான் கேட்டது நினைவுக்கு வந்தது. சற்றும் பயப்படாமல் அன்போடு சிங்கத்தின் உடலைத் தட்டிக் கொடுத்தாள்.

8. அவளுடைய ஸ்பரிசத்தினால் காமத் தீ கொழுந்து விட்டெரிய சிங்கம் அவளைத் தனது முதுகின் மீது சுமந்து கொண்டு வேகமாகத் தனது குகையைச் சென்றடைந்தது. அங்கு சிங்கம் அவளுடன் கூடியிருந்தது.

9. இந்தக் கூட்டத்தின் விளைவாக ராஜகுமாரி இரட்டைக் குழந்தைகளைப் பெற்றெடுத்தாள். ஒன்று ஆண்; ஒன்று பெண்.

10. மகனுடைய கைகளும் பாதங்களும் சிங்கத்தினுடையதைப் போல் அமைந்திருந்தன. அதனால் அவள் அவனுக்கு சிம்மபாஹு எனப் பெயரிட்டாள். பெண்ணுக்கு சிம்மசீவலி எனப் பெயர் வைத்தாள்.

11. மகனுக்குப் பதினாறு வயதானபோது தன் மனதிலெழுந்த சந்தேகம் பற்றித் தாயிடம் அவன் கேட்டான். 'அப்பாவும் நீங்களும் இவ்வளவு வேறுபாட்டுடன் காணப்படுகிறீர்களே? இது ஏன்?' என்று கேட்டான்.

12. அவள் எல்லாவற்றையும் சொன்னாள். பிறகு அவன் 'நாம் ஏன் இங்கிருந்து போய்விடக் கூடாது?' என்று கேட்டான். 'உன் அப்பா குகைவாயிலைப் பாறையினால் மூடி இருக்கிறார்' என்று அவள் பதிலளித்தாள்.

13. குகைவாயிலை அடைத்துக் கொண்டிருந்த கல்லை சிம்மபாஹு தன்னுடைய தோளில் தூக்கிக்கொண்டு ஒரே நாளில் ஐம்பது யோஜனை தூரம் சென்று அதை எறிந்துவிட்டு வந்தான்.



14. சிங்கம் இரைதேடப் போயிருந்தபோது தாயை வலது தோளிலும், தங்கையை இடது தோளிலும் தூக்கிக்கொண்டு குகையை விட்டு வேகமாக வெளியே கிளம்பி விட்டான்.

15. தழைகளைப் பறித்து உடையாக அணிந்து கொண்டு நகரத்தை யொட்டி இருந்த ஒரு கிராமத்துக்கு அவர்கள் வந்து சேர்ந்தனர்.

16. ராஜகுமாரியுடைய மாமன் மகனும், வங்க அரசனுடைய படையில் ஒரு தலைவனாக இருந்தவனும், எல்லையோரக் கிராமங்களின் நிர்வாகப் பொறுப்பு ஒப்படைக்கப் பட்டிருந்தவனுமான ஒருவன் அந்த நேரத்தில் ஆல மரத்தினடியில் உட்கார்ந்து அங்கு நடைபெற்ற வேலைகளைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

17. இவர்களைப் பார்த்த அவன் யாரென்று விசாரித்தான். 'நாங்கள் காட்டில் வசிப்பவர்கள்' என்று அவர்கள் பதிலளித்தனர். படைத் தலைவன் அவர்களுக்கு உடைகளைக் கொடுத்து அணிந்து கொள்ளச் செய்தான்.

18. அவர்கள் உடலின் மீது பட்டதுமே உடைகள் விலையுயர்ந்தவைகளாக மாறிவிட்டன. படைத் தலைவன் அவர்களுக்கு இலையில் உணவு படைத்தான். இலைகள் அவர்கள் கைபட்டதுமே அவர்களுடைய சிறப்பினால் தங்கத் தட்டுகளாக மாறிவிட்டன.

19. படைத்தலைவன் வியப்படைந்தவனாக 'நீங்கள் யார்?' என்று கேட்டான்.

20. ராஜகுமாரி தனது வம்ச வரலாற்றைக் கூறினாள். படைத் தலைவன் தன் மாமன்

மகளான அவளைத் தன்னுடன் வங்க நாட்டுத் தலைநகருக்கு அழைத்துச் சென்று அவளை மணந்து கொண்டான்.

21. விரைவாகக் குகைக்குத் திரும்பிய சிங்கம் மூவரையும் காணுமல் சோகத்தில் ஆழ்ந்தது. மகனைப் பிரிந்த துக்கத்தில் உணவும் நீரும் கொள்ளவில்லை.

22. குழந்தைகளைத் தேடி சிங்கம் எல்லையோர கிராமங்களுக்குச் சென்றது. அது சென்ற கிராமங்களெல்லாம் அங்கு வசித்தவர்களால் கைவிடப்பட்டுக் காலியாயின.

23. 'சிங்கம் எங்கள் கிராமத்தைப் பாழடிக்கிறது. இந்த அபாயத்திலிருந்து எங்களைக் காப்பாற்ற வேண்டும்' என்று அரசனிடம் சென்று எல்லையோர கிராமங்களில் இருந்தவர்கள் முறையிட்டனர்.

24. சிங்கத்திடமிருந்து மக்களைக் காப்பாற்றக் கூடியவர்கள் யாரையும் அரசனல் கண்டு பிடிக்க முடியவில்லை. எனவே ஆயிரம் பணத்தை ஒரு யானையின் முதுகில் வைத்து அதனை ஊரைச் சுற்றி வரச் செய்து, ஒரு பிரகடனத்தை வெளியிட்டான்: 'சிங்கத்தைப் பிடிப்பவர்கள் இதையடையலாம்' (என்பதே அது).

25. யாரும் முன் வராததால் அரசன் இந்தத் தொகையை இரண்டாயிரமாகவும் பிறகு மூவாயிரமாகவும் உயர்த்தினன்.

26. சிம்மபாஹுவின் தாய் அவனை இரண்டு முறை தடுத்தாள். மூன்ருவது முறை தாயைக் கேளாமலே சிம்மபாஹு தனது தந்தையான சிங்கத்தைக் கொல்லும் பொருட்டு மூவாயிரம் பணத்தைப் பரிசாகப் பெற்ருன்.



27. அவனை அரசன் முன்பு அழைத்துச் சென்றனர். 'சிங்கத்தைக் கொன்ருல் உனக்கு ராஜ்யத்தைத் தருவேன்' என்ருன் அரசன்.

28. சிம்மபாஹு, சிங்கத்தின் குகை வாயிலுக்குச் சென்ருன். தூரத்தில் அவனைக் கண்டதுமே சிங்கம் புத்திர வாஞ்சையுடன் அவனை நோக்கி வந்தது. அவன் அதனைக் கொல்லும் பொருட்டு அதன் மீது அம்பு எய்தான்.

29. அம்பு சிங்கத்தின் நெற்றியைத் தாக்கியது. ஆனல் அதன் புத்திர வாஞ்சையின் காரணமாக அந்த அம்பு திரும்பி வந்து அந்த இளைஞனுடைய காலடியில் விழுந்தது.

30. இதே போல் மூன்று முறை நடந்தது. பிறகு மிருகராஜனுக்குக் கோபம் வந்துவிட்டது. எனவே அவன் எய்த அம்பு இத்தடவை அதன் உடலைத்தாக்கித் துளைத்தது.

31. சிம்மபாஹு சிங்கத்தின் தலையைப் பிடறியுடன் வெட்டியெடுத்துக் கொண்டு நகரத்துக்குத் திரும்பினன். அப்போது வங்க மன்னன் இறந்து போய் ஏழு நாட்கள் ஆகியிருந்தன.

32. அரசனுக்குப் பிள்ளைகள் கிடையாது. சிங்கத்தைக் கொன்றுவந்த சிம்மபாஹுவின் செயலால் மகிழ்ச்சியடைந்த மந்திரிகள் அவன் அரசனுடைய பேரன் என்பதை அறிந்தார்கள்.

33. அவனுடைய தாயையும் அவர்கள் பார்த்து அடையாளம் கண்டு கொண்டவர்களாக எல்லோருமாகக் கூடி 'நீங்கள் அரசனுக வேண்டும்' என்று இளவரசன் சிம்மபாஹுவை ஏகமனதாகக் கேட்டுக் கொண்டனர்.

34. அவன் அரச பொறுப்பை ஏற்றுக்கொண்டான். ஆனல் தன் தாயின் புருஷனிடம் ஆட்சியை

ஒப்படைத்து விட்டு சிம்மபாஹு சிம்மசீவலியுடன் தான் பிறந்த நாட்டுக்குச் சென்றான்.

35. ஒரு நகரை ஏற்படுத்தினான். அதை சிம்மபுரம் என்றழைத்தனர். காட்டில் நூறு யோஜனை தூரம் வரையில் கிராமங்களையும் அமைத்தான்.

36. லால நாட்டிலிருந்த அந் நகரத்தில் சிம்மபாஹு, சிம்மசீவலியைத் தன்னுடைய ராணியாகச் செய்துகொண்டு ஆட்சி நடத்தினான்.

37. நாளடைவில் சிம்ம சீவலி பதினாறு முறை இரட்டைக் குழந்தைகளாகப் பெற்றாள்.

38. மூத்தவனுக்கு விஜயன் என்றும் இரண்டாமவனுக்கு சுமிதன் என்றும் பெயர். எல்லோருமாகச் சேர்ந்து முப்பத்திரண்டு குமாரர்கள். விஜயன், உரியகாலத்தில் அரசனால் உபராஜனாக நியமிக்கப்பட்டான்.

39. விஜயன் கெட்ட நடத்தையுள்ளவன். அவனுடைய சகாக்களும் அவனைப் போலவே இருந்தனர். தாங்க முடியாத பலாத்காரச் செயல்கள் பலவற்றை அவர்கள் புரிந்து வந்தார்கள்.

40. இதனால் கோபமடைந்த மக்கள் அரசனிடம் விஷயத்தைக் கூறினர். அவர்களை சமாதானப் படுத்தி அனுப்பி விட்டு அரசன் தன்னுடைய மகனைக் கடுமையாகக் கண்டித்தான்.

41. ஆனால் அவர்கள் மீண்டும் அதேபோல் நடக்கத் தலைப்பட்டனர். இரண்டாவது முறையும் மூன்றாவது முறையும் அப்படியே நடந்தனர். கோபமடைந்த மக்கள் அரசனிடம் சென்று 'தங்கள் மகனைக் கொல்லுங்கள்' என்றனர்.



42. அரசன், விஜயனையும் அவனுடைய கூட்டாளிகளான எழுநூறு பேர்களின் பாதித் தலைமயிரை சிரைத்துவிடச் செய்து,

43. அவர்களை ஒரு கப்பலில் ஏற்றிக் கடலில் போகவிட்டான். அவர்களுடன் மனைவி மக்களும் சென்றனர்.

44. தனித் தனிக் கப்பல்களில் சென்ற ஆண்கள், பெண்கள், குழந்தைகள் தனித் தனித் தீவுகளில் கரையேறி அங்கங்கே வசித்து வந்தனர்.

45. குழந்தைகள் கரையேறிய தீவு நக்கதீபகம் எனப்பட்டது. பெண்கள் கரையேறிய இடம் மஹிளதீபகம் எனப்பட்டது.

46. விஜயன், சூர்பாரகம் என்ற இடத்தில் இறங்கினான். அங்கும் அவனுடைய கூட்டாளிகளின் கொடுஞ் செயல்களால் அபாயம் நேரும்போல் தோன்றவே மீண்டும் கப்பலேறிப் புறப்பட்டான்.

47. விஜயன் என்னும் பெயர் பெற்ற வீரனான இவ்வரசன் இலங்கையில் தம்மபாணி என்றழைக்கப்படும் பகுதியில் கரையேறினான். ததாகதர் நிர்வாணமடைவதற்காக இரட்டை சால விருட்சங்களிடையே அமர்ந்த அதே நாளில் இது நடந்தது.

**மகாவம்சத்தில் ஆறாவது அத்தியாயமான விஜயன் வருகை முற்றும்.**

தலைமயிரை சிரைப்பது சுதந்திரத்தைப் பறிப்பதைக் குறிக்கும். சிங்களமொழியில் மிடி எனப்படும் இதற்கு அடிமை என்று பொருள்.

**நக்க தீபகம்**—குழந்தைகள் தீவு. நக்க என்றால் நிர்வாணம் என்று பொருள்.

**மஹிள தீபகம்**—பெண்களின் தீவு.

**சூர்பாரகம்:** இந்தியாவின் மேற்குக் கடற்கரையில் உள்ளது. இப்போது பம்பாய்க்கு வடக்கே தானா ஜில்லாவில் இருக்கிறது. சுபாரா என்றழைக்கப்படுகிறது.

## ஏழாம் அத்தியாயம்

# விஜயனின் பட்டாபிஷேகம்

1. உலகின் வழிகாட்டியாகிய புத்தபெருமான் அகில உலகத்தின் உஜ்ஜீவனத்துக்கான செயல்களைச் செய்து முடித்ததும் தெய்வீக அமைதியின் உச்சநிலையை அடைந்தவராக அவருடைய நிர்வாணத்துக்கான படுக்கையிலே படுத்திருந்தபோது,

2. தேவர்களுடைய பெரும் சபையில், மாமுனிவரும், பேச்சாற்றல் உடையவர்களிலேயே மிகச் சிறந்தவருமான அவர், தம் அருகில் நின்ற சக்கனிடம் இவ்வாறு கூறினர்:

3. 'சிம்மபாஹுவின் மகன் விஜயன் லால நாட்டிலிருந்து எழுநூறு பேர்களுடன் இலங்கைக்கு வந்திருக்கிறான்.

4. 'தேவர்கள் தலைவனே! இலங்கையில் என்னுடைய மதம் நிலைநிறுத்தப்படுவதற்காக அவனையும் அவனைச் சேர்ந்தவர்களையும் இலங்கையையும் கவனமாகப் பாதுகாத்து வருவாயாக.'

5. ததாகதர் கூறிய இவ்வார்த்தைகளைக் கேட்ட தேவராஜன், அவரிடம் கொண்ட மரியாதை காரணமாக இலங்கையைப் பாதுகாக்கும் பொறுப்பை நீலோற்பல மலர் போன்ற மேனி வண்ணம் படைத்த *தேவனிடம் ஒப்படைத்தான்.

**சக்கன்**—இந்திரன்.

* விஷ்ணு—நீல வண்ணமுடையவன்.



6. சக்கனிடமிருந்து பொறுப்பை ஏற்றுக் கொண்டதும் அத்தேவன் விரைந்து இலங்கைக்கு வந்து நாடோடியான துறவிக் கோலத்தில் ஒரு மரத்தடியில் அமர்ந்தார்.

7. விஜயனுடன் வந்தவர்கள் யாவரும் அவரிடம் வந்து 'ஐயனே! இது என்ன தீவு?' என்று கேட்டனர். 'இலங்கைத் தீவு' என்று அவர் பதிலளித்தார்.

8. 'இங்கு மனிதர் யாரும் கிடையாது. எனவே அபாயம் எதுவும் நேராது' என்றும் அவர் கூறினர். பின்பு தமது கமண்டலத்திலிருந்து நீரையெடுத்து அவர்கள் மீது தெளித்தார்.

9. பிறகு அவர்கள் கையில் நூலினல் காப்புக் கயிறு* கட்டிவிட்டு காற்றிலே கலந்து மறைந்து விட்டார். அங்கு பெண் நாய் உருவில் ஒரு யக்ஷிணி தோன்றினள். அவள் குவன்ன என் பவளுடைய பரிவாரத்தைச் சேர்ந்தவள்.

10. விஜயனைச் சேர்ந்தவர்களில் ஒருவன் இளவரசன் தடுத்ததையும் கேளாமல் அவளைப் பின் தொடர்ந்து சென்றான். 'அருகில் கிராமம் இருந்தால்தானே நாய் தென்படும்' என்று இளவரசன் எண்ணினன்.

11. அவன் சென்ற இடத்தில் நாயுருவில் இருந்த யக்ஷிணியின் எஜமானி குவன்ன என்பவள் ஒரு மரத்தடியில் சந்நியாசினியைப் போல் நூல் நூற்றுக் கொண்டு அமர்ந்திருந்தாள்.

12. அங்கே உட்கார்ந்திருந்த சந்நியாசினியையும் அருகிலிருந்த குளத்தையும் பார்த்த அவன் அக்குளத்திலே நீராடிவிட்டு நீர்பருகி தாமரையின் இளம்மொட்டுகளையும் தாமரை இலையில்

* தீய சக்திகளிடமிருந்து பாதுகாக்கும் கவசம்.

நீரையும் மொண்டு கொண்டு கரைக்கு வந்தான்.

13. 'நில். நீ எனக்கு உணவு' என்று அவள் அவனை நோக்கிச் சொன்னாள். உடனே அவன் கட்டுப் பட்டவனைப் போல் நின்று விட்டான்.

14. ஆனால் மந்திர கவசத்தின் சக்தி காரணமாக அவளால் அவனை விழுங்க முடியவில்லை. யக்ஷிணியால் நயந்து வேண்டப்பட்டும் அவன் அக்கயிற்றை எடுத்துவிட இசையவில்லை.

15. பிறகு யக்ஷிணி அவனைப் பற்றித் தூக்கி வீசியெறிந்தாள். அவன் அதனால் உரக்கக் கத்தினான். அதேபோல் எழுநூறு பேரையும் ஒருவர் பின்னொருவராக அவள் வீசி எறிந்தாள்.

16. போனவர்கள் யாரும் திரும்பி வராததைக் கண்ட விஜயன் பயமடைந்தான். ஐந்து ஆயுதங்களையும் எடுத்துக் கொண்டு புறப்பட்ட அவன் அந்த அழகிய தடாகத்தைக் கண்டான்.

17. அங்கு யாரும் மனிதர்கள் வந்ததற்கான காலடிச் சுவடு தென்படவில்லை. சந்நியாசினி உருவில் இருந்த யக்ஷிணியை மட்டும் கண்டான்.

18. 'என்னுடைய ஆட்கள் இவளால்தான் மறைக்கப்பட்டு இருக்கிறார்கள்' என்றெண்ணிய அவன் அவளிடம், 'என்னுடைய ஆட்களைப் பார்க்கவில்லையா?' என்று கேட்டான். 'இளவரசே! அவர்களால் உனக்கு ஆக வேண்டியது என்ன? இத்தடாகத்தில் நீர் பருகிக் குளிக்கலாமே' என்றாள்.

19. இப்போது அவனுக்குத் தெளிவாயிற்று. 'இவள் நிச்சயமாக ஒரு யக்ஷிணிதான். என் தகுதிகூட இவளுக்குத் தெரிந்து இருக்கிறதே'



என்றெண்ணியவன் வில்லை வளைத்தபடியே அவளை நெருங்கினான்.

20. வில்லை அவளுடைய கழுத்தில் மாட்டி இழுத்து அவளுடைய தலைமயிரை இடது கையினால் பற்றித் தூக்கி நிறுத்தி வலது கையிலிருந்த வாளை ஓங்கிக் கொண்டு கத்தினான்:

21. 'அடிமையே! என்னுடைய ஆட்களைத் திருப்பிக் கொடுத்து விடு. இல்லாவிட்டால் உன்னைக் கொன்று விடுவேன்.' யக்ஷிணி பயத்தினால் நடுங்கியவளாக,

22. தன் உயிருக்காக மன்றாடினாள். 'என்னைப் பிழைக்க விடுங்கள். நான் உங்களுக்கு ஒரு ராஜ்யத்தையே தருகிறேன். ஒரு பெண் செய்யும் சேவையையும் இதர சேவைகளையும் தங்களுக்கு இஷ்டம் போல் செய்கிறேன்' என்றாள்.

23. தன்னை அவள் ஏமாற்றிவிடக்கூடாதே யென்று அவன் யக்ஷிணியை சத்தியம் செய்து கொடுக்கச் செய்தான். சத்தியம் செய்த பின்னால் 'விரைவில் என்னுடைய ஆட்களைக் கொண்டு வா' என்றான். அவள் உடனே அவர்களை அந்த இடத்துக்குக் கொண்டு வந்தாள்.

24. 'இவர்கள் பசித்திருக்கிறார்கள்' என்று அவன் சொன்னதும் தன்னால் விழுங்கப்பட்ட வர்த்தகர்களுடைய கப்பல்களில் இருந்த அரிசியையும் இதர உணவுப் பொருள்களையும் அவள் அவர்களுக்குக் காட்டினாள்.

25. விஜயனுடைய ஆட்கள் உணவைச் சமைத்து முதலில் விஜயனுக்குப் படைத்ததும் எல்லாருமாக அமர்ந்து சாப்பிடத் தொடங்கினார்கள்.

26. விஜயன் கொடுத்த முதல் கவள உணவை யக்ஷிணி வாங்கிக் கொண்டதும் அவள் மிகவும் திருப்தி அடைந்தாள்.

27. பதினறு வயதுப் பருவ மங்கையின் எழிலுருவை எடுத்துக் கொண்டு சகலாபரண பூஷிதையாக அவள் இளவரசனை அணுகினள்.

28. ஒரு மரத்தடியில் வெண் கொற்றக்குடை அழகு செய்யும் சிறந்த படுக்கையை அமைத்தாள். அதைச் சுற்றி அழகான கூடாரம் அமைத்தாள். இதைக் கண்ட அரசகுமாரன் நல்ல காலத்தின் வரவை எதிர்பார்த்தவனாக அவளைத் துணையாக அழைத்துக் கொண்டு உள்ளே சென்றான்.

29. அந்தப் படுக்கையில் ஆனந்தமாகக்கூடிப் படுத்தான். அவனுடைய ஆட்கள் கூடாரத்தைச் சுற்றித் தங்கி இருந்தனர்.

30. இரவு நகர்ந்து கொண்டேயிருக்க இசை ஒலியையும் பாடுவதையும் அவன் கேட்டான். அருகில் படுத்திருந்த யக்ஷிணியை 'இந்த சத்தத்தின் பொருள் என்ன?' என்று கேட்டான்.

31. 'எனது எஜமானனுக்கு அரசுரிமையைத் தருவேன். எல்லா யக்ஷர்களையும் கொன்றுவிட வேண்டும். இல்லாவிட்டால் மனிதர்கள் இங்கு என் மூலமாக வாழத் தொடங்கியதால் அவர்கள் என்னைக் கொன்று விடுவார்கள்' என்று யக்ஷிணி எண்ணினள்.

32. அவள் இளவரசனிடம் கூறினள்: 'இதோ இங்கே சிரிஸவத்து என்னும் பெயருடைய யக்ஷ நகரம் ஒன்றிருக்கிறது.

33. 'இலங்கை நகரில் வசிக்கும் யக்ஷர் தலைவனுடைய மகள் இலங்கையிலிருந்து இங்கு அழைத்து வரப்பட்டிருக்கிருள். அவளுடன் அவளுடைய தாயும் வந்திருக்கிருள்.

34. 'திருமணத்துக்காக அங்கே பெரிய கொண்டாட்டம் நடைபெறுகிறது. அது ஏழு நாட்கள் நடக்கும். அந்த சத்தம்தான் இது. ஏராளமான பேர் அங்கு கூடியிருக்கிருர்கள்.



35. 'இன்றே நீ அவர்கள் எல்லோரையும் கொன்றுவிட வேண்டும். இல்லாவிடில் அப்புறம் முடியவே முடியாது!' என்ருள். 'கண்ணுக்குப் புலப்படாத யக்ஷர்களை நான் கொல்வது எப்படி?' என்று அவன் கேட்டான்.

36. 'அவர்கள் எங்கெல்லாம் இருக்கிருர்களோ அங்கெல்லாம் சென்று நான் கூச்சல் போடுகிறேன். என் கூச்சலைக் கேட்டதும் நீ தாக்க வேண்டும். என்னுடைய மந்திர சக்தியால் உன்னுடைய ஆயுதங்கள் அவர்கள் மீது தாக்கும்படி செய்கிறேன்' என்ருள்.

37. விஜயன் அவள் சொன்னபடியே கேட்டு அதன்படி நடந்து யக்ஷர்கள் அனைவரையும் கொல்வதில் வெற்றி பெற்ருன்.

38. பிறகு விஜயன் யக்ஷ ராஜனுடைய உடைகளை தான் அணிந்து கொண்டான். தனது சகாக்களுக்கும் அவர்களுடைய இதர ஆடையணிகளை அளித்தான். அந்த இடத்தில் சில தினங்களைக் கழித்த பிறகு அவன் தம்மபாணிக்குச்* சென்ருன்.

39. அங்கு விஜயன் தம்மபாணி நகரத்தை ஏற்படுத்தி யக்ஷிணியுடனும் மந்திரிகளுடனும் வசித்து வந்தான்.

40. விஜயனுடைய தலைமையில் வந்தவர்கள் தங்கள் கப்பலில் இருந்து கரையேறிய போது களைப்படைந்திருந்ததால் கையை ஊன்றிக் கொண்டு தரையில் உட்கார்ந்தனர்.

* தம்மபாணி—சிவப்புக் கை.

41. செம்மண்ணின் புழுதியைத் தொட்டதால் அவர்களது கை செந்நிறமாகக் காட்சி தந்தது. ஆதலால் அந்த இடத்தையும் அந்தத் தீவையும் தம்பபாணி எனப் பெயரிட்டனர்.

42. சிங்கத்தைக் கொன்றவன் ஆதலால் அரசன் சிம்மபாஹு, சிங்க காலன் என்றழைக்கப் பட்டான். விஜயனுக்கும் அவனுக்கும் உள்ள தொடர்பின் காரணமாக அவனும் அவனைச் சேர்ந்தவர்களும் தம்மை சிங்க காலர் என்றே அழைத்துக் கொண்டனர்.

43. விஜயனுடைய மந்திரிகள் இங்கு மங்குமாகப் பல கிராமங்களை ஏற்படுத்தினர். கடம்ப நதிக்கருகே அனுராதன் என்பவன் அனுராத கிராமத்தை ஏற்படுத்தினன்.

44. உபதீசன் என்பவன் உபதீச கிராமத்தை ஏற்படுத்தினன். இது அனுராத கிராமத்துக்கு வடக்கே கம்பீர நதிக்கரையில் அமைந்தது.

45. மேலும் மூன்று மந்திரிகள் உஜ்ஜயினி, உருவேலா, விஜிதா ஆகிய நகரங்களைத் தங்களுக்காக ஏற்படுத்தினர்.

46. அங்கு பல குடியிருப்புகளை ஏற்படுத்திய பிறகு விஜயனுடைய மந்திரிகள் அவனிடம் ஒன்றாக வந்து 'ஐயனே! தாங்கள் அரசனாக முடி சூட்டிக் கொள்ள இசைய வேண்டும்' என்றார்கள்.

47. ஆனால் அவர்கள் வேண்டியும் அவன் மறுத்தான். உயர் குல மங்கை ஒருத்தியை அதே சமயத்தில் ராணியாகக் கொண்ட பிறகே பட்டாபிஷேகம்

**கடம்பநதி :** இப்போது மால்வதி ஓயா எனப்படுகிறது.

**உபதீச கிராமம்;** அனுராத புரத்துக்கு எட்டுமைல் வடக்கே உள்ளது.



செய்து கொள்ளமுடியும்' என்று கூறி அப்போது அவர்கள் வேண்டுகோளை ஏற்க மறுத்தான்.

48. தங்கள் எஜமானனுக்குப் பட்டாபிஷேகம் செய்வதில் ஆர்வம் கொண்டவர்களாக மந்திரிகள் அதற்கு வழிசெய்வது கஷ்டமாக இருந்த போதிலும்,

49. அவ்வகையில் ஏற்பட்ட பயத்தை ஒழித்தவர்களாக, விலையுயர்ந்த பரிசுப் பொருள்கள், ஆபரணங்கள், முத்துக்களுடன் சிலரை தென்னிந்தியாவிலுள்ள மதுரை மாநகருக்கு அனுப்பி வைத்தனர்.

50. பாண்டிய மன்னனுடைய மகளைத் தம் எஜமானனுக்கு மணம் பேசுவதற்காக அரசன் மீது பக்தியுள்ள மந்திரிகளால் அவர்கள் அனுப்பப்பட்டனர். அந்த மந்திரிகள் தங்களுக்கும் தங்களைச் சேர்ந்தவர்களுக்கும் மனைவிமார்களாகப் பாண்டிய மந்திரிகளிடம் பெண் கேட்கத் தூது அனுப்பினார்கள்.

51. தூதர்கள் பரிசுப் பொருள்களுடன் கப்பலில் வந்து மதுரையை அடைந்ததும் பாண்டியனைக் கண்டு அவற்றை சமர்ப்பித்தார்கள்.

52. அரசன் தன் மந்திரிகளுடன் கலந்தாலோசித்தான். பிறகு தன் மகளை இலங்கைக்கு அனுப்புவது என்று முடிவு செய்தான்.

53. விஜயனுடைய மந்திரிமார்களுக்காக ஆரம்பத்தில் நூறு பெண்கள் வந்து சேர்ந்ததும் முரசறைந்து இவ்வாறு அறிவித்தான்: 'தங்களுடைய பெண்களில் ஒருத்தியை இலங்கைக்கு அனுப்ப விரும்புகிறவர்கள் அந்தப் பெண்களுக்கு இரண்டு மாற்று ஆடையணிகளுடன் அனுப்ப முன் வரலாம்.

**54.** 'வருகிறவர்கள் வீட்டு வாயிலில் காத்திருப்பார்களாக. இதன்மூலம் அழைத்துச் செல்ல வேண்டியவர்களை அடையாளம் கண்டு கொள்ள முடியும்!'

**55.** இப்படியாக பல பெண்களைத் திரட்டியபின்னர் அவர்களுடைய குடும்பத்துக்கு அரசன் நஷ்ட ஈடு கொடுத்தான். பிறகு தன் மகளுக்கு ஏராளமான ஆடையணிகளுடனும் பிரயாணத்துக்குத் தேவையான எல்லா பொருள்களுடன் அனுப்பி வைத்தான்.

**56.** தேர்ந்தெடுத்த இதர பெண்களுக்கும் ஆடை அணிகளை வழங்கினான். அவர்களுடைய தகுதிக்கு ஏற்ற வகையில் யானைகள், குதிரைகள், வாகனங்கள் அனுப்பவும் ஏற்பாடு செய்தான்.

**57.** கைத்தொழில் கலைஞர்களும் பதினெண்குடி மக்களின் ஆயிரம் குடும்பங்களும் செல்வதற்கு ஏற்பாடாயிற்று. அவர்களிடம் வெற்றி வீரனை விஜயனுக்கு ஓர் செய்தியையும் அனுப்பினான்.

**58.** இந்தப் பெருவாரியான மக்கள் கப்பலில் புறப்பட்டு இலங்கைத்தீவில் மகாதிட்டு எனப்படும் இடத்தில் கரையேறினர். இந்தக் காரணத்தினாலே அவர்கள் இறங்கிய இடம் மகாதிட்டு எனப்படுகிறது.

**59.** யக்ஷிணியின் மூலம் விஜயனுக்கு ஒரு மகனும் ஒரு மகளும் இப்போது இருந்தார்கள். இளவரசி வந்து சேர்ந்து விட்டதை யறிந்த அவன் யக்ஷிணியிடம்,

**60.** 'அன்பே! குழந்தைகளை விட்டுவிட்டு நீ இப்போது போய்விடு. அமானுஷ்ய சக்தி படைத்தவர்களைக் கண்டால் மனிதர்கள் எப்போதும் பயன்படுகிறார்கள்' என்றான்.

**மகாத்திட்டு** : மகத்தான இறங்கும் இடம். இப்போது மன்னார் தீவுக்கு எதிர்ப்புறமுள்ள மாதோட்டம்



61. இதைக் கேட்டதும் அவளுக்கு யக்ஷர்களைப் பற்றிய பயம் பற்றிக் கொண்டது. 'தாமதிக்காதே. உனக்கு ஆயிரம் பணம் செலவிட்டு பூஜை போடுகிறேன்' என்று விஜயன் யக்ஷிணியிடம் சொன்னான்.

62. மீண்டும் மீண்டும் அவள் மன்றாடிக் கேட்டது பயனில்லாமற் போகவே தன் இரு குழந்தைகளையும் கூட்டிக்கொண்டு லங்காபுரத்துக்கு அதனால் தீங்கு நேரும் என்பதை அவள் அறிந்த போதிலும் சென்றுவிட்டாள்.

63. வெளியே குழந்தைகளை விட்டுவிட்டு அவள் மட்டும் நகருக்குள் சென்றாள். நகரத்திலிருந்த யக்ஷர்கள் அவளை அடையாளம் கண்டு கொண்டனர்.

64. அவர்களுடைய பயத்தில் அவளை உளவுகாண வந்தவளாகக் கருதிப் பரபரப்படைந்தனர். முரடனை ஒருவன் முஷ்டியினால் ஒரே குத்தில் அவளைக் கொன்றுவிட்டான்.

65. அவளுடைய தாய்மாமனை ஒரு யக்ஷன் நகரத்துக்கு வெளியே சென்றபோது அங்கு குழந்தைகளைக் கண்டு அவர்களை 'நீங்கள் யாருடைய குழந்தைகள்?' என்று கேட்டான்.

66. அவர்கள் குவன்னாவின் மக்கள் என்பதை அறிந்ததும் அவன் 'இங்கே உங்களுடைய தாயாரைக் கொன்று விட்டார்கள். உங்களைப் பார்த்தால் உங்களையும் கொன்று விடுவார்கள். எனவே இங்கிருந்து ஓடிப்போய் விடுங்கள்' என்றான்.

67. விரைவாக அங்கிருந்து ஓடிய இவர்கள் சுமண கூடத்தை அடைந்தனர். இவர்களில் மகன் தான் மூத்தவன்.

68. உரிய வயதையடைந்ததும் அவன் தன்னுடைய தங்கையையே மனைவியாக்கிக் கொண்டான். நிறையக் குழந்தைகளைப் பெற்றுப் பெருக்கிக் கொண்டு மலயப்பகுதியில் அரசனது அனுமதியுடன் அவர்கள் வசித்து வந்தனர். இவர்களிடமிருந்து தோன்றியவர்கள் தான் புலிந்தர்கள்.

69. பாண்டிய மன்னனுடைய தூதர்கள் இளவரசன் விஜயனிடம் பரிசுப் பொருள்களையும், இளவரசியைத் தலைமையாகக் கொண்டு வந்த பெண்களையும் ஒப்படைத்தனர்.

70. தூதர்களை உபசரித்துக் கௌரவித்த பின்பு விஜயன் பெண்களை அவர்களுடைய தகுதிப்படி தன்னுடைய மந்திரிகளுக்கும் மற்றவர்களுக்கும் வழங்கினான்.

71. சம்பிரதாயப்படி மந்திரிகள் எல்லோரும் கூடி விஜயனை அரசனாகப் பட்டாபிஷேகம் செய்து வைத்து பெரிய திருவிழாவையும் நடத்த ஏற்பாடு செய்தார்கள்.

72. பின்பு விஜயராஜன் பாண்டிய ராஜகுமாரியை தன் ராணியாக உரிய சடங்குகளுடன் அபிஷேகம் செய்தான்.

73. மந்திரிகளுக்கு நிறைய செல்வங்களை வழங்கினான். ஒவ்வொரு ஆண்டும் தன் மனைவியின் தந்தைக்கு இருநூறாயிரம் பணம் மதிப்புள்ள முத்து ஒன்றை அனுப்பி வந்தான்.

---

**மலயம் :** இலங்கையின் மத்திய பகுதி; மலைப்பாங்கானது.
**புலிந்தர்கள் :** காட்டு மிராண்டிக் கூட்டம்.



74. பழைய கெட்ட நடவடிக்கைகளைக் கைவிட்ட பின் மனிதர்களில் சிறந்தவனான விஜயன் இலங்கை முழுவதும் அமைதியும் தர்மமும் நிலவ தம்மபாணியைத் தலைநகராகக் கொண்டு, முப்பத்தி எட்டு வருட காலம் அரசாண்டான்.

**மகாவம்சத்தில் ஏழாவது அத்தியாயமான
விஜயனின் பட்டாபிஷேகம் முற்றும்**

## எட்டாம் அத்தியாயம்

# பாண்டு வசுதேவன் பட்டாபிஷேகம்

1. பேரரசனான விஜயன் தன் வாழ்நாளின் இறுதி ஆண்டினை எட்டிய போது 'எனக்கோ வயதாகி விட்டது. எனக்குக் குமாரர்கள் எவரும் இல்லையே!

2. 'மகத்தான அல்லல்களுக்கிடையே மக்களைச் சேர்த்து உருவாக்கிய இந்த அரசு எனக்குப் பின்னர் இல்லாமல் போய்விடும். எனவே என் சகோதரன் சுமிதனை அரசாட்சியை அவன் கையில் ஒப்படைப்பதன் பொருட்டாக இங்கு வரச் செய்வேன்' என்று நினைத்தான்.

3. மந்திரிகளுடன் கலந்தாலோசித்த பிறகு அவன் தம்பிக்கு லிகிதம் எழுதியனுப்பினான். இந்த லிகிதத்தை அனுப்பிய சில தினங்களுக்குப் பிறகு விஜயன் தேவலோகத்தை அடைந்து விட்டான்.

4. அரசன் இறந்த பிறகு மந்திரிகள் உபதீச கிராமத்தில் இருந்து கொண்டு சுமிதனுடைய வருகையை எதிர்பார்த்த வண்ணம் நாட்டை நிர்வகித்து வந்தனர்.

5. விஜயன் இறந்த பிறகு இளவரசன் வந்து சேரும் வரை ஒரு வருட காலத்துக்கு இலங்கைத்தீவு அரசன் இல்லாமல் இருந்தது.

6. சிம்மபுரத்தில் சிம்மபாகுவின் மரணத்துக்குப் பிறகு அவனுடைய மகன் சுமிதன் அரசன் ஆனான்.

7. மதுர நாட்டரசனுடைய மகளை அவன் மணந்து கொண்டான். அவர்களுக்கு மூன்று பிள்ளைகள் பிறந்தனர். விஜயனிடமிருந்து வந்த தூதர்கள் லிகிதத்தை அரசனிடம் கொடுத்தனர்.

8. லிகிதத்தைப் படிக்கக் கேட்டதும் அரசன் தன் மூன்று பிள்ளைகளையும் கூப்பிட்டு இவ்வாறு சொன்னான்:

9. 'அன்புடையவர்களே! எனக்கோ வயதாகி விட்டது. எனது சகோதரனுக்குரியதான அழகிய இலங்கைத்தீவுக்கு உங்களிலே ஒருவர் போக வேண்டும். அங்கே அவனுடைய மறைவுக்குப்பின் ஆட்சிப் பொறுப்பையும் ஏற்க வேண்டும்' என்றான்.

10. அரசனுடைய இளையகுமாரன் பாண்டு வசுதேவன 'நான் அங்கு போவேன்' என்று முடிவு செய்தான்.

11. தன் பிரயாணம் வெற்றிகரமாக நிகழும் என்று நிமித்திகர்கள் உறுதி கூறியபின் தந்தையின் அதிகாரம் பெற்று முப்பத்தி இரண்டு மந்திரி குமாரர்களையும் தன்னுடன் கூட்டிக்கொண்டான்.

12. அவர்கள் இரந்துண்ணும் துறவிகளைப் போன்று மாறுவேடத்துடன் கப்பலில் ஏறிப் புறப்பட்டனர். இலங்கையில் அவர்கள் மகா கந்தார நதி முகத்துக்கருகே கரையேறினர். அந்த துறவிகளைக் கண்டதும் மக்கள் உரிய மரியாதையுடன் வரவேற்றனர்.

13. நகரத்தைப் பற்றிக் கேட்டுத் தெரிந்து கொண்டு அவர்கள் தேவர்களால் பாதுகாக்கப்பட்ட உபதீச கிராமத்தை அடைந்தனர்.

14. மற்ற மந்திரிகளால் பொறுப்பளிக்கப்பட்ட ஒரு மந்திரி இளவரசர் எப்போது வருவார் என்று நிமித்திகர்களை வினவி அவர் வருகையைப்பற்றி முன்னதாகவே தெரிந்து கொண்டிருந்தார்.

15. 'இன்றைக்குச் சரியாக ஏழாவது நாளில் இளவரசர் வருவார். அவர் வம்சத்தில் வரப் போகும் ஒருவர் புத்த மதத்தை இங்கு ஸ்தாபிப்பார்' என்று நிமித்திகர்கள் கூறினர்.

16. சரியாக ஏழாவது நாளில் அங்கு வந்து சேர்ந்த துறவிகளைக் கண்ட மந்திரிகள் அவர்களிடம் விசாரித்து அடையாளம் தெரிந்து கொண்டார்கள்.

17. பாண்டு வசுதேவனிடம் இலங்கையின் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்தனர். ஆனால் பட்ட மகிஷி இல்லாததால் அவன் மகுடாபிஷேகம் பெறவில்லை.

18. சாக்கிய அமிதோதனுடைய ஒரு மகன் சாக்கிய பாண்டு என்பவன். சாக்கியநாடு விரைவில் அழிந்து போகப் போகிறது என்பதை அவன் நிமித்திகர்கள் மூலம் அறிந்து கொண்டான்.

19. எனவே தன்னைச் சேர்ந்தவர்களுடன் கங்கையின் மறுபுறமுள்ள ஒரு நிலப்பரப்பை அடைந்து அங்கு ஒரு நகரத்தை ஏற்படுத்தி ஆண்டு வந்தான். அவனுக்கு ஏழு பிள்ளைகள்.

20. அவனுடைய இளைய பெண்ணின் பெயர் பத்ர காஞ்சனு. பொந்நிறமேனி படைத்தவள் அவள். அழகான உடற் கட்டுடைய அவள் எல்லோராலும் நேசிக்கப்பட்டாள்.



21. அவளுடைய காதலைப் பெற ஏழு மன்னர்கள் விலை மதிப்பற்ற பரிசுப் பொருள்களை பாண்டு மன்னனுக்கு அனுப்பி வைத்தார்கள். பாண்டு அவர்களுக்கு மறுத்துச் சொல்லப் பயந்தான்.

22. மேலும் நிமித்திகர்கள் அவள் ஒரு சுபமான பிரயாணம் செய்ய நேரும் என்றும் அந்தப் பிரயாணத்தின் விளைவு ஒரு ராஜ்ய பட்டாபிஷேகமாக இருக்கு மென்றும் கூறியிருந்தனர். எனவே, அரசன் தன் மகளை முப்பத்தி இரண்டு தோழிகளுடன் விரைவில் கப்பலேற்றினுன்.

23. கங்கையில் கப்பலைப் போகவிட்டான். 'எவரால் முடியுமோ அவர்கள் என் மகளை எடுத்துக் கொள்ளட்டும்' என்ருன். அவர்களால் அவளைக் கைப்பற்ற முடியவில்லை. ஆனல் கப்பல் மேற்கொண்டு வேகமாகச் சென்றது.

24. இரண்டாவது நாள் அவர்கள் சென்ற கப்பல் கோணகமகம் என்ற இடத்தில் ஒதுங்கியது. அங்கு அவர்கள் பிக்குகளைப் போல் உடையணிந்து கரை ஏறினர்.

25. பிறகு தலைநகரத்தை விசாரித்துக் கொண்டு தேவர்களால் பாதுகாக்கப்பட்ட உபதீச கிராமத்தை மெல்ல மெல்லச் சென்றடைந்தனர்.

26. நிமித்திகர்கள் சொன்னதைக் கேட்டிருந்த ஒரு மந்திரி இவர்கள் வந்ததைக் கண்டு விவரம் விசாரித்து அவர்களை யாரென்று அறிந்து கொண்டு அரசனிடம் அழைத்துச் சென்ருன்.

27. மிகுதியான பக்தி சிரத்தையுள்ளவர்களான அவனுடைய மந்திரிகள் பாண்டு வசுதேவனுக்கு இப்போது அவன் விருப்பம் எல்லாம் நிறைவேறி விட்டதால் பட்டாபிஷேகம் செய்து வைத்தனர்.

28. உயர் குடியினளான பத்ரகாஞ்சனவை அவன் தன் ராணியாக்கிக் கொண்டான். அவளுடன் வந்தவர்களைத் தன்னுடன் வந்தவர்களுக்கு மணம் செய்து வைத்தான்: பின்பு மன்னன் மகிழ்வுடன் வாழ்ந்து வந்தான்.

**மகாவம்சத்தில் எட்டாவது அத்தியாயமான பாண்டு வசுதேவ பட்டாபிஷேகம் முற்றும்.**

## ஒன்பதாம் அத்தியாயம்

# அபயன் பட்டாபிஷேகம்

1. ராணி பத்து பிள்ளைகளையும் ஒரு பெண்ணையும் பெற்ருள். எல்லோரிலும் மூத்தவனுடைய பெயர் அபயன். எல்லோருக்கும் இளையவளான குமாரியின் பெயர் சித்ரா.

2. சாஸ்திரங்களில் வல்லவர்களான பிராமணர்கள் 'ஆட்சியைக் கைப்பற்றுவதற்காக இவளுடைய பிள்ளைகள் தம் மாமன்மாரைக் கொல்வார்கள்' என்றனர்.

3. 'நம்முடைய இளைய சகோதரியைக் கொன்று விடுவோம்' என்று சகோதரர்கள் முடிவுசெய்த போது அபயன் அவர்களைத் தடுத்தான்.

4. பிறகு உரிய காலத்தில் அவளை ஒற்றைத்தூண் உடைய ஒரு அறையை அமைத்து அதற்குள் அடைத்தனர். அந்த அறைக்குச் செல்லும் ஒரே வழி அரசனுடையசயனக்ரகத்தின் மூலமாகவே இருந்தது. அவளுக்கு உதவியாக அறையினுள் பணிப்பெண் ஒருத்தியை வைத்தார்கள். வெளியே நூறு போர் வீரர்கள் காவல் காத்து வந்தனர்.

5. தன் அழகுத் தோற்றம் ஒன்றினல் மட்டுமே மனிதர்களை அவள் பித்துப் பிடிக்கச் செய்து கொண்டிருந்ததனல் அவளுக்கு இடப்பட்டிருந்த பெயர் ஒரு அடைமொழியுடன் நீண்டு 'உன்மத்த சித்ரா' என்று ஆயிற்று.

6. பத்ரகாஞ்சன இலங்கையை அடைந்து விட்ட செய்தியை அறிந்த அவளுடைய சகோதரர்

களில் ஒருவனைத்தவிர மற்றவர்கள் தாயின் வற்புறுத்தலுக்கு இணங்க அங்கிருந்து புறப்பட்டு வந்தனர்.

7. இலங்கைக்கு வந்து சேர்ந்ததும் அவர்கள் அரசன் பாண்டு வசுதேவனையும் தங்களுடைய தங்கையான பத்ரகாஞ்சனையையும் சந்தித்து அவளுக்காக (சித்ரா) துயரப்பட்டனர்.

8. அரசன் அவர்களை அன்புடன் வரவேற்றான். பிறகு அரசனுடைய அனுமதியுடன் அவர்கள் இலங்கையை இஷ்டம்போல் சுற்றிப் பார்த்தார்கள். அவரவர்களும் விரும்பிய இடத்தில் தங்கி வசித்தனர்.

9. இவ்வாறு ராமா தங்கிய இடம் ராமகோணம் ஆயிற்று. உருவேலன், அனுராதன் ஆகியவர்கள் தங்கிய இடம் அவர்கள் பெயராலேயே அழைக்கப்பட்டது.

10. விஜிதன், திகாயு, ரோஹண ஆகியவர்கள் தங்கிய இடங்கள் விஜித கிராமம், திகாயு, ரோஹண எனப் பெயர் பெற்றன.

11. அனுராதன் ஒரு குளத்தை அமைத்தான். இதற்குத் தென்புறம் ஒரு அரண்மனையைக் கட்டி அதில் வசிக்கத் தொடங்கினான்.

12. பின்னர் பேரரசன் பாண்டு வசுதேவன் தனது மூத்த மகனுக்கு உபராஜ பட்டம் சூட்டினான்.

13. திகாயுவினுடைய மகன் திககாமனி என்பவன் உன்மத்த சித்ராவைப் பற்றிக் கேள்விப்பட்டான்.

14. அவளிடம் கொண்ட ஆசையால் உந்தப்பட்டு உபதீச கிராமத்தை அடைந்தான். அங்கு அரசனைக் கண்டான். அரசன் அவனை உபராஜனுடன் அரசவையில் பணி புரிய நியமித்தான்.



15. அவளுடைய அறையின் பலகணி வழியாக ஒரு சமயம் சித்ரா எதிரே நின்றிருந்த காமனியைக் காண நேர்ந்தது. அவள் உள்ளத்தில் காமத்தீ எழுந்தது. பணிப் பெண்ணிடம் 'அது யார்?' என்று கேட்டாள்.

16. 'தங்கள் மாமன் மகன்' என்று பணிப்பெண் சொல்லக் கேட்டு அவள் தன் உள்ளக் கிடக்கையை அவளிடம் கூறினாள்.

17. காமனி, பணிப்பெண்ணின் ஒத்துழைப்புடன் இரவு நேரத்தில் நூலேணி வழியாக மேலே ஏறிவந்து ஜன்னலை உடைத்து அறைக்குள் நுழைந்தான்.

18. அவளுடன் கூடியிருந்தான். விடியும்வரை அங்கிருந்து போகவில்லை. இதுபோல் அடிக்கடி அவன் வந்து போகத் தொடங்கினான். அவனை யாருமே கண்டு கொள்ளவில்லை. ஏனெனில் அந்த அறைக்கு வேறு வழி எதுவும் இல்லை.

19. அவள் அவன் மூலம் கர்ப்பவதியானாள். கரு முதிர்ச்சியடைந்ததும் பணிப்பெண், சித்ராவுடைய தாயாரிடம் தெரிவித்தாள்.

20. மகளை விசாரித்து உண்மை யறிந்த தாய் மன்னனிடம் கூறினாள். மன்னன் தன் பிள்ளைகளுடன் கலந்தாலோசித்தான். 'அவனையும் நம்முள் ஒருவனாக்கிக் கொள்வோம். இவளை அவனுக்கே மணம் செய்து கொடுத்து விடுவோம்' என்று முடிவு செய்தனர்.

21. 'பிறப்பது ஆணாக இருந்தால் குழந்தையைக் கொன்று விடுவோம்' என்று கூறி அவளை அவனுக்குத் திருமணம் செய்து கொடுத்தனர்.

22. பிரசவ நேரம் நெருங்கியது. குழந்தை பெறுவதற்கான அறைக்கு சித்ரா சென்ருள். காமனியின் பணியாட்களாக சித்தன் என்ற இடையனும், காலவேலன் என்ற அடிமையும் இருந்தனர்.

23. எவ்வித வாக்குறுதியும் அளிக்க மறுத்ததால் இவர்கள் இந்த சூழ்ச்சிக்கு உடந்தை என நினைத்து அச்சத்தின் காரணமாக ராஜகுமாரர்கள் அவர்களைக் கொன்று விட்டனர். அவர்கள் யக்ஷர்களாக மறுபிறவியெடுத்துக் கருவிலிருந்த சிசுவைக் காத்து வந்தனர்.

24. பிரசவ நேரம் நெருங்கிக்கொண்டிருக்கிற மற்ெருரு பெண்ணைக் கண்டு பிடிக்குமாறு சித்ரா தன் பணிப்பெண்ணை அனுப்பினாள். சித்ரா ஒரு மகனைப் பெற்ருள். பணிப்பெண் தேடிக்கண்டு பிடித்தவளுக்கு பெண் பிறந்தது.

25. தனக்குப் பிறந்த பிள்ளையையும் ஆயிரம் பணத்தையும் மற்றவளிடம் கொடுக்கச் செய்து அவளுக்குப் பிறந்த பெண்ணைத் தன்னருகில் கொண்டுவந்து கிடத்த ஏற்பாடு செய்தாள் சித்ரா.

26. சித்ராவுக்குப் பெண் குழந்தை பிறந்திருக்கிறது என்ற சேதி கேட்டு ராஜகுமாரர்கள் மிகவும் திருப்தி யடைந்தனர்.

27. ஆனால் தாயும் பாட்டியுமான இருவரும் குழந்தைக்குத் தாத்தா, மூத்த மாமன் ஆகிய இருவருடைய பெயரையும் சேர்த்து பாண்டு அபயன் எனப் பெயரிட்டனர்.

28. இலங்கை அரசன் பாண்டு வசுதேவன் முப்பது வருடகாலம் ஆண்டான். பாண்டு அபயன் பிறந்ததும் அவன் இறந்தான்.



29. அரசன் இறந்ததும் ராஜகுமாரர்கள் அனைவரும் ஒன்றுகூடி, பாதுகாப்பளிக்கும் அபயனுக்குப் பட்டாபிஷேகப் பெருவிழாவை நடத்தினர்.

**மகாவம்சத்தில் ஒன்பதாவது அத்தியாயமான அபயன் பட்டாபிஷேகம் முற்றும்.**

பத்தாம் அத்தியாயம்

# பாண்டு அபயன் பட்டாபிஷேகம்

**1.** உன்மத்த சித்ராவின் கட்டளைப்படி பணிப்பெண், அவளுக்குப் பிறந்த ஆண் குழந்தையை ஒரு கூடையில் வைத்துக்கொண்டு துவார மண்டலத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தாள்.

**2.** தும்பர வனத்துக்கு வேட்டையாடச் சென்ற ராஜகுமாரர்கள் பணிப்பெண்ணைக் கண்டு 'எங்கே போகிறாய்? அது என்ன?' என்று கேட்டனர்.

**3.** 'துவார மண்டலத்துக்குப் போகிறேன். இது என் மகளுக்கு இனிப்புப் பணியாரம்' என்று அவள் பதிலளித்தாள்.

**4.** 'அதை எடு வெளியே' என்று ராஜகுமாரர்கள் கூறினர். யக்ஷர்களாக இருந்த சித்தனும் காலவேலனும் குழந்தைக்குப் பாதுகாப்பாக வந்து கொண்டிருந்தனர். அவர்கள் அங்கு ஒரு காட்டுப்பன்றியை வரச் செய்தனர்.

**5.** ராஜகுமாரர்கள் பன்றியைத் தொடர்ந்து சென்று விட்டனர். அவள் குழந்தையை எடுத்துச்சென்று அந்தக் காரியத்துக்காக ரகசியமாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த ஒருவனிடம் ஒப்படைத்து ஆயிரம் பணத்தையும் கொடுத்தாள்.

**6.** அதேநாளில் அவனுடைய மனைவி ஒரு ஆண் குழந்தையைப் பெற்றாள். அவன், 'என் மனைவி இரண்டு குழந்தைகளைப் பெற்றிருக்கிறாள்'



என்றறிவித்து அவனையும் தன் குழந்தையுடன் வளர்த்துவந்தான்.

7. பையனுக்கு ஏழு வயதானபோது மாமன்மார்களுக்கு அவன் எங்கு இருக்கிறான் என்பது தெரிந்துவிட்டது. ஒரு குறிப்பிட்ட குளக்கரையில் விளையாடிக் கொண்டிருக்கும் சிறுவர்கள் அனைவரையும் கொன்றுவிடுமாறு ஆட்களை அனுப்பினர்.

8. குளத்தின் நீரில் ஒரு மரம் இருந்தது. அதில் ஒரு பொந்து உண்டு. அப்பொந்தின் வாய் நீரினடியில் மறைந்திருந்தது. அது பாண்டு அபயனுக்கு மட்டும்தான் தெரியும். மற்றவர்களுடன் விளையாடும்போது பொந்துக்குள் ஒளிந்துகொள்வது அவன் வழக்கம்.

**9.** பொந்தின் வழியாக நுழைந்து அதில் நீண்ட நேரம் தங்கிவிட்டு பிறகு வெளியே வந்து பிற பிள்ளைகளுடன் கலந்து கொள்வான். எத்தனையோ முறை கேட்டும் தானிருந்த இடத்தைச் சொல்லாமல் போக்குக் காட்டி ஏமாற்றி விடுவான்.

10. ராஜகுமாரர்களுடைய ஆட்கள் வந்தபோது அவன் தன் உடைகளுடன் நீரில் மூழ்கி மரப்பொந்துக்குள் ஒளிந்துகொண்டு இருந்தான்

11. அந்த ஆட்கள் ஆடைகளை எண்ணிப்பார்த்து விட்டு இதர சிறுவர்கள் எல்லோரையும் கொன்றுவிட்டுப்போய் அரசனிடம், 'சிறுவர்களனைவரும் கொல்லப்பட்டு விட்டனர்' என்றார்கள்.

12. ஆட்கள் போனதும் பையன் தன்னுடைய வளர்ப்புத்தந்தையின் வீட்டுக்குச் சென்று அவனால் தேற்றப்பட்டவனாக பனிரெண்டு வயது வரை அங்கு வசித்து வந்தான்.

13. பையன் உயிருடன் இருப்பதை மீண்டும் மாமன்மார்கள் கேள்விப்படவே, மேய்ப்பவர்கள் அனைவரையும் கொன்றுவிடும்படி ஆட்களை அனுப்பினர்.

14. அந்த நாளில் மேய்ப்பவர்கள் மானைப் பிடித்திருந்தனர். அந்த பையனை (பாண்டு அபயனை) ஊருக்குள் போய் நெருப்பு கொண்டுவர அனுப்பினர்.

15. வீடு சென்ற அவன் வளர்ப்புத் தந்தையின் உண்மையான மகனை அழைத்து 'எனக்குக் காலில் புண்ணுயிருக்கிறது. மேய்ப்பவர்களுக்கு நீ நெருப்பு கொண்டுபோ. உனக்கும் வாட்டிய இறைச்சி கிடைக்கும்' என்றான்.

16. அதனைக் கேட்டு அவன், மேய்ப்பவர்கள் இருந்த இடத்துக்கு நெருப்புக் கொண்டு சென்றான்.

17. அச்சமயம் மேய்ப்பவர்களைக் கொல்ல அனுப்பப் பட்டவர்கள் அவர்களைச் சூழ்ந்து கொண்டு அங்கிருந்த எல்லோரையும் கொன்றுவிட்டு மாமன்மார்களிடம் சென்று கூறினர்.

18. பதினாறு வயதான போது மாமன்மார்கள் மீண்டும் அவன் உயிருடன் இருப்பதைக்கண்டு கொண்டனர். தாய், வளர்ப்புத்தந்தைக்கு ஆயிரம் பணம் அனுப்பி அவனைப் பத்திரமான ஓரிடத்திற்குக் கொண்டு போகும்படி தகவல் அனுப்பினாள்.

19. வளர்ப்புத் தயாரின் செய்தியை எல்லாம் அவனிடம் தெரிவித்து அவனை ஒரு அடிமையுடனும் ஆயிரம் பணத்துடனும் பண்டுலாவிடம் அனுப்பி வைத்தான்.

20. பண்டுலா என்னும் பெயருடைய பிராமணன் பணக்காரன். வேதங்களைக் கற்றவன். அவன்



தென் பகுதியில் பண்டுலகாமக என்னும் கிராமத்தில் வசித்து வந்தான்.

21. இளவரசன் அவ்வூரையடைந்து பண்டுலாவிடம் சென்றான். 'அன்பனே! நீதானே பாண்டு அபயன்?' என்று அவர் கேட்டார்.

22. 'ஆம்' என்று பதில் சொன்னவுடன் விருந்தினருக்குரிய மரியாதையளித்து பிராமணர்,

23. 'நீ அரசன் ஆவாய். எழுபது வருடகாலம் ஆட்சி நடத்துவாய். அந்தக்கலையைக் கற்றுக்கொள்' என்றார். அவரும் அவருடைய மகன் சந்தனும் விரைவில் (பாண்டு அபயனுக்கு) அதைக் கற்றுத் தந்தனர். அவனும் விரைவில் கற்றுத் தேர்ந்தான்.

24. அவர் நூறாயிரம் பணத்தைப் படை வீரர்களைத் திரட்டுவதற்காகக் கொடுத்தார். ஐநூறுபேர் படையில் சேர்க்கப்பட்டதும்,

25. 'யாருடைய கை பட்டதும் இலைகள், தங்கமாக மாறுகின்றனவோ அவளை உன் ராணியாகவும் என்னுடைய மகன் சந்தனை அரச குருவாகவும் கொள்வாயாக' என்று அவனிடம் கூறினார்.

26. இவ்வாறு கூறிப் பணத்தையும் கொடுத்து அவர், அவனை அங்கிருந்து படைவீரர்களுடன் அனுப்பிவிட்டார். தன் பெயரைப் பிரகடனப் படுத்தியவனாகி குணநலன் மிக்க இளவரசன் புறப்பட்டுச் சென்றான்.

27. காசமலைக்கு அருகிலுள்ள பாண நகரில் இருக்கும்போது, எழுநூறு படைவீரர்களையும் எல்லோருக்கும் வேண்டிய பொருள்களையும் திரட்டிக் கொண்டான்.

29. பாண்டு அபயனுடைய மாமன்மார்களில் ஒருவனான கிரிகண்ட சிவன், பாண்டு வசு

தேவனால் அளிக்கப்பட்டிருந்த இந்தப் பிரதேசத்திலிருந்து தனக்குரிய வரியைப் பெற்றுவந்தான்.

30. இப்போது அந்த இளவரசன் நூறு கரிசை பரப்புள்ள நிலத்தில் விளைந்த தானியங்களை அறுவடை செய்து கொண்டு இருந்தான். இவனுடைய மகள் பாலி என்னும் பேருடைய அழகிய ராஜகுமாரியாவாள்.

31. இவள் பெரும் பரிவாரத்துடன் ஒரு வண்டியில் ஏறிக்கொண்டு தந்தைக்கும் அறுவடை செய்யும் மற்றவர்களுக்கும் வேண்டிய உணவு கொண்டு வந்து கொண்டிருந்தாள்.

32. இளவரசனுடைய (பாண்டு அபயனுடைய) ஆட்கள் இளவரசியைப் பார்த்ததும் அவனிடம் கூறினார்கள்.

33. விரைவாக அங்கு வந்த இளவரசன் தன் வண்டியை இவளுடைய பரிவாரத்தினூடே ஓட்டிக்கொண்டு அவள் அருகில் போய் 'எங்கே போகிறாய் ?' என்று கேட்டான்.

34. அவள் விவரத்தைக் கூறியதும் உள்ளத்தில் காதல் தீ பற்றி எரிய இளவரசன் தனக்குக் கொஞ்சம் உணவு தருமாறு கேட்டான்.

35. அவள் வண்டியிலிருந்து கீழே இறங்கினாள். ஓர் ஆலமரத்தடியில் தங்கக் கிண்ணத்தில் பாண்டு அபயனுக்கு உணவு கொடுத்தாள்.

36. மற்றவர்களுக்கு உணவு கொடுக்க ஆலமரத்தின் இலைகளை பறித்தாள். ஒரு நொடியில் அந்த இலைகள் தங்கக் கிண்ணங்களாக மாறின.

37. இளவரசன் இதைக் கண்ணுற்றதும் பிராமணர் கூறினதை நினைவு படுத்திக் கொண்டு மகிழ்ந்தான். 'எனது ராணியாகச் செய்து கொள்ளத் தகுதியுள்ள பெண்ணைக் கண்டு பிடித்து விட்டேன்' என்றெண்ணினான்.



38. அவள் எல்லோருக்கும் உணவு அளித்தாள். ஆயினும் அவள் கொண்டு வந்த உணவு குறையவே இல்லை. ஒருவருக்கு மட்டுமே அதிலிருந்து உணவு எடுத்தது போல் இருந்தது.

39. அப்போது முதல் குணநலம் மிக்க அப்பேரழகி ஸ்வர்ண பாலி என்னும் பெயர் பெற்றாள்.

40. இளவரசன் அவளைத் தன்னுடைய வாகனத்தில் தூக்கி வைத்துக் கொண்டு பலம்மிக்க படை வீரர் சூழ்ந்து வரப் பயமின்றிச் சென்றான்.

41. அவளுடைய தந்தை இதையறிந்தபோது மகளை மீட்டுவர தன் படை வீரர்களை எல்லாம் அனுப்பினான்.

42. அவர்கள் இளவரசனுடைய படைகளுடன் போரிட்டுத் தோல்வியடைந்து திரும்பினர். அந்த இடத்தில் பின்னால் கலக நகரம் என்ற கிராமம் ஏற்பட்டது. அவளுடைய ஐந்து சகோதரர்களும் இதைக் கேள்விப்பட்டதும் இவர்களும் படையெடுத்துப் போருக்கு வந்தனர்.

43. அவர்களனைவரையும் பண்டுலாவின் மகன் சந்தன் கொன்று விட்டான். இந்த சண்டை நடந்த இடத்துக்கு லோஹித வாஹ கண்டம் என்று பெயர்.

44. அங்கிருந்து பாண்டு அபயன் பெரும் படையுடன் தோலா மலையை நோக்கி கங்கையின்

மறு கரைக்குச் சென்றான். அங்கு அவன் நான்கு வருட காலம் தங்கினான்.

45. அவன் இங்கிருப்பதை மாமன்மார் அறிந்ததும் அரசனைத் தவிர மற்றவர்கள் அவனுடன் போரிடப் படையுடன் புறப்பட்டு வந்தனர்.

46. தூமராக மலையில் தங்கள் படை வீட்டை அமைத்துக் கொண்டு அவர்கள் மருமகனுடன் போரிட்டனர்.

47. மருமகன், மாமன்மார்களைத் துரத்திக்கொண்டு இக்கரைக்கு வந்து இவர்களைப் போரில் தோற்கடித்து அவர்களுடைய படை வீட்டைக் கைப்பற்றி இரண்டு வருடம் தன்னிடம் வைத்திருந்தான்.

48. அவர்கள் உபதீச கிராமத்துக்குச் சென்று நடந்ததையெல்லாம் அரசனிடம் கூறினர். அரசன் ஆயிரம் பணத்துடன் பாண்டு அபயனுக்கு ஒரு லிகிதம் அனுப்பினான்.

49. 'உன்னுடைய ஆதிக்கத்தை கங்கையின் மறு கரையுடன் வைத்துக்கொள். இக்கரைக்கு வராதே' என்று லிகிதத்தில் எழுதப்பட்டிருந்தது. ஒன்பது சகோதரர்களும் இதை அறிந்ததும் அரசனிடம் மிகவும் கோபம்கொண்டனர்.

50. 'உண்மையில் வெகுகாலமாகவே தாங்கள் அவனுக்கு உதவி வந்திருக்கிறீர்கள். இப்போது ராஜ்யத்தையே கொடுக்கிறீர்கள் அதற்காக உங்களைக் கொல்லப் போகிறோம்' என்றனர்.

---

**கங்கை :** இப்போது மாவலி கங்கை எனப்படுகிறது.



51. அவன் ஆட்சிப்பொறுப்பை அவர்களிடம் விட்டுக் கொடுத்தான். சகோதரர்கள் ஏகமனதாகத் தங்களுள் ஒருவனை தீசன் என்பவனை ராஜப் பிரதிநிதியாக நியமித்தனர்.

52. அபயன் உபதீச கிராமத்திலிருந்து கொண்டு அரசனாக இருபது வருட காலம் ஆட்சி நடத்தினான்.

53. தூமராக மலைப்பிரதேசத்தில், தும்பரியங்கானா எனப்படும் தடாகத்தருகே சேதியா என்ற பெயருடைய ஒரு யக்ஷிணி பெண்குதிரை உருவில் திரிவது வழக்கம்.

54. ஒரு சமயம் வெள்ளைநிற மேனியும், சிவந்த கால்களும் உடைய இப்பெண்குதிரையைப் பார்த்த ஒருவன் இளவரசனிடம், இவ்விடத்தில் ஒரு பெண்குதிரை இருக்கிறது. அதன் தோற்றம் இப்படியிப்படி உள்ளது என்று கூறினான்.

55. இளவரசன் ஒரு சுருக்குக் கயிற்றுடன் அதைப் பிடித்துக் கொண்டு போக வந்தான். அவன் வருவதைக் கண்ட அவள் (குதிரை) அவன் கம்பீரத்தைக் கண்டு பயந்து போய் ஓட ஆரம்பித்தாள்.

56. தன் உருவை மாற்றிக்கொள்ளாமல் அவள் ஓட ஓட, அவனும் விடாமல் துரத்திக்கொண்டு போனான். தடாகத்தை அவள் ஏழு முறை சுற்றி ஓடினாள்.

57. பின்பு கங்கை நீரில் மூழ்கி மறுபுறம் கரையேறி தூமராக மலையைச் சுற்றி ஏழு முறை ஓடினாள்.

58. மேலும் மூன்றுமுறை தடாகத்தைச் சுற்றிக் கொண்டு வந்து கச்சக மேட்டுக்கருகில் மீண்டும் கங்கையில் பாய்ந்தாள்.

59. அங்கே அவன், அவள் பிடரியைப் பற்றிப் பிடித்து விட்டான். பின்பு நீரில் மிதந்து வந்த ஒரு பனை ஓலையைப் பற்றினான்.

60. அவனுடைய சக்தியால் அது சிறந்த வாளாக மாறியது. 'உன்னைக் கொன்று விடுகிறேன்' என்று அவள் மீது வாளுடன் பாய்ந்தான். 'நாட்டை வென்று தங்களுக்குத் தருகிறேன். என்னைக் கொல்லாதீர்கள்' என்று (குதிரை வடிவில் இருந்த) யக்ஷிணி வேண்டிக்கொண்டாள்.

61. பின்பு அவன் குதிரையின் கழுத்தைப் பிடித்துக் கொண்டு வாளினால் அதன் மூக்கில் துளையிட்டு கயிற்றினால் கட்டினான். அவன் சென்ற விடமெல்லாம் குதிரையும் தொடர்ந்து வந்து கொண்டிருந்தது.

62. பிறகு அவ்வீரன் குதிரை மீது ஏறியவனாக தூமராக மலைக்குச் சென்று நான்கு வருட காலம் வசித்தான்.

63. பிறகு அங்கிருந்து படையுடன் அரிதமலைக்கு வந்து, போருக்கு உகந்த சமயத்தை எதிர் பார்த்துக்காத்துக்கொண்டு ஏழு வருட காலம் தங்கியிருந்தான்.

64. எட்டு மாமன்மார்களில் இருவர் தவிர மற்றவர்கள் போர் புரிவதற்காக அரிதமலைக்கு வந்தனர்.

65. ஒரு சிறு நகருக்கருகே படை வீட்டைக்கட்டிக் கொண்டு, அதை ஒரு படைத்தலைவனிடம் ஒப்படைத்தபின்னர், எல்லாத் திசையிலும் அரிதமலையைச் சூழ்ந்து கொண்டனர்.

66. இளவரசன் யக்ஷிணியுடன் கலந்து பேசிய பிறகு, இவனுடைய தந்திரமான யோசனைப்படி

அரிதமலை: இப்போது ரிதிகலா எனப்படுவது.



அரச உடைகள், ஆயுதங்கள் முதலிய பரிசுப் பொருள்களுடன் படை வீரர்கள் சிலரை செய்தியுடன் முன்னதாக அனுப்பி வைத்தான்.

67. 'இவைகளை ஏற்றுக் கொள்ளுங்கள். நான் உங்களுடன் சமாதானம் செய்து கொள்ள விரும்புகிறேன்' என்ற செய்தியையும் அவர்கள் மூலம் தெரிவித்தான்.

68. போருக்கான ஏற்பாடுகளை நிறுத்திவிட்டு 'அவன் வந்ததும் கைது செய்து விடுவோம்' என்று மாமன்மார் வாளாயிருந்தனர். அவன் யக்ஷிணிக் குதிரையின் மேலேறியவனாகப் பெரும்படை நடத்திப் போருக்குச் சென்றான்.

69. யக்ஷிணி உரக்கக் கனைத்தாள். முகாமுக்கு உள்ளேயும், வெளியேயுமிருந்த அவன் படை வீரர்கள் பெரும் யுத்த கோஷத்தை எழுப்பினார்கள்.

70. இளவரசனுடைய வீரர்கள் பகைப்படை வீரர்கள் அனைவரையும் கொன்றுவிட்டார்கள். கொல்லப்பட்டவர்களுடைய மண்டை ஓடுகள் கோபுரம் போல் குவிந்து கிடந்தன.

71. படைத் தலைவன் தப்பிப் புதருக்குள் ஓடி ஒளிந்து கொண்டான். அதனால் அந்தப்புதர் சேனாபதி கும்பகம் எனப்படுகிறது.

72. கோபுரம் போல இருந்த எலும்புக் குவியலின் மேலாக மாமன்மார்களின் எலும்புகளும் கிடந்ததைக் கண்ட இளவரசன் 'சுரைக் குவியல் போலல்லவா இருக்கிறது' என்றான். எனவே இந்த இடத்துக்கு லாபுகிராமம் எனப் பெயரிட்டனர்.

73. போரில் இவ்வாறு வெற்றிபெற்றதும், பாண்டு அபயன் தன்னுடைய பெரிய மாமன் அனுரா

தன் வசித்துக் கொண்டிருந்த இடத்துக்குச் சென்றான்.

74. அந்தப் பெரிய மாமன் அவனுக்குத் தன்னுடைய அரண்மனையைக் கொடுத்து விட்டுத் தனக்கு வேறு இடத்தில் வீடு கட்டிக் கொண்டார். ஆனால் அவன் வீட்டிலேயே வசித்து வந்தான்.

75. தகுதியான இடங்களைப் பற்றிய அறிவிலே தேர்ந்த நிமித்திகர்களைக் கலந்தாலோசித்து அந்த கிராமத்துக் கருகே தனது தலைநகரை நிர்மாணித்தான்.

76. இரண்டு அனுராதர்களுக்கு வாசஸ்தலமாக அது இருந்ததால் அனுராதபுரம் எனப்பட்டது. அனுராத நட்சத்திரத்தில் அதற்கு அஸ்திவாரம் இடப்பட்டது மற்றொரு காரணம்.

77. மாமன்மார்களுடைய கொற்றக் குடைகளை இங்கு கொண்டு வரச் செய்து, இயற்கையாக அமைந்த தடாகத்தில் பரிசுத்தப் படுத்தித் தன்னிடம் வைத்துக் கொண்டான்.

78. பாண்டு அபயன் அதே தடாக நீரைக் கொண்டு பட்டாபிஷேகம் செய்து கொண்டான்.

79. ஸ்வர்ணபாலியைத் தன்னுடைய பட்டத்து ராணியாக்கிக் கொண்டான். இளைஞனை சந்தனை தனது மந்திரியாக நியமித்ததுடன் சகாக்களுக்கும் அவர்களது தகுதிக் கேற்பப் பதவிகளை வழங்கினான்.

80. தாய்க்கும் தனக்கும் சாதகமாக இருந்ததால் மூத்தமாமன் அபயனை அவன் கொல்ல வில்லை. இரவு நேரத்தில் ஆளும் பொறுப்பை அவனிடம் ஒப்படைத்தான்.



81. அபயன் நகர குடிகா ஆனான். அது முதல் தலைநகரில் நகர குடிகா நியமிக்கப்பட்டு வந்தனர்.

82. மாமனான கிரி கண்ட சிவனையும் அவன் கொல்லவில்லை. கிரி கண்டம் எனப்பட்ட பிரதேசத்தை அவருக்கே திருப்பிக் கொடுத்தான்.

83. தடாகத்தை ஆழமாகத் தோண்டி ஏராளமான நீர் நிரம்பி இருக்கச் செய்தான். போரில் வெற்றி பெற்றதும் தன்னுடைய பட்டாபிஷேகத்துக்கு அதிலிருந்து நீர் எடுத்துக் கொண்டதால் அது ஜெயவாபி என்று அழைக்கப் பட்டது.

84. யக்ஷன் காலவேலனை நகரின் கிழக்குப் பகுதியிலும், யக்ஷன் சித்தனை அபயதடாகத்தின் கீழ்க்கரையிலும் தங்கியிருக்கச் செய்தான்.

85. கடந்த காலத்தில் அவனுக்குப் பெரிதும் உதவி செய்த பணிப்பெண் மறு பிறவியில் ஒரு யக்ஷிணியாக இருந்தாள். நன்றி மறவாத அரசன் அவளை நகரின் தெற்கு வாயிலில் இருக்கச் செய்தான்.

86. குதிரை உருவில் இருந்த யணிக்ஷியை அரண்மனைக்குள்ளேயே குடியிருக்கச் செய்தான். ஆண்டு தோறும் அவளுக்கும் இதர யக்ஷர்களுக்கும் பலியிட்டுப் பூஜை செய்தான்.

87. விழா நாட்களில் சித்தனுடன் சம ஆசனத்தில் அமர்ந்து தேவர்களும் மனிதர்களும் எதிரே நடனம் ஆடுவதைக் கண்டு களிப்பான்.

88. அபயவாபியைப் போலவே சுற்றுப்புறத்தில் நான்கு ஊர்களையும் அமைத்தான்.

---

நகர குடிகா : நகர்ப் பாதுகாவலன்.
அபயவாபி : இப்போது பஸவக் குளம் எனப்படுகிறது.

89. பொது கல்லறை, கொலைக்களம், மேற்றிசை ராணிகளின் ஆலயம், வேசவனத்து ஆலமரம், வேட்டைபூதத்துக்கு உரிய பனைமரம்,

90. யோனர்களுக்கு ஒதுக்கப்பட்ட இடம், மகாயக்ஞசாலை, ஆகிய இவைகளை அவன் மேற்கு வாயிலுக்கருகில் அமைத்தான்.

91. நகரின் தெருக்களைச் சுத்தம் செய்வதற்கு ஐநூறு சண்டாளர்களை நியமித்தான். சாக்கடைகளைச் சுத்தம் செய்ய இருநூறு சண்டாளர்கள் நியமிக்கப்பட்டனர்.

92. இறந்தவர்களைத் தூக்கிச் செல்ல நூற்றி ஐம்பது சண்டாளர்களை நியமித்தான் கல்லறைகளைக் கண்காணிக்கவும் அவ்வளவுபேர் நியமிக்கப்பட்டனர்.

93. இதற்காக அவன் கல்லறைக்கு வடமேற்கே ஒரு கிராமத்தை ஏற்படுத்தினான். அவர்கள் முறைப்படித் தங்கள் கடமைகளைச் செய்து வந்தனர்.

94. சண்டாள கிராமத்துக்கு வடகிழக்கில் சண்டாளர்களுக்காகத் தனியே தாழ்ந்தவர்களுக்கான ஒரு கல்லறை ஏற்படுத்தினான்.

95. இதற்கு வடக்கே, இதற்கும் பாசான மலைக்குமிடையே வேடுவர்களுக்கான குடிசைகள் வரிசையாகக் கட்டப்பட்டன.

96. அதற்கும் வடக்கே காமனிவாபி வரை பல துறவிகளுக்கான ஒரு மடம் அமைக்கப்பட்டது.

97. அதற்குக் கிழக்கே அரசன் நிகந்த ஜோதியர்களுக்காக ஒரு வீட்டைக் கட்டினான்.

---

**காமனிவாபி** — இப்போது கரம்பவக்குளம் எனப்படுகிறது.
**நிகந்தஜோதியர்** — ஜைனத் துறவிகள் - திகம்பரர்கள்.



98. அப்பிரதேசத்திலேயே கிரி என்னும் பெயருடைய நிகந்தரும், பல்வேறு மதப்பிரிவுகளைச் சேர்ந்த துறவிகளும் இருந்தனர்.

99. அங்கு அரசன் நிகந்த கும்பந்தருக்காக ஒரு பிரார்த்தனை மண்டபத்தைக் கட்டினான். அது அவர் பெயரால் அழைக்கப்பட்டது.

100. அங்கிருந்து மேற்கேயும், வேடுவர்கள் வசித்த பகுதிக்குக் கிழக்கேயும் மாறுபட்ட கொள்கையுடைய ஐநூறு குடும்பங்கள் வசித்தன.

101. ஜோதியருடைய வீட்டுக்கு அப்பால், காமனி வாபியின் இக்கரையில் ஊர் ஊராகச் சென்று இரந்துண்ணும் துறவிகளுக்காக ஒருமடத்தைக் கட்டுவித்தான்.

102. ஆஜிவகர்களுக்குத் தங்குமிடமும், பிராமணர்களுக்கான ஒரு தங்குமிடத்தையும் அமைத்தான். இந்த இடத்தில் நோயுற்றவர்கள் தங்கி சுகம் பெற ஒரு மனையையும், மண்டபத்தையும் கட்டினான்.

103. பட்டாபிஷேகம் செய்து கொண்ட பத்து வருடங்களுக்குப் பிறகு, இலங்கையை யாண்ட பாண்டு அபயன் அத்தீவு முழுவதும் கிராம எல்லைகளை உறுதிப்படுத்தினான்.

104. கண்ணுக்குப் புலப்படும் உருவிலிருந்த காலவேலனும், சித்தனும் துணையாக இருந்து உதவி செய்ய,

105. யக்ஷர்களையும், பூதர்களையும் நண்பர்களாகக் கொண்ட அவன் எல்லாப் பேறும் பெற்றுக் களித்தான். பாண்டு அபயனுக்கும், அபயனுக்கும் இடையே பதினேழு வருட காலம் அரசன் இன்றி ஆட்சி நடந்தது.

106. அறிவிற் சிறந்த அரசன் பாண்டு அபயன் முப்பத்து ஏழு வயதில் ஆட்சிப் பொறுப்பை ஏற்ருன். பின்பு எழுபது வருடகாலம் சீரும், செல்வமும் மிக்க அனுராதபுரத்திலிருந்து அவனுடைய ராஜ்யத்தை ஆண்டு வந்தான்.

**மகாவம்சத்தில் பத்தாம் அத்தியாயமான பாண்டு அபய பட்டாபிஷேகம் முற்றும்.**

## பதினேராம் அத்தியாயம்

# தேவனும்பிரிய தீஸன் பட்டாபிஷேகம்

1. அவனுடைய மரணத்துக்குப் பிறகு அவனது மகன் முத்த சிவன் என்பவன்—ஸ்வர்ணபாலி யின் மகன் ஆட்சிக்கு வந்தான். நாடு அப் போது அமைதியாக இருந்தது.

2. அரசன் அழகுள்ள மகாமேகவனம் பூங்காவை அமைத்தான். அதன் பெயருக்கேற்ப அந்த வனம் எல்லா வகையான நல்ல வளங்களையும் உடையதாக இருந்தது. பழ மரங்களும், மலர் மரங்களும் அங்கு இருந்தன.

3. பூங்காவை அமைப்பதற்காக அந்த இடத்தைத் தேர்ந்தெடுத்தபோது ஒரு பெரிய மேகம் காலமில்லாத அந்தக் காலத்திலும் திரண்டு மழையைப் பொழிந்தது. அதனுலேயே அந்தப் பூங்காவை மகா மேகவனம் என்றழைத்தனர்.

4. இலங்கையின் திருமுகம் போல் நிகழ்ந்த புகழ் மிக்க அனுராதபுரத்திலிருந்து முத்த சிவன் அறுபது வருட காலம் ஆண்டான்.

5. அவனுக்குப், பத்து குமாரர்கள். அவர்கள் ஒவ்வொருவரும் மற்றவர் நலனில் அக்கறை கொண்டவர்கள். இரண்டு பெண்கள்; அவர் கள் இருவரும் அழகாகவும் பிறந்த குடிக்குப் பெருமை தரும் விதத்திலும் இருந்தார்கள்.

6. இரண்டாவது குமாரன் பெயர் தேவனும்பிரிய தீசன் என்பது. சகோதரர்கள் எல்லோரிலும் குணநலனிலும் அறிவுத் திறமையிலும் மிகச் சிறந்தவனுக அவன் விளங்கினுன்.

7\. இந்த தேவனாம்பிரிய தீசன் அவனுடைய தந்தையின் மறைவுக்குப் பின்னால் அரசன் ஆனான். அவன் பட்டாபிஷேகம் செய்து கொண்டபோது பல அற்புதங்கள் நிகழ்ந்தன.

8\. இலங்கைத் தீவு முழுவதும் பூமிக்குள் ஆழப் புதைந்து கிடந்த புதையல்களும், மணிகளும் தரைமட்டத்துக்குத் தாமாக வந்தன.

9\. இலங்கைக்கருகே மூழ்கிப்போன கப்பல்களில் இருந்த அணிகலன்கள் பலவும், இயற்கையாகக் கடலிலுள்ள செல்வங்களும் கரையில் வந்து ஒதுங்கின.

10\. சாத மலையடிவாரத்தில் மூன்று மூங்கில் தண்டுகள் சவுக்குபோல் வளர்ந்தன.

11\. இவற்றுள் கொடித் தண்டாக இருந்த ஒன்று வெள்ளியில் உருக்கி வார்த்தது போல் பளபளத்தது. பொன்நிறத்தில் இதன் மீது அழகிய கொடிகள் ஒளிவீசிப் படர்ந்திருப்பதைக் காணலாம்.

12\. மற்றொன்று மலர்த்தண்டில் பலவகையான மலர்களைக் காணலாம். பல்வேறு நிறங்களில் மலர்ச்சியுடன் அவை காட்சி தந்தன.

13\. கடைசியானது பறவைத் தண்டு. இதன் மீது பல வண்ணப் பறவைகளையும் விலங்குகளையும் காண முடிந்தது. உயிரோடு இருப்பது போலவே அவை தோற்றம் அளித்தன.

14\. குதிரை முத்து, யானைமுத்து, ரதமுத்து, மணி முத்து, அணிமுத்து, மோதிர முத்து, காகுதப் பழ முத்து, சாதாரண முத்து ஆகிய எட்டு வகை முத்துக்களும்,



15\. கடலுக்கடியிலிருந்து மேலே வந்து கரையில் குவியல் குவியலாகக் கிடந்தன.

16\. இவையனைத்தும் தேவனாம்பிரிய தீசனுடைய பெருமையால் நிகழ்ந்தவை.

17\. முத்துக்களும் மூங்கில் தண்டுகளும் ஆகிய எல்லாவற்றையும் அவர்கள் அரசனிடம் ஒரே வாரத்தில் கொண்டு வந்து கொடுத்தனர். இதைக் கண்ட மன்னன் பெரிதும் மகிழ்ச்சி அடைந்தான்.

18\. 'என்னுடைய நண்பனான தர்ம அசோகனைத் தவிர வேறு யாரும் இவ்விலை மதிக்க வொண்ணாத பொருள்களைப் பெறத் தகுதியுள்ளவர்கள் அல்ல. இவற்றைப் பரிசாக அவருக்கு அனுப்புவேன்' என்று எண்ணினான்.

19\. தேவனாம்பிரிய தீசனும், தர்ம அசோகனும் ஒருவரையொருவர் நேரில் பார்த்ததே இல்லை. ஆயினும் வெகு காலமாகவே அவர்கள் நண்பர்களாக இருந்தார்கள்.

20\. அரசன் நான்கு பேர்களைத் தன்னுடைய தூதுவர்களாக நியமித்து அனுப்பினான். பிரதான மந்திரியாக இருந்தவரும் மருமகனுமான மகாரிதன் மற்றும் ராஜகுரு, ஒரு மந்திரி, நிதிக்காப்பாளர் ஆகிய மூவரும் இதற்கென நியமிக்கப்பட்டனர்.

21\. பரிவாரங்களுடன் விலை மதிப்பற்ற அப்பொருள்களை எடுத்துக்கொண்டு போகுமாறு அவர்களிடம் சொன்னான்.

22\. மூன்று விதமான அரிய ரத்தினங்கள், மூன்று அதிசயமூங்கில் தண்டுகள், வலம்புரிச்சங்கு, எட்டுவித முத்துக்கள் ஆகியவற்றை அவர்கள் கொண்டு சென்றனர்.

23. ஜம்புகோளத்தில் கப்பலேறி அவர்கள் ஏழு தினங்களில் தாம்ரலிப்தியை அடைந்தனர். அங்கிருந்து மேலும் ஏழு நாட்களில் பாடலி புத்திரத்தை யடைந்தனர்.

24. பரிசுப்பொருள்களை தர்ம அசோகன் கையிலே அவர்கள் கொடுத்தனர். அவற்றைப் பார்த்த அவன் பெரிதும் மகிழ்வடைந்தான்.

25. 'என்னிடம் இதுபோன்ற அரிய பொருள்கள் இல்லையே' என்றெண்ணிய அரசன் மகிழ்ச்சிப் பரவசத்தில் அரிதனை தன்னுடைய படைத்தள பதிகளில் ஒருவனை நியமித்துக் கௌரவித்தான்.

26. ராஜகுருவான பிராமணருக்கு குருவிற்குரிய கௌரவத்தை யளித்தான். மந்திரிக்கு தண்ட நாயக கௌரவத்தையும், நிதிக்காப்பாளருக்கு குழுத்தலைவனுக்குரிய கௌரவத்தையும் அளித்தான்.

27. அத் தூதுவர்களுக்குத் தங்குவதற்கும் உல்லாசமாகப் பொழுது போக்குவதற்கும் வசதியாக ஏற்பாடு செய்தபின்பு, தான் பிரதிப் பரிசாக எதை அனுப்புவது என்று தன் மந்திரிகளுடன் கலந்தாலோசித்தான்.

28. ஒரு வெண்சாமரம், மகுடம், வாள், வெண் கொற்றக் குடை, பாதுகைகள், தலைப்பாகை, காதணிகள், ஆரங்கள், கமண்டலம்,

29. மஞ்சள் சந்தனக் கட்டை, சுத்தம் செய்யவே தேவையில்லாத ஆடைகள், விலையுயர்ந்த அங்கி, நாகர்கள் கொணர்ந்த தைலம்,

**ஜம்பு கோளம்:** இலங்கையின் வடபகுதியில் உள்ள துறை.
**தாமரலிப்தி:** கங்கைத் துறைமுகம். இப்போது டாம்லுக் எனப்படுகிறது.



30. செம்மண், அனேதத் தடாகநீர், கங்கையின் நீர், வலம்புரிச் சங்கு,

31. பருவம் கொழிக்கும் எழில் மங்கை, பொற் கலசங்கள், விலையுயர்ந்த மெத்தை,

32. உயர்ந்த மூலிகைகள், ஆறாயிரம் வண்டி நிறைய பறவைகளால் கொணரப்பட்ட மலையரிசி, மற்றும் ஒரு அரசனுடைய கோலாகலமான பட்டாபிஷேக வைபவத்துக்கு வேண்டிய எல்லாப் பொருள்களும்

33. இவற்றைத் தன்னுடைய நண்பனுக்குப் பரிசுப் பொருள்களாகத் தூதுவர்களின் மூலம் உரிய காலத்தில் அனுப்பியதுடன் மெய்நெறியாகிய பரிசையும் அனுப்பி இவ்வாறு கூறுமாறு சொன்னான்:

34. 'புத்தரிடமும், தர்மத்திடமும், சங்கத்திடமும் நான் சரணமடைந்துவிட்டேன். சாக்கிய குமாருடைய மதத்தின் எளிய சீடனாக என்னைச் செய்து கொண்டுவிட்டேன்.

35. 'மனிதருள் சிறந்தவரே! தாங்களும் மனம் மாறி நம்பிக்கையுடன் இந்த நன்மணிகளிடம் சரணம் அடைவீராக!'

36. தன்னுடைய நண்பனுடைய மந்திரிகளிடம் 'என்னுடைய நண்பனுக்கு மீண்டும் பட்டாபிஷேகம் செய்யுங்கள்' என்று கூறி அவர்களைப் பல விதமாய்க் கௌரவித்து அனுப்பி வைத்தான்.

37. உயர்ந்த கௌரவத்துடன் நடத்தப்பட்ட அந்த மந்திரிகள் ஐந்து மாதகாலம் தங்கியிருந்த பின்பு அசோகனுடைய தூதர்களுடன் வைகாசி மாதம் சுக்கில பட்சம் முதல் நாளில் புறப்பட்டனர்.

38. தாம்ரலிப்தியில் கப்பலேறிப் புறப்பட்டு பனிரெண்டாம் நாள் ஜம்பு கோளத்தில் இறங்கிய அவர்கள் அரசனைக் கண்டார்கள்.

39. இலங்கை மன்னனிடம் (அசோகனுடைய) தூதுவர்கள் பரிசுப் பொருள்களை அளித்தனர். இலங்கை மன்னன் அவர்களை அன்புடன் வரவேற்று உயர்ந்த முறையில் உபசரித்தான்.

40. தங்கள் மன்னனிடம் பெரிதும் விசுவாசமுள்ள அத்தூதுவர்கள் இலங்கை மன்னனுக்குப் பட்டாபிஷேகம் செய்தனர். அவனுக்கு முதல் பட்டாபிஷேகம் ஏற்கனவே மார்கழி மாதத்து வளர்பிறை முதல் நாளில் நடந்து இருந்தது.

41. தர்ம அசோகன் தமக்கிட்ட கட்டளையை நிறைவேற்றி மகிழ்ந்த அவர்கள் தங்களுடைய மன்னனின் விமோசனத்தில் களிப்புக் கொண்டவர்களாக இலங்கையின் நல்வாழ்வில் மகிழ்ச்சியடைந்த அவனுக்கு முடிசூட்டினார்கள்.

42. இவ்வாறாக விசாக பௌர்ணமியன்று தேவர்களுக்குப் பிரியமானவன் என்பதைத் தன் பெயரிலேயே கொண்டிருந்த மன்னன் பட்டாபிஷேகம் செய்து கொண்டு மக்களுக்கு நன்மை செய்து வந்தான். அன்று இலங்கையின் ஒவ்வோரிடத்திலும் விழாக் கொண்டாடப்பட்டது.

**மகாவம்சத்தில் பதினோராவது அத்தியாயமான தேவனாம்பிரிய தீசன் பட்டாபிஷேகம் முற்றும்.**

பனிரெண்டாம் அத்தியாயம்

# பல நாடுகளையும் மாற்றல்

1. புத்த மார்க்கத்துக்கு ஒளியையூட்டிய மாகாளி புத்திர தேரர் மூன்றாவது மகாசபையை முடித்ததும் எதிர்காலத்தை உணர்ந்தார்.

2. அடுத்துள்ள நாடுகளில் புத்த தர்மம் வேரூன்றப் போகிறது என்பதை உணர்ந்தார்.

3. கார்த்திகை மாதத்தில் ஒருவரை இங்கும் ஒருவரை அங்குமாகத் தேரர்களை அனுப்பினார். மஜ்ஜாந்திக தேரரை அவர் காஷ்மீரத்துக்கும் காந்தாரத்துக்கும் அனுப்பி வைத்தார்.

4. மகாதேவ தேரரை மஹிஷ மண்டலத்துக்கு அனுப்பி வைத்தார். வனவாசத்துக்கு ராகித தேரரையும், அபராந்தகத்துக்கு தர்ம ராகிதர் என்ற யோனரையும் அனுப்பி வைத்தார்.

---

**மகிஷ மண்டலம்:** இப்போதுள்ள மைசூர் என்று பலர் கருதுகின்றனர். நர்மதை நதிக்கரையிலுள்ள மந்தாதா என்னும் இடம் என்பாரும் உண்டு.

**வனவாசம்:** இந்நாடு பற்றி மகாபாரதத்திலும், ஹரிவம்சத்திலும் பிரஸ்தாபம் வருகிறது. தென்னிந்தியாவில் வசிப்பவர்களை அது குறிப்பிடுகிறது. கன்னடத்தின் வடபகுதியில் வனவாசி என்ற நகரம் இன்றும் உள்ளது.

**அபராந்தகம்:** இதற்கு மேற்குக் கோடி என்பது பொருள். குஜராத்தின் வட பகுதி. கத்தியவார், கட்ச், சிந்து ஆகிய பிரதேசங்கள் அடங்கிய நாடு.

5. மகாராஷ்டிரத்துக்கு மகாதர்ம ராகிதர் என்ற தேரரை அனுப்பினர். மகா ராகிதரை யோன நாட்டுக்கு அனுப்பினர்.

6. மஜ்ஜிம தேரரை இமாலய நாட்டுக்கும், ஸ்வர்ண பூமிக்கு சோனர், உத்தரர் ஆகிய இரு தேரர்களையும் அனுப்பினர்.

7. மகா தேரர் மஹிந்தன், இதியர், உதியர், சம்பலர், பத்ரசாலர் ஆகிய தமது ஐந்து சீடர்களான,

8. இவர்களை 'எழில் மிகும் இலங்கைத் தீவில் இனிய புத்த மதத்தை ஏற்படுத்துவீராக' என்று கூறி அனுப்பி வைத்தார்.

9. அப்போது காஷ்மீரத்திலும் காந்தாரத்திலும் அற்புத சக்தி படைத்த நாகமன்னன் அரவாலன் என்பவன் பயங்கரமான பேய் மழையை விளைந்த பயிர்களின் மேலாகப் பொழியச் செய்தான்.

10. கொடுமையாக எல்லாவற்றையும் வெள்ளத்தில் அழிந்து போகச் செய்தான். மஜாந்திக தேரர் அங்கு விரைந்து சென்றார்.

---

**யோன நாடு:** யவனர் நாடு. பொதுவாக அயல் நாட்டினரைக் குறிப்பது. கிரேக்கர்களை மட்டும் அல்ல. இதே சமயத்தில்தான் (கி. மு. 246) கிரேஸோ—பாக்ட்ரிய நாடு ஏற்பட்டது. தர்ம ராகித தேரர் ஒரு யவனர்.

**ஸ்வர்ணபூமி:** சமீப காலம் வரை இது பர்மாவைக் குறிப்பதாகக் கருதப்பட்டது. இது சரியல்ல. ஏனெனில் புத்த மதம் பர்மாவுக்கு சீனவிலிருந்துதான் பரவியது. மத்திய இந்தியாவிலுள்ள ஸோன் நதியை யொட்டிய பிரதேசமாக இது இருக்கலாம். சீன யாத்திரிகர் ஹ்யூன் சுவாங் கர்ண சுவர்ண என்று குறிப்பிடும் வங்காளத்திலுள்ள பிரதேசமாகவும் இருக்கலாம்.



11. காற்றிலே பறப்பது, நீர்மேல் நடப்பது போன்ற பல அற்புதங்களைச் செய்து கொண்டு சென்றார். இதைக் கண்ட நாகர்கள் தங்கள் அரசனிடம் சென்று இதுபற்றிக் கோபத்துடன் தெரிவித்தனர்.

12. நாகமன்னன் இது கேட்டுச் சீறினன். பயங்கரமான பல நிகழ்ச்சிகள் ஏற்படச் செய்தான். கோரமான காற்று வீசியது. பேரிடியும் பெருமழையும் பெய்தது.

13. இடி பல மரங்களைத் தாக்கியது. இங்குமங்கும் மின்னல் பளிச்சிட்டது. மலை முடிகளும் மரங்களும் பெயர்ந்து விழுந்தன.

14. பயங்கரமான உருவெடுத்துக் கொண்டு நாகர்கள் எல்லா இடங்களிலும் பயமுறுத்தினர். அரசன் பலவிதமாக மிரட்டி அனலும் புகையும் கக்கினன்.

15. தேரர் தம்முடைய அற்புத சக்தியால் இந்தப் பயங்கர நிகழ்ச்சிகளுக்கெல்லாம் முடிவு கட்டினர். பிறகு நாக மன்னனிடம் தமது உயர்ந்த ஆற்றலைக் காட்டியவாறு சொன்னர்:

16. 'தேவர்களுடன் சேர்ந்து உலகமே திரண்டு என்னைப் பயமுறுத்த முயன்றாலும் என் சக்திக்கு முன் இணையாக முடியாது. இந்த இடத்தில் எத்தகைய பயங்கரங்கள் எழுந்தாலும் அவை என்னைப் பயமடையச் செய்யாது.

17. 'ஆற்றலுள்ள நாகனே! கடலும் மலையும் கொண்ட இவ்வுலகையே தூக்கி என்மீது எறிந்தாலும் எவ்விதத்திலும் உன்னால் என்னிடம் பயத்தையோ, துயரத்தையோ ஏற்படுத்த முடியாது.

18. 'நாகராஜனே! இவை யாவும் நிச்சயமாக உனக்கே அழிவை ஏற்படுத்தும்'

19. இதைக் கேட்டுத் தலை குனிந்த நாகராஜனுக்கு தேரர் தர்மத்தை உபதேசித்தார். அதன் பேரில் அவன் திரிசரணமடைந்து சீலத்தைத் தழுவினன்.

20. இதேபோல் இமாலயத்திலுள்ள எண்பத்தி நாலாயிரம் நாகர்களும், ஏராளமான கந்தர்வர்களும், யக்ஷர்களும், கும்பந்தர்களும் புத்த மார்க்கத்துக்கு வந்தனர்.

21. பந்தகன் என்னும் பெயருடைய யக்ஷனும் அவனுடைய மனைவி ஹரிதாவும், அவர்களுடைய ஐநூறு பிள்ளைகளும் தூய்மையின் முதற்பலனை அடைந்தனர்.

22. 'இனி முன்போல் கோபம் எழாமலிருப்பதாக வாழும் ஜீவன்கள் அவற்றின் பயனை விரும்புகிறபடியால் விளை பயிரைப் பாழாக்காதீர்கள். ஜீவராசிகளிடம் அன்பு செலுத்துங்கள். மனிதர்களை மகிழ்வுடன் வாழவிடுங்கள்.'

23. இவ்வாறு அவர்களுக்கு உபதேசம் செய்தார். அவர்கள் இந்த உபதேசப்படி நடந்து வந்தனர்.

24. பிறகு நாகராஜன் தேரரை நவரத்தின ஆசனத்தில் அமர்த்தி தான் அருகில் நின்று அவருக்கு சாமரம் வீசினன்.

25. காஷ்மீரத்திலிருந்தும் காந்தாரத்திலிருந்தும் நாக மன்னனை வழிபட வந்தவர்கள் அற்புதங்களைப் புரிவதில் தேரர் (நாக மன்னனைவிட) சக்தி மிக்கவர் என்பதை ஒப்புக் கொண்டனர்.

**கும்பந்தர்:** அமானுஷ்ய சக்தி படைத்த கணங்கள். விரூலகன் ஆட்சியின் கீழ் உள்ளவர்கள். விரூலகன் லோகபாலர்களில் ஒருவன்.



26. தேரருக்கு வணங்கி மரியாதை செய்தபின் அவர்கள் ஒருபுறமாக அவருக்கருகில் அமர்ந்தனர். தேரர் அவர்களுக்கு ஆசி விகோபமா தர்மத்தை உபதேசித்தார்.

27. எண்பதாயிரம் பேர் மதம் மாறினர். நூறாயிரம் பேர் தேரரிடம் தீட்சை பெற்றுத் துறவு பூண்டனர்.

28. அப்போது முதல் காஷ்மீரத்திலும் காந்தாரத்திலும் மஞ்சள் உடை ஒளி வீசியது. புத்தரும் அவரது போதனைகளும் சங்கமும் சிறப்புடன் நிலைபெற்றது.

29. மஹிஷ மண்டலத்துக்குச் சென்ற மகா தேவ தேரர் மக்களிடையே தேவ தூத சித்தாந்தத்தைப் பிரசாரம் செய்தார்.

30. உண்மையை உணர்ந்து நாற்பதாயிரம் பேர் தம்மைப் புனிதப் படுத்திக் கொண்டனர். மேலும் நாற்பதாயிரம் பேர் அவரிடம் புத்த தீட்சை பெற்றனர்.

31. வனவாசத்துக்குச் சென்ற ராகித தேரர் காற்றில் மிதந்தவாறே மக்களுக்கு அநமதக சம்யுக்தத்தைப் பிரசாரம் செய்தார்.

32. அறுபதாயிரம் பேர் மதம் மாறினர். முப்பத்தி ஏழாயிரம் பேர் புத்த தீட்சை பெற்றனர்.

33. ஐநூறு விகாரைகள் அந்நாட்டில் அமைக்கப் பட்டன. இவ்வாறாக அந்தத் தேரர் புத்த மதத்தை அங்கு ஸ்தாபித்தார்.

**ஆசி விகோபமா**—பாம்பின் உதாரணம்.

**தேவ தூத சித்தாந்தம்:** வயோதிகம், வியாதி, மரணம் ஆகியவை மரண தேவனான யமனுடைய தூதர்கள் எனக்கூறுவது.

34. அபராந்தகத்துக்குச் சென்ற யோனராகிய தர்ம ராகித தேரர் மக்களிடையே அக்னி கண்டோபம சுத்தத்தைப் பிரசாரம் செய்தார்.

35. அங்கு கூடியிருந்த முப்பத்தேழாயிரம் பேர்களுக்கு அவர் சத்திய அமுதத்தை அருந்தக் கொடுத்தார்.

36. சத்தியம் எது? அசத்தியம் எது? என்பதை முற்றிலும் உணர்ந்த அவரிடம் ஆயிரம் ஆண்களும் அதற்கும் அதிகமான பெண்களும் உயர் குடியிலிருந்து வெளியேறி வந்து புத்த தீட்சை பெற்றனர்.

37. மகாராஷ்டிரத்துக்குச் சென்ற மகா தர்ம ராகிதர் அங்கு மக்களுக்கு மகா நாரத காச்யப ஜாதகத்தை உபதேசித்தார்.

38. எண்பத்தி நாலாயிரம் பேர் விமோசன மார்க்கத்தின் பரிசை அடைந்தனர். பதிமூவாயிரம் பேர் அவரிடம் தீட்சை பெற்றனர்.

39. யோன நாட்டுக்குச் சென்ற மகா ராகிதர் மக்களிடையே காலகாராம சித்தாந்தத்தை உபதேசம் செய்தார்.

40. நூற்றி எழுபதாயிரம் பேர் விமோசன மார்க்கத்தின் பரிசை அடைந்தனர். பத்தாயிரம் பேர் தீட்சை பெற்றனர்.

41. இமாலயப் பிரதேசத்தில் மஜிம தேரர் தர்ம சக்கரப் பவத்தன சித்தாந்தத்தை மக்களுக்கு எடுத்துக் கூறினர்.

---

**அக்னி கண்டோபம சுத்தம்:** அக்னி ஜ்வாலை உவமைக் கதை பற்றிய விளக்கம்.

**காலகாராம சித்தாந்தம்:** காலகாராமா என்ற இடத்தில் புத்தர் அருளிய உபதேசம்.

**தர்ம சக்கரப் பவத்தன சித்தாந்தம்:** தர்மச் சக்கரத்தை சுழலச் செய்வது பற்றிய உபதேசம்.



42. எண்பது கோடிப் பேர் விமோசன மார்க்கத்தின் பரிசை அடைந்தனர். மஜிம தேரருடன் நான்கு பேர் வந்திருந்தனர்.

43. இந்த ஐந்து தேரர்களும் தனித்தனியே ஐந்து நாடுகளிலுள்ள மக்களை மதம் மாறச் செய்தனர். ஒவ்வொரு நாட்டிலிருந்தும் சம்புத்தருடைய கொள்கையில் நம்பிக்கையுடையவர்களாக நூறுயிரம் பேர் தீட்சை பெற்றனர்.

44. உத்தர தேரரும் அற்புத சக்தி படைத்த சோன தேரரும் ஸ்வர்ண பூமிக்குச் சென்றனர்.

45. அப்போது அங்கு அரண்மனையில் ஆண் குழந்தை பிறந்தால் ஒரு பயங்கரமான பெண் பூதம் கடலிலிருந்து வந்து குழந்தையை விழுங்கி மறைந்து விடுவது வழக்கமாக இருந்தது.

46. தேரர்கள் வந்த சமயம் அரண்மனையில் ஓர் இளவரசன் பிறந்தான். தேரர்களைக் கண்ட மக்கள் அவர்களைப் பூதத்தின் துணைவர்களாகக் கருதினர்.

47. அவர்களைக் கொல்வதற்கு ஆயுதங்களுடன் வந்தனர். 'இதற்கு என்ன அர்த்தம்?' என்று தேரர்கள் கேட்டனர்.

48. 'நாங்கள் சாதுக்களான துறவிகள். பூதங்களுடைய துணைவர்கள் அல்ல' என்றனர். பின்பு பூதம் தன் பரிவாரங்களுடன் கடலுக்குள்ளிருந்து வெளியே வந்தது.

49. பூதத்தைக் கண்ட மக்கள் உரக்கக் கூக்குரலிட்டனர்.

50. அந்த பூத பரிவாரத்தைப் போல எண்ணிக்கையில் இரண்டு பங்கு பயங்கரமான பூதங்களைத் தேரர் சிருஷ்டித்தார். கடலிலிருந்து வந்த பூதத்தையும் அதன் பரிவாரத்தையும்

நாலாபுறமும் சூழ்ந்து கொள்ளச் செய்தார். 'இந்த நாடு இவர்கள் வசப்பட்டு விட்டதே' என்று பீதியடைந்த கடல் பூதம் ஓட்டம் பிடித்தது.

51. நாட்டைச் சுற்றி ஒரு சுவர் எழுப்பியதும் தேரர் மக்களிடையே பிரம்ம ஜால சித்தாந்தத்தை உபதேசம் செய்தார்.

52. திரிசரணங்களைத் தழுவியவர்களும் சீலத்தை சார்ந்தவர்களுமாக மக்கள் பலர் இருந்தனர். அறுபதினாயிரம் பேர் புத்த மார்க்கத்தைப் பின்பற்றினர்.

53. உயர் குடியைச் சேர்ந்த மூவாயிரத்து ஐநூறு பேர் துறவு பூண்டனர். உயர் குடிப் பெண்கள் ஆயிரத்து ஐநூறு பேர் தீட்சை பெற்றனர்.

54. இதன் பிறகு அரண்மனையில் குழந்தை பிறந்தால் அதற்கு சோனத்தரா எனப் பெயரிடுவது வழக்கம்.

55. ஏற்கனவே தாமடைந்த இன்பத்திலே செல்வதைக் கூடப் பொறுத்துக்கொண்டு அருளாளரான புத்தரும் இன்பத்தை மறுத்து நடந்து வந்தது போலவே அந்த தேரர்களும் இங்குமங்குமாகச் சென்று உலகுக்கு ஆசியை அருளினார்கள். உலகம் உய்யப் பாடுபடும் யாருக்குத் தான் அப்பணியிலே அலுப்பு ஏற்படும்?

**மகாவம்சத்தில் பனிரெண்டாம் அத்தியாயமான பல நாடுகளையும் மாற்றல் முற்றும்**

### பதிமூன்றாவது அத்தியாயம்

## மஹிந்தர் வருகை

1. உயரிய ஞானமுடையவரான மஹிந்த தேரர் துறவை மேற்கொண்டு அப்போது பனிரெண்டு வருட காலம் ஆகியிருந்தது.

2. அவருடைய குருநாதராலும், புத்த சங்கத்தினராலும் இலங்கை சென்று புத்த மார்க்கத்தைப் பரப்புமாறு இடப்பட்ட கட்டளையை ஏற்றுக் கொண்ட அவர், அதற்கான நேரத்தைப் பற்றி யோசித்தார் 'முத்த சிவனுக்கு வயதாகி விட்டது. எனவே இனி அவனுடைய மகன் அரசனாக வேண்டும்' என்று எண்ணினார்.

3. இதற்கிடையில் உறவினர்களைப் பார்க்க விரும்பிய அவர் குருவினிடமும், சங்கத்தினரிடமும் விடைபெற்றுக் கொண்டு அரசனிடம் சென்றார்.

4. அரசனிடம் விடைபெற்றதும் தம்முடன் நான்கு தேரர்களையும் சங்கமித்திரையுடைய மகனையும் ஆறு அமானுஷ்ய சக்தி படைத்த சுமணனையும் அழைத்துக் கொண்டார்.

5. பிறகு தக்ஷிணகிரிக்குத் தம் உறவினர்களிடம் உபதேச ஒளியை அளிக்கச் சென்றார். இவற்றையெல்லாம் செய்வதற்குள் ஆறு மாதங்கள் கடந்து விட்டன.

6. தாய் தேவியுடைய ஊரான வேதீசகிரிக்கு வந்து தமது தாயாரைச் சந்தித்தார்.

**வேதீசகிரி:** இப்போது குவாலியரில் உள்ள பில்ஸா. போபாலுக்கு வடகிழக்கே 26 மைலில் உள்ளது.

**தக்ஷிணகிரி:** உஜ்ஜயினியில் உள்ள ஒரு விகாரை.

7. தேவி, தன் அருமைக் குமாரனைக் கண்டதும் அவனையும் உடன் வந்தவர்களையும் வரவேற்று உபசரித்தாள். தானே சமைத்து உணவு படைத்தாள். அழகிய வேதீசகிரி விகாரை வரையிலும் உடன் வந்தாள்.

8. தந்தையினால் அளிக்கப்பட்ட அவந்திநாடு அசோகனுடைய ஆட்சியில் இருந்தபோது ஒரு முறை அசோகன் வேதீச நகரில் தங்கினான்.

9. உஜ்ஜயினிக்கு வரும் முன்பு நடந்தது இது. அங்கு தேவி எனப் பெயருடைய அழகிய யுவதியை சந்தித்தான்.

10. அவள் ஒரு வணிகருடைய மகள். அவளை அசோகன் மணந்து கொண்டான். பின்பு அவனிடம் அவளுக்குக் குழந்தை உண்டாயிற்று.

11. உஜ்ஜயினியில் மஹிந்தன் என்னும் அழகிய ஆண் மகவைப் பெற்றாள். இரண்டு வருடங்களுக்குப் பின்பு சங்கமித்திரை என்னும் பெண்ணைப் பெற்றாள்.

12. அச்சமயம் (மஹிந்தர் வந்த போது) அவள் வேதீசபுரியில் வசித்து வந்தாள். அங்கு வந்த தேரர் உரிய நேரம் வந்து விட்டது என்பதை உணர்ந்தார்.

13. 'என் தந்தையின் ஆணைப்படி நடக்கும் மகத்தான பட்டாபிஷேக வைபவத்தில் மாமன்னன் தேவனும்பிரிய தீசன் பங்கு கொள்வான். மும்மணிகளின் மதிப்பை அவன் அப்போது தூதுவர்கள் சொல்லக் கேட்டு உணர்வான்.



14. 'ஆனி மாதம் உபோசத தினத்தில் மிசாக மலையில் ஏறுவான். அதே நாளில் அழகிய இலங்கைத் தீவுக்கு நாம் செல்வோம்' என்று எண்ணினர்.

15. இந்திரன், மிகச் சிறந்தவரான மஹிந்த தேரரிடம் வந்து 'இலங்கையை மாற்றப் புறப்படுங்கள். சம்புத்தராலும் இது ஏற்கனவே உங்களுக்கு சொல்லப்பட்டிருக்கும்.

16. 'அங்கு உங்களுக்கு உதவுபவர்கள் நாங்களாக இருப்போம்' என்றான். தேவியின் சகோதரி மகளுக்கு பந்தூகன் என்றொரு மகன் இருந்தான்.

17. தேரர், தேவிக்கு புத்த தர்மத்தைப் போதிப்பதைக் கேட்ட அவனும், மீண்டும் பிறவியிலே திரும்பி வராத ஒப்பற்ற ஒரு பரிசை அடைந்தவனுமான அவனும் தேரருடன் அப்போது வந்திருந்தான்.

18. அங்கு ஒரு மாத காலம் தங்கியதும் தேரர் ஆனி மாதம் உபோசத தினத்தில் நான்கு தேரர்களுடனும் சுமணனுடனும், பாமர சீடனை பந்தூகனுடனும்,

19. மனிதர்களுக்கு அவர்களைப் பற்றித் தெரிய வேண்டுமென்பதற்காக வானில் எழுந்தவர்களாக அந்த விகாரையிலிருந்து கிளம்பினர்.

20. அதிசய சக்தி படைத்த அந்த தேரர் தமது துணைவர்களுடன் மனதுக்கு ரம்ய மூட்டும் மிசாக மலையில் சீல சிகரத்தில் அம்பத்தலம் என்ற அழகிய வெளியில் வந்து இறங்கினர்.

---

**மிசாக மலை:** இப்போது மிஹிந்தலை எனப்படுகிறது.

**சீல கூடம்:** மிஹிந்தலை மலையின் வடகோடியில் உள்ள சிகரம். இதற்குக் கீழே அம்பத்தலா உள்ளது. இப்போது இங்கு ஒரு கோயில் உள்ளது.

21. மரண சமயத்தில், மாமுனிவரால் இலங்கையில் உள்ளவர்களை மதம் மாற்றி விமோசனம் அளிப்பார் என்று முன்கூட்டியே சொல்லப்பட்டவர், இலங்கையின் விமோசனத்துக்கு பகவரைப்போலவே அங்கு வந்து அந்த இடத்திலே இலங்கையின் தேவதைகளால் போற்றப்பட்டவராக வந்து இறங்கினர்.

**மகாவம்சத்தில் பதிமூன்ருவது அத்தியாயமான மஹிந்தர் வருகை முற்றும்**

**பதினுன்காவது அத்தியாயம்**

# தலைநகர் புகுதல்

1. தலைநகரில் வசிப்பவர்களுக்கு நீர்விழா நடத்த ஏற்பாடு செய்த தேவனம்பிரிய தீசன் வேட்டையாடுவதில் உள்ள இன்பத்தை அனுபவிக்கப் புறப்பட்டான்.

2. நாற்பதாயிரம் பேர்களுடன் அவன் மிசாக மலை அடிவாரத்தை அடைந்தான்.

3. தேரர்களை அவனுக்குக் காட்ட விரும்பிய மலை தேவன் மான் உருக்கொண்டு புதரில் நின்று கொண்டிருந்தான்.

4. சாதுவான இப்பிராணியைக் கொல்வது சரி அல்ல என்றெண்ணிய அரசன், வில்லின் நாணை இழுத்து ஒலியெழுப்பினன். மான் மலையை நோக்கி ஓடியது.

5. அரசன் அதனைத் துரத்திச் சென்ருன். மான் தேரர்கள் அருகில் ஓடி வந்து சேர்ந்தது. அரசனுடைய பார்வைக்குள் தேரர் வந்ததும் மான் மறைந்து விட்டது.

6. 'பல பேரைப் பார்த்தால் பயந்து போய் விடுவான்' என்றெண்ணிய தேரர், தன்னை மட்டுமே அவன் காணுமாறு செய்தார். அரசன் அவரைப் பார்த்ததும் பீதியினல் அசைவற்றுப் போனன்.

7. 'தீசா! இங்கு வா!' என்று தேரர் அவனை அழைத்தார். தன்னைப் பெயர் சொல்லி

அழைத்தவுடனே 'அவர் ஒரு யக்ஷனாக இருக்க வேண்டும்' என்று அரசன் நினைத்தான்.

8. 'நாங்கள் சமணர்கள். மாமன்னரே! சத்திய வேந்தரின் சீடர்கள் நாங்கள். உம்மிடம் இரக்கம் கொண்டு ஜம்புத்வீபத்திலிருந்து இங்கு வந்தோம்' என்றார் தேரர்.

9. இதைக் கேட்டதும் அரசனுடைய பயம் நீங்கியது. தன் நண்பர் சொலலி யனுப்பிய செய்தியை அவன் நினைவு படுத்திக் கொண்டு,

10. இவர்கள் சமணர்கள் என்று தெளிவு பெற்று, வில்லையும் அம்பையும் கீழே வைத்துவிட்டு தேரரிடம் சென்று அவரை வணங்கி அருகில் அமர்ந்தான்.

11. அவருடன் வந்தவர்கள் இதற்குள் அங்கு வந்து சூழ்ந்து கொண்டனர். மற்றவர்களும் அரசனுடைய கண்ணுக்குப் புலனாகுமாறு தேரர் செய்தார்.

12. அரசன் அவர்களைக் கண்டதும் 'இவர்கள் எப்போது இங்கு வந்தார்கள்?' என்று கேட்டான். 'என்னுடன்தான் வந்தார்கள்' என்று தேரர் பதிலளித்தார்.

13. ஜம்புத்வீபத்தில் இவர்களைப்போல் பேறு பல துறவிகள் இருக்கிறார்களா?' என்று அரசன் கேட்டான். 'ஜம்புத்வீபம் மஞ்சள் உடைகளால் பொலிவு பெற்றுத் திகழ்கிறது.

14. 'மூன்று வேதங்களையும் கற்று அற்புத சக்தி பெற்ற அரகந்தர்கள் தொகை மிகப் பெரியது. மற்றவர் எண்ணங்களையும் அறியக்கூடியவர்கள் அவர்கள். தெய்வீகக் காது படைத்தவர்கள். புத்தருடைய சீடர்கள்' என்றார் தேரர்.



15. 'எந்த வழியாக நீங்கள் வந்தீர்கள்?' என்று அரசன் கேட்டான். 'நிலத்தின் வழியாகவோ, நீரின் வழியாகவோ நாங்கள் வரவில்லை' என்று தேரர் பதிலளித்தார். ஆகாயமார்க்கமாக வந்தனர் என்பதை இதிலிருந்து அரசன் புரிந்து கொண்டான்.

16. அரசனைச் சோதிப்பதற்காக தேரர் அவனை சூட்சுமமான கேள்வி கேட்டார். கேட்கக் கேட்க பல கேள்விகளுக்கும் அவன் பதிலளித்தான்.

17. 'அரசே! இந்த மரத்தின் பெயர் என்ன?'
'இந்த மரத்துக்கு மாமரம் என்று பெயர்'
'இதன்றியும் வேறு மாமரம் உள்ளதா?'
'பல மாமரங்கள் உள்ளன.'

18. 'இந்த மாமரமும் மற்றைய மாமரங்களும் அல்லாமல் வேறு மரங்களும் உள்ளனவா ?' 'பல மரங்கள் உள்ளன. ஆனால் அவை மாமரங்களல்லாத மற்ற மரங்கள்.

19. 'மற்ற மாமரங்கள் அல்லாமலும், மாமரங்களல்லாத பிற மரங்களல்லாமலும் வேறு மரங்களும் உள்ளனவோ?' 'இந்த மாமரம் இருக்கிறது' 'மக்களை ஆள்பவனே! உனக்கு நுண்ணறிவு இருக்கிறது!

20. 'அரசனே! உனக்கு உறவினர்கள் உண்டா?' 'அவர்கள் பலபேர்' 'உன்னுடைய உறவினர்கள் அல்லாதவர்களும் சிலர் இருக்கிறார்கள் அல்லவா?' 'என் உறவினர்களைவிட இவர்கள் அதிகமாக இருக்கிறார்கள்!

21. 'உறவினர்களும் மற்றவர்களும் தவிர வேறு யாரேனும் உண்டா' 'நான் இருக்கிறேன்'— 'நன்று! மனிதரை ஆள்பவனே! நுண்ணறிவு உனக்கு இருக்கிறது'

22. 'கூரிய மதியுடையவன் அவன் என்பதைத் தெரிந்து கொண்ட தேரர் அரசனுக்கு குலகதி பதூபம சித்தாந்தத்தை உபதேசித்தார்.

23. உபதேசத்தின் முடிவில் அவனும் அவனுடன் வந்த நாற்பதாயிரம் பேரும் மும்மணிகளை சரணடைந்தனர்.

24. மாலையில் அரசனுக்குரிய உணவுகளைக் கொண்டு வந்தனர். அப்போது பிக்குகள் சாப்பிடமாட்டார்கள் என்பதை அரசன் அறிந்திருந்த போதிலும்,

25. கேட்பதுதான் மரியாதை என்றெண்ணியவனாக உணவு கொள்ள அவர்களை அழைத்தான். 'நாங்கள் இபபோது சாப்பிடுவதில்லை' என்று அவர்கள் தெரிவித்த போது 'உணவு நேரம் எப்போது?' என்று அவன் கேட்டான்.

26. அவர்கள் நேரத்தைச் சொன்னார்கள். 'நகருக்குள் போகலாமா?' என்று அவர்களை அழைத்தான் அரசன். 'மாமன்னா! நீ போ. நாங்கள் இங்கேயே தங்குகிறோம்' என்றனர்.

27. 'அப்படியானால் இந்த இளைஞராவது எங்களுடன் வரட்டும்' என்றான் அரசன். 'இந்த இளைஞன் மனப்பக்குவமடைந்து தீட்சை பெறுவதற்காகக் காத்திருக்கிறான்.

28. 'எனவே எங்களுடன்தான் இருக்க வேண்டும். இப்போது அவனுக்கு தீட்சை செய்துவைக்கப் போகிறோம். அரசனே! நீ போ!' என்றனர்.

29. 'நாளை ரதம் அனுப்புகிறேன். அதில் ஏறி நகரத்துக்கு வாருங்கள்' என்று கூறி அரசன் தேரர்களிடம் விடைபெற்றுக் கொண்டான் பிறகு

**குலகதி பதூபம :** யானையின் காலடிச்சுவடு உதாரணம் பற்றிய உபந்நியாசம்.



பந்தூகனை தனியே அழைத்து தேரர்கள் வந்த நோக்கத்தைப் பற்றிக் கேட்டான்.

30. அவன் அரசனுக்கு எல்லாவற்றையும் கூறினான். அரசன் தேரருடைய பெயரைக் கேட்டதும் பெருமகிழ்வடைந்தான். 'இது என் பாக்கியம்' என்று எண்ணினான்.

31. பந்தூகன் சொன்ன விவரங்களிலிருந்து இவர்களும் மனிதர்கள்தான் என்பதை அறிந்ததும் அரசனுடைய பயம் யாவும் அகன்றது.

32. 'இவனுக்கு தீட்சை செய்துவைப்போம்' என்று கூறித் தேரர் பந்தூகனுக்கு அந்த கிராமத்தின் எல்லைக்குள்ளாகவே அந்த பிக்குகளின் கூட்டத்துக்குள்ளாகவே புத்த தீட்சையும் உபசம்பத தீட்சையும் செய்து வைத்தனர்.

33. அதே நேரத்தில் அவனும் அரஹந்த நிலையை அடைந்தான்.

34. 'தர்மத்தைப் பிரசாரம் செய்ய நேரத்தை அறிவி' என்று தேரர் சமனேர சுமணனுக்குக் கட்டளையிட்டார். 'நான் நேரத்தை அறிவிக்கும் போது அது எவ்வளவு தூரம் கேட்கும்படிச் செய்ய வேண்டும்?' என்று அவன் கேட்டான்.

35. 'தம்மபாணி முழுவதும்' என்று தேரர் பதிலளித்தார். தன்னுடைய அதிசய சக்தியின் மூலம் இலங்கை முழுவதும் கேட்கும்படியாக அவன் தர்மப் பிரசார நேரத்தை அறிவித்தான்.

36. நாக சதுக்கத்தில் ஒரு பாறை மீதமர்ந்து தன் உணவை அருந்திக் கொண்டிருந்த அரசன் உரத்த இந்த அழைப்பைக் கேட்டான்.

37. 'ஏதாவது கஷ்டம் நேர்ந்ததா?' என்று தேரரிடம் கேட்டுவர ஆளை அனுப்பினான். 'கஷ்டம்

எதுவும் நேரவில்லை. சம்புத்தருடைய போதனை களைக் கேட்பதற்காக இந்த நேரம் அறிவிக்கப் பட்டது' என்று தேரர் பதிலளித்தார்.

38. இந்த அழைப்பைக் கேட்ட பூமி தேவர்கள் அதனை எதிரொலி செய்தனர். இதன் மூலம் அது படிப்படியாக பிரம்ம சொர்க்கத்தை எட்டியது.

39. இந்த அழைப்பின் காரணமாக ஏராளமான தேவர்கள் வந்து கூடினர். தேரர் அந்தக் கூட்டத்துக்கு சமசித்த சுத்தத்தை உபதேசம் செய்தார்.

40. எண்ணற்ற தேவர்கள் கொள்கைக்கு மாற்றப் பட்டனர். பல நாகர்களும், சுபாணர்களும் திரிசரணத்தை மேற்கொண்டனர்.

41. சாரிபுத்ரர் இதைச் சொன்ன போது தேவர் கள் கூடியது போலவே இப்போது மஹிந்தரி டமிருந்து அதைக் கேட்கவும் கூடினர்.

42. மறுநாள் அரசன் ஒரு ரதத்தை அனுப்பினன். 'ரதத்தில் ஏறிக் கொள்ளுங்கள். நகரத்துக் குப் போகலாம்' என்று சாரதி சொன்னன்.

43. 'நாங்கள் வாகனத்தில் ஏறுவது இல்லை. நீ போ. நாங்கள் தொடர்ந்து வருகிறோம்' என்று கூறி புனித விருப்பங்கள் நிறைந்த அவர்கள் சாரதியை அனுப்பி விட்டனர்.

44. ஆகாயத்திலே எழுந்த அவர்கள் தாங்கள் அற்புத சக்தியால் நகரின் கிழக்குப் பகுதியில் வந்து இறங்கினர். இங்குதான் முதல் ஸ்தூபம் பின்னல் கட்டப்பட்டது.

45. அதன்பிறகு இன்று வரை, தேரர்கள் முதலில் இறங்கிய இடத்தில் கட்டப்பட்ட சேதியத் துக்கு பிரதம சேதியம் என்று பெயர்.



46. அரசனிடமிருந்து தேரர்களுடைய பெருமை களைப் பற்றி அறிந்த அரண்மனைப் பெண்கள் அவர்களைப் பார்க்க விரும்பினர்கள்.

47. அதற்காக அரண்மனைக்குள் ஒரு தனி மாடத்தை அரசன் அமைத்தான். வெள்ளைத் துணிகளாலும் மலர்களாலும் மூடப்பட்டிருந்த அது அழகாக அலங்கரிக்கப்பட்டிருந்தது.

48. உயரமான ஆசனத்தில் உட்காருவது இல்லை என்று தேரர்களிடமிருந்து கேட்டிருந்த அவன் அதுபற்றிச் சந்தேகத்துடன் யோசித்தான். உண்மையாகவே தேரர் உயரமான ஆசனத் தில் அமர்வாரா என்று சிந்தித்தான்.

49. இதற்குள், அங்கு தங்கள் உடைகளுடன் வந்து நின்று கொண்டிருந்த தேரர்களைப் பார்த்து வியந்த ரத சாரதி நடந்ததை அரசனிடம் சொன்னன்.

50. இதையெல்லாம் கேட்டறிந்த அரசனுக்கு அவர் கள் உயரமாகவுள்ள ஆசனத்தில் அமரமாட் டார்கள் என்பது தெளிவாயிற்று.

51. மிகவும் சிறந்த கம்பளங்களைத் தரையில் விரிக்குமாறு கூறிவிட்டு அரசன் தேரர்களை சந்திக்கச் சென்றான். அவர்களைப் பணிவுடன் வரவேற்றான்.

52. மஹிந்த தேரருடைய கையிலிருந்த பிட்சா பாத்திரத்தைத் தான் வாங்கிக்கொண்டு, உப சரித்து வரவேற்றுப் போற்றும் முறைப்படி அவர்களுக்கு வழிகாட்டி, நகரத்துக்குள் அழைத்து வந்தான்.

53. ஆசனங்கள் தயாராவதைப் பார்த்த நிமித்திகர் கள் 'பூமி இவர்களால் நிறைந்திருக்கிறது. இத்தீவில் இவர்கள் எஜமானர்கள் ஆவார்கள்' என்று கூறினர்.

54. உரிய மரியாதை காட்டி அரசன் தேரர்களை அரண்மனைக்குள் அழைத்து வந்தான். அங்கு அவரவர்கள் தகுதிக்கு உரிய இடத்தில் அமர்ந்தனர்.

55. அரசன் தானே அவர்களுக்கு கஞ்சியும், மெல்லுணவும், வல்லுணவும் அளித்தான். உணவு முடிந்ததும் அவன் அவர்களுடைய காலடியில் அமர்ந்து கொண்டு அனுலாவுக்கு சொல்லி அனுப்பினான்.

56. அனுலா அரசனுடைய தம்பியும், உபராஜனுமான மகா நாகனுடைய மனைவியாவாள். அவள் அரண்மனையிலேயே வசித்தாள்.

57. ஐநூறு பெண்களுடன் ராணி அனுலா வந்து தேரர்களை தாழ்ந்து வணங்கிக் காணிக்கை சமர்ப்பித்துவிட்டு ஒருபுறம் ஒதுங்கி நின்றாள்.

58. தேரர் பீடவத்து, விமானவத்து, சக்க சம்யுக்தம் ஆகியவற்றை உபதேசம் செய்தார். அதைக் கேட்ட பெண்கள் புனிதமடைவதற்கான முதல்நிலையை அடைந்தனர்.

59. நகரிலுள்ள அநேக மக்கள் முன் தினம் தேரர்களைப் பார்த்தவர்களிடமிருந்து அவர்களுடைய பெருமைகளை அறிந்தனர்.

60. அவர்கள் தாமும் தேரர்களைப் பார்க்க விரும்பியவர்களாக, ஏராளமாக அரண்மனை வாயிலில் வந்து ஒன்றுகூடி, பெரிய ஆரவாரம் செய்தனர். அதைக் கேட்ட அரசன் விசாரித்து,

**பீடவத்து - விமான வத்து :** இவை இரண்டும் சுத்த பிடகத்திலுள்ள குத்தக நிகாயத்தின் பகுதிகள். செய்த பாவங்களுக்குத் தண்டனையாகப் பேய் உலகில் வாழும் பேய்களைப் பற்றிய கதைகளைக் கூறுவது பீடவத்து. புண்ணியம் செய்தவர்களுடைய ஆவிகள் வாழும் அற்புத மாளிகையைப் பற்றிய வர்ணனை அடங்கியது விமானவத்து.



அது எதனால் ஏற்பட்டது என்று சொல்லப்பட்டதும், அவர்களுடைய நன்மையையும் நினைவு கூர்ந்தவனாகச் சொல்வான் :

61. 'இங்கோ அவர்கள் எல்லோருக்கும் போதிய இடம் இல்லை. பட்டத்துயானை கட்டுமிடத்தை சுத்தப்படுத்துங்கள. அங்கு நகர மக்கள் தேரர்களைத் தரிசிக்கலாம்!'

62. யானை கட்டுமிடம் சுத்தப் படுத்தப்பட்டது. விரைவில் அதனைத் தோரணங்களாலும் மற்றும் பலவாறாகவும் அலங்கரித்து, தேரர்களுக்கான, அவர்கள் தகுதிக்கேற்ற ஆசனங்களும் தயார் செய்யப்பட்டன.

63. மகா தேரர், மற்ற தேரர்களுடன் அங்கு சென்றார். அங்கு ஆசனத்தில் அமர்ந்து கொண்டதும், புகழ் பெற்ற உபதேசகரான அவர் தேவதூத சித்தாந்தத்தை உபதேசித்தார்.

64. ஒன்று கூடியிருந்த நகர மக்கள் அதைக் கேட்டதும் நம்பிக்கையால் மனம் நிறைந்தவர்களானார்கள். அவர்களில் ஆயிரம் பேர் புனிதம் பெறுவதற்கான முதல் நிலையை அடைந்தனர்.

65. இவ்வாறாக இலங்கைத் தீவில் இணையற்ற தேரர், குருநாதரைப் போல இலங்கையைக் காப்பதற்காக உண்மையான தர்மத்தை இரண்டு இடங்களில் அத்தீவின் மொழியிலேயே உபதேசித்தார். இந்த விதமாக உண்மையான மார்க்கம் அங்கு நிலைபெறச் செய்தார்.

**மகாவம்சத்தில் பதினான்காவது அத்தியாயமான**
**தலைநகர் புகுதல் முற்றும்**

பதினைந்தாவது அத்தியாயம்

## மகா விகாரை

1. யானை கட்டும் இடமும் கூட மிகவும் சிறியதாக இருந்ததை அவர்கள் கண்டார்கள். பக்தி நிறைந்தவர்களான மக்கள் தேரர்களுக்கு தெற்கு வாசலுக்கு வெளியே இருக்கைகளை அமைத்தனர்.

2. அடர்ந்த நிழலும், குளிர்ச்சியும், பசுமையும் நிறைந்த அரசனுக்குரிய பூங்காவான, இனிதான நந்தனத் தோட்டத்தில் ஆசனங்களை அமைத்தனர்.

3. தேரர் தெற்கு வாசல் வழியே சென்று அங்கு அமர்ந்து கொண்டார். உயர் குடும்பப் பெண்கள் ஏராளமானபேர் வந்திருந்தனர்.

4. அவர்கள் தேரருடைய காலடியில் தோட்டம் நிறைய அமர்ந்திருந்தார்கள்.

5. அவர்களுக்குத் தேரர் பால பண்டித சித்தாந்தத்தை உபதேசித்தார். ஆயிரம் பெண்கள் விமோசனத்திற்கான முதல் படியை அடைந்தனர். சோலையில் அவர்கள் இருந்தபோது மாலை வந்தது.

6. அதன் பேரில், 'நாங்கள் இனி மலைக்குப் போகிறோம்' என்று தேரர்கள் புறப்பட்டனர். அவர்கள் அரசனிடம் இதைச் சொன்னார்கள். அரசன் அங்கு விரைந்து வந்தான்.

7. தேரரை அணுகி, 'பொழுது சாய்ந்து விட்டது. மலையோ வெகு தூரத்தில் உள்ளது. இங்கேயே நந்தன வனத்தில் தங்கி ஓய்வு



கொள்வதற்கு அருமையான இடம் இருக்கிறது' என்றான்.

8. 'நகரத்துக்கு வெகு அருகில் இருப்பதால் அது நாங்கள் தங்குவதற்கு ஏற்ற இடம் அல்ல' என்று தேரர் பதிலளித்தார். உடனே அரசன் 'மகா மேக வனம் அதிக தூரத்திலும் இல்லை; சமிபத்திலும் இல்லை. அருமையான இடம்,

9. 'நீரும் நிழலும் நிறைய அங்கு உண்டு. அங்கு தங்குவது உங்களுக்குப் பிடிக்கலாமே. தாங்கள் திரும்பிச் செல்ல வேண்டும்' என்றான். தேரர் திரும்பினார்.

10. கடம்ப நதியருகில் அவர் திரும்பிய இடத்தில் பின்னால் கட்டப்பட்ட சேதியத்துக்கு, அதனாலேயே நிவத்த சேதியம் என்ற பெயர் ஏற்பட்டது.

11. நந்தன வனத்திலிருந்து தென்புறமாக ரதாதிபதியான அரசன் தானே கிழக்கு வாசலில் இருந்த மகா மேக வனத்துக்குத் தேரர்களை அழைத்துச் சென்றான்.

12. அரசர்கள் தங்க ஏற்ற அந்த இனிதான இடத்தில் பொருத்தமான முறையில் அவர்களுக்கு அருமையான படுக்கை, இருக்கை வசதிகளை செய்து கொடுக்க ஏற்பாடு செய்து, 'இங்கு வசதியாக இருங்கள்' என்று கூறி அரசன் தேரர்களிடமிருந்து விடை பெற்று,

13. பின்னர் மந்திரிகள் புடை சூழ நகரத்துக்குத் திரும்பினான். தேரர்கள் இரவு அந்த இடத்திலேயே தங்கினர்.

14. பொழுது விடிந்ததும் நாடாளும் அரசன் மலர்களுடன் தேரர்களைக் காணப் புறப்பட்

டான். அவர்களைக் கண்டு மலர்களைச் சமர்ப்பித்து வணங்கினன்.

15. 'ஓய்வு வசதியாக இருந்ததா? தோட்டம் தங்களுக்கு ஏற்ற இடமாக இருந்ததா?' என்று கேட்டான், 'அரசனே! துறவிகளுக்கு ஏற்ற இடம் இத்தோட்டம். அமைதியாக ஓய்வெடுத்தோம்!' என்றார் தேரர்.

16. 'சங்கத்தவர்களுக்கு ஆராமம் அனுமதிக்கப்பட்டு இருக்கிறதா?' என்று அரசன் கேட்டான். பிக்குகளுக்கு எது அனுமதிக்கப்பட்டுள்ளது, எது அனுமதிக்கப்படவில்லை என்பதை நன்குணர்ந்த தேரர், 'அது அனுமதிக்கப்பட்டதே' என்று பதிலளித்தார்.

17. புத்தர் வேணுவன ராமாவை ஏற்றுக் கொண்டதை அவர் எடுத்துச் சொன்னர். இதைக் கேட்ட அரசன் பெரிதும் மனம் பூரித்தான். அங்கிருந்த மற்றவர்களும் பெரிதும் மகிழ்வடைந்தனர்.

18. ஐநூறு பெண்களுடன் தேரரை வணங்க வந்திருந்த ராணி அனுலா விமோசனமடைவதற்கான இரண்டாவது நிலையை அடைந்திருந்தாள்.

19. 'அரசே! நாங்கள் தீட்சை பெற விரும்புகிறோம்' என்று ராணி அனுலா தன்னுடனிருந்த ஐநூறு பெண்களுடனும் அரசனிடம் கூறினள்.

20. 'இவர்களுக்குத் தீட்சை செய்து வையுங்கள்' என்று அரசன் தேரரைக் கேட்டுக் கொண்டான். 'மாமன்ன! பெண்களுக்குத் தீட்சை செய்து வைக்க எங்களுக்கு அனுமதி கிடையாது' என்று தேரர் பதிலளித்தார்.



21. 'பாடலிபுத்ரத்தில் என்னுடைய தங்கை சங்கமித்திரை என்ற பெயருடைய தேரி இருக்கிருள். அனுபவத்தில் முதிர்ந்தவள் அவள்.

22. 'புத்தர் ஞானம் பெற்ற புனிதபோதி மரத்தின் தென்பகுதிக் கிளையுடன் அவள் இங்கே வருவாள். புனிதத்தால் புகழ்பெற்ற பிக்குணிகளும் உடன் வருவார்கள்.

23. 'இதைக் குறித்து என்னுடைய தந்தையாகிய அரசனுக்குச் செய்தி அனுப்புக. அந்தத் தேரி இங்கு வந்ததும் இந்தப் பெண்களுக்குத் தீட்சை செய்து வைப்பாள்' என்றார்.

24. 'அதுதான் நல்லது' என்ருன் அரசன். பின்பு அழகிய கலசத்தில் நீரை யெடுத்து மஹிந்த தேரருடைய கையில் ஊற்றி தாரை வார்த்துக் கொடுத்தான்.

25. 'இந்த மகாமேக வனத்தை பிக்கு சங்கத்துக்கு அளிக்கிறேன்' என்று அவன் சொன்னன். தாரை வார்த்த நீர் தரையில் விழுந்தபோது பூமி அதிர்ந்தது.

26. புவியின் காவலன் தேரரிடம், 'ஏன் இப்படி பூமி அதிர்கிறது?' என்று கேட்டான். 'தீவில் இப்போதுமுதல் தர்மம் வேரூன்றிவிட்டது. அதனல்' என்று தேரர் பதிலளித்தார்.

27. உயர் குடியினனை மன்னன் மல்லிகை மலர்களைத் தேரருக்கு வழங்கினன். தேரர் எட்டு முறை கை நிறைய மலரை எடுத்து அதன் தென்புறமிருந்த பிகுல மரத்தைச் சுற்றித் தூவினர்.

28. அப்போது மீண்டும் பூமி அதிர்ந்தது. இதற்குக் காரணம் என்னவென்று அரசன் கேட்டான்.

29. 'ஏற்கனவே மூன்று புத்தர்களின் வாழ்நாளில் இங்கே பிக்குகளின் கடமையைச் செய்வதற்காக ஒரு மாலகம் இருந்தது. இப்போது அது மீண்டும் ஒரு முறை ஏற்படும்' என்று தேரர் பதிலளித்தார்.

30. அங்கிருந்து வடக்குப் புறம் சென்று அழகிய ஸ்னனத் தடாகத்தை அடைந்தார். அங்கும் அதே போல் மலர்களைத் தூவினர்.

31. மீண்டும் பூமி அதிர்ந்தது. அரசன் காரணம் கேட்டான். வெந்நீர் ஸ்னன வசதியுடன் கூடிய தடாகமாக இது இருக்கும்' என்று தேரர் பதிலளித்தார்.

32. பிறகு தேரர் அந்த அரசனுடைய மாளிகை வாயிலுக்குச் சென்று அந்த இடத்தில் எட்டு முறை மலர்களைத் தூவி வணங்கினர்.

33. இங்கும் பூமி மீண்டும் அதிர்ந்தது. மகிழ்வினல் பூரித்த மன்னன் காரணம் கேட்டான். தேரர் சொன்னர்:

34. 'நம் காலத்தில் மூன்று புத்தர்களுடைய போதி மரக்கிளையின் தென் பகுதி இங்கு கொண்டு வரப்பட்ட போது இந்த இடத்தில் தான் நடப்பட்டது.

35. 'அரசனே! அதேபோல் நமது ததாகதருடைய போதி விருட்சத்தின் தென் கிளையும் அவற்

**மாலகம்:** புனிதமான சடங்குகள் செய்யப்படுவதற்காக உள்ள குறிப்பிடப்பட்ட இடம்:

**மூன்று புத்தர்கள்:** சரித்திர கால புத்தருக்கு முன்பு இந்த யுகத்தில் காகசந்தர், கோநாகமனர். காச்யபர் ஆகிய மூன்று புத்தர்கள் இருந்தனராம். கௌதம புத்தரைப் போலவே இவர்களும் இலங்கைக்கு விஜயம் செய்தனர். ஒரே மாதிரி நிகழ்ச்சிகள் ஒவ்வொரு தடவையும் நடந்தன என்பது புராணம்.



றைப் போலவே இதே இடத்தில் இடம் பெறும்' என்றார்.

36. பின்பு தேரர் மகா முகால மாலகத்துக்குச் சென்றுஅங்கும் மலர்களைத் தூவிஅர்ச்சித்தார்.

37. இப்போது மீண்டும் பூமி அதிர்ந்தது. காரணம் கேட்ட அரசனிடம் தேரர் சொன்னர்: 'பிக்குகளின் உபோசத மண்டபம் இங்கு இருக்கும்.'

38. பிறகு தேரர் பனம்ப மாலகத்துக்குச் சென்றார். அருமையான வாசமும், நிறமும், மணமும், ருசியும் உள்ள பெரிய மாம்பழம் ஒன்றைத் தோட்டக்காரன் அரசனிடம் கொடுத்தான்.

39. அற்புதமான அக் கனியை அரசன் தேரரிடம் கொடுத்தான்.

40. மனித குலத்துக்கு நன்மை செய்யும் தேரர் தாம் ஓய்வுகொள்ள விரும்புவதாக அரசனிடம் கூறினர். அவன் உடனே அருமையான கம்பளம் விரித்து அமர ஏற்பாடு செய்தான்.

41. தேரர் அமர்ந்ததும் அரசன் மாங்கனியை அவருக்கு அளித்தான். தேரர் மாம்பழத்தைத் தின்றுவிட்டுக் கொட்டையை அரசனிடம் கொடுத்து அதை நடச் சொன்னர்.

42. தன் கையாலேயே அரசன் அதை அங்கு நட்டான். அது வளர்வதற்காக அந்த இடத்தில் தேரர் தம் கையைக் கழுவினர்.

43. அதே விநாடியில் கொட்டையிலிருந்து முளை வெளிப்பட்டு செடி முளைத்தது. கொஞ்சங் கொஞ்சமாக அது வளர்ந்து, இலைகளும் கனிகளும் நிரம்பிய பெரிய மரமாயிற்று.

44. அரசனுடன் அங்கு இருந்தவர்கள் இந்த அதிசயத்தைப் பார்த்தனர். தேரருக்கு வணங்கிய

வாறே அங்கு அவர்கள் நின்றிருந்தனர். வியப்பினால் அவர்களுடைய ரோமம் குத்திட்டு நின்றது.

45. இப்போது தேரர் அங்கு எட்டு முறை கை நிறைய மலர்களை எடுத்துத் தூவினர். மீண்டும் பூமி அதிர்ந்தது. காரணம் கேட்டதற்கு அவர் சொன்னர் :

46. 'இங்கு கூட்டப்படும் பிக்குகளுக்குப் பல பரிசுகள் வழங்கப்படப்போகும் இடமாக இது இருக்கும்.'

47. பின்பு சதுஸ் சாலா ஏற்பட்ட இடத்துக்குச் சென்றார். அங்கும் மலர்களைத் தூவினர். அதன்பின் மீண்டும் பூமி அதிர்ந்தது.

48. பூமி அதிர்ந்ததற்கு அரசன் காரணம் கேட்டதற்குத் தேரர் பதிலளித்தார் :

49. 'முந்திய மூன்று புத்தர்களுக்கும் இந்த இடத்தில் அரண்மனைப் பூங்கா பரிசாக வழங்கப்பட்டபோது அதை அவர்கள் ஏற்றுக்கொண்டனர். இத் தீவில் எவ்விடத்தும் வாழ்பவர்கள் கொணர்கின்ற பரிசுகளை எல்லாம் அருள் பெற்ற மூவரும், அவருடைய சங்கத்தாரும் ஏற்றுக் கொண்டனர்.

50. 'இப்போது மீண்டும் இந்த இடத்தில் சதுஸ் சாலா ஏற்படும். பிக்குகளின் உணவு மண்டபம் இங்கு இருக்கும்.'

51. அங்கிருந்து தீவின் நண்பரான மஹிந்த தேரர்—எது உகந்த இடம், எது பொருந்தா இடம், என்பதை யறிந்த மகான், பின்னை

சதுஸ்சாலா : நீண்ட சதுர அறை. பிக்குகள் உணவருந்தப் பயன்படும் இடம்.



மகாஸ்தூபம் ஏற்பட்ட இடத்துக்குச் சென்றார்.

52. அப்போது அரண்மனைப் பூங்காவுக்குள் காகுத தடாகம் என்ற சிறிய தடாகம் ஒன்று இருந்தது. அதன் மேல்கரையில்,

53. கரையை ஒட்டினாற்போல் இருந்த இடம் ஸ்தூபம் எழுப்ப ஏற்ற சமதளமாக இருந்தது. தேரர் அங்கு சென்றதும், அவர்கள் எட்டுக் கூடை நிறைய சண்பக மலர்களைக் கொண்டு வந்து அரசனிடம் கொடுத்தனர்.

54. அரசன் சண்பக மலர்களைத் தேரரிடம் கொடுத்தான். தேரர் அந்த இடத்துக்கு சண்பக மலர்களால் அர்ச்சனை செய்தார்.

55. அப்போது மீண்டும் பூமி அதிர்ந்தது. அதற்குக் காரணத்தைக் கேட்டான் காவலன். தேரர் முறைப்படி அதற்கான காரணத்தைச் சொன்னர்.

56. 'பேரரசனே! நான்கு புத்தர்களும் விஜயம் செய்த இதே இடம் ஸ்தூபம் கட்டுவதற்கு மிகவும் ஏற்றது. அது ஜீவர்களுக்கு ஆசியும், ஆனந்தமும் அளிப்பதாக இருக்கும்.

57. 'இந்த உலக யுகத்தில் முதலாவதாக காகசந்தர் என்பவர் இருந்தார். சத்திய முணர்ந்த அவ்வித்தகர், உலகமனைத்திலும் இரக்கம் கொண்ட உத்தமர்.'

58. அப்போது இந்த மகாமேக வனத்துக்கு மகாதித்த என்று பெயர். தலை நகரான அபயா கிழக்கே கடம்ப நதியின் மறுகரையில் இருந்தது.

59. அபயன் என்பவன் அதன் அரசனாக இருந்தான். அப்போது இத்தீவுக்கு ஓஜதீபம் எனப்பெயர்.

60. பூதங்களுடைய சக்தியால் இங்கு மக்களிடையே கொள்ளை நோய் பரவியது. பத்து அபூர்வ சக்திகளையும் பெற்றிருந்த காகசந்தர் இதையறிந்தார்.

61. இதற்கு முடிவு கட்டி, இங்குள்ள மக்களை மதம் மாற்றித் தர்மத்தைப் பரப்புவதற்காக அவர் இரக்க சிந்தனையினல் துண்டப்பட்டு,

62. நாற்பதாயிரம் சீடர்களுடன் ஆகாய மார்க்கமாக இங்கு வந்தார்.

63. வந்து, தேவகூட மலைமீது நின்று கொண்டார். சம்புத்தருடைய சக்தியால் தீவு முழுவதும் இருந்த கொள்ளை நோய் மறைந்து விட்டது.

64. அங்கே நின்றுகொண்டு அறிவின் அரசனைப் போன்ற மாமுனிவர் தமது எண்ணத்தை வெளியிட்டார்.

65. 'ஓஜ தீபத்திலுள்ள எல்லோரும் என்னை இன்று பார்க்கலாம். அவர்கள் என்னிடம் வர விரும்பினல் எல்லோரும் சிரமமின்றி விரைவில் அருகில் வரலாம்.,

66. ஞானத் தோன்றலான அவரும், அவர் நின்ற மலையும் ஜொலிக்கக் கண்ட அரசனும், நகர மக்களும் விரைந்து இங்கு வந்தனர்.

67. தேவதைகளுக்குப் பூஜை செய்வதற்காகச் சென்று கொண்டு இருந்த மக்கள் உலக வழிகாட்டியையும். அவருடன் இருந்த பிக்குகளையும் தேவதைகளாக எண்ணிக் கொண்டனர்.

68. அரசன் பெருமகிழ்வுடன் அறிவுத் தோன்றலைப் போற்றி அவரை உணவருந்த அழைத்தான். பிறகு நகரத்துக்கு அழைத்து வந்தான்.



69. பரந்ததும், அழகியதுமான அருமையான இந்த இடம் அறிவுத் தோன்றலும், அவர் சீடர்களும் தங்கி இளைப்பாறுவதற்குப் போதாத சிறு இடம் அல்ல,

70. என்று கருதிய அரசன் சம்புத்தரையும், அவருடன் இருந்த சீடர்களையும் அவன் கட்டிய அழகிய மண்டபத்தில் உள்ள ஆசனங்களில் அமர வைத்தான்.

71. இங்கு அமர்ந்திருந்த உலக வழிகாட்டியையும், பிக்குகளையும் கண்ட தீவின் மக்கள் நாலா புறத்திலிருந்தும் பலவிதமான பரிசுப்பொருள்களுடன் இங்கு வந்தனர்.

72. அரசன் தன்னுடைய வல்லுணவும், மெல்லுணவாகியுமிருந்த உணவை சம்புத்தருக்கும் மற்றவர்களுக்கும் வழங்கினன். சாமானியமான மற்றவர்களால் கொண்டு வரப்பட்டதையும் அளித்தான்.

73. உணவு உண்ட பின் புத்தர் இதே இடத்தில் அமர்ந்திருந்தார். அப்போது அரசன் மகா தித்தக வனத்தை அவருக்கு உயரிய பரிசாக அளித்தான்.

74. பருவமில்லாத பருவத்திலும் பூத்துக்குலுங்கிப் பொலிவுடன் விளங்கிய மகா தித்தக வனத்தைப் புத்தர் ஏற்றுக் கொண்டபோது பூமி அதிர்ந்தது.

75. இதே இடத்தில் அமர்ந்து கொண்டே குருநாதர் தர்மத்தைப் போதித்தார். நாற்பதாயிரம் பேர்கள் புனிதமடைவதற்கான மனப் பக்குவம் அடைந்தனர்.

76. புத்தர் அன்று முழுவதும் மகாதித்த வனத்தில் தங்கியிருந்ததும், மாலையில் போதி மரத்தை

நடுவதற்குத் தகுதியான இடத்தை அடைந்தார்.

77. அந்த இடத்தில் சம்புத்தர் ஆழ்ந்த தியானத்தில் அமர்ந்தார். பிறகு எழுந்து தீவிலுள்ள மக்களுடைய விமோசனத்தை மனதில் கொண்டவராக,

78. 'என்னுடைய போதி விருட்சத்தின் தென்புறக் கிளையுடன் பிக்குணி ரூஸானந்தா இதர பிக்குணிகளுடனும் இங்கு வரட்டும்' என்று அவர் எண்ணினர்.

79. (அற்புத சக்தியினல்) அவர் மனதில் எண்ணியதை அறிந்து கொண்ட தேரி, அந்நாட்டரசனைத் தன்னுடன் அழைத்துக்கொண்டு மரத்திடம் சென்ருள்.

80. பிறகு அதிசய சக்தி படைத்த அத்தேரி தென்புறக்கிளையைச் சுற்றிச் செந்தூரத்தினல் ஒரு கோடு கிழித்தாள். கிளை தனியே துண்டு பட்டது. அதை எடுத்து ஒரு தங்கத் தொட்டியில் வைத்தாள்.

81. அதைத் தன்னுடைய அதிசய சக்தியால் இங்கு கொண்டு வந்தாள். பேரரசனே! அவளுடன் ஐநூறு பிக்குணிகள், தேவதைகள் சூழ வந்தனர்.

82. சம்புத்தருடைய நீட்டிய வலது கரத்தில் தங்கத் தொட்டியை வைத்தாள். ததாகதர் அதைப் பெற்றுக் கொண்டார்.

83. அதை அரசன் அபயனிடம் நடுவதற்குக் கொடுத்தான். பூமியின் காவலன் அதனை மகாதித்த வனத்தில் நட்டு வைத்தான்.

84. பிறகு சம்புத்தர் இந்த இடத்திலிருந்து வடபுறம் சென்ருர்.



85. பின்பு அழகிய ஸிரிச மாலகத்திலமர்ந்து உண்மையான தர்மத்தை மக்களுக்குப் போதித்தார். அப்போது இருபதாயிரம் ஜீவர்களின் மன மாற்றம் நடைபெற்றது.

86. அதன்பேரில் புத்தர் மேலும் வடக்கே சென்று, பின்னல் தூபராமா எழுந்த இடத்துக்குச் சென்ருர். அங்கே அமர்ந்து தியானத்தில் ஆழ்ந்தார்.

87. சம்புத்தர் தியானத்திலிருந்து எழுந்து அங்கிருந்தவர்களுக்கு தர்மத்தை உபதேசம் செய்தார். அதே இடத்தில் பத்தாயிரம் பேர் விமோசனமடைவதற்கான பலனையடைந்தனர்.

88. தாம் நீர் அருந்தும் புனித பாத்திரத்தையே மக்கள் வழிபடுவதற்காகக் கொடுத்து, பிக்குணியையும், அவளுடன் வந்தவர்களையும், தமது சீடர் மகாதேவரையும், மற்றும் ஆயிரம் பிக்குகளையும் இங்கு விட்டுச் சென்ருர்.

89. பிறகு இங்கிருந்து சம்புத்தர் கிழக்குப் புறமாகச் சென்ருர்.

90. ரத்னமாலா ஏற்பட்ட இடத்தில் நின்று கொண்டு மக்களுக்கு உபதேசங்களை அருளினர். பிறகு சங்கத்தாருடன் வானில் எழுந்து ஜம்புத்வீபத்துக்குத் திரும்பினர்.

91. இரண்டாவதாக இந்த யுகத்தில் அவதரித்த புத்தர் கோநாகமனர். எல்லாம் அறிந்த அவர் உலக மக்களிடம் இரக்கம் கொண்டவர்.

92. அச்சமயம் இந்த மகாமேக வனத்துக்கு மகாநோமா என்று பெயர். தலைநகர் வர்த்தமானு தெற்குப்புறம் இருந்தது.

93. அந்தப் பகுதியை அப்போது ஆண்ட அரசனுடைய பெயர் சமிதன் என்பதாகும். அப்போது இத் தீவுக்கு வரதீபம் என்று பெயர்.

94. வரதீபத்தில் அப்போது பஞ்சக் கொடுமை நிலவியது. இதை யறிந்த கோநாகமனர் அதற்கு முடிவு கட்டவும்,

95. பின்னர் தமது மார்க்கத்தை இத் தீவில் பரவச் செய்து மக்களை மாற்றுவதற்காகவும் அவர்,

96. இரக்க உணர்வினால் உந்தப்பட்டு முப்பதாயிரம் சீடர்களுடன் ஆகாயமார்க்கமாக வந்து

97. சுமணகூட மலைமீது நின்று கொண்டார். சம்புத்தருடைய சக்தியால் பஞ்சம் நீங்கியது. உரிய காலத்தில் மழை பொழியத் தொடங்கியது.

98. அங்கே நின்று கொண்டு மாமுனிவர், அறிஞர்க்கரசர் தம் விருப்பத்தைப் பிரகடனம் செய்தார்: வரதீபத்திலுள்ள எல்லோரும் என்னை நின்று பார்க்கட்டும்.

99. 'அவர்கள் என்னிடம் வர விரும்பினால் சிரமமின்றி விரைந்து வந்து சேரட்டும்.'

100. பொலிவுடன் திகழ்ந்த புத்தரையும், மலையையும்கண்ட அரசனும் நகர மக்களும் விரைந்து இங்கு வந்து சேர்ந்தனர்.

101. தேவதைகளுக்குப் பூசை செய்வதற்காக இங்கு வந்து கொண்டிருந்தவர்கள், உலக வழிகாட்டியையும், அவருடனிருந்த பிக்குகளையும் தேவதைகளாக எண்ணிக் கொண்டனர்.

102. மனமகிழ்வுடன் மாமுனிவரை வரவேற்ற மன்னர் அவரை உணவு கொள்ள அழைத்தார்.



103. பின்னர் நகரத்துக்கு அவர்களை அழைத்து வந்த அரசன், 'அருமையான இந்த இடம் அறிவுச் செம்மல், சங்கத்தாருடன் தங்கி ஓய்வு கொள்ள ஏற்ற இடம். சிறிய இடமல்ல' என்று எண்ணினான்.

104. இந்த இடத்தில் சம்புத்தரையும், சங்கத்தாரையும் தான் அமைத்த அருமையான மண்டபத்தில், அழகிய ஆசனங்களில் அமரச் செய்தான்.

105. உலக வழிகாட்டி பிக்குகளுடன் அங்கு அமர்ந்து கொண்டிருப்பதைக் கண்ட தீவின் மக்கள் எல்லாப் புறத்திலிருந்தும் பரிசுப் பொருள்களுடன் இங்கு வந்தனர்.

106. அரசன் தன்னுடைய உணவை சம்புத்தருக்கும். அவருடனிருந்த பிக்குகளுக்கும் வழங்கினான். மற்றவர்கள் கொண்டு வந்த உணவுப் பொருள்களையும் அளித்தான்,

107. உணவுக்குப் பின், இதே இடத்தில் புத்தர் அமர்ந்து கொண்டிருந்த போது அரசன் மகாநோம வனத்தை அவருக்கு உயரிய பரிசாக அளித்தான்.

108. பருவமில்லாத பருவத்தில் பூத்துக் குலுங்கிப் பொலிவுடன் விளங்கிய மகாநோம வனத்தைப் புத்தர் பெற்றுக் கொண்டதும் பூமி அதிர்ந்தது.

109. இங்கேயே அமர்ந்து புத்தர் தர்மத்தைப் போதித்தார். அப்போது முப்பதாயிரம் பேர் விமோசனமடைவதற்கான பலனையடைந்தனர்.

110. அன்று முழுவதும் மகாநோம வனத்தில் தங்கியிருந்ததும், அருளாளர் மாலையில் முன்பு போதிமரம் நின்ற இடத்துக்குச் சென்றார்.

111. அங்கமர்ந்து தியானத்தில் ஆழ்ந்தார். பிறகு சம்புத்தர் தியானத்திலிருந்து எழுந்து, தீவின் மக்களுடைய விமோசனம் குறித்து மனதில் எண்ணியவராக,

112. 'என்னுடைய போதிமரத்தின் தென்புறக் கிளையை எடுத்துக் கொண்டு பிக்குணி கந்த கானந்தா இதர பிக்குணிகளுடன் இங்கு வரட்டும்.' என்றார்.

113. அவர் எண்ணத்தை யறிந்ததும் தேரி உடனே அந்நாட்டு அரசனை அழைத்துக் கொண்டு போதி மரத்திடம் சென்றாள்.

114. பின்பு அதிசய சக்தி படைத்த அவள் தென் புறக் கிளையைச் சுற்றி செந்தூரத்தினால் ஒரு கோடு கிழித்ததும் கிளை துண்டு பட்டது.

115. அதை யெடுத்துத் தங்கத் தொட்டியில் வைத்துக் கொண்டு, தன்னுடைய அதிசய சக்தியால் இங்கு கொண்டு வந்தாள். பேரரசனே அவளுடன் ஐநூறு பிக்குணிகளும், தேவதைகள் சூழ வந்தனர்.

116. சம்புத்தருடைய நீட்டிய வலக்கரத்தில் தங்கத் தொட்டியுடன் வைத்தாள்.

117. ததாகதர் அதைப் பெற்றுக் கொண்டு, அரசன் சமிதனிடம் நடுவதற்காகக் கொடுத்தார். அரசன் அதனை மகாநோம வனத்தில் நட்டான்.

118. பின்பு சம்புத்தர் சிரிஸ மாலத்திலிருந்து வட புறம் சென்று, நாகமாலத்தில் அமர்ந்து, மக்களுக்குத் தர்மத்தை உபதேசம் செய்தார்.

119. உபதேசத்தைக் கேட்டதும், இருபதாயிரம் ஜீவர்கள் மாற்றம் நடைபெற்றது.

120. பிறகு மேலும் வடக்கே சென்று, முந்திய புத்தர் உட்கார்ந்த இடத்தை யடைந்து, அங்கே அமர்ந்து தியானத்தில் மூழ்கினார்.



121. தியானத்திலிருந்து எழுந்ததும், சம்புத்தர் கூடியிருந்தவர்களுக்குத் தர்மத்தைப் போதித்தார். அதே இடத்தில் பத்தாயிரம் பேர் விமோசனமடைவதற்கான பலனையடைந்தனர்.

122. தமது இடுப்புப் பட்டியை வழிபடுவதற்காக மக்களுக்குக் கொடுத்துவிட்டு,

123. பிக்குணியையும், அவளுடன் வந்தவர்களையும், தமது சீடரான மகா சம்பரையும் மற்றும் ஆயிரம் பிக்குகளையும் இங்கு விட்டுச் சென்றார்.

124. ரத்னமாலாவின் இந்தப்புறம் உள்ள சுதர்சன மாலாவில் நின்றுகொண்டு மக்களுக்குப் பல விதமான உபதேசங்களை அருளினார். பின்பு சீடர்களுடன் வானில் எழுந்து ஜம்புத் வீபத்துக்குத் திரும்பினார்.

125. மூன்றாவதாக இந்த யுகத்தில் அவதரித்த புத்தர் காச்யபர். எல்லாம் அறிந்த இவர் ஏழைகளிடம் இரக்கம் கொண்டவர்.

126. மகா மேக வனத்துக்கு (அப்போது) மகா சாகரம் என்று பெயர்.

127. விசாலா எனப்பட்ட தலைநகரம் மேற்குப்புறம் இருந்தது. அதையாண்ட அரசனுடைய பெயர் ஜெயந்தன் என்பது. அப்போது இத் தீவுக்கு மந்ததீபம் என்று பெயர்.

128. அப்போது அரசன் ஜெயந்தனுக்கும், அவனுடைய தம்பிக்குமிடையே பயங்கரமான போர் மூண்டது.

129. பத்து விசேஷ சக்திகளைப் பெற்ற காச்யபர், போரினால் மக்களுக்கு ஏற்படக்கூடிய கொடுமைகளை அறிந்து இரக்கம் கொண்டார்.

130. அதற்கு முடிவு கட்டவும், பின்னர் தீவில் ஜீவர்களை மாற்றவும், தமது மார்க்கத்தைப் பரப்பவும்,

131. இரக்கத்தினால் உந்தப்பட்டவராக அவர் இருபதாயிரம் சீடர்களுடன் ஆகாய மார்க்கமாக இங்கு வந்து, சுபகூட மலை மீது நின்று கொண்டார்.

132. மாமுனிவர் - அறிவுச் செம்மல் அங்கு நின்று தமது விருப்பத்தைப் பிரகடனப் படுத்தினார். 'மந்த தீபத்திலுள்ள எல்லோரும் இன்று என்னைப் பார்க்கட்டும்.

133. 'அவர்கள் என்னிடம் வர விரும்பினால் சிரமமின்றி விரைந்து வந்து சேரட்டும்.'

134. மலையும், மாமுனிவரும் பொலிவுடன் திகழ்வது கண்டு அரசனும் மக்களும் விரைந்து அங்கு வந்தனர்.

135. தங்கள் பக்கம் வெற்றி ஏற்படவேண்டித் தேவதைகளுக்குப் பூஜை செய்வதற்காக மலையை நோக்கி வந்து கொண்டிருந்தவர்களான பலர்,

136. உலக வழிகாட்டியையும், அவருடன் இருந்த பிக்குகளையும் தேவதைகளாக எண்ணிக் கொண்டனர். அரசனும், அவனது தம்பியும் வியப்படைந்து போரை நிறுத்தினர்.

137. மகிழ்வடைந்த மன்னன் மாமுனிவரிடம் வந்து, வரவேற்று, உணவருந்த அழைத்தான். பின்னர் நகருக்கு அழைத்து வந்தான்.

138. 'புத்தர் பிக்குகளுடன் அமைதியாகத் தங்குவதற்கு ஏற்ற அருமையான இடம் இதுவே. இது சிறிய இடமல்ல' என்றெண்ணினான் அரசன்.



139. இந்த இடத்தில் சம்புத்தரையும், அவரது சீடர்களையும், தான் அமைத்த அருமையான மண்டபத்தில், அழகிய ஆசனங்களில் அமரச் செய்தான்.

140. உலக வழிகாட்டியும், அவருடன் பிக்குகளும் இங்கு அமர்ந்திருப்பது கண்ட தீவின் மக்கள் எல்லாப் புறத்திலிருந்தும் பரிசுப் பொருள்களைக் கொண்டு வந்தனர்.

141. புத்தருக்கும், மற்றுமுள்ள பிக்குகளுக்கும் அரசன் தன்னுடைய உணவையே அளித்தான். மற்றவர்கள் கொணர்ந்த உணவுப் பொருள்களையும் அவர்களுக்கு அளித்தான்.

142. உணவுக்கு பின், புத்தர் இதே இடத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தபோது அரசன் மகா சாகர வனத்தை அவருக்கு உயரிய பரிசாக வழங்கினான்.

143. பருவமில்லாத பருவத்தில் பூத்துக்குலுங்கிப் பொலிவுடன் விளங்கிய மகாசாகர வனத்தைப் புத்தர் பெற்றுக்கொண்டதும் பூமி அதிர்ந்தது.

144. இதே இடத்தில் அமர்ந்து குருநாதர் தர்மத்தைப் போதித்தார். அப்போது இருபதாயிரம் பேர் விமோசனமடைவதற்கான பலன் பெற்றனர்.

145. அன்று முழுவதும் மகா சாகர வனத்தில் கழித்ததும், மாலையில் அருளாளர் முன்பு போதி மரம் நின்ற இடத்துக்குச் சென்றார்.

146. அந்த இடத்தில் அமர்ந்து ஆழ்ந்த தியானத்தில் மூழ்கினார். பிறகு தியானத்திலிருந்து எழுந்த அவர், தீவின் மக்களுடைய விமோசனத்தை மனதில் கொண்டு,

147. 'என்னுடைய போதி மரத்தின் தென்புறக் கிளையுடன் பிக்குணி சுதாமா, இதர பிக்குணி களுடன் இங்கு வரட்டும்' என்றெண்ணினர்.

148. புத்தர் மனதிலெண்ணியதை உணர்ந்து கொண்டதேரி, அந்நாட்டு அரசனை அழைத்துக் கொண்டு அம் மரத்திடம் சென்றாள்.

149. அதிசய சக்தி படைத்த அவள் தென்புறக் கிளையில் செந்தூரத்திறைல் சுற்றிக் கோடிழுத் ததும் அது தனியே துண்டுபட்டது.

150. அதையெடுத்துத் தங்கத் தொட்டியில் வைத் துக்கொண்டு தன்னுடைய அற்புத சக்தியினல் இங்கு கொண்டு வந்தாள். அவளுடன் ஐநூறு பிக்குணிகளும், தேவதைகள் சூழ, வந்தனர்.

151. சம்புத்தருடைய நீட்டிய வலக்கரத்தில் தங்கத் தொட்டியுடன் வைத்தாள்.

152. ததாகதர் அதைப் பெற்றுக்கொண்டு அரசன் ஜெயந்தனிடம் நடுவதற்குக் கொடுத்தார். அரசன் அதை மகாசாகர வனத்தில் நட்டான்.

153. பிறகு புத்தர் நாக மாலகத்திலிருந்து வடபுறம் சென்று அசோக மாலகத்தில் அமர்ந்து மக்களுக்குத் தர்மத்தைப் போதித்தார்.

154. உபதேசத்தைக் கேட்டதும் நாலாயிரம் ஜீவர் களின் மாற்றம் நடைபெற்றது.

155. பிறகு மேலும் வடக்கே சென்று, முந்திய புத்தர் கள் அமர்ந்த இடத்தை யடைந்து, அங்கு உட்கார்ந்து தியானத்தில் ஆழ்ந்தார்.

156. சம்புத்தர் தியானத்திலிருந்து எழுந்து சுற்றி யிருந்தவர்களுக்குத் தர்மத்தை உபதேசித் தார். அதே இடத்தில் பத்தாயிரம் ஜீவர்கள் விமோசனப் பாதையின் பலனையடைந்தனர்.



157. மழைக்குப் பாதுகாப்பாக அணியும் உடையை வழிபட மக்களுக்கு புத்தர் கொடுத்தார்.

158. பிக்குணியையும், அவளுடன் வந்தவர்களையும் இங்கேயே விட்டு விட்டு, தமது சீடர் சபானந் தரையும் மற்றும் ஆயிரம் பிக்குகளையும் இங்கு விட்டு விட்டு,

159. பிறகு சுதர்சன மாலகத்திற்கு இந்தப் புறம் உள்ள சோமநாச மாலகத்தில் நின்றுகொண்டு மக்களுக்குப் பல உபதேசங்களை அருளினர். பிறகு உடன் இருந்த பிக்குகளுடன் ஆகாய மார்க்கமாகக் கிளம்பி ஜம்புத்வீபத்துக்குத் திரும்பினர்.

160. இந்த யுகத்தில் நான்காவது புத்தராக கோத மர் அவதரித்தார். முழுமையான சத்தியத்தை அறிந்த அவர் உலகிடம் இரக்கம் கொண்டவர்.

161. அவர் முதல் முறை இங்கு வந்தபோது யக்ஷர் களை இங்கிருந்து விரட்டினர். இரண்டாவது முறையாக மீண்டும் வந்தபோது நாகர்களை அடக்கினர்.

162. கல்யாணியில் நாக மணியகி வேண்டிக் கொண் டதற் கிணங்க மூன்றாவது முறை திரும்பி வந்த அவர், பிக்குகளுடன் அங்கு உணவருந்தினர்.

163. முந்திய போதி விருட்சங்கள் இருந்த இடத் திலும், பின்னல் ஸ்தூபம் கட்டப்பட்ட இடம், நினைவுச் சின்னங்கள் வைத்துப் பாதுகாக் கப்பட்ட இடம் ஆகியவற்றிலும் அமர்ந்த பின்,

164. முந்திய புத்தர்கள் நின்ற இந்த இடத்துக்குச் சென்றதும் உலக ஜோதியாகிய முனிவர், அப்

போது இலங்கைத் தீவில் மனிதர்கள் யாரும் வசிக்கவில்லை யாதலால்,

165. இத் தீவில் வசித்த தேவர்களுக்கும், நாகர்களுக்கும் உபதேசம் செய்துவிட்டு, ஆகாய மார்க்கமாக பிக்குகளுடன் ஜம்புத்வீபத்துக்குத் திரும்பி வந்தார்.

166. 'அரசனே! இவ்வாருக இந்த இடம் நான்கு புத்தர்களால் விஜயம் செய்யப்பட்டது.

167. 'பேரரசனே! இந்த இடத்திலே புத்தருடைய உடல் தாதுவை வைத்த ஸ்தூபம் இருக்க வேண்டும். அது நூற்றி இருபது முழம் உயரமுள்ளதாக இருக்கும். ஹேம மாலி என்ற பெயர் பெறும்.'

168. 'நானே அதைக் கட்டுகிறேன்' என்று அரசன் கூறினன்.

169. 'அரசே! நீ இங்கு ஆற்ற வேண்டிய கடமைகள் வேறுபல உள்ளன. அவற்றை நிறைவேற்றுவாயாக! ஆனல் உன் வழி வந்த ஒருவன் இந்த ஸ்தூபத்தைக் கட்டுவான்.

170. 'உன்னுடைய சகோதரனும், உபராஜனுமான மகாநாமனுடைய மைந்தன் யத்தாலாயக தீசன் என்பவன் இனிமேல் அரசன் ஆவான்.

171. 'அவனுடைய மகன் கோத அபயன் அடுத்து அரசனுக வருவான். அவனுடைய மகன் காகவன தீசன் எனப்படுவான்.

172. 'இவனுடைய மகன் அபயன் என்பவன் துட்டகாமனி என்ற பெயரால் புகழ்பெற்று விளங்குவான். அவன், தன்னுடைய அதிசய சக்தியினல் இங்கு ஸ்தூபத்தைக் கட்டுவான்.'



173. இவ்வாறு தேரர் சொன்னர். அரசன் அங்கு ஒரு கல் ஸ்தம்பத்தை நட்டு, அதில் அவர் சொன்னவற்றைப் பொறித்து வைத்தான்.

174. அறிஞரும், மகானும், அதிசய சக்தி படைத்தவருமான மஹிந்தர் மகாமேக வனத்தை ஏற்றுக் கொண்டதும்,

175. யாராலும் அசைக்க முடியாத அவர், பூமியை எட்டு இடங்களில் அதிரும்படி செய்தார். பின் பிட்சா பாத்திரத்துடன் வெளியே சென்ற அவர் நகரில் நுழைந்து,

176. அரசனுடைய மாளிகையில் உணவு கொண்டார். பிறகு அரண்மனையை விட்டுச் சென்ற அவர் நந்தன வனத்தில் அமர்ந்து மக்களுக்கு அக்னி கண்டோபமா சுத்தத்தைப் போதித்தார்.

177. ஆயிரம் பேர்கள் விமோசனப் பாதையின் பலனை யடையச் செய்து அவர் (மீண்டும்) மகாமேகவனத்தில் ஓய்வு எடுத்துக்கொண்டார்.

178. தேரர் மூன்ருவது நாள் அரசனுடைய மாளிகையில் உணவருந்தியதும், நந்தன வனத்தில் அமர்ந்து மக்களுக்கு ஆசி விசுபமாவைப் போதித்தார்.

179. அதன் மூலம் ஆயிரம் பேர்களை மதம் மாறச் செய்துவிட்டுப் பின்னர் அங்கிருந்து தீசராமாவுக்குச் சென்ருர்.

180. தேரருடைய காலடியில் அமர்ந்து உபதேசத்தைக் கேட்ட மன்னன், 'புத்த தர்மம் நிலை பெற்று விட்டதா?' என்று கேட்டான்.

181. 'அரசே! இன்னும் இல்லை. உபோசத விழாவுக்கு எல்லைகளை நிர்ணயித்த பின்பும், புத்தருடைய கட்டளைப்படி இதரசடங்குகளைச் செய்த

பின்பும் தான் தர்மம் நிலைபெறும்' என்றார் தேரர்.

182. தேரர் இவ்வாறு பேசினார். அரசன் இவ்வாறு பதிலளித்தான்: 'ஒளி தருபவரே! புத்தருடைய கட்டளைப்படி நான் நடக்கச் சித்தமாக இருக்கிறேன்.

183. 'எனவே நகருடன் சேர்ந்து விரைவில் எல்லையை நிர்ணயிக்கவும்' என்று அரசன் சொன்னான்.

184. அதற்குத் தேரர், 'அப்படியானால் அதை நீயே செய். எல்லைக்கோட்டை நீயே குறி. நாங்கள் அதை நிர்ணயிக்கிறோம்' என்றார்.

185. 'நல்லது. அப்படியே ஆகட்டும்' என்று கூறிய அரசன், தேவராஜனைப்போல் நந்தன வனத்தை விட்டுப் புறப்பட்டுப் பின் மகாமேக வனராமாவைக் கடந்து, தன் அரண்மனைக்குச் சென்றான்.

186. நான்காவது நாள் தேரர் அரசமாளிகையில் உணவருந்தியதும், தேரர் நந்தன வனத்தில் அமர்ந்து மக்களுக்கு அனமத்தக வாதத்தை உபதேசித்தார்.

187. ஆயிரம் பேர்களுக்கு அந்த அமுதத்தை அளித்துவிட்டு அம் மகா தேரர் மகாமேக வனராமாவுக்குச் சென்றார்.

188. காலையில் அற்புத நகரை அலங்கரித்து, இனிய வாத்தியங்கள் முழங்கக் கட்டளையிட்டு விட்டு, விஹாரையைச் சுற்றிலும் அலங்கரிக்க அரசன் ஏற்பாடு செய்தான்.

189. பின்னர் ரதாதிபதியான அவன் ரதத்தில் ஏறிக் கொண்டு, சகல அணிகளையும் பூண்டவனாகத் தனது ஆராமாவுக்கு வந்தான்.



190. அவனுடன் மந்திரிகளும், அந்தப்புரப் பெண்களும், படைவீரர்களும், குதிரைகளும் பெருவாரியாகத் திரண்டு வந்தனர்.

191. இங்கு தேரர்களை வரவழைத்து, அவர்களுக்கு உரிய மரியாதை செய்து கௌரவித்ததும், கடம்ப நதிக் கரையோரம் கலப்பையை ஊன்றி வட்டமாக உழுது கொண்டே வந்தான். அது தொடங்கிய இடத்திலேயே வந்து முடிந்தது.

192. அரசன் உழுத பாதையில் அடையாளம் செய்து விட்டு, முப்பத்திரண்டு மாலகங்களுக்கும், தூபராமாவுக்கும் இதேபோல் இடம் ஒதுக்கியதும்,

193. உயர்ந்த ஞானம் பெற்ற தேரர் முறைப்படி உள் எல்லை அடையாளங்களை நிர்ணயித்தார்.

194. இவ்வாறாகப் புலன்களை வென்ற புனிதர் ஒரே நாளில் எல்லா எல்லைகளையும் நிர்ணயித்தார். எல்லையை நிர்ணயிக்கும் வேலை முடிந்ததும் பூமி அதிர்ந்தது.

195. ஐந்தாவது நாள் அரச மாளிகையில் தேரர் உணவருந்தியதும், நந்தன வனத்தில் அமர்ந்து கஜானிய சித்தாந்தத்தை மக்களுக்கு உபதேசித்தார்.

196. ஆயிரம் பேர்களுக்கு அமுதம் போன்ற இவ்வுபதேச மொழிகளை வழங்கியதும், அவர் மகாமேக வனத்துக்கு வந்து ஓய்வு கொண்டார்.

197. ஆறாவது நாளும் அரசமாளிகையில் தேரர் உணவருந்தியதும், நந்தன வனத்தில் அமர்ந்து கோமய பிண்டி சுத்தத்தை உபதேசித்தார்.

198. இதன்மூலம் ஆயிரம் பேர்கள் மதம் மாறும்படி செய்த அறிவு மிக்க உபதேசகர், மகாமேக

வனத்துக்கு வந்து ஓய்வு எடுத்துக் கொண்டார்.

199. ஏழாவது நாள் அரச மாளிகையில் உணவு கொண்டதும், தேரர் நந்தன வனத்துக்கு வந்து தர்ம சக்கர பவத்தன சித்தாந்தத்தை உபதேசித்தார்.

200. இதன் மூலம் ஆயிரம் பேரை மாறச் செய்த அவர் மகாமேக வனத்துக்குச் சென்று ஓய்வு எடுத்துக் கொண்டார்.

201. ஒளியூட்டும் அத் திருவிளக்கு இவ்வாருக எண்ணுயிரத்தி ஐநூறு பேர்களை ஏழே நாட்களில் மாறச் செய்தார்.

202. உண்மையான தர்மத்தை ஒளிபெறுமாறு அப் புனிதரால் எடுத்துக்காட்டப் பயன்பட்ட நந்தன வனம், அது முதல் ஜோதிவனம் எனப் பெயர் பெற்றது.

203. ஆரம்ப நாட்களில் அரசன், தேரருக்காக தீச ராமாவில் ஒரு பாஸாதா கட்ட உத்தர விட்டான். அதற்காக அதிவிரைவில் செங்கற்கள் தயாராயின.

204. அந்த இடம் கருப்பு நிறமாக இருந்ததால் அவர்கள் அதற்கு கால பாஸாதா பரிவேணு எனப் பெயரிட்டனர்.

205. பிறகு அவன் போதி விருட்சத்துக்காக லோக பாஸாதாவையும், சலாகா விடுதியையும், உணவருந்தும் இடத்தையும் கட்டினுன்.

பரிவேணு: மடத்துக்குள் துறவி வசிப்பதற்கான அறை.
சலாகா: உணவுச் சீட்டு. இதைக் கொண்டு கொடுத்தால் சலாகா விடுதியில் உணவு கிடைக்கும்.



206. அழகான முறையில் அவன் பல பரிவேணுக்களைக் கட்டினுன். ஸ்னுனக் குளங்கள், ஓய்வு கொள்ளும் இடங்கள் போன்றவற்றை அமைத்தான்.

207. குற்றமற்ற குணசீலரான தேரருக்கு அளிக்கப்பட்ட பரிவேணு, ஸ்னுனத் தடாகத்தின் கரையில் இருந்தது. அதற்கு சுன்ஹாத பரிவேணு என்று பெயர்.

208. தீவுக்கு ஒளியூட்டிய செம்மல் உலாவப்போகும் இடத்தில் அமைந்த பரிவேணுவுக்கு தீக சங்கமனு என்று பெயர்.

209. அவர் அமர்ந்து, உயர்ந்த இன்பமளிக்கும் தியானம் செய்யுமிடத்தில் கட்டப்பட்ட பரிவேணுவுக்கு பலக பரிவேணு என்று பெயர்.

210. தேரர் வழக்கமாக சாய்ந்து உட்கார்ந்து கொண்டு ஓய்வெடுக்கும் இடத்தில் கட்டப்பட்ட பரிவேணுவுக்கு தேரா பஸ்ஸய பரிவேணு என்று பெயர்.

211. பல தேவர்கள் அவரை நாடி வந்து காலடியில் அமர்ந்திருந்த இடத்தில் கட்டப்பட்ட பரிவேணுவுக்கு மருகாண பரிவேணு என்று பெயர்.

212. அரசனுடைய சேனுபதி தீக சந்தனன் தேரருக்காக எட்டுத் தூண்களுடன் கூடிய சிறிய பாஸாதா ஒன்றைக் கட்டினுன்.

213. புகழ்பெற்ற இப் பரிவேணுவுக்கு தீக சந்த சேனுபதி பரிவேணு என்று பெயர்.

சுன்ஹாத பரிவேணு—பரிசுத்தமானவருடைய அறை.
தீக சங்கமனு—நடப்பதற்கான நீண்ட அறை.
தேரா பஸ்ஸய பரிவேணு—தேரர் சாய்மான அறை.
பலக பரிவேணு — உன்னதமான பரிசுக்கான அறை.
மருகாண பரிவேணு—தேவர்கள் அறை.

21 4. தேவர்களுக்குப் பிரியமானவன் என்ற வாசகத்தைத் தன்னுடைய பெயரிலே கொண்டிருக்கும் அறிவுள்ள அரசன், குற்றமற்ற மஹிந்த தேரருக்கு ஆதரவளித்து, இலங்கையில் முதன் முதலாக இந்த மகா விகாரையைக் கட்டினன்.

**மகா வம்சத்தில் பதினைந்தாவது அத்தியாயமான மகா விகாரை முற்றும்**

## பதினாருவது அத்தியாயம்

# சேதிய பர்வத விஹாரம்

1. நகரில் பிட்சை எடுத்துக் கொண்டும், உபதேசங்களின் மூலம் மக்களுக்கு அருள் பாலித்துக் கொண்டும், அரசமாளிகையில் உணவு உண்டும், அரசனுக்கு அறிவுரைகள் கூறிக் கொண்டும்,

2. தேரர் மகாமேக வனத்தில் இருபத்தாறு தினங்கள் தங்கியிருந்தார். ஆடிமாதம், சுக்கிலபட்சம், பதிமூன்ருவது நாள் அந்தத் தர்மாத்மா,

3. அரச மாளிகையில் உண்வு கொண்டு அரசனுக்கு மகாப்பமாத சித்தாந்தத்தை உபதேசம் செய்ததும்,

4. சேதிய பர்வதத்தில் ஒரு விஹாரை எழுப்ப விரும்பிய அவர், அங்கிருந்து கிழக்கு வாசல் வழியாக சேதிய பர்வதத்துக்குச் சென்ருர்.

5. தேரர் அங்கு போய் விட்டார் என்பதை அரசன் அறிந்ததும், ரதத்தில் ஏறிக்கொண்டு, தன் இரு ராணிகளும் உடன்வர, வேகமாக தேரரைப் பின் தொடர்ந்து சென்ருன்.

6. நாக சதுக்கத் தடாகத்தில் ஸ்நானம் செய்ததும், தேரர்கள் மலைமேல் ஏறுவதற்கு உரிய வரிசைப்படி அவர்கள் நின்ருர்கள்.

7. அப்போது அரசன் அங்கு வந்து, தேரிலிருந்து இறங்கித் தேரர்களை வணங்கிப் பணிவுடன் நின்ருன். 'அரசே! இவ்வெயிலில் களைத்துப் போய் எங்கே வந்தாய்?' என்று அவர்கள் கேட்டனர்.

8. 'தாங்கள் கிளம்பி வந்து விட்டதால் குழம்பிப் போய்வந்தேன்' என்றான் அரசன். 'மழைக் காலத்தை இங்கு கழிப்பதற்காக வந்தோம்' என்று தேரர் கூறினர்.
9. பிறகு (சங்க) விதிகளை* நன்கறிந்த தேரர், அரசனுக்கு வாசம் பற்றிய பகுதியை விளக்கிக் கூறினர்.
10. அரசனுடைய மருமகனும், பிரதான மந்திரியு மான மகாரிதன் அருகே நின்று கொண்டிருந் தான். அவனுடன், இளையவர்களும் மூத்த வர்களுமான ஐம்பத்தைந்து சகோதரர்களும் இருந்தனர். இதைக் கேட்டதும்,
11. அரசனுடைய அனுமதி பெற்று அவர்கள் தேர ரிடம் அன்றே தீட்சை பெற்றுக் கொண்டனர். அறிவாளிகளான இவர்களனைவரும் தலை மயிரை நீக்கும் இடத்திலேயே அரஹந்த நிலையயடைந்தனர்.
12. அரசன் அதே தினத்தில் அறுபத்தெட்டு குகை வாசங்களைக் கட்டும் வேலையைத் தொடங் கினான். இது பின்னால் கன்டக சேதியம் ஏற் பட்ட இடத்தில் இருந்தது.
13. அரசன் நகருக்குத் திரும்பினான். தேரர்கள் (மக்களிடம்) இரக்கம் கொண்டவர்களாக நக ருக்குப் பிச்சை எடுக்கச் சென்று வருவார்கள்.
14. ஆடி மாதம் பௌர்ணமி யன்று குகை வாசக் கட்டிட வேலை முடிந்ததும், அரசன் வந்து அந்த விஹாரையை தேரர்களுக்குக் காணிக்கையாக வழங்கினான்.
15. தீமையின் எல்லைகளைக் கடந்தவரான தேரர், முப்பத்திரெண்டு மாலகங்களுக்கும், விஹாரத் துக்கும் எல்லையை நிர்ணயித்ததும் அதே தினத்தில்,

* மழைக்காலத்தின் போது பிக்குகள் சஞ்சரிக்கக் கூடாது. அவர்கள் ஒன்று சேர்ந்து ஒரு விஹாரத்தில் வசிப் பது வழக்கம்.



16. எல்லாவற்றுக்கும் முதலாவதாகக் குறிப்பிடப் பட்ட தும்பரு மாலகத்தில் தீட்சை பெற்றுக் கொண்டவர்களுக்கு உபசம்பத சடங்கைச் செய்து வைத்தார்.
17. பிறகு இந்த அறுபத்திரண்டு அரஹந்தர்களும் மழைக்காலத்தில் ஒன்று சேர்ந்து சேதிய பர்வ தத்தில் தங்கியிருந்து (தங்கள் உபதேசங் களால்) அரசனுக்கு அருள்புரிந்தனர்.
18. தேவர்களும், மனிதர்களும் அவர் அருள்பெறப் பணிவுடன் திரண்டனர். குணநலன்கள் மிக்க அவர்கள் இதனல் பெரும் புகழ்பெற்றவர் களாயினர்.

**மகாவம்சத்தில் பதினாறுவது அத்தியாயமான சேதிய பர்வத விகாரம் முற்றும்**

## பதினேழாவது அத்தியாயம்

# அஸ்தி வருகை

1. பேரறிவுள்ள தேரர் (இவ்வாறு) மழைக் காலத்தைக் கழித்ததும், கார்த்திகை மாதம் பௌர்ணமியன்று பவரணா சடங்கை நடத்தி விட்டு அரசனிடம் இவ்வாறு கூறினார்:

2. ‘அரசே! நாங்கள் சம்புத்தரைத் தரிசித்து அதிக காலமாகிவிட்டது. குரு இல்லாத வாழ்க்கையை நாங்கள் நடத்தினோம். இங்கே எங்களுக்கு வழிபடுவதற்கு எதுவுமே இல்லை.’

3. ‘சம்புத்தர் நிர்வாணமடைந்துவிட்டார் என்று தாங்கள் சொல்லவில்லையா?’ என்று அரசன் கேட்டான். அதற்குத் தேரர், ‘அஸ்தியைத் தரிசித்தால் அவரைத் தரிசித்தது போலாகும்’ என்றார்.

4. ‘ஸ்தூபம் கட்டவேண்டுமென்ற என்னுடைய உத்தேசம் உமக்குத் தெரியும். நான் அதைக் கட்டுகிறேன். நீங்கள் அஸ்தியைக் கண்டு பிடிக்க ஏற்பாடு செய்யுங்கள்’ என்றான் அரசன்.

5. சுமணனைக் கலந்தாலோசிக்குமாறு தேரர் அரசனிடம் சொன்னார். ‘அஸ்தி நமக்கு எப்போது கிடைக்கும்?’ என்று அரசன் சுமணனைக் கேட்டான்.

6. ‘அரசே! நகரையும், வீதிகளையும் அலங்கரிக்க உத்தரவிட்டுப் பிறகு நீயே உன் மீது உபோசத விரதத்தை மேற்கொண்டு சகாக்களுடன் மாலையில்,

**உபோசத விரதம்**—புலனடக்கம், உண்ணாவிரதம் முதலியவை. காமத்துக்கு இடம் தரக் கூடாது. இது சாதாரணமானவர்களுக்கு விதிக்கப்பட்ட முறை.



7. ‘பட்டத்து யானை மீது ஏறிக்கொண்டு, வெண் கொற்றக் குடையுடன் இன்னிசை முழங்க மகா நாகவனத்துக்குச் செல்.

8. ‘அங்கே தாதுவை அழிக்கத் தெரிந்தவருடைய தாது(அஸ்தி)வைப் பெறலாம்’ என்று சுமணன் மகிழ்வுடன் மன்னனிடம் கூறினார்.

9. இப்போது தேரர் அரச மாளிகையிலிருந்து சேதியமலைக்குச் சென்று, புனித நினைவுகளில் மூழ்கியிருந்த சுமணனைக் கூப்பிட்டார்.

10. ‘சுமணா! நீ இங்கிருந்து புஷ்பபுரம் சென்று பராக்ரமசாலியும், உனது பாட்டனுமான மன்னனிடம் நாங்கள் இவ்வாறு சொன்னதாகத் தெரிவி.

11. ‘மாமன்னா! உனது நண்பன் தேவனாம்பிரியன் புத்தமார்க்கத்தை மேற்கொண்டுவிட்டான்.

12. ‘அவன் ஒரு ஸ்தூபத்தைக் கட்ட விரும்புகிறான். மாமுனிவரின் அஸ்தியையும், குருநாதர் உபயோகித்த பிட்சா பாத்திரத்தையும் அவனுக்குத் தருவாயாக.’

13. ‘அரசனிடமிருந்து பிட்சா பாத்திரத்தையும், அது நிறைய அஸ்தியையும் பெற்றுக்கொண்டதும், தேவர்களுடைய அழகிய நகருக்குச் சென்று, சக்கனிடம் (இந்திரனிடம்) இவ்வாறு நாங்கள் சொன்னதாகத் தெரிவி:

14. ‘மூவுலகையும் அலங்கரிக்கும் தகுதி வாய்ந்த புத்தருடைய வலது மேல் தாடைப் பல் உன்னிடம் இருக்கிறது. தேவராஜனே! வலது காரை எலும்பின் அஸ்தியும் உன்னிடம் உள்ளது.

15. ‘பல்லை நீயே வைத்துக்கொண்டு, வலது காரை எலும்பின் அஸ்தியைக் கொடு. தேவதேவனே!

இலங்கைத் தீவுக்கு நீ செய்யவேண்டிய கடமையில் தயங்காதே.'

16. 'அவ்வாறே யாகுக' என்று பதிலளித்த, அதிசயசக்தி படைத்த சுமணன் அதே கணம் அரசன் தர்ம அசோகனிடம் சென்றார்.

17. அவன் சால விருட்சத்தின் அடியில் நின்று கொண்டு, கார்த்திகை விழாவையொட்டி அழகிய புனித போதிவிருட்சத்துக்குப் பூஜை செய்து கொண்டிருந்தான்.

18. தேரருடைய செய்தியை அவனிடம் தெரிவித்து பிட்சா பாத்திரத்தையும், அது நிறைய அஸ்தியையும் பெற்றுக்கொண்ட பின், இமாலயத்துக்குச் சென்றார்.

19. இமாலயத்தில் அஸ்தியுடன் கூடிய அப் புனித பிட்சா பாத்திரத்தை வைத்துவிட்டு, தேவ ராஜனிடம் சென்று, தேரருடைய செய்தியைக் கூறினர்.

20. தேவராஜனை சக்கன் சூளாமணி சேதியத்திலிருந்து (புத்தருடைய) வலது காரை எலும்பின் அஸ்தியை எடுத்து சுமணரிடம் கொடுத்தான்.

21. அதன் பிறகு சுமணர் அந்த அஸ்தியையும், அஸ்தி நிறைந்த பிட்சா பாத்திரத்தையும் எடுத்துக்கொண்டு சேதிய பர்வதத்துக்குத் திரும்பிவந்து அவற்றைத் தேரரிடம் தந்தார்.

22. மாலையில் அரசன் படைகள் பின் தொடர (ஏற்கனவே) சொன்ன விதமாக மகாநாக வனத்துக்குச் சென்றான்.

23. தேரர் எல்லா அஸ்தியையும் அங்கு அந்த மலை மீது வைத்தார். அதனல்தான் மிசாக மலை

சூளாமணி சேதியம்—தேவலோகத்தில் உள்ள புனிதக் கோயில்.



என்ற பெயருடைய அம்மலை, பின்னல் சேதிய பர்வதம் என்ற பெயர் பெற்றது.

24. அஸ்தி நிறைந்த பாத்திரத்தைத் தேரர் சேதிய பர்வதத்தின்மீது வைத்ததும், அவர் காரை எலும்பு அஸ்தியைக் கையில் எடுத்துக் கொண்டு, தமது சீடர்களுடன் குறிப்பிட்ட இடத்துக்குச் சென்றார்.

25. 'இது மாமுனிவரின் அஸ்தியாக இருக்குமானல் என்னுடைய வெண்கொற்றக் குடை சாயும். பட்டத்து யானை தானகை மண்டியிட்டு வணங்கும். அஸ்தியுடன் கூடிய இப்பாத்திரம்,

26. 'என் தலை மீது வந்தமரும்' என்று அரசன் மனத்துக்குள் எண்ணினன். எண்ணியபடியே எல்லாம் நடந்தது.

27. அமுத மழை பொழிந்தது போல் அரசன் மகிழ்வடைந்தான். தன் தலைமீதிருந்து பாத்திரத்தை எடுத்து யானைமீது வைத்தான்.

28. இதனல் மகிழ்வடைந்து யானை பிளிறியது. பூமி அதிர்ந்தது. யானை திரும்பி அழகிய நகரத்துக்குள் கிழக்கு வாயில் வழியாக நுழைந்தது.

29. தேரர்களும், இதர பரிவாரங்களும் பின் தொடர்ந்து வந்தனர். பின்பு தெற்குவாயில் வழியாக வெளிப்பட்டுச் சென்றது.

30. பிறகு பின்னல் தூபராமா கட்டப்பட்ட இடத்துக்கு மேற்கே சென்றது.

31. போதி மரத்தை நடுவதற்கென குறிக்கப்பட்ட இடத்தை வலம்வந்ததும், முகம் கிழக்குப் புறம் திரும்பியிருக்கச் சற்று நின்றது. அச்சமயம் ஸ்தூபம் கட்டப்பட விருந்த இடம்

கடம்ப மலர்ச் செடிகளாலும், ஆடாரிக் கொடிகளாலும் நிறைந்திருந்தது.

32. தேவர்களால் பாதுகாக்கப்பட்ட இந்த இடத்தை மக்களுள் தேவனான அரசன் சுத்தப் படுத்தி அலங்கரிக்க ஏற்பாடு செய்ததும்,

33. யானையின் முதுகில் இருந்த அஸ்தி நிறைந்த பாத்திரத்தை எடுக்கப் போனான். யானை அதற்கு இடம் கொடுக்காமல் இருக்கவே, என்ன காரணம் என்று தேரரைக் கேட்டான்.

34. 'தன் உயரத்துக்குச் சமமாக உள்ள இடத்தில் அஸ்தியை வைக்கவேண்டுமென்று அது விரும்புகிறது. எனவே தான் எடுக்க அனுமதிக்கவில்லை' என்றார் தேரர்.

35. நீர் வற்றிய அபய வாபியிலிருந்து மண்ணைக் கொண்டு வர ஏற்பாடு செய்து, அரசன் உடனே (யானையின் உயரத்துக்கு) ஒரு மேடு எழுப்பினான்.

36. இந்த மேட்டைப் பலவிதமாக அழகுபடுத்தச் செய்ததும், யானையின் முதுகிலிருந்து அஸ்தியை எடுத்து அங்கு வைத்தான்.

37. அஸ்திக்குக் காவலாக யானையை அங்கேயே இருக்கச் செய்து விட்டு, அஸ்திக்காக ஸ்தூபத்தைக் கட்டுவதில் மனம் லயித்திருந்த மன்னன்,

38. விரைவாகக் கற்களைத் தயார் செய்யுமாறு பலருக்குக் கட்டளையிட்டான். இதற்காக பவித்திரமான ஒரு விழா நடத்த வேண்டுமென்று எண்ணிக்கொண்டே மந்திரிகளுடன் நகருக்குத் திரும்பினான்.

39. மஹிந்த தேரர் தமது சீடர்களுடன் அழகிய மகாமேக வனத்துக்குச் சென்று அங்கு தங்கினார்.



40. இரவு முழுவதும் யானை அந்த இடத்தைச் சுற்றி வந்து அஸ்தியைக் காவல் காத்தது. பகலில் அஸ்தியுடன் போதிமரத்தை நடுவதற்குக் குறிப்பிடப்பட்ட இடத்தில் நின்று கொண்டிருந்தது.

41. தேரரின் விருப்பத்துக்கிணங்க, அரசன் ஸ்தூபத்தை அந்த மேட்டின்மீது முழங்கால் உயரம் கட்டியதும்,

42. அதில் அஸ்தியை வைப்பதற்கான விழா கொண்டாடப் போவது பற்றி நாடெங்கும் அறிவிக்கச் செய்தான். விழாவுக்கு எல்லா இடங்களிலிருந்தும் மக்கள் திரளாக வந்து கூடினர்.

43. சுற்றிலும் மக்கள் சூழ்ந்திருக்க, அஸ்தி யானையின் முதுகிலிருந்து ஆகாயத்தில் மேலெழும்பி எல்லோரும் பார்க்கும்படியாகக் காற்றில் மிதந்தது.

44. எட்டுப் பனை உயரத்தில் நின்ற அதைப் பார்த்து மக்கள் வியப்பினால் திகைத்தனர். இரண்டும் ஓரிடத்தில் தோன்றும் * அதிசயம் அவர்களுக்கு மயிர்க்கூச்செறியச் செய்தது.

45. அதிலிருந்து வந்த ஒளியும், பொழிந்த நீரும் இலங்கை முழுவதும் பரவிச் செழித்தது.

46. புத்தர் நிர்வாணப்படுக்கையில் கிடந்தபோது, ஐந்து கண் படைத்த அவர் ஐந்து உயரிய தீர்மானங்களைச் செய்து கொண்டார்.

47. 'அசோகன் கைப்பட்டதும் தானாக துண்டித்துக் கொள்ளும் போதிமரத்தின் தென்புறக்

* ஒன்றுக்கொன்று விரோதமான இரண்டை ஒரே இடத்தில் சேர்த்துக் காட்டுவது. உதாரணமாக நீரும், நெருப்பும். புத்தர் இந்த அற்புதத்தைப் பலமுறை செய்து காட்டியிருக்கிறார்.

கிளை தானாகத் தங்கத் தொட்டியில் சென்றடையும்.

48. ‘அவ்வாறு அடைந்ததும் அக்கிளை உலக முழுவதும் ஒளி பரப்பும். அதன் இலைகள், கனிகளிலிருந்து ஆறு வண்ணத்தில் ஒளிக்கதிர்கள் வெளிப்படும்.

49. ‘பின்பு இப்புனித விருட்சம் தொட்டியுடன் பனிப்பகுதியில் ஏழு தினங்களுக்கு யார் கண்ணிலும் படாமல் இருக்கும்.

50. ‘என்னுடைய வலது காரை எலும்பின் அஸ்தி தூபராமாவில் வைக்கப்பட்டால் ஆகாயத்தில் எழும்பி இரட்டைத்தோற்ற அற்புதத்தைக் காட்டும்.

51. ‘என்னுடைய அஸ்தி இலங்கையின் அணி போன்ற ஹேமமாலிக சேதியத்தில் வைக்கப்பட்டால் அது புத்தருடைய உருவத்தை எடுத்துக் கொள்ளும்.

52. ‘மேலெழும்பி, காற்றில் மிதந்து இரட்டைத் தோற்ற அற்புதத்தைச் செய்து காட்டியபின் அதற்குரிய இடத்தையடையும்’

53. இவ்வாறு ததாகதர் ஐந்து தீர்மானங்களைச் செய்து கொண்டிருந்தார். அதனால்தான் அந்த அதிசயம் இப்போது நிகழ்ந்தது.

54. ஆகாயத்திலிருந்து கீழிறங்கி அஸ்தி அரசனுடைய தலைமீதமர்ந்தது. மகிழ்வடைந்தவனாகி அரசன் அதையெடுத்து சேதியத்தில் வைத்தான்.

55. அஸ்தி சேதியத்தில் வைக்கப்பட்டவுடனேயே பூமி அதிர்ந்து அனைவரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தியது.



56. இவ்வாறாக, புத்தர்கள் புரிந்து கொள்ள முடியாதவர்கள். புத்தர்களுடைய இயற்கையும் புரிந்து கொள்ள முடியாதது. புரிந்து கொள்ள முடியாதவரிடம் நம்பிக்கை கொண்டவர்கள் பெறும் பலனும் புரிந்து கொள்ள முடியாதது.

57. மக்கள் இந்த அதிசயத்தைப் பார்த்ததும் அவர்களுக்குப் புத்தரிடம் நம்பிக்கை உண்டாயிற்று. அரசனுடைய தம்பியும், மாமுனிவரிடம் நம்பிக்கை கொண்டவனுமான மத்தபயன்,

58. அரசனுடைய அனுமதியை வேண்டிப் பெற்று, தீட்சைசெய்து கொண்டு துறவு பூண்டான். அவனுடன் ஆயிரம் பேர் துறவை மேற்கொண்டனர்.

59. சேதாவி கிராமத்திலிருந்தும், துவாரமண்டலத்திலிருந்தும், விஹாரபீஜத்திலிருந்தும், கலகாபீடத்திலிருந்தும்,

60. உபதீச கிராமத்திலிருந்தும் — இந்த ஒவ்வொரு ஊரிலிருந்தும் ததாகதரிடம் நம்பிக்கை ஏற்பட்ட ஐநூறு இளைஞர்கள் மகிழ்வுடன் முன்வந்து துறவுபூண்டனர்.

61. நகரிலும், நகரத்துக்கு வெளியிலுமிருந்தும் புத்த தர்மத்தை ஏற்றுக்கொண்டு துறவு பூண்டவர்களுடைய எண்ணிக்கை முப்பதாயிரம் ஆயிற்று.

62. அரசன் அழகிய ஸ்தூபத்தை தூபராமாவில் கட்டி முடித்ததும், நிரந்தரமாக அதற்கு ஏராளமான அணிகளை வழங்கி வழிபடச் செய்தான்.

63. அரச குடும்பப் பெண்கள், பிரபுக்கள், மந்திரிகள், நகர மக்கள், கிராம மக்கள் ஆகியோர் ஒவ்வொருவரும் தங்கள் காணிக்கையைக் கொணர்ந்து சமர்ப்பித்தனர்.

64. இங்கே அரசன் ஒரு விஹாரத்தைக் கட்டினன். இதனுடைய ஸ்தூபம் ஏற்கனவே அங்கு கட்டப்பட்டு விட்டது. அதன் காரணமாகவே இந்த விஹாரத்துக்கு தூபராமா என்ற பெயர் வழங்கலாயிற்று.

65. ஏற்கனவே நிர்வாணமடைந்து விட்ட உலக நாதர், தமது உடலின் அஸ்திமூலம் இவ்வாருக மனித குலத்துக்கு எல்லையற்ற அருள் பொழிந்து கொண்டிருந்தார். புத்தர் இன்னும் உயிரோடு இருக்கும்போது அது பற்றிப் பேச்சு எது?

**மகாவம்சத்தில் பதினேழாவது அத்தியாயமான அஸ்தி வருகை முற்றும்**



### பதினெட்டாவது அத்தியாயம்

## மகாபோதி விருட்சத்தை பெறுதல்

1. போதி விருட்சத்தையும், தேரியையும் கேட்டு வர ஆள் அனுப்ப வேண்டும் என்று தேரர் கூறியிருந்ததை அரசன் நினைவுபடுத்திக் கொண்டான்.

2. மழைக் காலத்தில் ஒருநாள்,அவன் தன்னுடைய நகரில் தேரருடன் உட்கார்ந்து கொண்டிருந்த போது, மந்திரிகளுடனும் கலந்து ஆலோசித்தான்.

3. பிறகு அவ்வேலையைத் தன்னுடைய சொந்த மருமகனும், மந்திரியுமான அரிதன் என்பவனிடம் ஒப்படைத்தான். இது விஷயமாக யோசனை செய்துவிட்டு அவனுக்குச் சொல்லியனுப்பினன்.

4. 'தர்ம அசோகனிடம் சென்று போதி விருட்சத்தையும், சங்கமித்தையையும் பெற்று வர வேண்டும். உன்னல் போகமுடியுமா?' என்று கேட்டான்.

5. 'அரசே!நான் திரும்பி வந்ததும் துறவுபூண அனுமதித்தால் என்னல் அவற்றைப் பெற்று வரமுடியும்?' என்ருன் அரிதன்.

6. 'அப்படியே யாகுக' என்று கூறி, அரசன் அவனை அங்கு அனுப்பி வைத்தான். அவன் தேரருடைய அனுமதியையும் பெற்றுக் கொண்டான்.

7. ஐப்பசி மாதம். சுக்கில பட்சம் இரண்டாவது நாள் உற்சாகம் பொங்க அவன் புறப்பட்டான்.

64. ஜம்பு கோளத்தில் கப்பல் ஏறி, மகாசமுத்திரத்தைக் கடந்து, தேரருடைய சக்தியால் புறப்பட்ட அன்றே அழகியதான புஷ்பபுரத்துக்கு வந்து சேர்ந்தான்.

9. ராணி அனுலாவும், அவளது தோழிகள் ஐநூறு பேரும், அந்தப்புரப் பெண்கள் ஐநூறு பேரும்,

10. தசசீலங்களை ஏற்றுக் கொண்டு, பக்தியுடன் மஞ்சள் உடைதரித்து தீட்சை பெறுவதற்காகக் கடும் நியதிகளுடன் தேரியின் வருகையை எதிர்பார்த்துக் காத்திருந்தவர்களாக,

11. நகரின் ஒருபுறத்தில் அரசன் கட்டிக்கொடுத்த அழகிய மடத்தில் புனிதவாழ்வு நடத்தி வந்தார்கள்.

12. பாமரர்களான இப்பெண்கள் வசித்த மடம் ஆகையால் இதற்கு இலங்கையில் உபாசிகா விஹாரம் என்ற பெயர் வழங்குவதாயிற்று.

13. அரசன் சொல்லியனுப்பியதை மகாரிதன் தர்ம அசோகனிடம் தெரிவித்து, தேரர் அனுப்பிய செய்தியையும் கூறினன்.

14. 'தங்கள் நண்பனுகிய அரசன் தேவனம்பிரியனுடைய தம்பி மனைவி, கடுமையான விரதங்

**உபாசிகா விஹாரம்** :—தீட்சை பெருத பெண் துறவிகள் மடம்.

**தசசீலங்கள்** :—1. கொல்லாமை. 2. திருடாமை. 3. கற்புப் பிறழாமை. 4. பொய் சொல்லாதிருத்தல். 5. கள்ளுண்ணுமை. 6. குறிப்பிட்ட நேரத்தில் மட்டும் உணவு கொள்ளுதல். 7. உலக இன்பங்களைத் துறத்தல். 8. வாசனைத் திரவியங்களையோ, ஆபரணங்களையோ உபயோகிக்காமல் இருத்தல். 9. உயரமான அல்லது அலங்காரமான படுக்கையில் தூங்காமல் இருப்பது. 10. தங்கம், வெள்ளியை ஏற்காமல் இருப்பது.



களை மேற்கொண்டு தீட்சைபெறக் காத்திருக்கிருள்.

15. 'அவளுக்குத் தீட்சையளிப்பதற்காக பிக்குணி சங்கமித்திரையையும், அவளுடன் போதி மரத்தின் தென்புறக்கிளையையும் அனுப்பி வைக்க வேண்டும்'.

16. தேரர் சொல்லியனுப்பியதற் கிணங்க, அதே விஷயத்தை அவன் தேரியிடமும் தெரிவித்தான். தேரி தந்தையிடம் சென்று தேரருடைய நோக்கத்தைக் கூறினள்.

17. 'மகனையும், பேரனையும்* பிரிந்து ஏற்கனவே துயரப்படும் நான், உன்னையும் காண முடியாது போனல், அத்துயரை எப்படித் தாங்குவேன்?' என்றான் அசோகன்.

18. 'மகாராஜா! சகோதரனுடைய வார்த்தைக்கு நான் மதிப்புக் கொடுக்கவேண்டும். அங்கே தீட்சைபெறக் காத்திருப்போர் பலர். எனவே, நான் போகத்தான் வேண்டும்' என்ருள் அவள்.

19. 'மகா போதி மரத்தைக் கத்தியால் வெட்டிக் காயப்படுத்தக் கூடாது. அதன் கிளையை எப்படி நான் கொடுப்பேன்?' என்ருன் அரசன்.

20. பிறகு அவன் மந்திரி மகாதேவனுடைய யோசனைப்படி பிக்குகளின் சபையைக் கூட்டினன். அவர்களை முறைப்படி உபசரித்துவிட்டு,

21. 'போதி மரத்தை இலங்கைக்கு அனுப்பலாமா?' என்று அவர்களிடம் கேட்டான். 'உடனே அனுப்ப வேண்டும்' என்று மாகாளிபுத்திர தேரர் பதிலளித்தார்.

*மகன்—மஹிந்தன். பேரன்—சுமணன்; சங்கமித்திரையின் மகன்

22. ஐந்து கண் படைத்த புத்தர் செய்து கொண்ட ஐந்து தீர்மானங்களைப் பற்றியும் அவர் அரசனுக்கு எடுத்து உரைத்தார்.

23. அரசன் இதைக் கேட்டதும் ஆனந்தமடைந்தான். போதி விருட்சம் இருக்கும் இடத்துக்குச் செல்லும் ஏழு யோஜனை நீளமுள்ள சாலையைக் கவனமாகச் சுத்தப்படுத்திப் பலவிதமாக அலங்கரிக்கச் செய்தான்.

24. அழகான ஒரு தொட்டி செய்யத் தங்கம் கொண்டுவர ஏற்பாடு செய்தான். பொற்கொல்லன் உருவில் விஸ்வகர்மா அரசன்முன் வந்தார்.

25. 'தொட்டியை எவ்வளவு பெரியதாகச் செய்ய வேண்டும்?' என்று கேட்டார். 'உன்னிஷ்டம் போல் அளவை முடிவு செய்துகொள்' என்றான் அரசன்.

26. பொன்னைப் பெற்றுக்கொண்ட விஸ்வ கர்மா அதே கணத்தில் தன் கையினால் அதை உருக்கி வார்த்துத் தொட்டியை செய்து விட்டுப் போய்விட்டார்.

27. ஒன்பது முழச் சுற்றளவும், ஐந்து முழம் ஆழமும், மூன்று முழம் விட்டமும், எட்டு விரற்கடையளவு கனமும் உடைய அழகிய அத்தொட்டியை அரசன் பெற்றுக்கொண்டான்.

28. அதன் மேல்முனை யானைக்குட்டியின் துதிக்கை அளவு இருந்தது. உதய சூரியனைப் போல அது ஒளி வீசியது.

29. அரசனுடைய நால்வகைப் படைகளும் ஏழு யோஜனை நீளத்துக்கும், மூன்று யோஜனை அகலத்துக்கும் அணி வகுத்துச் செல்ல, ஏராளமான பிக்குகளுடன் மகா போதி விருட்சத்திடம் சென்றான்.



30. பலவிதமான அணிகள் பூட்டப்பட்டுப் போதி மரம் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அவற்றில் பதித்திருந்த கற்கள் ஒளி வீசின. விதவிதமான நிறங்களில் மாலைகள் சூட்டப்பட்டிருந்தன.

31. மரத்தின் மேல் மலர் மாரி பொழிந்தது. இன்னிசை முழங்கியது. மேலே வெயில் படாமல் கூடாரம் போடப்பட்டிருந்தது.

32. ஆயிரம் மகா தேரர்களுடன் அரசன் அதை வலம் வந்தான். ஆயிரத்துக்கும் மேற்பட்ட இளவரசர்கள் அங்கு கூடியிருந்தனர்.

33. கை கூப்பி வணங்கி, அரசன் போதி மரத்தை நிமிர்ந்து பார்த்தான்.

34. பின்னர் அதன் தென்புறத்திலிருந்து கிளைகள் மறைந்து விட்டன. நான்கு முழ நீள முளை மட்டுமே அங்கிருந்தது.

35. இந்த அதிசயத்தைக் கண்ட அரசன் மகிழ்ச்சி பொங்கக் கத்தினான்: 'இந்தப் போதி மரத்துக்கு அரச பதவியை அளித்து அதை வணங்குகிறேன்' என்றான்.

36. பிறகு போதி மரத்துக்கு தன்னுடைய பரந்த நாட்டின் அரசனாகப் பட்டாபிஷேகம் செய்து வைத்தான். மலர்களை அர்ச்சித்து அம்மரத்தை வழிபட்ட பின்பு, மும்முறை வலம் வந்தான்.

37. எட்டு இடங்களில் கைகூப்பி வணங்கினான். பிறகு தங்கத்தொட்டியை ஒரு ஆசனத்தில் வைக்கச் சொன்னான்.

38. அந்த ஆசனம் தங்கம் வைத்து இழைத்தது. பலவித ரத்தினங்கள் பதிப்பிக்கப் பெற்றது. ஏறுவதற்கு எளிதாக அமைந்தது. கிளையின் உயரத்துக்குச் சரியாகப் புனிதமான அக்கிளை

யைப்பெற்றுக்கொள்வதற்காக ஏறி, அரசன் நின்று கொண்டான்.

39. தங்கப் பிடிபோட்ட செந்தூரத் துண்டினுல் கிளையைச் சுற்றி ஒரு கோடு கிழித்தான். பின் பவித்திரமான இப்பிரகடனத்தைச் செய்தான்:

40. 'போதி விருட்சம் இங்கிருந்து இலங்கைக்குப் போவது எவ்வளவு உண்மையோ, புத்த மார்க்கத்தில் உறுதி குலையாமல் நான் இருப்பேன் என்பது எந்த அளவு உண்மையோ,

41. 'அதைப்போல் இந்தப் போதிமரத்தின் தென்புறக்கிளை தானுகத் துண்டுபட்டு இத்தொட்டியில் இடம் பெறுவதாக.'

42. பிறகு மகாபோதி மரக்கிளை கோடுகிழித்த இடத்தில் தானுகத் துண்டுபட்டது. மணம் நிரம்பிய மண் உள்ள தொட்டிக்கு மேலே மிதந்தது.

43. முதலில் வரைந்த கோட்டுக்கு மேலே மூன்று விரற்கடைக்கு மேல், சுற்றிலும் பத்து கோடுகள் கிழித்தான் அரசன்.

44. முதற் கோட்டிலிருந்து பத்து ஆணி வேர்கள் தோன்றின. பின்னுல் கீரப்பட்ட கோடுகள் ஒவ்வொன்றிலிருந்தும் பத்துக் கிளைவேர்கள் தோன்றி வலைபோல் பின்னிக்கொண்டன.

45. இந்த அதிசயத்தைக் கண்ட மன்னன் மகிழ்ச்சிப் பெருக்கில் கத்திவிட்டான். அவனுடன் இருந்தவர்களும் பெரு மகிழ்வடைந்தனர்.

46. பிக்குகள் களிப்பினுல் துள்ளிய இதயத்துடன் எம்பெருமானை வணங்கினர்.

47. இவ்வாறுக நூறு வேர்களுடன் மகா போதி மரம் தொட்டியிலிருந்த நறுமண மண்ணில், மக்களுக்கு நம்பிக்கை ஏற்படச்செய்து, ஊன்றிக் கொண்டது.



48. தண்டு பத்து முழ நீளம் இருந்தது. அதிலே அழகான ஐந்து கிளைகள் இருந்தன. ஒவ்வொரு கிளையும் நான்கு முழ நீளம் இருந்தது. ஒவ்வொன்றிலும் ஐந்து பழங்கள் அணிசெய்தன.

49. இந்தக் கிளைகளில் ஆயிரம் சுள்ளிகள் இருந்தன. புனித போதி மரத்தின் அமைப்பு இப்படி இருந்தது.

50. போதி மரம் தானுகத் தொட்டியில் வந்து ஊன்றிக்கொண்ட அதே கணத்தில் பூமி அதிர்ந்தது. பலவிதமான அதிசயங்கள் நிகழ்ந்தன.

51. இசைக் கருவிகள் தாமாகவே இயங்கி இனிய ஓசையை எழுப்பின. தேவர்களும், பிரமர்களும் வாய் விட்டுப் பிரார்த்தித்தனர்.

52. இடி முழங்கியது. விலங்குகளும் பறவைகளும் பலவிதமாக இரைந்தன. யக்ஷர்கள் பேரொலி எழுப்பினர். பூமி அதிர்ந்தது. இந்தச் சத்தங்கள் எல்லாம் ஒன்றுசேர்ந்து ஒரே குழப்பமாக இருந்தது.

53. போதிமரத்தின் இலைகளிலிருந்தும், பழங்களிலிருந்தும் வீசிய ஆறு நிறக் கதிர்கள் பிரபஞ்ச முழுவதும் பிரகாசிக்கச் செய்தது.

54. பின்பு தொட்டியுடன் ஆகாயத்தில் எழும்பிச் சென்ற மகா போதி மரம் பனிப் பிரதேசத்தில் ஏழு தினங்களுக்கு யார் கண்ணிலும் படாமல் இருந்தது.

55. அரசன் ஆசனத்திலிருந்து கீழே இறங்கினுன். அங்கேயே தங்கி, ஏழு தினங்களுக்கு இடைவிடாது மகா போதி மரத்துக்குப் பலவிதமான காணிக்கைகள் செலுத்தினுன்.

56. அந்த வாரம் சென்றதும் பனிப்படலமும், ஒளிக்கதிர்களும் போதி மரத்துக்குள் புகுந்து மறைந்தன.

57. தெளிவான சூழ்நிலையில் தொட்டியில் ஊன்றிய புகழ்மிக்க மகாபோதி விருட்சம், மக்கள் காணத் தோற்றமளித்தது.

58. அற்புதங்கள் பல நிகழ, போதி மரம் மனித குலத்தை வியப்பில் ஆழ்த்திய வண்ணம் பூமிக்கு இறங்கி வந்தது.

59. அப்போது நடந்த பல அதிசயங்களைக் கண்டு ஆனந்தமடைந்த அரசன் மீண்டும் போதி மரத்தை வணங்கி அதற்குத் தன் ராஜ்யத்தை அளித்தான்

60. போதி மரத்துக்குப் பட்டாபிஷேகம் செய்து வணங்கிய பின்பு, அதே இடத்தில் மேலும் ஒரு வாரம் தங்கிப் பலவிதமான காணிக்கைகளைச் செலுத்தி வழிபட்டுவந்தான்.

61. ஐப்பசி மாதம், சுக்கில பட்சம், பதினைந்தாவது நாள், உபோசத தினத்தன்று அவன் மகா போதி மரத்தைப் பெற்றான்.

62. இரண்டு வாரங்களுக்குப் பிறகு ஐப்பசி மாதம், கிருஷ்ணபட்சம், பதினான்காவது நாள் உபோசத தினத்தன்று ரதாதிபதியான அரசன் அதைக் கொண்டுவந்தான்.

63. அன்றே அதை அழகிய ரதத்தில் வைத்துத் தலைநகருக்குக் கொண்டு வந்தான். அதற்காக ஒரு அழகான மண்டபம் கட்டினான்.

64. அதைப் பலவிதமாக அலங்கரித்து கார்த்திகை மாதம், சுக்கிலபட்சம், முதல் நாள் அழகியதும் பிரமாண்டமானதுமான ஒரு சால விருட்சத்தின் கிழக்குப் புறமாக மகா போதி மரத்தை வைத்தான்.



65. அதற்குத் தினந்தோறும் பலவிதமான பூசைகள் செய்தான். (விருட்சத்தைப்) பெற்றுக் கொண்ட பதினேழாவது நாள் திடீரென்று அதில் புதிய கிளைகள் தோன்றின.

66. இதனால் மகிழ்வடைந்த மன்னன், மீண்டும் ஒரு முறை மகா போதி மரத்துக்கு அரச பதவியை வழங்கி அதை வணங்கினான்.

67. போதி மரத்துக்கு அப்பேரரசன் பட்டாபிஷேகம் செய்து அரசனாகச் செய்ததும், அதற்கெனப் பலவகையான விழா நடத்த ஏற்பாடு செய்தான்.

68. புஷ்பபுரத்தில் நடந்த இவ்விழா கோலாகலமாகக் கொண்டாடப்பட்டது. தடாகத்தில் தாமரையைச் சூரியனுடைய ஒளிக் கதிர்கள் மலரச் செய்வதுபோல், புஷ்ப புரத்தில் நடந்த இவ்விழா தேவர்களுடையவும், மனிதர்களுடையவும் இதயத்தை மலரச் செய்து (புத்த மதத்தில் நம்பிக்கை ஏற்படச் செய்தது.)

**மகா வம்சத்தில் பதினெட்டாவது அத்தியாயமான மகாபோதி விருட்சத்தை பெறுதல் முற்றும்**

பத்தொன்பதாவது அத்தியாயம்

# போதி விருட்சம் வருகை

1. போதி விருட்சத்தைக் காவல் செய்வதற்காக ரதாதிபதியான அரசன் ராஜ குடும்பத்தைச் சேர்ந்த பதினெட்டுப் பேர்களையும்,

2. மந்திரிகள் குடும்பத்திலிருந்து எட்டுப் பேரை யும், பிராமண குடும்பத்திலிருந்து எட்டுப் பேரையும், வைஸ்ய குடும்பத்திலிருந்து எட்டுப் பேரையும், இடையர் குலத்திலிருந்து எட்டுப் பேரையும், தரக்க்ஷ, குலிங்க குலத்திலிருந்து ஒவ்வொருவரையும்,

3. நெசவாளர், குயவர், இதர கைத்தொழி லாளர்களிலிருந்தும்,

4. நாகர்கள், யக்ஷர்களிலிருந்தும் சிலரை நியமித் தான். பிறகு அவன் எட்டு தங்கப் பாத்தி ரத்தையும், எட்டு வெள்ளிப் பாத்திரத்தையும் *அவர்களிடம் அளித்து கங்கையில் நின்று கொண்டிருந்த கப்பலுக்கு மகா போதி மரத் தைக் கொண்டு வந்தான்.

5. தேரி சங்கமித்திரை பதினொரு பிக்குணி களுடன் வந்தாள். இவர்களையும் அரிதனையும் கப்பலில் ஏறிக்கொள்ளச் செய்த பின்பு

6. அரசன் அங்கிருந்து புறப்பட்டு விந்திய மலை யைக் கடந்து ஒரே வார காலத்தில் தாம்ர லிப்தியை வந்தடைந்தான்.

* பாத்திரங்கள் மரத்துக்குத் தண்ணீர் ஊற்றுவதற் காகத் தரப்பட்டன.

7. போதி மரத்தைப் பூஜித்த தேவர்களும், நாகர் களும், மனிதர்களும் உன்னதமான காணிக்கை களுடன் ஒரே வாரத்தில் வந்து சேர்ந்தனர்.

8. அரசன் போதி மரத்தை சமுத்திரக் கரையில் எடுத்து வைக்கச்செய்து, அதற்கு மீண்டும் ஒரு முறை அரச பதவியை அளித்து வணங்கினான்.

9. போதி மரத்துக்கு ராஜாதி ராஜனைகப் பட்டாபி ஷேகம் செய்ததும், எண்ணியதை முடிக்கும் அரசன் மார்கழி மாதம், சுக்கில பட்சம், முதல் நாள்,

10. போதி விருட்சத்துடன் செல்வதற்காக, சால விருட்சத்தினடியில் உயர் குலம் ஒவ்வொன்றி லிருந்தும் நியமிக்கப்பட்ட எட்டுப் பேர்களும் அதைத் தூக்கிக் கப்பலில் வைக்க வேண்டு மென்று கட்டளை யிட்டான்.

11. கழுத்தளவு நீர்வரை கடலில் இறங்கி அதனைக் கப்பலில் வைக்கும்படி செய்தான்.

12. பின்பு சங்கமித்திரையையும், இதர பிக்குணி களையும் கப்பலில் ஏறச் செய்த அரசன், மந்திரி மகாரிதனிடம் இவ்வாறு சொன்னான்:

13. 'மூன்று முறை அரச பதவியை அளித்துப் போதி விருட்சத்தை நான் பூஜித்தேன். அதே போல் எனது நண்பரான மன்னரும் அரச பதவி யளித்து பூஜை செய்வாராக.'

14. அரசன் இவ்வாறு சொல்லியபின்னர் கரையில் கைகூப்பி நின்றான். போதி விருட்சம் பார்வையிலிருந்து மறைவது கண்டு அவனுக் குக் கண்ணீர் பெருகியது.

15. 'பத்து வித அதிசய சக்திகளைப் படைத்த புத்தரின் மகா போதி மரம் ஒளி பரப்பிக் கொண்டு என்னை விட்டுப் போகிறதே' என்று அவன் ஏங்கினான்.

16. போதி விருட்சத்தைப் பிரிந்ததால் துக்கம் அடைந்த தர்ம அசோகன் அழுது புலம்பிக் கொண்டே தலைநகருக்குத் திரும்பினான்.

17. மகா போதி மரம் சென்ற கப்பல் கடலில் சென்றது. அதனைச் சுற்றி ஒரு யோஜனை தூரத்துக்கு அலைகள் ஓய்ந்து விட்டன.

18. பஞ்ச வர்ணங்களிலும் தாமரை மலர்கள் சுற்றிலும் மலர்ந்தன. வாத்தியங்களின் இன்னிசை காற்றில் தவழ்ந்தது.

19. தேவதைகள் பலவிதமான காணிக்கைகளை வழங்கின. போதி மரத்தையடைய நாகர்கள் மாயவேலைகளைச் செய்து பார்த்தனர்.

20. அசாதாரண சக்திகளைப் பெற்றிருந்த தேரி சங்கமித்திரை, கருடன் உருவத்தை எடுத்துக் கொண்டு நாகர்களைப் பயமுறுத்தினாள்.

21. பயந்து போன நாகர்கள் அவளைக் கெஞ்சி சமாதானம் செய்து கொள்ள வேண்டியதாயிற்று. அங்கிருந்து அவர்கள் நாகர் நாடு வரை போதி விருட்சத்துடன் வந்தார்கள்.

22. நாகர்களுடைய அரச பதவியை அதற்கு அளித்து ஒரு வார காலம் பூஜைகள் செய்தனர். பலவிதமான காணிக்கைகளைக் கொண்டுவந்து அளித்தனர்.

23. அதே தினத்தில் மகா போதி விருட்சம் (இலங்கையில்) ஜம்பு கோளத்தை வந்தடைந்தது.

24. உலகத்தின் நன்மையில் நாட்டம் கொண்ட தேவனம்பிரிய தீசன் சுமணரிடமிருந்து அது வந்து விட்டதை முன்னதாகவே அறிந்து மார்கழி மாதம் முதல் நாளிலிருந்தே,

25. அரண்மனையில் வடக்கு வாசலிலிருந்து ஜம்பு கோளம் வரை உள்ள சாலையைத் தயாராக அலங்காரம் செய்து வைக்க ஏற்பாடு செய்தான்.



26. போதி மரத்தின் வருகையை எதிர்பார்த்துக் கொண்டு கடற்கரையிலேயே வசித்து வந்தான். இந்த இடத்தில் தான் பின்னால் சமுத்ர பர்ணசாலை ஏற்பட்டது. தேரியின் அதிசய சக்தியால் போதி விருட்சம் வருவதை அவனால் காண முடிந்தது.

27. இந்த அதிசயத்தை உலகமறியச் செய்வதற்காக அந்த இடத்தில் கட்டப்பட்ட மண்டபத்துக்கு இங்கு சமுத்ர பர்ணசாலை என்னும் பெயர் வழங்குவதாயிற்று.

28. மகா தேரருடைய சக்தியால் அரசன் தன் பரிவாரங்களுடனும், இதர தேவர்களுடனும் அதே தினத்தில் ஜம்பு கோளத்துக்கு வந்து சேர்ந்தான்.

29. போதி மரம் வந்து விட்டதால் பெரு மகிழ்வடைந்த மன்னன் உற்சாகம் பொங்கக் கத்திக் கொண்டு கழுத்தளவு நீரில் இறங்கிச்சென்றான்.

30. பிறகு உயர் குடும்பத்தைச் சேர்ந்த பதினாறு பேர்களுடன் போதி மரத்தை எடுத்துத் தலையில் வைத்துக்கொண்ட அரசன், கரையில் அழகான கூடாரம் அமைத்து அதற்குள் வைத்தான்.

31. இலங்கையின் அரசுரிமையை அதற்கு அளித்து இலங்கை மன்னன் அதனை வழிபட்டான். பிறகு நிர்வாகப் பொறுப்பை பதினாறு பேரிடம் விட்டுவிட்டு,

32. காவல் காக்கும் பணியைத் தானே மேற்கொண்டு அங்கு நின்றான். மூன்று தினங்களுக்குப் புனிதமான பல காரியங்கள் நாடெங்கும் நடைபெறுவதற்கு உத்தரவிட்டான்.

33. பத்தாவது நாள் அவன் மகா போதி மரத்தை அழகிய ரதத்தில் வைத்து எடுத்து வந்தான்.

34. உகந்த இடம் எது என்பதை அறிந்த மன்னன், பின்னல் கிழக்கு மடம் ஏற்பட்ட இடத்தில் அதை வைத்தான். பிக்குகளுக்கும், மற்றவர் களுக்கும் காலை உணவு அளிக்க ஏற்பாடு செய்தான்.

35. இங்கு மஹிந்த தேரர் அரசனுக்கு, பத்து வித சக்திகளைப் பெற்ற புத்தர் நாகர்களை அடக்கிய விவரம் பற்றிக் கூறினர்.

36. அரசன், தேரரிடமிருந்து இதை யறிந்ததும் புத்தர் காலடிபட்ட எல்லா இடங்களிலும் நினைவுச் சின்னங்கள் ஏற்படுத்தச் செய்தான்.

37. பிராமணர் திவாகருடைய கிராமத்து வாயிலில் போதி விருட்சத்தைக் கீழே வைக்கச் செய் தான். எல்லா இடங்களுக்கும் அதைத் தொடர்ந்து சென்ருன்.

38. வழியெல்லாம் வெண்மணலையும், மலர்களையும் தூவிக்கொண்டு சென்ருன். வீதிகள் யாவும் அலங்காரமாகத் திகழ்ந்தன.

39. இரவு பகலாக இடைவிடாத பூஜைகளைச் செய்து கொண்டு, போதி விருட்சத்தைப் பதினன்காவது நாள் அனுராதபுரத்துக்கருகே கொண்டு வந்தான்.

40. சிங்காரமாக அலங்காரம் செய்யப்பட்டிருந்த வடக்கு வாயில் வழியாக நகரத்துக்குள் நுழைந்து, பின் தெற்கு வாயில் வழியாக வெளிப்பட்டு,

41. நான்கு புத்தர்களாலும் புனிதமடைந்த மகா மேக வனத்தை அடைந்தான்.



42. முன்பு போதி விருட்சம் இருந்த இடத்துக்கு—சுமனருடைய கட்டளைப்படி தயாரிக்கப்பட் டிருந்த ஸ்தலத்துக்குப் போதி விருட்சத்தைக் கொண்டு வந்தான்.

43. ராஜ குடும்பத்தைச் சேர்ந்த பதினறு பேர் களுடன் சேர்ந்து ரதத்திலிருந்து போதி விருட்சத்தை இறக்கிக் கீழே தரையில் வைத் தான்.

44. பிடித்துக் கொண்டிருந்த கையை அவன் விட்ட வுடனேயே அது ஆகாயத்தில் எண்பது முழ உயரத்துக்கு எழுந்து காற்றில் மிதந்தது. அதிலிருந்து ஆறு நிறங்களில் ஒளிக் கதிர்கள் நாலாபுறமும் பரவின.

45. தீவு முழுவதும் பரவி பிரம்மலோகத்தையும் அடைந்த இக் கதிர்கள் சூரியாஸ்தமனம் வரை நீடித்தன.

46. இந்த அதிசயத்தைக் கண்டு பத்தாயிரம் பேருக்கு மனதில் நம்பிக்கை பிறந்தது. உள்ளொளி பெற்று அவர்கள் அங்கேயே தீட்சை பெற்றுக் கொண்டனர்.

47. சூரியாஸ்தமனத்தில் ஆகாயத்திலிருந்து போதி மரம் கீழே இறங்கி வந்தது. ரோஹிணி நட்சத் திரத்தின் கீழ் பூமியில் உறுதியாக நின்றது.

48. அப்போது பூமி அதிர்ந்தது. தொட்டியின் விளிம்புக்கும் மேலாக வளர்ந்திருந்த வேர்கள் தொட்டியை மூடியவாறு பூமியில் ஊன்றிக் கொண்டன.

49. மகா போதி விருட்சம் தன்னுடைய இடத்தில் நிலைபெற்றதும், நாடெங்கிலுமிருந்து அங்கு வந்து கூடியிருந்த மக்கள் அதற்கு மலர் களாலும், வாசனைப் பொருள்களாலும் அர்ச்சனை செய்து வழிபட்டனர்.

50. திடீரென ஒரு பெரிய மேகம் மழையைப் பெய்வித்தது. பனிப் பிரதேசத்திலிருந்து வந்த குளிர்ந்த அடர்ந்த பனி எல்லாப்புறமும் போதி மரத்தைச் சூழ்ந்து கொண்டது.

51. பனியில் மறைந்து கண்ணில் படாமல் ஏழு தினங்களுக்கு மக்கள் மனதில் நம்பிக்கை ஒளி ஊட்டிக் கொண்டு மகா போதி விருட்சம் அங்கே இருந்தது.

52. வார முடிவில் மேகங்கள் எல்லாம் மறைந்து விட்டன. போதி விருட்சமும், ஆறு வண்ண ஒளிக் கதிர்களும் கண்களுக்குப் புலப்படுவதாயிற்று.

53. மஹிந்த தேரரும், சங்கமித்திரையும், அவர்களைச் சேர்ந்தவர்களும், அரசனும், அவனைச் சேர்ந்தவர்களும் அங்கு வந்து சேர்ந்தனர்.

54. கஜர காமா, சந்தன காமா, ஆகியவற்றின் பிரபுக்களும், பிராமணர் திவாகரும், தீவில் வசித்த மக்களும்,

55. போதி மரத்துக்கு விழா நடத்துவதற்காக தேவர்களுடைய சக்தியால் அங்கு வந்து கூடினர்.

56. சுற்றிலும் கூடியிருந்தவர்களை வியப்பிலாழ்த்தும் அதிசயம் ஒன்று அப்போது நிகழ்ந்தது. அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும் போதே கிழக்குப்புறக் கிளையில் குற்றமில்லாத ஒரு கனி தோன்றியது.

57. அது தானகக் கீழே விழுந்ததும் தேரர் அதை எடுத்து நடுவதற்காக அரசனிடம் கொடுத்தார். நறுமணமுள்ள மண் நிரம்பிய தங்கத் தொட்டியைப் பின்னல் மகா சான ஏற்பட்ட இடத்தில் வைத்து, அரசன் அதில் அதை நட்டான்.



58. எல்லோரும் பார்த்துக் கொண்டிருக்கும் போதே அதிலிருந்து எட்டு வேர்கள் கிளம்பின. பின்பு நான்கு முழ உயரம் வளர்ந்த இளம் போதி மரங்கள் அங்கே நின்றன.

59. இளம் போதி மரங்களைக் கண்டதும் அரசன் புளகாங்கிதமடைந்தவனாக ஒரு வெண் கொற்றக் குடையைப் பரிசாகக் கொடுத்து அதனை வழிபட்டான். பின்பு அவைகளுக்கு ராஜ்யாபிஷேகம் செய்து வைத்தான்.

60. இந்த எட்டு போதிக் கன்றுகளில் ஒன்று, புனித போதி விருட்சம் ஜம்பு கோளத்தில் கப்பலிலிருந்து இறங்கியதும் இந்த இடத்தில் நடப்பட்டது.

61. ஒன்று பிராமணர் திவாகருடைய கிராமத்தில் நடப்பட்டது. மற்றொன்று தூபராமாவிலும், இன்னொன்று இஸார சமண ராமாவிலும், வேறொன்று பிரதம ஸ்தூபத்தின் முன்பும்,

62. ஒன்று சேதிய பர்வத ஆராமாவிலும், மற்றொன்று கஜரகாமாவிலும், வேறொன்று சந்தன காமாவிலும் நடப்பட்டது.

63. பின்னல் நான்கு கிளைகளில் தோன்றிய பழங்களிலிருந்து கிளைத்த முப்பத்திரண்டு கன்றுகளும் இங்கு மங்குமாக விஹாரங்களில் வட்டமாக ஒரு யோஜனை தூரத்துக்கு நடப்பட்டன.

64. இவ்வாருகத் தீவில் வசிக்கும் மக்களுடைய விமோசனத்துக்காக, சம சம்புத்தருடைய (அருளால் மகிமை பெற்ற விருட்சங்களின் அரசனை) போதி மரம் நடப்பட்டதும்,

65. அனுலாவும், அவளைச் சேர்ந்தவர்களும் சங்கமித்திரையிடம் தீட்சை பெற்று அரஹந்தர்களாயினர்.

66. அரிதனும், அவனைச் சேர்ந்த ஐநூறு பேர்களுடன் தேரரிடம் தீட்சை பெற்று அரஹந்தர்களாயினர்.

67. இங்கே போதி விருட்சத்தைக் கொண்டுவந்த, வணிகக் குழுவைச் சேர்ந்த எட்டுபேரும், அது முதல் 'போதி விருட்சக் குழு' என்றழைக்கப் படலாயினர்.

68. உபாசிகா விஹாரம் எனப் பெயர் பெற்ற மடத்தில் மகாதேரி சங்கமித்திரை தன்னைச் சேர்ந்தவர்களுடன் தங்கியிருந்தாள்.

69. அங்கு அவள் பனிரெண்டு கட்டிடங்களைக் கட்ட ஏற்பாடு செய்தாள். இவற்றில் மூன்று மற்றவைகளை விட முக்கியமானதாகும்.

70. இந்த முக்கியமான கட்டிடங்கள் ஒன்றில் போதி மரம் வந்த கப்பலின் பாய்மரத்தை வைக்கச் செய்தாள். இன்னொன்றில் அக்கப்பலின் சுக்கானையும், வேறொன்றில் துடுப்புகளையும் வைக்கச் செய்தாள். இதை யொட்டி அக் கட்டிடங்களுக்குப் பெயர் ஏற்பட்டது.

71. வேறு பிரிவுகள் ஏற்பட்டபோதும், இந்தப் பனிரெண்டு கட்டிடங்களும் எப்போதும் ஹதால் ஹக பிக்குணிகளால் உபயோகப் படுத்தப்பட்டு வந்தன.

72. தன்னிச்சையாகத் திரிந்து கொண்டிருப்பது பட்டத்து யானையின் வழக்கம்.

73. நகரின் ஒரு புறமிருந்த கதம்பமலர் காட்டின் எல்லையில், குளிர்ந்த சோலையில் தங்கியிருப்பதை அது விரும்பியது. யானைக்கு இது



பிடித்தமான இடமாக இருந்தது என்பதால் அந்த இடத்தில், இரவில் யானையைக் கட்டுவதற்காக ஒரு கம்பத்தை நட்டு வைத்தனர்.

74. ஒரு நாள் யானை தனக்களிக்கப்பட்ட புல்லைத் தின்ன மறுத்தது. இதற்குக் காரணம் என்னவென்று தீவை மாற்றிய தேரரை அரசன் கேட்டான்.

75. 'கடம்ப மலர்க் காட்டில் ஒரு ஸ்தூபத்தைக் கட்ட வேண்டும் என்று யானை விரும்புகிறது' என்று தேரர் அரசரிடம் கூறினர்.

76. மக்களின் நலனிலேயே எப்போதும் நாட்டம் கொண்ட மன்னன் அதே இடத்தில் விரைவாக ஒரு ஸ்தூபம் கட்டுவதற்கு ஏற்பாடு செய்தான்.

77. மகாதேரி சங்கமித்திரை, அவள் தங்கியிருந்த விஹாரையில் கூட்டம் அதிகமாக இருந்ததால் அமைதியான ஒரு இடத்தை விரும்பினாள்.

78. புத்த மார்க்கத்தைப் பரப்புவதில் நாட்டம் கொண்டவளும், பிக்குணிகளின் நலனில் அக்கறை உள்ளவளும், பிக்குணிகளுக்கு வேறு இடம் வேண்டுமென விரும்பியவளும்,

79. உகந்த இடத்தைத் தேர்ந்தெடுக்கும் திறமை பெற்றவளும், குற்றமற்றவளுமான அவள், ஒதுங்கி யிருந்ததால் சிறப்பாகத் திகழ்ந்த சேதிய விஹாரத்துக்குச் சென்று நாள் முழுவதும் தங்கினாள்.

80. தேரியை வணங்கிச் செல்வதற்காக மடத்துக்கு வந்த அரசன், அவள் அங்கிருந்து சேதியத்துக்குப் போய்விட்டாள் என்பதை யறிந்தான்.

81. அவள் சென்ற இடத்துக்கு அவனும் சென்று வணக்கம் தெரிவித்துவிட்டுப் பேசிக் கொண்டிருந்தான். அவள் அங்கு வந்ததற்கான காரணத்தை அவளிடமிருந்து அறிந்தான்.

82. பிறகு பிறருடைய விருப்பத்தை யறிந்து நடக்கும் பேரரசனை தேவனும்பிரிய தீசன் ஸ்தூபத்தைச் சுற்றி பிக்குணிகளுக்காகச் சிறந்த முறையில் ஒரு மடம் கட்டுமாறு கட்டளையிட்டான்.

83. யானை கட்டிய முளைக்கருகில் இந்த பிக்குணிகளுக்கான மடம் கட்டப்பட்டதால், இதற்கு ஹதால் ஹக விஹாரம் என்ற பெயர் அது முதல் வழங்குவதாயிற்று.

84. பேரறிவு படைத்தவளும், எல்லோராலும் விரும்பப் பட்டவளுமான தேரி சங்கமித்திரை பிக்குணிகளுக்கான இந்த ரம்யமான மடத்தில் தனது வாசத்தை அமைத்துக் கொண்டாள்.

85. இவ்வாருக இலங்கை வாழ் மக்களுக்கு நன்மை செய்து கொண்டும், தர்மத்தைப் பரப்பிக் கொண்டும் விருட்சங்களின் ராஜா–மகா போதி மரம் இலங்கைத் தீவில் மகாமேக வனத்தில் அதிசய சக்திகளுடன் வெகு காலம் வரை நிலைத்திருந்தது.

**மகா வம்சத்தில் பத்தொன்பதாவது அத்தியாயமான போதி விருட்சம் வருகை முற்றும்**

ஹதால் ஹக - இதற்கு யானை-கம்பம்—பிக்குணிகள் என்று பொருள்.

## இருபதாவது அத்தியாயம்

# தேரருடைய நிர்வாணம்

1. தர்ம அசோகன் ஆட்சியில் பதினெட்டாவது வருஷம் மகா மேக வனராமாவில் மகா போதி விருட்சம் நடப்பட்டது.

2. அதற்குப் பனிரெண்டு வருடங்களுக்குப் பிறகு அரசனுடைய அருமை மனைவி அசந்தி மித்தை-சம்புத்தரிடம் விசுவாசமான நம்பிக்கை கொண்டவள் – காலமாளுள்.

3. இதற்கு நான்கு வருடங்களுக்குப் பிறகு மன்னன் தர்ம அசோகன் துரோகியான தீசரட்சையை ராணியின் ஸ்தானத்துக்கு உயர்த்தினன்.

4. இதற்கு மூன்ருவது வருடம் தன் அழகில் கர்வம் கொண்ட இந்த மூடப்பெண், 'என்னை விட்டுவிட்டு அரசன் இந்தப் போதி மரத்தை வணங்கிக் கொண்டிருக்கிருனே' என்றெண்ணிளுள்.

5. அசூயையால் தூண்டப்பட்ட அவள், தனக்குத் தானே தீங்கு தேடிக் கொள்ளும் வகையில் மந்து முள்ளைக் குத்தி மகா போதி விருட்சத்தைப் பட்டுப்போகும்படி செய்தாள்.

6. இதற்குப்பின் நான்காவது வருடம் பெரும் புகழ் பெற்ற தர்ம அசோகன் மரணத்தின் வலிமைக்கு இரையாளுன். இவை யாவும் சேர்ந்து முப்பத்தேழு வருடமாகிறது.

7. சத்திய மார்க்கத்தின் வளர்ச்சியில் பெருமகிழ் வடைந்த மன்னன் தேவனும்பிரிய தீசன்

முறைப்படி தான் மேற்கொண்ட மகா விஹாரத்தைக் கட்டி முடித்தான்.

8. அதேபோல் சேதிய பர்வதத்திலும், தூபராமாவிலும் விஹாரைகளைக் கட்டி முடித்ததும், தீவுக்கு வாழ்வளித்தவரும், கேள்விகளுக்குப் பதில் சொல்வதில் வல்லவருமான தேரரை இவ்வாறு கேட்டான் :

9. 'இங்கு நான் பல விஹாரங்களைக் கட்ட விரும்புகிறேன். ஸ்தூபங்களில் வைப்பதற்கு எனக்கு அஸ்தி எங்கிருந்து கிடைக்கும்?'

10. 'சம்புத்தருடைய பிட்சா பாத்திரம் நிறைய சுமணன் கொண்டு வந்த அஸ்தி, சேதிய பர்வதத்தில் வைக்கப்பட்டு இருக்கிறது.

11. 'அரசே! யானையின் முதுகில் அதை ஏற்றி இங்கே கொண்டுவர ஏற்பாடு செய்' என்று தேரர் சொன்னதைக் கேட்டு, அதன்படி அஸ்தியை அரசன் இங்கு கொண்டு வந்தான்.

12. ஒரு யோஜனை தூரத்துக்கு ஒரு விஹாரம் வீதம் அமைத்து, அவற்றின் ஸ்தூபங்களில் உரிய முறைப்படி அஸ்தியை வைக்கச் செய்தான்.

13. ஆனால் சம்புத்தர் உபயோகித்த பிட்சா பாத்திரத்தை அரசன் தன்னுடைய அழகிய அரண்மனையில் வைத்து, தொடர்ந்து பலவிதமான பூஜைகளால் வழிபட்டு வந்தான்.

14. மகா தேரரிடமிருந்து தீட்சை பெற்றபோது, ராஜ குடும்பத்தைச் சேர்ந்த ஐநூறு பேர்கள் வசித்த இடத்தில் கட்டப்பட்ட விஹாரம் இஸ்ஸர சமணக என்றழைக்கப்பட்டது.

15. தேரரிடமிருந்து தீட்சை பெற்ற ஐநூறு வைஸ்யர்கள் வசித்த இடத்தில் கட்டப்பட்ட



விஹாரம் இதேபோல் வைஸ்யகிரி என்றழைக்கப்படுவதாயிற்று.

16. சேதிய பர்வதத்தில் கட்டப்பட்ட விஹாரத்தில் மகா தேரர் மஹிந்தர் வசித்த இடத்துக்கு 'மஹிந்தர் குகை' என்ற பெயர் வழங்குவதாயிற்று.

17. முதலில் மகா விஹாரம், பிறகு சேதிய விஹாரம் எனப்பட்ட மடம், மூன்றாவதாக அழகிய தூபராமா,

18. நான்காவதாக மகா போதி மரத்தை நட்டது, ஐந்தாவதாக ஸ்தூபத்தின் இடத்தைக் குறிப்பதற்காக அழகிய கல்தூண் நட்டது,

19. சம்புத்தருடைய காரை எலும்பு அஸ்தியை வைத்துக் கோயில் கட்டியது,

20. ஆறாவதாக இஸ்ஸர சமணக விஹாரம், ஏழாவதாக தீசவாபி, எட்டாவதாக பத்ம தூபா, ஒன்பதாவதாக வேசகிரி விஹாரம்,

21. பின்னர் உபாசிகா விஹாரம் எனப்பட்ட மடம், ஹதால் ஹக மடம்,

22. மேலும் பிக்குகள், ஹதால்ஹக விஹாரம் எனப்பட்ட பிக்குணிகளின் இடத்துக்கு விஜயம் செய்யும்போது

23. உணவு கொள்வதற்காக அமைக்கப்பட்ட மகா பாலி எனப்பட்ட உணவு அருந்தும் இடம்.

24. அது எளிதில் போகக்கூடியதாகவும், அழகாகவும், எல்லாப்பொருள்களும் நிரம்பியதாகவும், ஆயிரம் பிக்குகளுக்கு வேண்டிய பாத்திரங்களுடனும் இருக்கும். இவற்றை ஒவ்வொரு ஆண்டும் பவாரணை தினத்தில் அரசன் கொடுத்தான்.

25. நாகத்வீபத்தில் ஜம்புகோள விஹாரமும், தீச மகா விஹாரமும், பாசினராமாவும்,

26. இவைகள் யாவற்றையும் இலங்கை மக்களின் விமோசனத்தில் அக்கறை கொண்ட அரசன் தேவனும்பிரியதீசன் கட்ட ஏற்பாடு செய்தான்.

27. புதிய தர்மத்தை மேற்கொண்ட முதல் ஆண்டி லேயே அவன் இவ்வளவும் செய்தான். அவன் ஆயுள் முழுவதும் இதுபோன்ற பெருமை தரும் பல காரியங்களைச் செய்தான்.

28. இந்த அரசனுடைய ஆளுகையில் நமது தீவு செழிப்புடன் திகழ்ந்தது. நாற்பது வருட காலம் இவன் அரசனாக இருந்தான்.

29. அவனுடைய மரணத்துக்குப் பின்னர், அவனுக்கு மகன் இல்லாததால், உதியன் என்னும் பெயர் பெற்ற தம்பி அரசனாக இருந்து பக்தியுடன் ஆண்டான்.

30. குற்றமற்ற குருநாதருடைய தர்மத்தையும், புனித போதனைகளையும், தர்மக் கோட்பாடு களையும்,

31. இலங்கைத் தீவில் அற்புதமாகப் பிரசாரம் செய்த மகாதேரர் மஹிந்தர் – இலங்கையின் ஒளி, பல சீடர்களுக்குக் குருவானவர், தமது குருவைப் போலவே மக்களுக்குப் பல நன்மை களைச் செய்தவர்,

32. உதியன் ஆட்சியின் எட்டாவது வருடத்தில், அவருக்கு அறுபது வயதானபோது, மழைக் காலத்தை சேதிய பர்வதத்தில் கழித்துக் கொண்டிருந்தார்.

33. அப்போது, அவர் ஐப்பசி மாதம், சுக்கிலபட்சம், எட்டாவது நாள் புலன்களையடக்கி நிர்வாணம்



அடைந்தார். எனவே இந்த நாள் அவருடைய பெயரைப் பெற்றது.

34. அரசன் உதியன் இதைக் கேள்விப்பட்டதும் துக்கமடைந்தவனாக அங்கு சென்றான். வெகு நேரம் புலம்பியழுது தேரரை வணங்கினான்.

35. பிறகு தேரருடைய சடலத்தை வாசனைத் தைலம் தெளித்துத் தங்கப்பேழையில் வைக்கச் செய்தான்.

36. பிறகு நன்கு அலங்கரிக்கப்பட்ட பாடையில் பேழையைத் தூக்கிவைத்து பவித்திரமான சடங்குகளை நடத்தினான்.

37. பல இடங்களிலிருந்தும் அங்கு வந்து கூடி இருந்த ஏராளமான மக்களும், படை வீரர் களும் தொடர்ந்து சென்றனர்.

38. நகரத்தின் நன்கு அலங்கரிக்கப்பட்ட ராஜவீதி களின் வழியாக ஊர்வலம் சென்று மகா விஹாரத்தை யடைந்தது.

39. பன்ஹம்ப மாலகத்தில் சடலத்தை ஒரு வார காலம் வைத்திருக்க அரசன் ஏற்பாடு செய் தான்.

40. விஹாரமும், அதைச் சுற்றி மூன்று யோஜனை தூரத்துக்கு உள்ள இடங்களும் மலர்களாலும், தோரணங்களாலும் அரசனுடைய உத்தரவுப் படி அலங்கரிக்கப் பட்டிருந்தன.

41. ஆனால் தேவர்களுடைய கட்டளைப்படித் தீவு முழுவதும் இதேபோல் அலங்காரம் செய்யப் பட்டது.

42. வாரம் முழுவதும் பலவிதமான காணிக்கைகள் செலுத்த ஏற்பாடு செய்த அரசன், கிழக்குப் புறமாக தேரானம்பந்த மாலகத்தில்,

43. நறுமணமுள்ள மரக்கட்டைகளைக் கொண்டு சிதையை அடுக்கினான். அதன் மேல் சடலத்தை வைக்கச் செய்தான்.

44. இறந்தவர்களுக்குச் செய்ய வேண்டிய அந்திமக் கிரியைகளைத் தானே நடத்தினான். பிறகு இந்த இடத்தில் அஸ்தியைத் திரட்டி எடுத்து வைத்து ஒரு சேதியத்தைக் கட்டினான்.

45. அஸ்தியில் ஒரு பாதியை எடுத்து அரசன் சேதிய பர்வதத்திலும், மற்றுமுள்ள விஹாரங்களிலும் ஸ்தூபங்களை எழுப்பச் செய்தான்.

46. இம் முனிவரின் சடலம் புதைக்கப்பட்ட இடத்துக்கு அவருக்கு கௌரவமளிக்கும் முறையில் இசிபூ மங்கன எனப் பெயரிட்டனர்.

47. அப்போதுமுதல் சுற்றிலும் மூன்று யோஜனை தூரத்திலிருந்து, புனிதமான துறவிகள் இறந்து போனால், அவர்களது உடல்களை இங்கு கொண்டு வந்து எரிப்பது வழக்கம் ஆயிற்று.

48. அசாதாரண சக்தியும், பேரறிவும் படைத்த மகாதேரி சங்கமித்திரை தர்மத்துக்குத் தான் செய்ய வேண்டிய கடமையை ஆற்றி, மக்களுக்குப் பலவிதமான நன்மைகள் ஏற்படச் செய்ததும்,

49. உதியன் ஆட்சிக்கு வந்த ஒன்பதாவது வருடம் அவளுக்கு ஐம்பத்தொன்பது வயது ஆயிற்று. அமைதியான ஹதால்ஹக மடத்தில் வசித்துக் கொண்டிருந்த அவள் அப்போது நிர்வாண மெய்தினாள்.

இசிபூ மங்கன-முனிவரின் முற்றம்.



50. தேரருக்குச் செய்ததுபோலவே இவளுக்கும் ஒரு வாரம் முழுவதும் உன்னதமான சடங்குகள் நடத்த அரசன் ஏற்பாடு செய்தான்.

51. இலங்கை முழுவதும் தேரருக்குச் செய்தது போலவே அலங்காரம் செய்யப்பட்டு விளங்கியது.

52. ஒரு வாரம் சென்றதும் தேரியின் சடலத்தை நகரத்துக்கு வெளியே கொண்டுவரச் செய்து, தூபராமாவுக்குக் கிழக்கே சித்ரசாலா அருகில், போதி மரத்தைப் பார்க்கும்படியான இடத்தில்,

53. தேரியினாலே சுட்டிக்காட்டப்பட்ட இடத்தில் சடலத்தை எரிக்க ஏற்பாடு செய்தான். அந்த இடத்தில் அறிவுமிக்க உதியன் ஒரு ஸ்தூபம் கட்ட ஏற்பாடு செய்தான்.

54. (மஹிந்தனுடன் வந்த) ஐந்து தேரர்களும், அரிதனுடன் தீட்சைபெற்றுப் பிக்குகளானவர்களும், மற்றும் ஆசவங்களிலிருந்து விடுபட்ட பல்லாயிரம் பிக்குகளும்,

55. சங்கமித்திரையுடன் வந்த பன்னிரெண்டு தேரிகளும், ஆசவங்களைக் கடந்த பல்லாயிரக் கணக்கான பிக்குணிகளும்,

56. தேர்ந்த அறிவும், ஆழ்ந்த ஞானமும் உடைய இவர்கள் புத்தரின் புனித போதனைகளை விளக்கிச்சொல்லித் தமது கடமையையாற்றிய பின்பு, உரிய காலத்தில் மரணத்தின் வலிமைக்கு முன் பணிந்தனர்.

57. அரசன் உதியன் பத்து வருடகாலம் ஆட்சி செய்தான். இவ்வாறு மரணம் உலகையே அழிக்கக் கூடியது.

58. சக்தியுள்ள, எதிர்க்க முடியாத மரணத்தை அறிந்திருந்த போதிலும் மனிதன் உலக வாழ்வில் அதிருப்தி கொள்வது இல்லை. இதன் காரணமாகத் தீமையைக் கண்டு வருந்துவதோ, நன்மையைக் கண்டு மகிழ்வதோ இல்லை,—இத் தீய சக்தியின் வலிமை அத்தகையது—அத்தகையவன் தெரிந்தே மூடனாகிறான்.

**மகாவம்சத்தில் இருபதாவது அத்தியாயமான தேரருடைய நிர்வாணம் முற்றும்**

## இருபத்தோராவது அத்தியாயம்

# ஐந்து அரசர்கள்

1. உதியன் இறந்தபிறகு, அவனுடைய தம்பி மகாசிவன் சாதுக்களை ரட்சித்துப் பத்துவருட காலம் ஆட்சி செய்தான்.

2. பத்ரசீல தேரரிடம் பெரும் பக்தி கொண்ட அவன் (நகரத்தின்) கிழக்குப்பகுதியில் நாகரங்கண விஹாரத்தைக் கட்டினான்.

3. மகாசிவன் இறந்த பிறகு, அவனுடைய தம்பி சூரதீசன், பெருமைதரும் பல காரியங்களைச் செய்து பத்து வருட காலம் ஆட்சி செய்தான்.

4. (நகரின்) தென்புறத்தில் ஹத்தி கந்த, கோணகிரிக விஹாரங்களைக் கட்டினான்.

5. வங்கு தார மலையில் பாசீன பர்வத விஹாரத்தையும், ரஹரகா அருகில் கோலம்பஹாலக விஹாரத்தையும் கட்டினான்.

6. அரித மலையடிவாரத்தில் மகுலக விஹாரத்தையும், கிழக்கே அச்சகல்லக விஹாரத்தையும், கந்த நகரத்துக்கு வடக்கே கிரிநீல வாகன விஹாரத்தையும் கட்டினான்.

7. இவைகளும், இதுபோன்ற அருமையான ஐநூறு விஹாரங்களும் இந்த அரசனால் இலங்கை முழுவதும் பல இடங்களில் கட்டப்பட்டன.

8. ஆட்சிக்கு வருவதற்கு முன்பும், ஆட்சி செய்த போதும், அறுபது வருடகாலம் (புத்தர், தர்மம், சங்கம் ஆகிய) மும்மணிகளுக்கும் பக்தி

விசுவாசத்துடன் நேர்மையாக இருந்து வந்தான்.

9. ஆட்சிக்கு வருமுன்பு அவனுடைய பெயர் ஸ்வர்ணபிண்ட தீசன் என்பதாகும். ஆட்சிக்கு வந்ததும் அவன் தனது பெயரை சூரதீசன் என்று வைத்துக் கொண்டான்.

10. குதிரைகளை இங்கு கொண்டு வந்து வாணிகம் செய்த ஒருவரது பிள்ளைகளான சேனன், குட்டகன் ஆகிய இரண்டு தமிழர்கள் சூரதீசனை வெற்றி கொண்டார்கள்.

11. பெரும் படையொன்றைத் திரட்டிக்கொண்டு, இந்த இருவரும் சேர்ந்து இருபத்திரண்டு வருடகாலம் நீதிதவறுமல் ஆட்சி செய்தனர். முத்துசிவனுடைய மகன் அசேலா இவர்களை வெற்றிகொண்டான்.

12. இவனுடன் ஒரே தாய்க்குப் பிறந்தவர்கள் எட்டு பேர். அசேலன்தான் அவர்கள் எல்லோரிலும் இளையவன். அவன் அனுராதபுரத்தில் பத்து வருடகாலம் ஆட்சி செய்தான்.

13. சோழ நாட்டிலிருந்து ஆட்சியைக் கைப்பற்றுவதற்காக இங்கு வந்த, உயர்குடியில் பிறந்த, தமிழன் ஏலாரா, அசேலனைத் தோற்கடித்து நாட்டைப் பிடித்து நாற்பத்து நான்கு வருடம் ஆண்டான்.

14. (அவன்) எதிரிகள், நண்பர்கள் என்ற பேதாபேதம் இன்றி, நீதியின்முன் எல்லோரையும் சமமாக நடத்தி வந்தான்.

15. அவன் சயன அறையில், தலைக்கு மேலாக ஒரு மணி நீண்ட கயிற்றுடன் கட்டித் தொங்கவிடப்பட்டிருந்தது. அவனிடம் நீதி கோரி வருபவர்கள் அந்த மணியை அடிக்கலாம்.



16. அரசனுக்கு ஒரு மகனும், ஒரு மகளும் மட்டுமே இருந்தனர். ஒரு சமயம் ராஜகுமாரன் ரதத்தில் தீசவாபிக்குச் சென்று கொண்டிருந்தான்.

17. அப்போது தாய்ப்பசுவுடன் வீதியில் படுத்திருந்த கன்றின் கழுத்தில் தேர்ச்சக்கரத்தை ஏற்றி, அறியாமல் அதனைக் கொன்றுவிட்டான்.

18. துக்கம் தாளாது பசு அரண்மனைக்கு வந்து மணியை அடித்தது. தன் மகனுடைய கழுத்தின் மீது தேரை ஓட்டி, அரசன், தலையைத் துண்டிக்கச் செய்தான்.

19. பனைமரத்தில் அமர்ந்திருந்த பறவைக் குஞ்சு ஒன்றைப் பாம்பு ஒன்று விழுங்கிவிட்டது. தாய்ப் பறவை ஓடிவந்து மணியை அடித்தது.

20. அரசன் அந்தப் பாம்பைத் தன் முன்பு கொண்டுவரச் செய்தான். அதன் வயிற்றைக் கீறிக் குஞ்சை வெளியே எடுத்த பின்பு, அதை மரத்தின் மீது தொங்கவிட்டான்.

21. மும்மணிகளிலும் உயர்ந்ததான ஒன்றின் குற்றமற்ற பெருமையை அறியாத போதிலும், மரபுகளைக் காப்பவனுன அரசன்,

22. ஒருமுறை புத்த சங்கத்தினரை அழைப்பதற்காக சேதிய பர்வதந்துக்கு ரதத்தில் சென்று கொண்டிருந்தான்.

23. அப்போது ரதத்தின் நுகத்தடி ஒரு ஸ்தூபத்தின் மீது மோதிச் சற்று பெயர்த்து விட்டது. 'தங்களால் ஸ்தூபம் காயம்பட்டு விட்டது' என்று மந்திரிகள் அரசனிடம் கூறினர்.

24. இது அறியாமல் நேர்ந்ததாயினும், அரசன் ரதத்திலிருந்து குதித்துத் தரையில் படுத்துக்

கொண்டு 'இதன் சக்கரத்திலை் என்னுடைய தலையையும் துண்டித்து விடுங்கள்' என்ருன்.

25. 'மற்றவர்க்குத் தீங்கிழைப்பதை எங்கள் குருநாதர் அனுமதிப்பது இல்லை. இடிந்த பகுதியைக் கட்டிக் கொடுத்து (பிக்குகளுடன்) சமாதானம் செய்து கொள்ளுங்கள்' என்றனர் அவர்கள்.

26. இடிந்துபோன பதினைந்து கற்களைப் புதிதாக அமைப்பதற்காக அரசன் பதினையாயிரம் கஹாப்பணம் செலவிட்டான்.

27. ஒரு கிழவி வெயிலில் அரிசியைக் காயப்போட்டிருந்தாள். பருவமில்லாத காலத்தில் வானம் மழையைப் பெய்து அரிசியை நனைத்து விட்டது.

28. அவள் அரிசியை எடுத்துக் கொண்டு போய் மணியை அடித்தாள். பருவமில்லாத காலத்தில் மழை பெய்ததை அறிந்த மன்னன் கிழவியை அனுப்பிவிட்டான்.

29. 'அரசன் நீதியுடன் நடந்தால் உரிய பருவத்தில்தானே மழைபெய்ய வேண்டும்?' என்று எண்ணியவனுக, இதுபற்றி முடிவு செய்வதற்கு உண்ணுவிரதத்தை மேற்கொண்டான்.

30. அரசனுடைய விரதத்திஞல் வெப்பம் தாங்காத அவனுடைய குலதெய்வம் இதுபற்றி நான்கு பெருந் தேவர்களிடம்* தெரிவித்தது.

* இவர்கள் லோகபாலர்கள் எனப்படுவர். பிரம்ம லோகத்தில் இந்திரனுக்கு அருகில் எப்போதும் இருப்பவர். தத்தரதா, விருல்ஹகா, விபோக்ஷா, வேஸவனு என்பது இவர்கள் பெயர். முறையே கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு திசைகளில் ஆட்சி செலுத்துபவர்கள்.



31. அவர்கள் எல்லோருமாக சக்கனிடம் சென்ருர்கள். சக்கன் பஜ்ஜுனனை அழைத்து இனி உரிய காலத்தில் மட்டுமே மழை பெய்ய வேண்டுமெனக் கட்டளை இட்டான்.

32. அரசனுடைய குலதெய்வம் இதுபற்றி அவனிடம் தெரிவித்தது. அப்போது முதல் அவன் ஆட்சிக் காலம் முழுவதும் பகலில் மழை பெய்வது இல்லை.

33. இரவில் மட்டுமே வாரம் ஒரு முறை வானம் மழை பெய்யும். அதுவே எல்லா நீர்நிலைகளையும் நிறைத்துவிடும்.

34. இந்த அரசன் தவருன நம்பிக்கைகளைக் கைவிடாத போதிலும், தீய வழியில் நடக்கும் குற்றத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டவனுக இருந்ததால் தான் இத்தகைய அற்புத சக்திகளைப் பெற முடிந்தது. உண்மையானதை நம்புகிற ஒருவன், அறிந்து கொள்ளும் சக்தி படைத்தவன் தீய வழியில் நடக்கும் குற்றத்தைக் கண்டிக்காமல் எங்ஙனம் இருக்க முடியும்?

**மகாவம்சத்தில் இருபத்தோராவது அத்தியாயமான ஐந்து அரசர்கள் முற்றும்**

பஜ்ஜுனன்—பர்ஜன்ய—மழைத் தேவன்.

## இருபத்திரண்டாவது அத்தியாயம்

# காமனி ஜனனம்

1. ஏலாராவைக் கொன்றுவிட்டு துட்ட காமனி அரசனுன். இது எப்படி நேர்ந்தது என்பதைத் தெளிவாக அறிந்துகொள்வதற்கு முறையான விவரம் இது.

2. தேவனும் பிரிய தீசனுடைய இரண்டாவது சகோதரனும், உபராஜனுமான மகாநாகன் என்பவன் தீசனுக்கு மிகவும் பிரியமானவனுக இருந்தான்.

3. அரசனுடைய மனைவி, தன்னுடைய மகனுக்கு அரசுரிமை கிடைக்க வேண்டுமென்பதற்காக, உபராஜனைக் கொன்றுவிட வேண்டுமென எண்ணியிருந்தாள்.

4. தரச்ச வாபியைக் கட்டுவதில் அவன் ஈடுபட்டிருந்தபோது, விஷமிட்ட மாங்கனி ஒன்றை அவனுக்கு அனுப்பி வைத்தாள். மாங்கனிகள் நிறைந்த கூடையில் விஷமிட்ட அக்கனி மேலாக இருந்தது.

5. அவளுடைய சிறிய மகனும் உபராஜனுடன் அங்கு சென்றிருந்தான். விஷமிட்ட கனியை அவன் எடுத்துத் தின்று, அதனுல் மாண்டு விட்டான்.

6. இதன் காரணமாக உபராஜன், மனைவி மக்களுடன், தன் உயிரைக் காத்துக் கொள்ள ரோஹணுவுக்குச் செல்ல வேண்டியதாயிற்று.

7. யத்தாலய விஹாரத்தில், கர்ப்பவதியாக இருந்த அவன் மனைவி ஒரு ஆண் மகவை ஈன்ருள்.

8. குழந்தைக்குச் சகோதரனுடைய பெயரை அவன் வைத்தான். பிறகு அவன் ரோஹணுவுக்கு வந்து, மகா காமாவிலிருந்து கொண்டு ரோஹணு முழுவதும் ஆட்சி செலுத்தினுன்.

9. நாக மகா விஹாரத்தை அவன் அமைத்தான். உத்த கண்டர விஹாரம் போன்ற வேறுபல விஹாரங்களையும் அவன் ஏற்படுத்தினுன்.

10. அவனுடைய மகன் யத்தாலயக தீசன் தந்தையின் மரணத்துக்குப் பின் அதே இடத்தில் ஆட்சி செய்தான். இவனுக்குப் பின் இவனுடைய மகன் அபயன் ஆட்சி செய்தான்.

11. கோதபயனுடைய மகன், காகவன தீசன் என்னும் பெயருடையவன், அவனுடைய மரணத்துக்குப் பின்பு அங்கு ஆண்டான்.

12. நம்பிக்கையுள்ள இந்த அரசனுடைய மனைவியின் பெயர் விஹாரதேவி என்பதாகும். கல்யாணி மன்னனின் மகளான அவள் உறுதியான நம்பிக்கையுடையவள்.

13. இப்போது கல்யாணியில் தீசன் என்ற பெயருடைய அரசன் ஆண்டு வந்தான். இவனுடைய தம்பி ஐய உதிகன் என்பவன் ராணியைக் காதலித்ததால் தீசனுடைய கோபத்துக்குள்ளாகி, பயந்துபோய் அங்கிருந்து ஓடிவிட்டான்.

14. அவன் ஒளிந்துகொண்டிருந்த பிரதேசத்துக்கு, பின்னல் அவன் பெயரே இடப்பட்டது.

15. ராணிக்கு ரகசிய லிகிதம் ஒன்றைப் பிக்கு வேடம் அணிந்த ஒருவனிடம் அவன் கொடுத்தனுப்பினான். அவன் அங்கே சென்றான்.

16. அரண்மனை வாயிலில் நின்று கொண்டு, வழக்கமாக அரண்மனையில் உணவு கொள்ளும் தேரர் ஒருவருடன், அவர் அறியாமலே, உள்ளே நுழைந்து விட்டான்.

17. தேரருடன் சேர்ந்து அமர்ந்து உணவருந்தியதும், அரசனுக்குப் பின்னே தன்னைக் கடந்து செல்லும் ராணியின் கண்ணில் படும்படியாக அந்த லிகிதத்தைத் தரையில் போட்டான்.

18. சத்தம் கேட்டுத் திரும்பிய அரசன் கண்ணில் இது பட்டுவிட்டது. லிகிதத்தை எடுத்துப் படித்த அவன் கோபத்தால் சீறினான்.

19. கோபத்தில் சிந்தித்துப் பாராமல் தேரரையும், அவருடன் இருந்த வேடதாரியையும் கொன்று கடலில் எறியச் செய்து விட்டான்.

20. இதனால் கோபமடைந்த கடலரசன் பொங்கினான். நாட்டுக்குள் கடல் புகுந்தது. உடனே அரசன் தன்னுடைய அழகிய பெண்ணை தேவி என்பவளை ஒரு பொற்கலத்தில் வைத்தான்.

21. கலத்தின்மீது அரசகுமாரி என்று பொறிக்கப் பட்டிருந்தது. அதை அப்படியே அதே கடலில் விடச் செய்தான்.

22. அந்தக் கப்பல் லங்கா விஹாரத்துக்கருகே கரையில் ஒதுங்கியது. அரசன் காகவனதீசன் அவளைக் கண்டு தன் ராணியாகச் செய்தான். இதனால்தான் இவளுடைய பெயருக்கு முன் விஹார என்ற அடைமொழி வந்தது.



23. தீச மகா விஹாரம், சீதள பர்வத விஹாரம், கமித வாலி விஹாரம், கூடாலி விஹாரம் போன்றவற்றை அவன் அமைத்தான்.

24. மும்மணிகளில் பக்திபூர்வமான நம்பிக்கை உடையவனை அவன், பிக்குகளுக்குத் தேவையான நான்கு பொருள்களையும் இடைவிடாது வழங்கி வந்தான்.

25. கோத பர்வத மடத்தில் அச்சமயம் ஒரு துறவி வசித்து வந்தார். பெருமைக்குரிய பல காரியங்களை எப்போதும் செய்துவந்த அவர் பக்தியுடன் வாழ்ந்து வந்தார்.

26. ஆகாச சேதியத்தில் ஏறுவது சிரமம் இல்லாமல் இருப்பதற்காக, கல்லினால் அவர் மூன்று படிகளை அமைத்தார்.

27. பிக்குகளின் தாகம் தீர்த்தார். அத்துடன் அவர்களுக்குப் பலவிதமான சேவைகள் செய்தார். இடைவிடாது அவர் உழைத்து வந்ததால் பெரும் நோய் அவரை பீடித்துக் கொண்டது.

28. நன்றியுள்ள பிக்குகள் அவரை தீசராமாவுக்குக் கொண்டு வந்து, சிலா பசய பரிவேணையில் வைத்துப் பேணி வந்தனர்.

29. தன்னை அடக்கியவளான விஹார தேவி, தனது அழகிய அரண்மனையில், பிக்குகளுக்குத் தாராளமாகப் பரிசுகள் வழங்குவது வழக்கம்.

30. மத்தியான உணவுக்கு முன்பு பரிசு வழங்கும் அவள், உணவுக்குப் பிறகு வாசனைத் திரவியங்கள், மலர்கள், மருந்துகள், உடைகள் ஆகியவற்றுடன் ஆராமாவுக்குச் சென்று பிக்குகளுக்கு அவர்களின் தகுதிக்கேற்ப வழங்குவது வழக்கம்.

31. இவ்வாறு செய்து கொண்டு அவள் விஹாரத்தில் பிக்குகளின் பிராதன தேரர் அருகில் அமர்ந்து கொண்டாள். உண்மையான தர்மத்தை விளக்கிச் சொல்லிக் கொண்டு இருந்த அவர், அவளிடம் இவ்வாறு சொன்னார் :

32. 'பெருமைக்குரிய காரியங்களைச் செய்து நீ பெருமகிழ்வடைந்தாய். இனிமேலும் பெருமைக்குரிய காரியங்களைச் செய்வதில் நீ களைப்படையக்கூடாது.'

33. 'என்ன மகிழ்ச்சி இருக்கிறது? எங்களுக்கோ குழந்தை கிடையாது. எனவே எங்கள் சந்தோஷம் சாரமில்லாதது' என்றாள் அவள்.

34. அசாதாரண சக்திகள் ஆறும் படைத்த தேரர், தமது ஞான திருஷ்டியில் அவளுக்குக் குழந்தை உண்டாகுமென்பதைக் கண்டார். 'ராணி! நோய்வாய்ப்பட்டிருக்கும் துறவியைச் சென்று பார்' என்றார்.

35. அவள் அங்கே சென்றாள். மரணத்தின் அருகில் நின்றிருந்த அவரிடம் சொன்னாள்: 'என்னுடைய மகனாகப் பிறக்க வேண்டுமென்று வேண்டிக் கொள்வீராக. அது எங்களுக்குப் பெரு மகிழ்ச்சியை அளிக்கும்.'

36. துறவி அவ்வாறு சொல்லாமல் இருப்பதைக் கண்ட அவள், இதற்காக ஏராளமான மலர்களைக் காணிக்கையாகச் செலுத்தி மீண்டும் வேண்டினாள்.

37. இப்போதும் அவர் விருப்பமில்லாமல் இருக்கவே, சரியான வழியை அறிந்த அவள் அவருடைய சார்பில் பிக்குகள் சங்கத்துக்கு மருந்துகளையும், உடைகளையும் வழங்கிவிட்டு மீண்டும் வேண்டினாள்.



38. பிறகு தான், அவர் 'அரச குடும்பத்தில் மறு பிறவி எடுக்க விரும்புவதாகக் கூறினார் பிறகு மனமகிழ்வுடன் அவள் விடை பெற்றுக் கொண்டு ரதத்திலேறிச் சென்று விட்டாள்.

39. அதன் பிறகு துறவி இறந்து விட்டார். ராணி சென்று கொண்டிருக்கும் போதே அவளுடைய கருவில் புதிய பிறவியெடுத்தார். இதை அவள் கண்டதும் நின்றாள்.

40. அரசனுக்கு இச்செய்தியை அனுப்பி விட்டு, அவனுடன் திரும்பி வந்தாள். இருவரும் துறவிக்கு அந்திமக் கிரியைகளைச் செய்தனர்.

41. பிறகு அந்தப் பரிவேணாவில் தங்கி பிக்குகளுக்குத் தாராளமான பரிசுகளை வழங்கிக் கௌரவித்து வந்தனர்.

42. கர்ப்ப ஸ்திரீகளுக்கு ஏற்படும் விசித்திரமான ஆசைகள் ராணிக்கும் ஏற்பட்டன. அவளுக்கு இந்த விதமான ஆசைகள் தோன்றின :

43. ஒரு உஸபா நீளமுள்ள தேனடையை தலையணையாக வைத்துக் கொண்டு, தன் அழகிய படுக்கையில் இடதுபுறம் சாய்ந்து கொண்டு, அதிலுள்ள தேனைப் பனிரெண்டாயிரம் பிக்குகளுக்குக் கொடுத்த பின்பு எஞ்சியதை உண்ணவேண்டும் என்று அவள் ஆசைப்பட்டாள்.

44. பிறகு ஏலாராவினுடைய வீரர்களிலே முதல் வீரனுடைய கழுத்தை வெட்டிய கத்தியைக் கழுவ உதவிய நீரைக் குடிக்க வேண்டும் என்றும் விரும்பினாள்.

45. வெட்டுண்ட அத்தலை மீது நின்று கொண்டு அதைக் குடிக்க வேண்டும் என்றும்,

46. அனுராதபுரத்திலுள்ள தடாகத்திலிருந்து கொண்டு வரப்பட்ட வாடாத தாமரை மலர்

களை மாலையாகத் தொடுத்து அணியவேண்டும் என்றும் ஆசைப்பட்டாள்.

47. ராணி தன் ஆசையை அரசனிடம் வெளியிட்டாள். அரசன் நிமித்திகர்களிடம் கேட்டான். 'ராணியின் மகன் தமிழர்களை அழித்து ஒன்று பட்ட ராஜ்யத்தை அமைத்ததும் தர்மம் செழிக்கச் செய்வான்' என்று அவர்கள் கூறினர்.

48. 'இத்தகைய தேனடையை யார் கண்டு பிடித்துக் காட்டினாலும் அவன் சேவைக்குத் தகுந்த பரிசைப் பெறுவான்' என்று மன்னன் அறிவித்தான்.

49. கோத சமுத்திரக் கரையில் ஒருவன் படகு ஒன்றைக் கண்டான். அது தலை கீழாகப் புரட்டப்பட்டுக் கிடந்தது.

50. அதற்குள் தேன் நிரம்பி இருப்பதைக் கண்ட அவன், அதை அரசனிடம் காட்டினான். அரசன் ராணியை அங்கு அழைத்து வந்தான். அங்கு அழகான கூடாரம் அமைத்து, அவள் விரும்பிய விதமாகத் தேனை உண்ணச் செய்தான்.

51. அவளுடைய மற்ற விருப்பங்களையும் பூர்த்தி செய்யும் பொறுப்பை அரசன் வேலு சுமணன் என்ற வீரனிடம் ஒப்படைத்தான்.

52. அவன் அனுராதபுரத்துக்குச் சென்று, அரசனுடைய குதிரைக் காவலனுடன் சிநேகம் செய்து கொண்டு, அவனுக்குப் பல உதவிகளைச் செய்து வந்தான்.

53. தன்னிடம் அவனுக்கு நம்பிக்கை ஏற்பட்டு விட்டது என்பதைக் கண்ட அச்சமற்றவனை அவன், கடம்ப நதிக் கரையில் அதிகாலையில் தாமரை மலர்களையும், வாளையும் வைத்தான்.



54. பிறகு குதிரை மேலேறிக் கொண்டு தாமரை மலர்களையும், வாளையும் கையில் எடுத்துக் கொண்டான். எல்லோருக்கும் தெரியும்படியாக அங்கிருந்து வேகமாகக் குதிரையைத் தட்டி விட்டான்.

55. அரசன் இதையறிந்ததும், அவனைப் பிடிப்பதற்காகத் தன்னுடைய முதல் வீரனை அனுப்பினான். குதிரையில் ஏறிக்கொண்டு இவ்வீரன் அவனைத் தொடர்ந்தான்.

56. குதிரை மேலிருந்தவாறே வேலு சுமணன் காட்டில் மறைந்து கொண்டு, துரத்தி வந்தவன் அருகில் நெருங்கிய போது வாளை நீட்டினான்.

57. குதிரைமீது வேகமாக வந்த அவனுடைய தலை துண்டுபட்டுக் கீழே விழுந்தது. குதிரையையும் வீரனுடைய தலையையும் எடுத்துக் கொண்டு, வேலு சுமணன் அன்று மாலையே மகாகாமத்தையடைந்தான்.

58. ராணி விரும்பிய வண்ணம் தன்னுடைய ஆசையை நிறைவேற்றிக் கொண்டாள். அரசன் வேலு சுமணனுக்கு (அவன் செய்த சேவைக்கு) ஏற்ற பரிசுகளை அளித்துக் கௌரவித்தான்.

59. உரிய காலத்தில் ராணி எல்லா விதமான சுப லட்சணங்களுடனும் கூடிய ஆண் மகவைப் பெற்றாள். மன்னனுடைய மாளிகையில் மகிழ்ச்சிப் பெருக்கெடுத்தது.

60. அன்றே அவனுடைய பெருமையின் சக்தியால் பல இடங்களிலிருந்தும் ஏழு கப்பல்கள் நிறைய பலவிதமான ரத்தினங்கள் வந்து சேர்ந்தன.

61. அதேபோல் அக் குழந்தையினுடைய பெருமையின் காரணமாக ஆறு தந்தமுடைய யானை

ஒன்று தன் குட்டியை இங்கு கொண்டு வந்துவிட்டுப் போயிற்று.

62. காட்டிலே நின்று கொண்டிருந்த அந்த யானைக் குட்டியைக் கண்ட கந்துலன் என்ற செம்படவன் அரசனிடம் உடனே வந்து சொன்னான்.

63. குட்டியைப் பிடித்துப்பழக்க அரசன் ஆட்களை அனுப்பி வைத்தான். கந்துலன் என்பவனால் கண்டு பிடிக்கப்பட்டதால் அந்த யானைக்கு கந்துலன் என்றே பெயரிட்டனர்.

64. 'தங்கமும் மற்ற பொருள்களும் நிரம்பிய கப்பல் வந்திருக்கிறது' என்று அரசனிடம் வந்து தெரிவித்தனர். அவ்விலையுயர்ந்த பொருள்களைத் தன்னிடம் கொண்டு வருமாறு அரசன் அவர்களை அனுப்பினான்.

65. தன் பிள்ளையின் நாமகரண விழாவுக்கு அரசன் பன்னிரெண்டாயிரம் பிக்குகளை அழைத்தான். அப்போது அவன் இவ்வாறு எண்ணினான்.

66. 'இலங்கை முழுவதினுடைய அரசுரிமையையும் எனது மகன் பெற்றதும், சம்புத்தருடைய மார்க்கம் இங்கு ஒளி பெறச் செய்வான்.

67. 'பிறகு இங்கு ஆயிரத்தெட்டு பிக்குகள் வருவார்கள். பிட்சா பாத்திரம் நன்கு தெரியும்படியாக அவர்கள் உடையை அணிந்திருப்பார்கள்.

68. 'அவர்கள் முதலில் வலது காலை அடி எடுத்து வைத்து உள்ளே வருவார்கள். வந்து நீர்ப்பானையையும், குடையையும் ஒன்றாக வைப்பார்கள்.

69. 'கோமர் என்னும் பெயருடைய தேரர் என்னுடைய மகனுக்குத் தர்மத்தை உபதேசிப்



பார்'—அவன் மனதில் எண்ணியபடியே எல்லாம் நடந்தது.

70. இந்தச் சகுனங்களை எல்லாம் கண்ட அரசன் மனம் பூரித்தவனாகி அரிசிப்பாலைப் பிக்குகளுக்கு அளித்தான்.

71. மகனுக்கு அரசின் பெயரையும், தந்தையின் பெயரையும் ஒன்று சேர்த்துக் காமனி அபயன் என்று பெயர் சூட்டினான்.

72. இதற்கு ஒன்பதாவது நாள், மகா காமத்துக்கு வந்த அரசன் ராணியைக் கூடினான். அதன் மூலம் அவள் கர்ப்பமடைந்தாள்.

73. உரிய காலத்தில் பிறந்த இந்த மகனுக்கு அரசன், தீசன் எனப் பெயரிட்டான். ராஜ குமாரர்கள் இருவரும் சிறப்புடன் வளர்ந்து வந்தனர்.

74. குழந்தைகளுக்கு அன்னபிராசன விழாவின் போது, அரசன் பக்தியுடன் அரிசிப்பாலை ஐநூறு பிக்குகள் முன்பு வைத்தான்.

75. அவர்கள் அதில் பாதியை உண்டதும் அரசன் ராணியுடன் அதிலிருந்து ஒரு தங்கக் கரண்டியில் கொஞ்சம் எடுத்து,

76. இரு பிள்ளைகளுக்கும் கொடுத்து, 'பிள்ளைகளே! நீங்கள் சம்புத்தருடைய மார்க்கத்தைக் கைவிடுவீர்களேயானால் இது உங்கள் வயிற்றில் ஜீரணமாகாது போகும்' என்றான்.

77. இவ் வார்த்தைகளின் அர்த்தத்தைப் புரிந்து கொண்ட இரண்டு ராஜகுமாரர்களும், அமுதத்தைப் போலக் கருதி அந்த அரிசிப்பாலை உண்டனர்.

78. அவர்களுக்குப் பத்து வயதும், பனிரெண்டு வயதும் ஆனபோது, அவர்களைச் சோதனை

செய்ய விரும்பினன் அரசன். பிக்குகளுக்கு தாராளமாகத் தருமம் செய்தான்.

79. அவர்கள் உண்டது போக எஞ்சிய உணவை ஒரு தட்டில் எடுத்து ராஜகுமாரர்கள் முன் வைத்தான். அதை மூன்று பகுதிகளாகப் பிரித்துவிட்டு, அவர்களைப் பார்த்துச் சொன்னான்:

80. 'பிக்குகள் தான் நமது வீட்டின் காவல் தேவதைகள். இவர்களுக்கு மாருக எப் போதுமே நடக்கக் கூடாது என்ற எண்ணத் துடன் இந்த உணவைச் சாப்பிடுங்கள்'

81. 'சகோதரர்களாகிய நாங்கள் ஒருவர்க் கொருவர் எப்போதுமே விரோதம் கொள்ள மாட்டோம் என்ற எண்ணத்துடன் இந்த உணவைச் சாப்பிடுங்கள்.'

82. அரசன் சொன்னபடியே ராஜகுமாரர்கள் இருவரும் இருபகுதி உணவையும் சாப்பிட்டனர். 'தமிழர்களுடன் எப்போதுமே போரிட மாட்டோம் என்ற எண்ணத்துடன் இந்த உணவைச் சாப்பிடுங்கள்' என்று அரசன் சொன்னபோது,

83. தீசன் உணவைத் தன் கையினுல் தட்டிவிட்டான். காமனி அதை எடுத்துத் தூர எறிந்தான்.

84. பிறகு படுக்கையிற் சென்று உடலை முடக்கிக் கொண்டு படுத்தான். ராணி வந்து காமனியைத் தேற்றினுள்.

85. 'மகனே! கைகால்களை நன்ருக விரித்துக் கொண்டு தாராளமாகப் படுப்பதற்கென்ன?' என்று அவள் கேட்டாள். 'அங்கே கங்கைக்கு அப்பால் தமிழர்கள் உள்ளனர். இந்தப் பக்கத்திலோ கோத சமுத்திரம் உள்ளது.



86. 'கை கால்களை நீட்டிக் கொண்டு நான் தாராளமாகப் படுப்பது எங்கே?' என்று அவன் பதில் அளித்தான். அரசன் இதைக் கேட்டதும் மௌனமானுன்.

87. காமனி வளர்ந்து பதினுறு வயதையடைந்தான். உணர்வும், வீரமும், அறிவும் மிக்கவனுக அவன் திகழ்ந்தான்.

88. பெருமைக்குரிய காரியங்களைச் செய்வதன் மூலமே மாறும் இவ்வுலகில் மனிதர்கள் விரும்பிய பிறவியை அடைகிருர்கள். இதை எண்ணிப் பார்க்கும் அறிவுடையவர்கள் எப் போதும் பெருமைக்குரிய காரியங்களைச் செய்வதிலேயே உற்சாகத்துடன் மனதைச் செலுத்துவார்கள்.

**மகாவம்சத்தில் இருபத்திரண்டாவது அத்தியாயமான காமனி ஜனனம் முற்றும்**

### இருபத்தி மூன்றுவது அத்தியாயம்

## படைவீரர்கள் திரட்டல்

1. பலத்திலும், அழகிலும், உருவத்திலும், தைரியத்திலும், விரைவிலும், பிரமாண்டமான உடல் அளவிலும் முன்னணியில் இருந்தது யானை கந்துலன்.
2. நந்தி மித்திரன், சூர நிமிலன், மகா சோனன், கோதாயிம்பரன், தேர புத்ர அபயன், பரணன், வேலு சுமணன்,
3. கஞ்ச தேவன், பூஸ தேவன், லபிய வசபன்—இந்தப் பத்து பேரும் அவனுடைய பலமிக்க துணைவர்களாவர்.
4. அரசன் ஏலாராவுக்கு மித்ரன் என்னும் பெயருடைய தளபதி ஒருவன் இருந்தான். அவனுக்கு சித்ரமலைக்கருகிலுள்ள கிழக்கு ஜில்லாவில் அவன் நிர்வாகத்திலுள்ள ஒரு கிராமத்தில்,
5. சகோதரி மகன் ஒருவன் இருந்தான். அவனுடைய பெயரும் மாமனுடையதே யாகும். அவனுடைய மறைவிட உறுப்புக்கள் உடலுக்குள் மறைந்திருந்தன.
6. குழந்தைப் பருவத்தில் அவன் வெகு தூரம் தவழ்ந்து போய்விடுவது வழக்கம். அதனால் யந்திரக்கல்லில் கட்டிய கயிற்றை அவன் உடலைச் சுற்றிக் கட்டுவது உண்டு.
7. அவன் தவழ்ந்து கொண்டே இயந்திரக்கல்லை இழுத்துக்கொண்டு போனான். வாயிற்படியைத் தாண்டும்போது கயிறு அறுந்து போய்விட்டது.
8. அதிலிருந்து அவனை நந்தி மித்ரன் என்று அழைக்கலாயினர். பத்து யானைகளுடைய பலம் அவனுக்கு இருந்தது. அவன் வளர்ந்து பெரியவனானதும் நகரத்துக்குச் சென்று மாமனிடம் பணியாற்றினான்.
9. தமிழர்கள் அப்போது ஸ்தூபங்களையும் இதர புனித சின்னங்களையும் நாசப்படுத்தி வந்தனர்.
10. இந்தப் பலசாலி எதிரிகளைக் காலைப் பிடித்துக் கிழித்து எறிவது வழக்கம். அவன் எறிந்த சவங்களைத் தேவர்கள் மறைந்து போகும்படி செய்து வந்தனர்.
11. தமிழர்களுக்குச் செய்யப்படும் இக்கொடுமையைக் கண்டு அவர்கள் அரசனிடம் போய்த் தெரிவித்தார்கள். 'அவனைப் பிடித்து வாருங்கள்' என்ற அரசனுடைய கட்டளையை அவர்களால் நிறைவேற்ற முடியவில்லை.
12. நந்தி மித்ரன் எண்ணினான்: 'இப்படி நான் செய்வதால் உயிர்களுக்கு அழிவுதான் ஏற்படுகிறது. இது புத்த மார்க்கத்துக்குப் புகழ் அளிப்பதல்ல.
13. 'ரோஹணவில் மும்மணிகளில் நம்பிக்கை கொண்ட அரசர்கள் இன்னும் இருக்கிறார்கள். அங்கு சென்று அரசனுக்கு சேவை செய்வேன்.
14. 'தமிழர்கள் எல்லோரையும் வென்று அந்த அரசர்களை எதிர்ப்பின்றிச் செய்த பின்பு புத்த மார்க்கம் ஒளி பெற்றுத் திகழ ஆவன செய்வேன்.'
15. இவ்வாறு தீர்மானித்த அவன் காமனியிடம் சென்று இதைச் சொன்னான். காமனி தன்னுடைய தாயாருடன் கலந்தாலோசித்த பின்பு அவனுக்கு உரிய மரியாதை செய்து கௌரவித்தான். நந்தி மித்ரன் அவனுடனேயே இருந்து வரத் தொடங்கினான்.

16. மகா கங்கையிலுள்ள எல்லாக் கடக்குமிடங்களிலும் தமிழர்கள் வராமல் தடுத்து நிறுத்த காவலர்களை அரசன் காகவன தீசன் நியமித்திருந்தான்.

17. அரசனுக்கு மற்றொரு மனைவி மூலம் இப்போது தீக அபயன் என்றொரு மகன் பிறந்திருந்தான். கச்சகப் பாலத்தினருகே காவல் காக்கும் பொறுப்பை அரசன் அவனிடம் கொடுத்திருந்தான்.

18. இரண்டு யோஜனை தூரத்துக்குள் வசிக்கும் ஒவ்வொரு பிரபுக் குடும்பத்திலிருந்தும் ஒருவர் காவலுக்கு வரவேண்டுமென்று இவன் ஏற்பாடு செய்திருந்தான்.

19. கொத்திவாலா வட்டாரத்துக்குள், கந்தக வித்திக என்ற கிராமத்தில் குலத் தலைவனை சங்கன் என்றொருவன் இருந்தான். அவனுக்கு ஏழு பிள்ளைகள்.

20. ஒரு பிள்ளையை அனுப்ப வேண்டு மென்று கேட்டு இவனுக்கும் இளவரசன் கட்டளை அனுப்பியிருந்தான். அவனுடைய ஏழாவது பிள்ளை நிமிலன் பத்து யானையின் பலம் பொருந்தியவன்.

21. அவனுடைய சோம்பேறித்தனத்தைக் கண்டு கோபம் கொண்டிருந்த ஆறு சகோதரர்களும் காவலுக்கு இவன் போகவேண்டுமென்று விரும்பினர். ஆனல் அவனுடைய தாயும் தந்தையும் அவ்வாறு விரும்பவில்லை.

22. மற்ற சகோதரர்களிடம் கோபம் கொண்டவனக அவன் அதிகாலையில் மூன்று யோஜனை தூரம் சென்று உதயத்துக்கு முன்பே இளவரசனைக் கண்டான்.

23. இளவரசன், இவனை சோதிப்பதற்காக வெகு தூரம் போகவேண்டிய வேலை ஒன்றைக் கொடுத்தான். 'சேதிய மலைக்கருகே துவார மண்டல கிராமத்தில் என்னுடைய நண்பனை குண்டலி என்ற பிராமணன் இருக்கிறன்.



24. 'அவனிடம் வெளி நாட்டிலிருந்து வந்த பொருள்கள் உள்ளன.

25. 'அவனிடம் சென்று அவன் கொடுக்கும் பொருளைக் கொண்டு வா.' இவ்வாறு அவனிடம் சொல்லி உணவளித்ததும் ஒரு லிகிதத்துடன் அவனை அனுப்பி வைத்தான்.

26. அனுராதபுரத்தை நோக்கி ஒன்பது யோஜனை தூரம் நடந்து மத்தியானத்துக்குள் அவன் பிராமணன் இருக்குமிடத்தை அடைந்து விட்டான்.

27. 'குளத்தில் குளித்துவிட்டுப் பிறகு என்னிடம் வா' என்றுன் பிராமணன். இதற்கு முன் அந்த இடத்துக்கு (அனுராதபுரத்துக்கு) வந்திராத அவன் தீசவாபிக்கு சென்று குளித்தான்.

28. தூபராமாவிலுள்ள சேதியத்துக்கும், புனித போதி விருட்சத்துக்கும் வணக்கம் செய்த பின்பு அவன் நகரத்துக்குள் சென்றுன்.

29. நகரத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டு, வாசனைப் பொருள்களை வாங்கிக் கொண்டதும், வடக்கு வாசல் வழியே சென்று,

30. தாமரை மலர்களை வாங்கிக் கொண்டு பிராமணனிடம் வந்தான். எங்கே போயிருந்தாய் என்று பிராமணன் கேட்க அவன் விவரமாகச் சொன்னன். காலையில் அவன் நடந்து வந்ததையும், இப்போது நடந்து போய்விட்டு வந்ததையும் கேள்விப்பட்டுப் பிராமணன் வியப்பிலாழ்ந்தான்.

31. 'உயர்குலத்தில் வந்தவன் இவன். ஏலாரா இவனுடைய சக்தியைப் பற்றிக் கேள்விப் பட்டால் தன்னிடம் வைத்துக்கொண்டு விடுவான்.

32. 'எனவே இவன் தமிழர்களுக்கு அருகில் வசிக்கக்கூடாது. இளவரசனுடைய தந்தை யுடன் இவன் வசிக்க வேண்டும்.'

33. இந்தக் கருத்தை எழுதி அவனிடம் கொடுத்து புன்னவதன உடைகளையும் அளித்துவேறு பல பொருள்களையும் தந்தான்.

34. அவனுக்கு உணவளித்த பிறகு நண்பனிடம் திருப்பி அனுப்பினன். மாலை மங்குமுன் அவன் திரும்பி இளவரசனிடம் வந்து சேர்ந்தான்.

35. பிராமணர் கொடுத்த லிகிதத்தையும் பரிசுப் பொருள்களையும் இளவரசனிடம் கொடுத் தான். மகிழ்வடைந்த இளவரசன் 'இவ னுக்கு ஆயிரம் பணம் பரிசளித்து கௌரவியுங் கள்' என்றான்.

36. இளவரசனுடைய இதர துணைவர்கள் இது கண்டு பொருமை கொண்டனர்.

37. உடனே இளவரசன் அந்த இளைஞனுக்குப் பத் தாயிரம் பணம் பரிசளிக்கச் சொன்னன். பின்னர் அவனுடைய முடியை வெட்டிக் குளிப்பாட்டி சிங்காரித்த பின்பு புன்னவதன உடையையும், பட்டுத் தலைப்பாகையையும் அணிவித்தனர்.

38. அவனை இளவரசன் முன்பு அழைத்து வந் தனர். அவன் தனக்குரிய உணவைக்கொண்டு வந்து தரச் செய்தான்.

39. பத்தாயிரம் பணம் பெறுமான தன்னுடைய படுக்கையை அவ் வீரனுக்குக் கொடுக்குமாறு செய்தான்.



40. இவையனைத்தையும் அவன் எடுத்துக்கொண்டு பெற்றோரிடம் சென்று பத்தாயிரம் பணத்தைத் தாயாரிடமும், படுக்கையைத் தந்தையிடமும் கொடுத்தான்.

41. அதே இரவில் அவன் அரண்மனைக்குத் திரும்பி வந்து காவல் ஸ்தலத்தில் நின்றான். இளவரசன் காலையில் இதுபற்றிக் கேள்விப்பட்டதும் களிப்படைந்தான்.

42. பிரயாணத்துக்கு வேண்டிய பொருள்களும், துணைக்கு ஆளும் பத்தாயிரம் பணமும் கொடுத்து தன் தந்தையிடம் அவனை அனுப்பி வைத்தான்.

43. அவ்வீரன் தன் பெற்றோரிடம் சென்று பத்தா யிரம் பணத்தைக் கொடுத்துவிட்டு காகவன தீசனிடம் சென்றான்.

44. அரசன் அவனை காமனியிடம் சேவை செய்ய நியமித்தான். பெரும் மரியாதையுடன் சூர நிமிலன் காமனியுடன் வசிக்கத் தொடங்கினன்.

45. குறும்பாரி வட்டத்தில் ஹூண்டரிவாபி கிரா மத்தில் தீசனுடைய எட்டாவது மகன் சோனன் என்பவன் வசித்து வந்தான்.

46. அவனுக்கு ஏழு வயதாக இருக்கும்போது அவன் பனங்கன்றுகளைக் கிழிப்பது வழக்கம். பத்து வயதானபோது பெரிய மரங்களை முறிக்கக்கூடிய பலம் பெற்றுவிட்டான்.

47. விரைவில் பத்து யானைகளுடைய பலம் அவ னுக்கு வந்துவிட்டது. அரசன் இவனைப் பற்றிக் கேள்விப்பட்டபோது,

48. அவனைப் பெற்றோரிடமிருந்து வரவழைத்து காமனிக்குத் துணையாக அமர்த்தினன். காமனி யால் உரிய கௌரவமளிக்கப்பட்டு அவனுடன் வசித்து வந்தான்.

49. கிரி என்னும் பெயருள்ள பிரதேசத்தில் நிதுல வித்திக என்ற கிராமத்தில் மகாநாகன் என்பவனுடைய மகன் ஒருவன் பத்து யானை பலம் பெற்றிருந்தான்.

50. குள்ளமான உருவம் படைத்தவனாக அவன் இருந்ததால் கோதகன் என்று அவனை அழைத்தார்கள். அவனுடைய ஆறு சகோதரர்களும் அவனைக் கேலி செய்வது வழக்கம்.

51. ஒருமுறை பயிரிடுவதற்காகக் காட்டை அழிக்கச் சென்றிருந்த அவர்கள் அவனுடைய பங்கை விட்டு வைத்திருப்பதாக வந்து கூறினார்கள்.

52. உடனே அவன் அங்கு சென்றான். அங்கு இருந்த இம்பார மரங்களைப் பிடுங்கி எறிந்து தரையை மட்டப்படுத்திவிட்டு சகோதரர்களிடம் வந்து கூறினான்.

53. சகோதரர்கள் அங்கு சென்று அவன் செய்த அதிசய வேலையைப் பார்த்ததும் அவனைப் புகழ்ந்தனர்.

54. இதனால் அவனுக்கு கோதாயிம்பரன் என்ற பெயர் வந்தது. இவனையும் அரசன் அழைத்து காமணியுடன் இருக்குமாறு கட்டளையிட்டான்.

55. ரோஹண என்பவன் கோதமலைக்கருகில் உள்ள கிட்டி என்ற கிராமத் தலைவனாக இருந்தான் அவன் தனக்குப் பிறந்த பிள்ளைக்கு கோதபயன் எனப் பெயரிட்டான்.

56. பத்துப் பன்னிரெண்டு வயதிலேயே அவன் மிகுந்த பலம் பெற்றவனாகிவிட்டான்.

57. விளையாடும்போது நாலைந்துபேர் சேர்ந்து தூக்க முடியாத கற்களையும் கூட அனாவசியமாகத் தூக்கி எறிவான்.



58. அவனுக்குப் பதினாறு வயதானபோது அவனுடைய தந்தை முப்பத்தெட்டு அங்குல சுற்றளவும், பதினாறு முழ நீளமும் உள்ள ஒரு கதையைச் செய்து கொடுத்தான்.

59. இதைக்கொண்டு அவன் பனை மரங்களையும் தென்னை மரங்களையும் அடித்து வீழ்த்துவான். இதனால் அவன் பெரும் வீரனெனப் புகழ் பெற்றான்.

60. இவனையும் அரசன் அழைத்து காமணியிடம் துணைவனாக இருக்க அமர்த்தினான். அவனது தந்தை மகா சும்ம தேரருடைய ஆதரவாளன் ஆவான்.

61. ஒருமுறை இவன் கோதபர்வத விஹாரத்தில் மகாசும்ம தேரருடைய உபதேசத்தைக் கேட்டபோது அவன் (விமோசனம் பெறுவதற்கான) முதல் கட்டமான சோடபதி நிலையைப் பெற்றான்.

62. மனம் நெகிழ்ந்தவனாக அவன் இதை அரசனிடம் கூறினான். குடும்பத் தலைமையை மகனிடம் ஒப்படைத்துவிட்டு அவன் தேரரிடம் தீட்சை பெற்றான்.

63. தியானப் பயிற்சி பெற்று விட்டதால் அரஹந்தராவதற்கு தன்னை தகுதியுடையவனாகச் செய்து கொண்டு விட்டான். இதனாலேயே அவனுடைய மகனுக்கு தேரபுத்திர அபயன் எனப் பெயர்.

64. கப்ப கண்டரம் என்ற கிராமத்தில் குமாரன் என்பவனுக்கு மகனாகப் பரணன் என்பவன் இருந்தான். அவனுக்குப் பத்துப் பனிரெண்டு வயதிருக்கும்.

65. மற்றவர்களுடன் காட்டுக்குச் சென்று முயலைப் பிடித்து வருவது அவர்கள் வழக்கம். அவன்

காலால் எட்டி உதைத்தே அவற்றைத் தரையில் சுருண்டு விழச் செய்வான்.

66. பதினாறு வயதான பின்பு கிராமத்தினருடன் காட்டுக்குப் போகும்போது காலால் உதைத்தே மான்கள், பன்றிகள் போன்றவற்றைக் கொன்று விடுவான்.

67. இதனால் பரணன் பெரும் வீரன் எனப் பெயர் பெற்றான். அரசன் இதையறிந்து அவனை யழைத்து காமனிக்குத் துணையாக இருக்கச் செய்தான்.

68. கிரி என்ற வட்டத்தில் குடும்பியங்கான கிராமத்தில் வசபன் என்பவன் மக்களிடம் பெரிதும் மதிப்புடன் வாழ்ந்து வந்தான்.

69. அவனுக்கு மகன் பிறந்தபோது நண்பனைக் கண்டு பரிசுகள் வழங்க வேலன், சுமணன் என்ற இருவர் வந்தனர். இவர்களில் சுமணன் கிரி வட்டத்தின் காவலனாக இருந்தவர்.

70. இருவரும் தங்களுடைய பெயரையே குழந்தைக்கு வைத்தனர். அவனுக்கு வயதானதும் அவனைக் காவலன் தன்னுடைய வீட்டிலேயே வந்து வசிக்கச் செய்தார்.

71. அவரிடம் ஒரு சிந்து குதிரை இருந்தது. அது யாரையும் தன்மீது ஏறிச் சவாரி செய்ய அனுமதிப்பது இல்லை. குதிரை வேலு சுமணனைப் பார்த்ததும் 'என்மேல் சவாரி செய்யத் தகுதியுள்ள வீரன் இவன்' என்று எண்ணி மகிழ்வுடன் கனைத்தது.

72. காவலன் இதைப் பார்த்ததும் 'குதிரை மேல் ஏறிச் சவாரிச் செய்' என்று அவனிடம் சொன்னார்.

73. பிறகு அவன் குதிரை மீது ஏறி அதனை வட்டமாக ஓடச் செய்தான்.



74. குதிரையும் மனிதனும் இருப்பதே தெரியாமல் வாயு வேகமாக அது சுற்றி ஓடியது. அஞ்சாமல் அவன் மேலும் வேகமாக அதை ஓட்டினான்.

75. அங்கு நின்று கொண்டிருந்தவர்கள் இதைப் பார்த்தபோது உற்சாகமாகக் கைதட்டி ஆரவாரித்தனர். காவலன் அவனுக்குப் பத்தாயிரம் பணம் கொடுத்தார்.

76. 'இவன் அரசனிடம் இருக்கத் தகுதியுள்ளவன்' என்று கருதிய அவர் அவனை மகிழ்வுடன் அரச சேவையில் அமர்த்தினார்.

77. அரசன் வேலு சுமணனுக்குப் பலவிதமான கௌரவங்களை அளித்துத் தன்னுடனேயே வைத்துக் கொண்டான்.

78. நகுலநாக வட்டத்தில் மஹிஷ டோணிக என்ற கிராமத்தில் அபயனுடைய கடைசி மகன் தேவன் என்பவன் வசித்து வந்தான்.

79. பெரும் பலம் படைத்தவன் அவன். சற்று நொண்டி நடந்ததால் அவனைக் கஞ்சதேவன் என்றழைத்தனர்.

80. கிராமத்தினருடன் அவன் வேட்டையாடச் சென்றபோது காட்டெருமைகளைத் துரத்திப் பிடித்து அவன் கால்களைப் பற்றி,

81. தலைமேல் தூக்கிச் சுழற்றித் தரையில் ஓங்கியடித்து எலும்புகளை முறிப்பான்.

82. இதுபற்றி அரசன் கேள்விப்பட்டதும் கஞ்சதேவனைத் தன்னிடம் வரவழைத்து காமனிக்குத் துணையாக இருக்கும்படி அமர்த்தினான்.

83. சீதள பர்வத விஹாரத்துக்கருகில் காவித என்ற கிராமத்தில் உபாலன் என்பவனுக்கு பூசதேவன் என்ற மகன் இருந்தான்.

84. சிறுவனாக இருக்கும்போது மற்ற சிறுவர்களுடன் விஹாரத்துக்குச் சென்ற அவன் போதி மரத்துக்குக் காணிக்கையாகச் செலுத்தப்பட்ட சங்கு ஒன்றை எடுத்துப் பலமாக ஊதினான்.

85. அவனுடைய குரலும் சங்கொலியும் சேர்ந்து இடி முழக்கம் போல் கேட்டது. உடன் வந்த சிறுவர்கள் இதைக் கேட்டுத் திகைத்துப் போய் நின்றுவிட்டனர்,

86. எனவே அவனுக்கு உன்மத்த பூசதேவன் என்ற பெயர் வழங்குவதாயிற்று. தந்தை அவனுக்கு குலத்தொழிலான வில்வித்தையில் நல்ல பயிற்சியளித்தார்.

87. ஒலியைக் கொண்டே பொருள் இருக்குமிடத்தை அறிந்து அம்பு எய்யும் திறமையையும் ஒளியைக் கொண்டு எய்யும் சக்தியும், மயிரையும் குறி தவறாமல் எய்யும் திறமையும் அவன் பெற்றிருந்தான்.

88. மண் நிறைந்த வண்டி, ஒன்றாக சேர்ந்து வைக்கப்பட்ட நூறு தோல்கள், எட்டு அல்லது பதினாறங்குல கனமுள்ள ஆசன அல்லது உடும்பர மரக்கட்டை,

89. இரண்டு அல்லது நான்கு அங்குல கனமுள்ள இரும்பு அல்லது செம்புத் துண்டு—இவற்றை அம்பு எய்து துளைக்கும் அபாரசக்தி அவனிடம் இருந்தது.

90. அவன் எய்யும் அம்பு நிலத்தில் எட்டு உசபா தூரமும் நீரில் ஒரு உசபா தூரமும் செல்லும். அரசன் இதைக் கேள்விப்பட்டதும் அவனைத் தந்தையிடமிருந்து வரவழைத்துக் காமனியிடம் இருக்கச் செய்தான்.



91. துலாதார மலைக்கருகே விஹாரவாபி என்ற கிராமத்தில் மத்தன் என்பவனுக்கு வசபன் என்றொரு மகன் இருந்தான்.

92. சிறந்த லட்சணங்கள் அவனிடம் அமையப் பெற்றிருந்ததால் அவனை எல்லோரும் லபிய வசபன் என்றழைத்தனர். இருபது வயதில் அவன் பெரும் பலம் பெற்றுத் திகழ்ந்தான்.

93. பயிரிட விரும்பியதால் சில மனிதர்களுடன் அவன் ஒரு சமயம் குளம் வெட்டச் சென்றான்.

94. அசாதாரண பலம் படைத்த அவன் பத்துப் பனிரெண்டு பேர் சேர்ந்து தூக்கக்கூடிய மண்ணை அவன் ஒருவனாகவே அனாயாசமாக தூக்கி எறிந்தான். வெகு குறுகிய நேரத்தில் குளம் வெட்டி முடிந்து விட்டது.

95. இதன்மூலம் அவன் புகழ் பரவியது. அரசன் இதையறிந்து அவனை யழைத்துப் பலவிதமாகக் கௌரவித்து காமனிக்குத் துணையாக இருக்க நியமித்தான்.

96. அவன் வெட்டிய இடத்துக்கு வசப அணை என்று பெயர். லபிய வசபன் இது முதல் காமனியுடன் வசித்து வரலானான்.

97. தன் சொந்தப் பிள்ளைகளைக் கௌரவிப்பது போலவே அரசன் இந்தப் பத்து வீரர்களையும் பெருமை செய்து நடத்தி வந்தான்.

98. ஒரு நாள் இந்தப் பத்து பேரையும் அரசன் அழைத்து இவ்வாறு கட்டளையிட்டான் :

99. 'ஒவ்வொருவரும் பத்து வீரர்களைக் கண்டு பிடிக்க வேண்டும்' என்ற அரசன் கட்டளைப் படி அவர்கள் நடந்து நூறு வீரர்களைத் திரட்டினர்.

100. இதேபோல் அரசன் அந்த நூறு வீரர்களுக்கும் கட்டளையிட்டான். அவர்கள் ஆயிரம் வீரர்களைத் திரட்டினர். இந்த ஆயிரம் பேருக்கும் அரசன் அதே விதமாகக் கட்டளையிட்டான்.

101. அவர்களும் அதேபோல் வீரர்களைத் திரட்டினர். இவ்வாறு எல்லோருமாகச் சேர்ந்து திரட்டிய வீரர்களின் தொகை பதினோராயிரத்து நூற்றுப் பத்து ஆயிற்று.

102. இவர்கள் அனைவரும் அரசனால் கௌரவமாக நடத்தப்பட்டனர். இளவரசன் காமனிக்குத் துணையாக இவர்கள் இருந்து வந்தனர்.

103. இவ்வாறாக தன்னுடைய விமோசனத்தில் அக்கறையுள்ள அறிவுடன் கூடிய மனிதன், சாதுவாக வாழ்க்கை நடத்துபவர்கள் புரியும் அதிசயங்களைக் கேள்விப் படும்போது தீய வழியைத் திரும்பியும் பாராமல் நேர்வழியில் சென்று, மேலும் இன்பம் பெறுவான் என்பது நிச்சயம்.

**மகாவம்சத்தில் இருபத்தி மூன்றாவது அத்தியாயமான படை வீரர்களை திரட்டல் முற்றும்**

## இருபத்திநான்காவது அத்தியாயம்

# சகோதரர்களிடையே சண்டை

1. யானைப்படை, குதிரைப் படைகளை நடத்துவதிலும் வாளெடுத்துப் போர் புரிவதிலும், வில் வித்தையிலும் வல்லவனாக தேர்ந்த பயிற்சி பெற்று காமனி மகா காமத்தில் வசித்து வந்தான்.

2. நாட்டைக் காப்பதற்காக இளவரசன் தீசனை படை வீரர்களுடனும், ரதங்களுடனும் தீக வாபியில் தங்கியிருக்கும்படி அரசன் ஏற்பாடு செய்திருந்தான்.

3. எல்லாம் ஸ்திரப்பட்டதும் தன் பலத்தைப் பரிசீலனை செய்த இளவரசன் காமனி, தன் தந்தையாகிய அரசனிடம் 'தமிழர்கள் மீது போர் தொடுக்கப் போகிறேன்' என்றான்.

4. அரசன் அவனைப் பாதுகாப்பதற்காக அவனைத் தடுத்தான். 'நதிக்கு* இந்தப் புறமுள்ள நாடு நமக்குப் போதும்' என்றான். காமனி மூன்று முறை கேட்டான். ஒவ்வொரு தடவையும் இதே பதிலைத்தான் அரசன் சொன்னான்.

5. 'என்னுடைய தந்தை ஒரு ஆண் பிள்ளையாக இருந்தால் இப்படிப் பேச மாட்டார் எனவே அவர் இதை அணிந்து கொள்ளட்டும்'

6. இவ்வாறு கருதிய காமனி தந்தைக்குப் பெண்களின் அணிகளைக் கொடுத்தனுப்பினான்.

* மகாகங்கை நதி இரு நாடுகளுக்கும் எல்லையாக இருந்தது. நதியின் மறுபுறம் தமிழர்கள் வசம் இருந்தது.

இதைக் கண்டு அரசன் கோபமடைந்தான். 'தங்கச் சங்கிலி ஒன்று செய்யுங்கள். அதனுல் இவனைக் கட்டிப் போடுகிறேன். இல்லாவிடில் இவனைக் காப்பாற்ற முடியாது' என்ருன் (அரசன்)

7. காமனி இதைக் கேட்டுத் தந்தையிடம் கோபமடைந்தவனுக மலயநாட்டுக்கு ஓடிப் போய் விட்டான். தந்தையிடம் கோபம் கொண்டு ஓடியதால் அவனைத் துஷ்ட காமனி என்று அழைத்தார்கள்.

8. பிறகு அரசன் மகானுகலசேதியத்தைக் கட்டத் தொடங்கினுன். சேதியம் கட்டி முடிந்ததும் அவன் பிக்கு சங்கத்தாரை அழைத்தான்.

9. சீதள பர்வதத்திலிருந்து பனிரெண்டாயிரம் பிக்குகள் அங்கு வந்து கூடினர். வேறு பல இடங்களிலிருந்து மற்றும் பனிரெண்டாயிரம் பேர் வந்தனர்.

10. சேதியத்தின் பவித்ர விழாவை நடத்தியதும் அவன் எல்லா வீரர்களையும் ஒன்று கூட்டி பிக்கு சங்கத்தார் முன்பு ஒரு சபதம் எடுத்துக் கொள்ளச் செய்தான்.

11. அவர்கள் எல்லோரும் சபதம் செய்தனர். 'நாங்கள் உங்கள் மகனுடைய போருக்குப் போக மாட்டோம்' என்பதே சபதம். அதனலேயே பின்னல் நடந்த போருக்கு அவர்கள் வரவில்லை.

12. அறுபத்தி நாலு விஹாரங்களைக் கட்டிய மன்னன் அறுபத்து நான்கு வருடம் உயிரோடு இருந்தான். பிறகு அவன் அதே ஊரில் (மகாகாமா) இறந்து போனுன்.



13. ராணி அரசனுடைய சடலத்தை மூடப்பட்ட ரதத்தில் தீச மகாராமாவுக்குக் கொண்டு சென்று பிக்கு சங்கத்தாரிடம் இதனைக் கூறினுள்.

14. இளவரசன் தீசன் இதைக் கேள்விப்பட்டதும் தீகவாபியிலிருந்து வந்து சேர்ந்தான். முறைப்படி தந்தையின் அந்திமக்கிரியைகளைத் தானே செய்தான்.

15. பிறகு தாயையும், யானை கந்துலனையும் தன்னுடன் அழைத்துக் கொண்டு அண்ணனுக்குப் பயந்தவனுக அதி வேகமாகத் திரும்பி தீகவாபியை அடைந்தான்.

16. நடந்தது எல்லாவற்றையும் தெரிவிப்பதற்காக மந்திரிகள் யாவரும் சேர்ந்து கூடிப்பேசி துஷ்ட காமினிக்கு செய்தி எழுதி அனுப்பினர்.

17. காமனி, குட்டகாலாவுக்கு வந்து அங்கு காவலுக்குப் படை வீரர்களை நிறுத்தி வைத்து விட்டு மகா காமாவுக்குச் சென்று அரசனுகப் பட்டாபிஷேகம் செய்து கொண்டான்.

18. தாயையும், யானையையும் அனுப்பி வைக்கும் படித் தம்பிக்கு செய்தி எழுதி அனுப்பினுன். மூன்று முறை கேட்டனுப்பியும் வராமற் போகவே அவன்மீது போர் தொடுத்தான்.

19. அந்த இருவருக்குமிடையே சூளங்கணியபித்தி என்ற இடத்தில் பெரும் போர் நடந்தது. ஆயிரக்கணக்கில் அரசனுடைய (துஷ்டகாமனி) வீரர்கள் மடிந்தனர்.

20. அரசனும், அவனுடைய மந்திரி தீசனும் தீகதூனிகா என்ற குதிரையுடன் அங்கிருந்து ஓடி விட்டனர். இளவரசன் (தீசன்) அவர்களைத் தொடர்ந்து சென்ருன்.

21. இரு சகோதரர்களுக்குமிடையே பிக்குகள் ஒரு மலையை சிருஷ்டித்தனர். இதைக்கண்ட தீசன் 'இது பிக்குகளின் வேலையாகத் தான் இருக்க வேண்டும்' என்றெண்ணியவனாகத் திரும்பிச் சென்றான்.

22. கப்பகண்டர நதியில் ஜாவமாலம் என்ற இடத்துக்கு வந்ததும் அரசன் மந்திரி தீசனிடம் 'அதிகப் பசியாக இருக்கிறது' என்றான்.

23. தங்கக் கிண்ணத்திலிருந்த உணவை அவன் அரசனிடம் கொடுத்தான். அவன் அதை பிக்கு சங்கத்தாருக்கு ஒதுக்கிவிட்டு நான்கு பகுதியாகப் பிரித்தான்.

24. 'உணவு நேரத்தை அறிவியுங்கள்' என்று மந்திரியிடம் கூறினான். அவனும் அப்படியே செய்தான். அரசனுக்கு தர்மத்தைப் போதித்த கோதம தேரர் தமது தெய்விகக் காதுகளால் இதைக் கேட்டார்.

25. பியாங்கு தீபத்தில்* அப்போது வசித்துக் கொண்டிருந்த அவர் தீசதேரரை அங்கு போகுமாறு அனுப்பினர்.

26. தீசதேரர் ஆகாய மார்க்கமாக அரசன் இருக்குமிடம் சென்றார். மந்திரி பிட்சா பாத்திரத்தை வாங்கி அரசனிடம் கொடுத்தார். அரசன் பிக்குகளுக்காக ஒதுக்கிவைத்த உணவையும், தன்னுடைய உணவையும் அதில் இடச் சொன்னான்.

27. மந்திரி தீசன் தனக்கு ஒதுக்கப்பட்ட உணவையும் அதில் இட்டார். குதிரையும் தன் உணவைக் கொள்ளாததால் மந்திரி அதையும் பிக்குவின் பிட்சா பாத்திரத்தில் இட்டார்.

*குங்குமப்பூ தீவு. இங்கு வசித்த பிக்குகள் புனிதம் மிக்கவர்கள் என்ற புகழ்பெற்றவர்கள்.



28. உணவு நிரம்பிய பிட்சா பாத்திரத்தை அரசன் தேரரிடம் கொடுத்தான். அவர் ஆகாய மார்க்கமாக விரைந்து கோதமரிடம் அதனைக் கொண்டு வந்தார்.

29. தேரர் அந்த உணவை ஒவ்வொரு கவளமாக ஐநூறு பிக்குகளுக்கு அளித்தார். அவர்கள் அதை உண்டனர்.

30. உண்டதுபோக எஞ்சியதைத் திரட்டி பிட்சா பாத்திரத்தில் நிரப்பி ஆகாய மார்க்கமாக அதனை அரசனுக்கு அனுப்பி வைத்தார்.

31. பிட்சா பாத்திரம் வருவதைக் கண்ட மந்திரி அதனைப் பெற்றுக்கொண்டு அரசனுக்கு உணவு படைத்தார். பிறகு தானும் உண்டுவிட்டு குதிரைக்கும் அளித்தார். பிறகு அரசன் பிட்சா பாத்திரத்தைத் திருப்பி அனுப்பி வைத்தான்.

32. பிறகு மகா காமாவுக்கு வந்து சேர்ந்த அரசன் மீண்டும் அறுபதாயிரம் வீரர்களைத் திரட்டித் தம்பியுடன் போர் தொடுத்தான்.

33. அரசன் தன்னுடைய குதிரைமீதும், தீசன் யானை கந்துலன்மீதும் ஏறியிருக்க இருவரும் போர்க்களத்தில் ஒருவரையொருவர் சந்தித்தனர்.

34. யானையைச் சுற்றி அரசன் தன்னுடைய குதிரையை ஓடவிட்டான். காவல் இல்லாத இடம் எதுவும் இல்லாமல் இருப்பதைக் கண்ட அவன் அதன்மீது தாவத் தீர்மானித்தான்.

35. பின்பு தன் குதிரையை யானைமீது பாய்ந்து தாண்டச் செய்தான். அப்போது யானைக்கு மேல் தோலில் மட்டும் காயம் படும்படியாக

தம்பிக்கு மேலாக ஈட்டியை எய்தான்.

36. தீசனுடைய படை வீரர்கள் ஆயிரக்கணக்கில் போரிட்டு மடிந்தனர். அவனுடைய பெரும் படை சிதறுண்டது.

37. 'என்மீது சவாரி செய்தவனுடைய பலவீனத்தினல் அல்லவா ஒரு பெண் (குதிரை) என் மீது தாவும்படியான அவமானம் நேர்ந்தது?' என்று புழுங்கிய யானை கந்துலன் கோபமடைந்து தீசனைக் கீழே தள்ளிவிட ஒரு மரத்தின்மீது சென்று மோதியது.

38. தீசன் மரத்திலேறித் தப்பித்துக்கொண்டான். யானை தன்னுடைய எஜமானன் துஷ்டகாமனியிடம் போய்ச் சேர்ந்தது. அவன் அதன்மேல் ஏறிக்கொண்டு ஓடும் இளவரசன் தீசனைத் துரத்தினன்.

39. ஒரு விஹாரத்தையடைந்த இளவரசன் பிரதம தேரரின் அறையையடைந்து சகோதரனுக்குப் பயந்து அவருடைய படுக்கைக் கடியில் மறைந்துகொண்டான்.

40. பிரதம தேரர் ஒரு துணியைப் படுக்கைமீது விரித்துப் போட்டார். உடன் தொடர்ந்து வந்த அரசன் உள்ளே வந்து, 'எங்கே தீசன்?' என்று கேட்டான்.

41. 'அவன் படுக்கையில் இல்லை' என்று தேரர் பதிலளித்தார். படுக்கைக் கடியில் இருப்பதை அரசன் கண்டான்.

42. வெளியே சென்ற அரசன் விஹாரத்தைச் சுற்றிப் போர் வீரர்களைக் காவல் வைத்தான். பிக்குகள் தீசனைப் படுக்கையில் கிடத்தி மூடி நான்கு பேராகத் தூக்கி எடுத்துச் சென்று வெளியேற்றினர்.



43. இறந்துவிட்ட ஒரு பிக்குவை எடுத்துச் செல்வதுபோல் அவர்கள் கட்டிலைத் தூக்கிச் சென்றனர்.

44. ஆனல் அரசன் இவ்வாறு தூக்கிச் செல்லப்படுபவன் தீசன் எனத் தெரிந்துகொண்டான். 'தீசா! நமது குலக் காவலர்களின் தலைமீது நீ எடுத்துச் செல்லப்படுகிருய்.

45. 'நமது குடும்பக் காவலர்களிடமிருந்து பலாத்காரமாக உன்னைப்பற்றி இழுத்துக்கொண்டு போவது என் வழக்கமல்ல. நமது குலக் காவலர்களின் பெருமையை எப்போதும் நினைவில் கொள்வாயாக' என்ருன்.

46. இதன் பிறகு அரசன் மகா காமத்துக்குச் சென்ருன். அங்கு தான் பெரிதும் மதித்த தன்னுடைய தாயை வரவழைத்துக் கொண்டான்.

47. அறுபத்தெட்டு வருட காலம் அரசன் வாழ்ந்தான், அவனுடைய நம்பிக்கை உறுதியாக இருந்தது. அவன் அறுபத்தெட்டு விஹாரங்களைக் கட்டினன்.

48. பிக்குகளால் தூக்கிச் செல்லப்பட்ட இளவரசன் தீசன் யாரும் அடையாளம் கண்டுகொள்ளாமல் தீசவாபிக்குச் சென்ருன்.

49. கோதகத தேரரிடம் சென்று அவன் 'நான் தீங்கு செய்துவிட்டேன். சகோதரனுடன் சமாதானமாகப் போக விரும்புகிறேன்' என்ருன்.

50. தேரர் ஐநூறு பிக்குகளுடன் தீசனையும் அழைத்துக்கொண்டு புறப்பட்டு அரசனிடம் சென்ருர்.

51. இளவரசனை ஒருபுறமாக இருக்கச் செய்துவிட்டு தேரர் பிக்கு சங்கத்தாருடன் உள்ளே சென்ருர். அரசன் அவர்களை வரவேற்ருன்.

52. அனைவரையும் ஆசனங்களில் அமரச் செய்து அரிசிப் பாலும் மற்றும் பல உணவுகளும் அளித்தான். அதைத் தேரர் பிட்சா பாத்திரத்தை மூடிக்கொண்டு (ஏற்க மறுக்கவே) அரசன் 'ஏன் இப்படி?' என்று கேட்டான்,

53. 'நாங்கள் தீசனை அழைத்துக்கொண்டு இங்கு வந்திருக்கிறோம்' என்றார். 'எங்கே அந்த துரோகி?' என்று அரசன் கேட்க தேரர் அவன் நின்ற இடத்தைச் சுட்டிக் காட்டினார். விஹாரதேவி அந்த இடத்துக்கு விரைந்து சென்று பாதுகாப்பாகத் தன் இளைய மகனை மறைத்துக்கொண்டு நின்றாள்.

54. 'எப்போதும் நாங்கள் உங்களுடைய சேவகர்கள் என்பது உங்களுக்குத் தெரிந்ததே. ஏழு வருடங்களுக்கு முன்பே ஒருவரை அனுப்பியிருந்தால் இந்த சண்டை ஏற்பட்டே இராது' என்றான் அரசன் தேரரிடம்.

55. 'இது பிக்குகளுடைய குற்றம்தான். இதற்காக அவர்கள் பிராயச்சித்தம் செய்வார்கள்' என்றார் தேரர்.

56. 'முதலில் உணவு அருந்துங்கள்' என்று கூறி (நடந்ததை மறந்தவனாக) மன்னன் அவர்களை உபசரிக்க தொடங்கினான்.

57. பிறகு தன் தம்பியை அருகில் அழைத்து பிக்குகள் எதிரிலேயே பக்கத்தில் அமர்த்திக்கொண்டான். இருவருமாகச் சேர்ந்து உணவருந்திய பின் பிக்குகளுக்கு விடை கொடுத்தனுப்பினான்.

58. தீகவாபிக்குச் சென்று அறுவடை வேலைகளைக் கவனிக்கும்படியாக பின்னர் தம்பியை அனுப்பினான்.



59. பல காரணங்களால் பெரிய விரோதம் மூண்டாலும் பக்தியுள்ளவர்கள் இவ்வாறாக சமாதானமாகப் போய் விடுவார்கள். இதுபற்றி சிந்திக்கும் அறிவுடைய யார்தான் அமைதியையும் மற்றவர்களிடம் சமாதானத்தையும் விரும்ப மாட்டார்கள்?

**மகாவம்சத்தில் இருபத்திநான்காவது அத்தியாயமான சகோதரர்கள் சண்டை முற்றும்.**

## இருபத்தைந்தாவது அத்தியாயம்

# துஷ்ட காமனியின் வெற்றி

1. அரசன் துஷ்டகாமனி மக்களுக்கு எல்லா ஏற்பாடுகளையும் செய்த பின்பு ஈட்டியை* முன்னால் ஏந்திக்கொண்டு புறப்பட்டான்.

2. ரதங்களும், படைகளும் உடன் வர திசமகாராமாவுக்குச்சென்று பிக்குகளுக்குக் காணிக்கை செலுத்தி வணங்கிய பின்பு, 'நமது மார்க்கத்துக்குப் பெருமைதேட நதியின் மறுகரைக்குப் போகப் போகிறேன்,

3. 'நாங்கள் பெருமையுடன் நடத்துவதற்கு உடன் வரக்கூடிய பிக்குகளை அனுப்பி வையுங்கள். கண்பார்வையில் பிக்குகள் இருந்தாலே அது எங்களுக்கு ஆசியும் பாதுகாப்பும் அளிப்பதாக இருக்கும்' என்றான்.

4. பிராயச்சித்தமாக பிக்குகள் சங்கம் ஐநூறு துறவிகளை அவனுடன் அனுப்பி வைத்தது.

5, அரசன் பிக்குகளை அழைத்துக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டான். மலயத்திலிருந்து (அனுராதபுரத்துக்குச்) செல்லும் சாலையைச் சீர்படுத்திச் சரி செய்ததும் யானை கந்துலன்மீது ஏறிக்கொண்டு படை வீரர்களுடன் புறப்பட்டான்.

*ஈட்டி ராஜசின்னமாகும். அரசன் செல்லும்போது அதை முன்னே எடுத்துச் செல்வது வழக்கம்.

6. அவனுடைய பெரும் படையின் ஒரு கோடி மகா காமாவில் இருக்கும்போதே இன்னொரு கோடி குத்தஹாலகத்தை அடைந்தது.

7. மஹியங்கானவுக்கு வந்து சேர்ந்த அவன் சத்தன் என்ற தமிழனை வெற்றி கொண்டான். அதே இடத்தில் அவனைக் கொன்றுவிட்டு, அம்ப திட்டகத்துக்கு வந்தான். அங்கு நதியிலிருந்து ஒரு சுரங்க வாயில் இருந்தது.

8. தித்தம்பன் என்ற தமிழனை எதிர்த்து அவன் நான்கு மாத காலம் கடுமையாகப் போரிட வேண்டியிருந்தது.

9. பலமுள்ள எதிரியை அவனால் சூழ்ச்சியால் தான் வெற்றிகொள்ள முடிந்தது. தாயாரைக் காட்டி அவனை வெற்றி கொண்டான்.*

10. பிறகு நதியைக் கடந்துவந்த அரசன் ஒரே நாளில் ஏழு தமிழர்களை வெற்றி கொண்டு அமைதியை நிலைநாட்டினான். போரில் கொள்ளையடித்த பொருள்களைத் தனது படை வீரர்களுக்குக் கொடுத்து விட்டான். அதனால் அந்த இடத்துக்கு கோமாராமா என்ற பெயர் வந்தது.

11. அந்தரா சோபாவில் அவன் மகா கொத்தனை வெற்றி கொண்டான். டோண காவரத்திலும், ஹாலகோல இஸாரியத்திலும். நாழிசோப நாழிகாவிலும் அவனுக்கு வெற்றி கிடைத்தது,

12. தீகாபய கல்லகத்தில் அதேபோல் தீகாபயனை வெற்றி கொண்டான். நான்கு மாதங்களுக்குள் கச்ச திட்டத்தில் கபிசீகனை வென்றான்.

*காமனி என்ன விதமான சூழ்ச்சிசெய்தான்? தாயாரைக் காட்டி எப்படி வெற்றி கொண்டான் என்ற விவரம் தெளிவாகத் தெரியவில்லை.

13. கோதானகரத்தில் கோதனைப் போரிட்டு வென்றான். வஹித்தையல் தமிழன் வஹித்தனை முறியடித்தான்.

14. கும்பகாம கும்பா, நந்திகாம நந்திகா, கானு காமத்தில் கானு, மாமனும் மருமகனுமான தம்பா, உனமா ஆகியவர்களையும் அவன் தோற்கடித்தான்.

15. ஜம்புவும் அவன் வசப்பட்டது. அவன் கைப்பற்றிய ஒவ்வொரு கிராமமும் படைத் தலைவர்களின் பேரால் அழைக்கப்பட்டது.

16. 'தன்னைச் சேர்ந்தவர்களையே யாரென்று தெரிந்துகொள்ளாமல் அரசன் தன் மக்களையே கொல்கிறான்' என்று சொல்லப்பட்டதைக் கேள்விப்பட்ட அரசன இவ்வாறு பிரகடனப் படுத்தினான்.

17. 'என்னுடைய ஆதிக்கத்தை அதிகரித்துக் கொள்வதற்காக இந்த சிரமத்தை நான் மேற்கொள்ளவில்லை. சம்புத்தருடைய மார்க்கத்தைப் பரப்பவே எப்போதும் பாடுபடுவேன்.

18. 'இப்படி நான் கூறுவது உண்மையானால் எனது படை வீரர்களுடைய கவசம் நெருப்பின் நிறத்தைப்போல் மாறுவதாக' என்றான். அவ்வாறே நடந்தது.

19. நதிக்கரையில் இருந்து உயிர் தப்பிய அத்தனை தமிழர்களும் விஜிதநகரம் என்ற நகரத்துக்குள் சென்றடைந்தனர்.

20. அரசன் வசதியாக இருந்த பரந்த வெளியில் முகாமிட்டுத் தங்கினான். இந்த இடத்துக்கு கந்தாவார பித்தி என்ற பெயர் ஏற்பட்டது.

---

**விஜிதநகரம்**—கால வாபியின் வடகரையில் உள்ளது; அனுராதபுரத்திலிருந்து 24 மைலில் உள்ளது.



21. விஜித நகரத்தைக் கைப்பற்று முன்பு அரசன் நந்திமித்ரனைக் சோதித்துப் பார்க்க விரும்பினான். அதற்காக யானை கந்துலனை அவன் மீது ஏவி விட்டான்.

22. தன் மீது பாய்ந்து வரும் யானையைக் கண்ட நந்திமித்ரன் அதன் இரு கொம்புகளையும் பிடித்துக்கொண்டு யானை முன்னேற முடியாமல் தடுத்து நிறுத்தினான்.

23. நந்தி மித்ரன் அந்த இடத்தில் யானையுடன் போரிட்டதால் அங்கு ஏற்பட்ட கிராமத்துக்கு ஹத்திபோரா என்ற பெயரிடப்பட்டது.

24. இவ்வாறு இருவரையும் சோதித்த பின்பு அரசன் விஜித நகரத்தின் மீது படையெடுத்தான். தெற்கு வாசலில் இரு தரப்புப் போர் வீரர்களுக்குமிடையே கடுமையான போர் நடைபெற்றது.

25. ஆனல் கிழக்கு வாசலில் வேலுசுமணன் தன் குதிரை மீதமர்ந்தபடியே தமிழர்களை ஏராளமாகக் கொன்று குவித்தான்.

26. தமிழர்கள் கோட்டை வாசலை அடைந்து விட்டனர். அரசன் அங்கு தன் ஆட்களை அனுப்பினான். கந்துலன், நந்திமித்ரன், சூரநிமிலன் ஆகியவர்கள் தெற்கு வாசலிலும்,

27. மகா சோனன், கோதன், தேரபுத்ரன் ஆகிய மூவரும் மற்ற மூன்று வாசல்களிலும் போரிட்டனர்.

28. நகரத்தில் மூன்று அகழ்களும், உயரமான கோட்டைச் சுவரும் இருந்தன. எதிரிகளால் அழிக்க முடியாத விதத்தில் பலமான இரும்புக் கதவுகள் வாசல்களுக்குப் பாதுகாப்பாக இருந்தன.

29. இரும்புக் கதவை யானை கந்துலன் பலமாகத் தாக்கி உடைக்க முயன்று கொண்டிருந்தது.

30. கோட்டை மதிலின் மீது நின்று கொண்டிருந்த தமிழர்கள் எல்லாவிதமான ஆயுதங்களையும் எறிந்தனர். பழுக்கக் காய்ச்சிய இரும்புக் குண்டுகளையும், உருக்கிய உலோகக் குழம்பு களையும் எறிந்தனர்.

31. உலோகக் குழம்பு கந்துலன் மீது விழுந்து அது வேதனை தாளாமல் துடித்தது; எரிச்சல் தாங் காமல் நீர்நிலைக்குச் சென்று மூழ்கியது.

32. 'உல்லாசமாக இருக்க இங்கு வரவில்லை. உம். ஓடு. போய் கோட்டைக் கதவைத் தாக்கு' என்று கோதாயிம்பரன் அதை விரட்டினன்.

33. யானை பிறிளிக் கொண்டே குளத்திலிருந்தும் வெளிப்பட்டு மேலேறி வந்து நின்றது.

34. யானை வைத்தியர் காயங்களைத் துடைத்து மருந்து போட்டார். அரசன் அதன் மீது ஏறிக் கொண்டான். அதை மெல்லத் தட்டி உற்சாகப் படுத்தினன்.

35. 'இலங்கைத் தீவு முழுவதற்கும் உனக்கு அரசுரிமை அளிக்கிறேன்.' என்று கூறி அதற்குப் பிடித்தமான புல்லைக் கொடுத்தான்.

36. பிறகு காயத்தைத் துணியால் மூடி கவசத்தை அணிவித்தான். ஏழு எருமைத் தோல்களை மடித்து அதன் முதுகில் போட்டான்.

37. எல்லாவற்றுக்கும் மேலாக எண்ணெயில் ஊறிய ஒரு தோலைப் போர்த்து அதைப் போக விட்டான். இடிபோல் முழங்கிக் கொண்டு வந்து அது கோட்டைக் கதவைத் தாக்கி வாசற்படியை மிதித்துத் துவைத்தது.



38. பலத்த சத்தத்துடன் கோட்டைக் கதவு முறிந்து கீழே சாய்ந்தது.

39. கோட்டைக் கோபுரம் இடிந்து யானையின் மேல் விழவிருந்த கற்களை நந்தி மித்ரன் தன் கைகளால் தட்டி அப்பால் விழச் செய்தான்.

40. கந்துலன் இதைக் கண்டதும், முன்பு அவன் கொம்பைப் பற்றித் தன்னை அடக்கி விட்டதை யெண்ணி மனதில் கருவிக் கொண்டிருந்த வர்மத்தைக் கைவிட்டது.

41. அவன் நெருக்கமாகத் தன்னை பின் தொடர்ந்து நகருக்குள் நுழையவேண்டும் என்று நினைத்த யானை திரும்பி நந்தி மித்ரனைப் பார்த்தது.

42. யானையால் திறந்து விடப்பட்ட கதவின் வழியே நுழையக் கூடாது என்று எண்ணிய நந்தி மித்ரன் தன் கையினுல் ஓங்கி அடித்து சுவரைப் பிளந்தான்.

43. பதினெட்டு முழ உயரத்துக்கும், எட்டு உசபா நீளத்துக்கும் சுவர் இடிந்து விழுந்தது. யானை சூர நிமிலனைப் பார்த்தது. அவனும் யானை யைப் பின் தொடரவில்லை.

44. அவன் சுவற்றைத் தாண்டி உள்ளே குதித் தான். அதன் பிறகு விரைந்து நகரத்துக்குள் சென்ருன். கோதனும் சோனனும் ஒவ்வொரு கதவையும் பிளந்துகொண்டு நுழைந்தனர்.

45. யானை ஒரு வண்டிச் சக்கரத்தைப்பற்றித் தூக்கிக் கொண்டது. மித்ரன் ரதப் பட் டரையை எடுத்துக் கொண்டான். கோதன் ஒரு பனைமரத்தைப் பிடுங்கிக் கையில் எடுத் துக் கொண்டான்.

46. நிமிலன் கையில் வாளும், மகா சோனன் கையில் பனைமரமும், தேரபுத்திரனிடம் கதாயுதமும்

இருந்தன. இப்படி விரைந்து உள்ளே புகுந்த இவர்கள் நகரிலிருந்த தமிழர்களைச் சிதற அடித்தனர்.

47. அரசன் நான்கு மாத காலத்தில் விஜித நகரத்தை அழித்ததும் அங்கிருந்து கிரிலகத்துக்குச் சென்று கிரியன் என்ற தமிழனைக் கொன்றான்.

48. பிறகு அவன் படையுடன் மஹிள நகரத்துக்குச் சென்றான். மூன்று அகழிகளால் சூழப்பட்டிருந்த அதற்கு ஒரே ஒரு கோட்டைக் கதவு மட்டுமே இருந்தது.

49. நான்கு மாத காலம் அதை முற்றுகையிட்ட மன்னன், அந்நகரப் படைத் தலைவனை சூழ்ச்சியாகப் போரிட்டு வென்றான்.

50. பிறகு அனுராதபுரத்தை நோக்கிச் சென்ற மன்னன் காசமலைக்குத் தெற்கே தன் படைகளுடன் முகாமிட்டுத் தங்கினான்.

51. ஆனி மாதத்தில் அங்கு ஒரு குளத்தை வெட்டியதும் நீர் விழா நடத்தினான். அந்த இடத்தில் இப்போது பஜோத நகரம் என்ற கிராமத்தைக் காணலாம்.

52. துஷ்ட காமனி படையெடுத்து வந்திருப்பதை அறிந்த ஏலாரா மன்னன், மந்திரிகளைக் கலந்தாலோசித்தான்.

53. 'இந்த அரசனே பெரிய வீரன்; மேலும் அவனுடன் பல வீரர்கள் வருகிறார்கள். நாம் என்ன செய்வது?' என்று மந்திரிகளைக் கேட்டான்.

54. தீகஜந்து தலைமையில் இருந்த ஏலாரா மன்னனுடைய படைவீரர்கள் 'நாளை போரில் இறங்குவோம்' என்று முடிவு செய்தனர்.



55. துஷ்டகாமனியும் தன் தாயாரைக் கலந்தாலோசித்தான். அவளுடைய யோசனைப்படி தன் படைகளை முப்பத்திரண்டு பிரிவுகளாகப் பிரித்தான்.

56. இந்த ஒவ்வொரு பிரிவின் தலைமையிலும் அரசனைப் போன்ற உருவத்தையும் குடைபிடிப்போரையும் நியமித்தான். படைகளுக்குப் பின்னணியில் அரசன் இருந்தான்.

57. ஏலாரா முழுக் கவசமணிந்து மகாபர்வதம் என்ற தன்னுடைய யானைமீது ஏறிக்கொண்டு நால்வகைப் படைகளுடனும் போர்க்களத்துக்கு வந்தான்.

58. போர் தொடங்கியதும் பராக்ரமசாலியான தீகஜந்து வாளையும் கேடயத்தையும் எடுத்துக் கொண்டு களத்தில் புகுந்தான்.

59. பதினெட்டு முழ உயரம் வானில் எழும்பிப் பாய்ந்து அவன் முதல் படையின் தலைமையிலிருந்த காமனியுடைய உருவத்தை வெட்டிச் சிதைத்தான்.

60. இதேபோல் அவ்வீரன் இதர படை அணிகளையும் சிதைத்ததும் அரசன் காமனி இருந்த படையைச் சாடினான்.

61. ஆனால் அவன் அரசனைத் தாக்கத் தொடங்கியதும் சூரநிமிலன் (தன்னுடன் போருக்கு வருமாறு) அவனைப் பெயரிட்டழைத்து அவமானப் படுத்தினான்.

62. 'முதலில் இவனைக் கொல்லுவோம்' என்றெண்ணிய தீகஜந்து கோபத்துடன் ஆகாயத்தில் பாய்ந்தான். அவன் தாவிக் குதிக்கும் போது சூரநிமிலன் அவனை நோக்கி கேடயத்தைப் பிடித்தான்.

63. கேடயத்துடன் இவனைத் தகர்த்தெறிகிறேன் என்று எண்ணிய தீகஜந்து தன்னுடைய வாளினால் கேடயத்தை ஓங்கி யடித்தான்.

64. அப்போது சூரநிமிலன் கேடயத்தை விட்டு விட்டான். இதனால் கேடயம் மட்டுமே தகர்ந்தது. தாக்கிய வேகத்தில் தீகஜந்து கீழே விழுந்து விட்டான். சூரநிமிலன் உடனே அவன் மீது பாய்ந்து ஈட்டியால் குத்திக் கொன்றான்.

65. பூசதேவன் சங்கை எடுத்துப் பயங்கரமாக ஊதினான். அந்த சத்தத்தைக் கேட்டு தமிழர் படை சிதறி ஓடியது. ஏலாராவும் பின் வாங்கினான். ஏராளமான தமிழர்கள் கொல்லப் பட்டனர்.

66. கொல்லப்பட்டவர்களின் குருதியால் அங்கிருந்த குளத்தின் நீர் செந்நிறமாக மாறிக் காட்சியளித்தது. எனவே அதற்கு குலாந்த வாபி என்ற பெயர் ஏற்பட்டது.

67. 'என்னைத் தவிர வேறு யாரும் அரசன் ஏலாராவைக் கொல்லக் கூடாது' என்று துஷ்ட காமனி முரசறைந்து அறிவித்தான்.

68. பிறகு தானே கவசமணிந்து கந்துலன்மீது ஏறிக்கொண்டு ஏலாராவைத் தொடர்ந்து தெற்கு வாசலுக்கு வந்து சேர்ந்தான்.

69. நகரின் தெற்கு வாசலுக்கருகே இரண்டு மன்னர்களும் போரிட்டனர். ஏலாரா ஈட்டியால் தாக்கினான். காமனி அதைத் தடுத்தான்.

70. கந்துலனை ஏலாராவுடைய யானைமீது ஏவித் தாக்கச் செய்து காமனி ஈட்டியை எறிந்தான். ஏலாரா யானையுடன் கீழே விழுந்தான்.

*குலாந்தவாபி.—குலத்துக்கு முடிவுகட்டிய குளம்.



71. இவ்வாறு போரில் வெற்றிபெற்று இலங்கையை ஓராட்சியின்கீழ் ஒன்றுபடுத்தியதும் அவன் படைகளுடன் நகருக்குள் பிரவேசித்தான்.

72. நகரில் முரசறைந்து ஒரு யோஜனை சுற்றளவுக்குள் இருந்த மக்களையெல்லாம் திரட்டி அரசன் ஏலாராவின் அந்திமக் - கிரியைகளை நடத்தினான்.

73. அவன் போரிட்டு விழுந்த இடத்திலேயே அவனுடைய உடலை எரித்து அந்த இடத்தில் ஒரு நினைவுச் சின்னமும் எழுப்பி அதற்கு வழிபாடுகள் நடத்தச் செய்தான்.

74. இன்றும்கூட இலங்கையின் அரசர்கள் அந்த இடத்தைக் கடந்து செல்லும்போது இசையை நிறுத்திவிட்டு மௌனமாக வணங்கிவிட்டுப் போவார்கள்.

75. இவ்வாறு முப்பத்திரண்டு தமிழ் மன்னர்களை வெற்றிகொண்டு துஷ்ட காமனி ஏக சக்கராதிபதியாக இலங்கையில் ஆட்சி செலுத்தினான்.

76. விஜிதநகரம் அழிக்கப்பட்டபோது தீகஜந்து, ஏலாராவிடம் தன்னுடைய மருமகனுடைய வீரத்தைப்பற்றிக் கூறியிருந்தான்.

77. பாலுகன் எனப்பட்ட இந்த மருமகனுக்கு உடனே வருமாறு அவன் செய்தி அனுப்பி இருந்தான்.

78. பாலுகனுக்கு செய்தி கிடைத்ததும் அவன் ஏலாராவை எரித்த ஏழாவது நாள் அறுபதாயிரம் பேர்களுடன் இங்கு வந்து சேர்ந்தான்.

79. வந்து சேர்ந்தவுடனேயே அரசன் இறந்து விட்டான் என்பதை அவன் கேள்விப்பட்ட

போதிலும், மானத்துக்காகவாவது போராட வேண்டும் என்றெண்ணியவனாக மகா திட்டிலிருந்து அனுராதபுரம் வரை படையுடன் வந்தான்.

80. கோலம்பஹாலகா என்ற கிராமத்துக்கருகில் முகாமிட்டுப் படைகளுடன் தங்கினான். இவன் வந்திருப்பதை அரசன் அறிந்ததும் அவனுடன் போரிடச் சென்றான்.

81. யானை கந்துலன்மீது ஏறிக்கொண்டு நால்வகைப் படையினரும் ஏராளமாகப் பின்வர அரசன் அவனிருக்குமிடம் சென்றான்.

82. தீவிலேயே சிறந்த வில்லாளியான உன்மத்த பூசதேவன் ஐம்படைகளுடன் அரசனுடன் சென்றான்.

83. போர் தீவிரமாக மூண்டது. பாலுகனும் அரசனும் நேருக்கு நேர் சந்தித்தனர்.

84. எதிரியின் தாக்குதலைப் பலவீனப்படுத்துவதற்காக யானைகளின் அரசன் போன்ற கந்துலன் மெள்ளப் பின் வாங்கியது. அத்துடன் இதர படைகளும் பின் வாங்கின.

85. 'இதுவரை நடந்த இருபத்தெட்டு போர்களிலும் பின் வாங்கியிராத யானை இப்படி செய்வது ஏன்?' என்று அரசன் பூசதேவனைக் கேட்டான்.

86. 'அரசே! வெற்றி நமக்குப் பின்னே இருக்கிறது. இதையறிந்து தான் யானை பின் வாங்குகிறது. வெற்றிபெறும் இடத்தை அடைந்ததும் அது நின்றுவிடும்' என்றான் பூசதேவன்.

87. யானை பின்வாங்கும்போது அவன் மகா விகார எல்லைக்குள் இருந்த நகரின் காவல் தெய்வத்தின் கோயில் அருகே உறுதியுடன் நின்றுகொண்டிருந்தான்.



88. யானை இங்கு வந்து நின்றதும் தமிழன் பாலுகன், அந்த இடத்தில் அரசனிடம் வந்து அவனைக் கேலி செய்தான்.

89. தனது வாயை வாளினால் மறைத்துக்கொண்டு அரசன் பதிலுக்குப் பதில் ஏசினான்.

90. அரசனுடைய வாயை அம்பினால் துளைப்பேன் என்று எண்ணியவனாக, பாலுகன் ஒரு அம்பை எய்தான். அது வாளின்மீது பட்டுக் கீழே விழுந்தது. அவனுடைய வாயில் அம்பு தைத்து விட்டது என்று எண்ணி பாலுகன் மகிழ்ச்சி பொங்கக் கத்தினான்.

91. அரசனுக்குப் பின்புறம் இருந்த பூசதேவன் அவன் வாயில் ஒரு அம்பை எய்தான். அது லேசாக அரசனுடைய காதுக் குழையைத் தொட்டுக்கொண்டு பாய்ந்தது.

92. அம்பு தைத்து பாலுகன் அரசனுக்கு எதிரே தன்னுடைய கால் இருக்கும்படியாக விழுந்தான்.

93. விழுந்துகொண்டிருக்கும் அவன் முழங்காலில் மற்றொரு அம்பை எய்தான் பூசதேவன்.

94. இதனால் அவனுடைய தலை அரசனை நோக்கி இருக்கும்படியாக புரட்டப்பட்டான். பாலுகன் கொல்லப்பட்டதும் வெற்றி முழக்கம் எழுந்தது.

95. பூசதேவன் தான் செய்த குற்றத்தை தெரிவிப்பதற்காகத் தானே தன்னுடைய காதை அறுத்துக்கொண்டு அதிலிருந்து வடியும் குருதியை அரசனுக்குக் காட்டினான்.

96. இதைக் கண்ட அரசன் 'என்ன இது' என்று கேட்டான். 'நானே எனக்கு தண்டனை விதித்துக்கொண்டேன்' என்றான் அவன் பதிலுக்கு.

97. 'நீ செய்த குற்றம் என்ன?' என்று அரசன் கேட்டான். 'தங்கள் காதுக் குழையை அடித்தது குற்றம்' என்றான். 'குற்றமில்லாத ஒன்றைக் குற்றமெனக் கொண்டு ஏன் இப்படி செய்தாய்?' என்று அரசன் கேட்டான்.

98. பிறகு நன்றியுணர்வுடன் 'உன் வீரத்துக்கு தகுந்த பரிசு கிடைக்கும்' என்றான்.

99. எல்லாத் தமிழர்களையும் கொன்று வெற்றிபெற்றதும் அரசன் அரண்மனை மேல்மாடத்துக்குப் போனான்.

100. பின் சபா மண்டபத்தில் மந்திரிகளும், மற்ற பிரதானியரும் சூழ்ந்திருக்க பூசதேவனுடைய அம்பை அங்கு கொண்டுவரச் செய்தான். அதைத் தரையில் நிற்குமாறு ஊன்றச் செய்தான்.

101. அது மறையும்வரை கஹாபணங்களை அபிஷேகம் செய்து அத்தனையையும் பூசதேவனுக்குக் கொடுக்கச் செய்தான்.

102. நன்கு அலங்கரிக்கப்பட்டுத் தீபாலங்காரங்களுடன் விளங்கிய அரண்மனை மாடத்தில் அரசன் அமர்ந்திருந்தான்.

103. தேவதைகளைப்போல விளங்கிய நடனப் பெண்கள் நடன விருந்தளித்தனர். உயர்ந்த மஞ்சத்தில் சாய்ந்துகொண்டு மன்னன் அதை ரசித்தான்.

104. தன்னுடைய புகழ்மிக்க வெற்றியைப்பற்றி எண்ணமிட்ட அவன் அது மகத்தானதாயினும் மனதுக்கு மகிழ்வளிக்கவில்லை என்பதைக்



கண்டான். அதன் மூலம் லட்சக்கணக்கானவர்கள் அழிய நேரிட்டது என்பதை அவன் மறக்கவில்லை.

105. பியாங்கு தீபத்திலுள்ள தேரர்கள் இவனுடைய மனதில் உள்ளதை அறிந்ததும் அரசனைத் தேற்றுவதற்கு எட்டு தேரர்களை அனுப்பிவைத்தனர்.

105. நள்ளிரவில் வந்து சேர்ந்த அவர்கள் அரண்மனை வாசலில் இறங்கினர். தாங்கள் வந்திருப்பதை அறிவித்துவிட்டு ஆகாய மார்க்கமாகவே அரண்மனை மேன்மாடத்தை அடைந்தனர்.

106. அரசன் அவர்களை வரவேற்று உபசரித்தான். ஆசனங்களில் அமரச் செய்து பலவித மரியாதைகளைச் செய்த பின்பு அவர்கள் வந்த காரணத்தைக் கேட்டான்.

107. 'பியாங்கு தீபத்திலுள்ள பிக்குகளால் தங்களுக்கு ஆறுதல் கூறுவதற்காக அனுப்பப்பட்டோம்' என்று அவர்கள் கூறினர்.

108. அதன் பேரில் அரசன் மீண்டும் சொன்னான்: 'எனக்கு எப்படி ஆறுதல் ஏற்பட முடியும்? வணக்கத்துக்கு உரியவர்களே! என்னால் அல்லவோ லட்சக்கணக்கானவர்கள் மடியும்படி நேரிட்டது' என்றான்.

109. 'இந்தச் செய்கையின் காரணமாக நீ சுவர்க்கத்துக்குப் போகும் பாதையில் எவ்விதத் தடையும் ஏற்படாது. ஒன்றரை மனிதர்கள் மட்டுமே உன்னால் இங்கு கொல்லப்பட்டார்கள்.

110. 'ஒருவர் மும்மணிகளைச் சரணடைந்து விட்டார். மற்றவர் பஞ்சசீலங்களை மேற்கொண்டு விட்டார். மற்றவர்கள் எல்லாம் நமது

மார்க்கத்தை நம்பாதவர்கள். தீய வாழ்வை மேற்கொண்டவர்கள்—மிருகங்களை விட உயர்வாக மதிக்கப்படக் கூடாதவர்கள்.

111. 'ஆனால் நீயோ புத்தருடைய போதனைகளுக்குப் பலவிதத்திலும் பெருமை தேடப் போகிறவன். எனவே உன் மனதிலிருந்து கவலையை அகற்று அரசனே!' என்று அவர்கள் ஆறுதல் கூறினார்.

112. இவ்வாறு அவர்களால் கூறப்பட்ட அரசன் ஆறுதலடைந்தான். அவர்களுக்கு விடை கொடுத்து அனுப்பிவிட்டுப் படுக்கையில் சாய்ந்த அவன் மீண்டும் எண்ணத்தில் மூழ்கினான்.

113. 'பிக்குகள் இல்லாமல் நீ சாப்பிடக் கூடாது' என்று சிறு வயதில் சத்தியம் செய்து கொடுக்கும்படி பெற்றோர்கள் செய்தார்கள்.

114. 'பிக்குகளுக்குக் கொடுக்காமல் நான் எப்போதாவது சாப்பிட்டது உண்டா?' என்று தன்னையே கேட்டுக் கொண்டான்.

115. ஒருமுறை நினைவின்றி காலை உணவின்போது பிக்குகளுக்கு மிச்சம் வைக்காமல் மிளகு சாப்பிட்டது அவன் ஞாபகத்துக்கு வந்தது. இதற்காகப் பிராயச்சித்தம் செய்ய வேண்டுமென முடிவு செய்தான்.

116. பேராசையால் கொல்லப்பட்ட எண்ணற்ற பேர்களைப் பற்றி எண்ணும்போது, அதனால் விளையும் தீமைகளைப் பற்றிக் கருதும்போது, மரணம் தான் எல்லோரையும் கொல்வது என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும். அப்போதுதான் அவன் இவ்வழியில் கஷ்டத்திலிருந்து விடுதலை பெற முடியும்.

**மகாவம்சத்தில் இருபத்தைந்தாவது அத்தியாயமான துஷடகாமனியின் வெற்றி முற்றும்**

## இருபத்தாறுவது அத்தியாயம்

# மாரிசவதி விஹாரம்

1. பெரும் புகழ் பெற்ற மன்னன் இலங்கையை ஓராட்சியின் கீழ் கொண்டு வந்ததும் தன்னுடைய படை வீரர்களுக்கு அவர்களுடைய தகுதிக்கேற்பப் பதவிகளை வழங்கினான்.

2. அரசன் கொடுத்ததை தேர புத்திரன் பெற்றுக் கொள்ள மறுத்தான். 'ஏன்?' என்று கேட்டான் அரசன். 'இன்னும் ஒரு போர் பாக்கியிருக்கிறது' என்றான் அவன்.

3. 'ஒரே ஆட்சியை ஏற்படுத்தி விட்ட பிறகு போருக்கு இடமேது?' என்றான் மன்னன். 'ஆசைகளுடன் போர் புரிய வேண்டும். அதில் வெற்றி பெறுவது கடினம்' என்றான் அவன்.

4. அரசன் மீண்டும் அவனைப் பலமுறை தடுத்தான். முடியவில்லை. கடைசியில் அவன் அரசனை வேண்டி அனுமதி பெற்றுத் தீட்சை வாங்கிக் கொண்டான்.

5. உரிய காலத்தில் பிக்குவாக ஆவதற்குத் தகுதியுடையவன் ஆனான். ஆசவங்களைக் கடந்த ஐநூறு பிக்குகளிடையே வசித்து வந்தான்.

6. அரசன் பட்டாபிஷேக வைபவத்தை மிகவும் ஆடம்பரமாக நடத்தினான். இவ்விழா ஒரு வாரம் நடைபெற்றது. பிறகு அரசன் தீசவாபிக்குச் சென்றான்.

7. விழாக் கொண்டாடுவதற்கு ஏற்ற வகையில் முறைப்படி அங்கு அலங்காரங்கள் செய்யப் பட்டிருந்தன.

8. பின்னல் மாரிசவதி விஹாரம் ஏற்பட்ட இடத்தில் நூற்றுக்கணக்கான காணிக்கைகளை மக்கள் செலுத்தினர்.

9. அரசனுடைய சின்னமான ஈட்டியை அந்த இடத்தில் ஊன்றி வைத்தார்கள்.

10. அன்று பகல்பொழுது முழுவதும் அரண்மனைப் பெண்களுடன் நீராடிய பிறகு 'இங்கிருந்து போகலாம். ஈட்டியை எடுத்து வாருங்கள்' என்று தன்னுடைய ஆட்களுக்குக் கட்டளையிட்டான்.

11. ஈட்டியை எடுக்கப் போனவர்களால் தரையிலிருந்து அதை எடுக்க முடியவில்லை. அரசனுடைய வீரர்கள் மலர்களால் அர்ச்சித்து அதனை வழிபட்டனர்.

12. இந்த அதிசயத்தைக் கண்ட அரசன் மனம் மகிழ்ந்தவனாக அங்கு காவலுக்கு ஏற்பாடு செய்துவிட்டு நகரத்துக்குத் திரும்பினன்.

13. பிறகு அந்த ஈட்டியை மறைக்கும் விதத்தில் ஒரு சேதியத்தைக் கட்டி ஸ்தூபத்தை உள்ளடக்கிய ஒரு விஹாரத்தையும் அமைத்தான்.

14. மூன்று வருடங்களில் விஹாரம் முடிவடைந்தது. அதன் அபிஷேக விழாவுக்கு அரசன் பிக்குகளை அழைத்தான்.

15. நூறுயிரம் பிக்குகளும், தொண்ணூறுயிரம் பிக்குணிகளும் வந்து கூடினர்.

16. இந்தக் கூட்டத்தில் பிக்குகளிடையே அரசன் இவ்வாறு பேசினன். 'பிக்குகளை நினைக்காமல் ஒரு முறை மிளகு ஒன்றைச் சாப்பிட்டு விட்டேன்.



17. 'அந்தச் செய்கைக்கு இது பிராயச்சித்தமாக இருக்கும் என்று எண்ணி அருமையான இந்த மாரிஸவதி விஹாரத்தையும், சேதியத்தையும் அமைத்தேன்.

18. 'பிக்குகள் இதை ஏற்கவேண்டும்' இவ்வாறு கூறி அவன் தாரைவார்த்து விஹாரத்தை பிக்குகளுக்கு அளித்தான்.

19. விஹாரத்தில் பெரியதும் அழகானதுமான ஒரு முற்றத்தை அமைத்து அங்கு பிக்குகளுக்கு தாராளமாகப் பொருள்களை வழங்க ஏற்பாடு செய்தான்.

20. முற்றம் மிகவும் நன்ருகத் திட்டமிட்டு அமைக்கப் பட்டிருந்தது.

21. ஒருவார காலத்துக்கு அரசன் உணவும் பானங்களும் அளித்த பிறகு சமணர்களுக்குத் தேவைப்படும் எல்லாப் பொருள்களையும் பரிசாகத் தந்தான்.

22. இவை நூறுயிரம் கஹபணத்தில் தொடங்கி ஆயிரமாயிரம் கஹபணத்தில் முடிந்தது.

23. இவற்றையெல்லாம் பிக்குகள் சங்கம் பெற்றுக் கொண்டது. அறிவுடைய அந்த அரசனல் செலவிடப்பட்ட பணம், போர்க்களத்திலே பெரும் வீரனும், புனித இதயத்தில் மும்மணிகளிடம் அழியாத நம்பிக்கை கொண்டவனும், புத்தமார்க்கத்துக்கு புகழ்தேட விரும்பியவனும் செலவிட்ட பணம்,

24. மும்மணிகளை கௌரவிக்கும் முறையில் ஸ்தூபத்தைக் கட்டுவதில் தொடங்கி விஹார

அபிஷேக விழாவுடன் முடிந்த இதற்காக மட்டும் அவன் செலவு செய்த பணம்,

25. விலை மதிக்க முடியாத பலபரிசுகளை ஒதுக்கி விட்டுப் பார்த்தாலும் கூட இருபது கோடிக்கு ஒன்று குறைவு என்று கணக்கிடப்பட்டுள்ளது.

26. ஐந்து குற்றங்களையுடைய பொக்கிஷங்கள் விசேஷ அறிவுடையவர்கள் வசப்பட்டால் அவை ஐந்து சாதகங்களை உடையவைகளாக ஆகின்றன. எனவே அறிவுள்ளவர்கள் அதை இவ்வாறு அடைய முயற்சிப்பார்களாக.

**மகாவம்சத்தில் இருபத்தாறுவது அத்தியாயமான மாரிசவதி விஹாரம் முற்றும்.**

---

**ஐந்து குற்றங்கள்**—தீயினல் ஏற்படும் நஷ்டம், நீரினல் ஏற்படும் நஷ்டம். ஜீவராசிகளால் ஏற்படும் நஷ்டம் பறிமுதலாவது, கொள்ளை போவது.

**ஐந்து சாதகங்கள்**—மக்களிடையே புகழ், சாதுக்களிடையே பெருமதிப்பு, பெருமை கடமையையாற்ற உறுதி, மரணத்துக்குப்பின் சுவர்க்கத்தை அடைதல்.

## இருபத்தேழாவது அத்தியாயம்

# லோகபாஸாத அபிஷேகம்

1. இதன் பின்னர் அரசன் எல்லோருக்கும் தெரிந்த, வழிவழியாக வந்த ஒரு வழக்கை நினைவுபடுத்திக் கொண்டான். 'புகழுக்குரியவரும், பெருமைக்குரிய காரியங்களையே செய்தவரும் அறிவு பூர்வமாக எதையும் முடிவு செய்தவரும்,

2. இந்த தீவின் மக்களை மதம் மாற்றியவருமான தேரர் என்னுடைய மூதாதையான அரசனிடம் இவ்வாறு சொன்னர். 'உன்னுடைய வழி வந்தவன்—துஷ்டகாமனி என்ற அறிவுள்ள அரசன்,

3. பின்னல் மகாஸ்தூபத்தை அமைப்பான். மகத்தான சொர்ணமாலியை நூற்றிருபது முழம் உயரமுள்ளதாகவும் உபோசத மண்டபத்தையும் கட்டுவான்.

4. மேலும் நவரத்தினங்கள் பதித்ததும், ஒன்பது அடுக்கு உள்ளதுமாக லோகபாஸாதாவை அமைப்பான்'

5. இவ்வாறு எண்ணிய அரசன் அரண்மனையில் தேடிப்பார்த்து ஒரு அறையில் இருந்த தங்கத் தகடை எடுத்தான்.

6. அதில் மேற்கண்ட விதமாக எழுதப்பட்டிருந்தது. அதை உரக்கப்படிக்கச் சொல்லி உத்தரவிட்டான்.

7. 'நூற்றிமுப்பத்தாறு வருடங்கள் கழிந்தபின் எதிர்காலத்தில் காகவனனுடைய மகன்

மன்னன் துஷ்டகாமனி இதுபிதை இன்னின்ன விதமாகக் கட்டுவான்.'

8. இதைப்படிக்கக் கேட்ட மன்னன் மகிழ்வினால் உரக்கக் கத்திக் கையைத் தட்டினான். பிறகு அதிகாலையில் அழகிய மகாமேக வனத்துக்குச் சென்றான்.

9. அங்கு பிக்குகளின் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்ததும் அவர்களிடம் 'தேவர்களின் அரண்மனை போன்றதொரு பாஸாதாவை உங்களுக்காகக் கட்டப் போகிறேன்' என்றான்.

10. 'தேவமாளிகைக்கு ஒருவரை அனுப்பி அதைப் படம் வரைந்து கொண்டு வரச்செய்யுங்கள்' என்றான். அதன் பேரில் ஆசவங்களைக் கடந்த எட்டு தேரர்களைப் பிக்குகள் அனுப்பி வைத்தார்கள்.

11. காச்யப புத்தர் காலத்தில் அசோகன் என்ற பிராமணன் பிக்குகளுக்காக எட்டு உணவுச் சீட்டுகளை ஒதுக்கியிருந்தான்.

12. அவன் தன்னுடைய வேலைக்காரியான பிரணியிடம் இதைத் தொடர்ந்து கொடுத்து வா என்றான். ஆயுள் முழுவதும் விசுவாசமுடன் இதையளித்து வந்த அவள்,

13. இவ்வுலகை விட்டுப் பிரிந்து மறுபிறவியில் காற்றில் மிதக்கும் ஜொலிக்கும் அரண்மனையில் அழகிய பெண்ணாகப் பிறந்தாள். ஆயிரம் தேவதைகள் அவளுக்குச் சேவை செய்து வந்தனர்.

14. அவளுடைய மணி மாளிகை பனிரெண்டு—யோஜனை உயரமுள்ளதாகவும் சுற்றளவு நாற்பத்தெட்டு யோஜனை உள்ளதாகவும் இருந்தது.



15. ஆயிரம் ஜன்னல்கள் கொண்ட அம்மாளிகை ஒன்பது அடுக்குகளும் ஆயிரம் அறைகளும் கொண்டதாக இருந்தது.

16. எங்கும் ஒளி வீசும் ஆயிரம் சங்கு மாலைகளும் மணிகளால் அழகு செய்யப்பட்ட வேதிகையுடன் கூடியதாகவும் இருந்தது.

17. மாளிகையின் நடுவில் அம்பலதீக பாஸாதா இருந்தது. எந்தப் பக்கத்திலிருந்து பார்த்தாலும் தெரியும்படியாக அது அமைந்திருந்தது.

18. முப்பத்தி மூன்று தேவர்களின் சுவர்க்கத்துக்குப்போன தேரர்கள் இந்த மாளிகையைப் பார்த்தபோது பட்டுத் துணியில் செந்தூரத்தினால் அதைப் போல படம் வரைந்து கொண்டார்கள்.

19. பின்னர் அவர்கள் திரும்பி வந்து தாங்கள் படம் வரைந்த துணியை பிக்குகளிடம் காட்டினார்கள். பிக்குகள் அதை அரசனுக்கு அனுப்பி வைத்தார்கள்.

20. மகிழ்வு பொங்க அதனைப் பார்த்த மன்னன் ஆராமாவுக்குச் சென்று படத்தில் உள்ளது போலவே லோக பாஸாதாவைக் கட்ட ஏற்பாடு செய்தான்.

21. இவ்வேலை தொடங்கிய சமயத்தில் தாராள சிந்தையுள்ள அரசன் நான்கு வாயில்கள் ஒவ்வொன்றிலும் எண்ணூறாயிரம் பொற்காசுகள் வைக்குமாறு உத்தரவிட்டான்.

22. மேலும் ஒவ்வொரு வாயிலிலும் ஆயிரம் மூட்டை உடைகளும் வைக்கச் செய்தான்.

23. சர்க்கரை, எண்ணெய், தேன் போன்ற பொருள்களையும் பாத்திரங்களில் ஏராளமாக

வைத்தான். 'பலன் பெறுமல் இங்கு எந்த வேலையும் செய்யக் கூடாது' என்று அறிவித்து அரசன் வேலை செய்த அந்தணப் பேருக்கும் கூலி கொடுக்கச் செய்தான்.

24. பாஸாதா நான்கு பக்கங்கள் கொண்டதாக இருந்தது. ஒவ்வொரு பக்கமும் நூறு முழம் நீளம் இருந்தது. அதே அளவு உயரமும் இருந்தது.

25. அழகிற் சிறந்ததான இந்த அரண்மனையில் ஒன்பது மாடிகள் இருந்தன. ஒவ்வொரு மாடியும் நூறு ஜன்னல்கள் கொண்டதாயிருந்தது.

26. எல்லா அறைகளும் வெள்ளித் தகடு பதிக்கப் பட்டிருந்தது. அவற்றின் பவள வேதிகைகள் விலையுயர்ந்த பல ரத்தினங்கள் பதிப்பிக்கப் பெற்று விளங்கின.

27. வேதிகைகளைச் சுற்றி வரிசையாக அழகிய சிறு வெள்ளி மணிகள் இருந்தன.

28. நல்ல வசதியுடன் அமைக்கப்பட்ட ஆயிரம் அறைகள் பாஸாதாவில் இருந்தன. பலவித மான மணிகளால் அது அணி செய்யப்பட் டிருந்தது.

29. பெண்களுக்கு வாகனமாகப் பயன்பட்ட வேசவன ரதத்தைப் பற்றிக் கேள்விப்பட்ட அரசன் கட்டிடத்தின் மத்தியில் அதற்கான மணி மண்டபம் அமைக்கச் செய்தான்.

30. விலையுயர்ந்த கற்களால் ஆன தூண்கள் அதைத் தாங்கி நின்றன. அதன் மீது சிங்கம் புலி போன்றவற்றின் உருவங்களும் தேவதை களின் உருவங்களும் இருந்தன.

31. மண்டபத்தின் விளிம்பில் முத்துச் சரம் அழகு செய்தது.



32. மண்டபத்துக்குள்ளே ஏழு ரத்தினங்கள் பதிப் பிக்கப்பட்ட அழகான தந்த சிம்மாசனம் இருந்தது.

33. அதில் தங்கத்தினால் சூரியன் போலவும் வெள்ளியால் சந்திரன் போலவும், முத்தினால் நட்சத்திரங்கள் போலவும்,

34. பலவிதமான ரத்தினங்களால் தாமரை மலர்கள் போலவும் பொறிக்கப்பட்டிருந்தது. ஜாதகக் கதைகள் தங்கத்தில் சித்திரிக்கப்பட்டிருந்தன.

35. உன்னதமான அழகுள்ள இந்த சிம்மாதனத் தில் தந்தத்தினாலான விசிறி ஒன்று வைக்கப் பட்டிருந்தது. அது ஒளியுடன் திகழ்ந்தது.

36. பவளப் பிடியுடன் கூடிய வெண்கொற்றக் குடை சிம்மாதனத்துக்கு மேல் ஜொலித்துக் கொண்டு விளங்கியது.

37. அதன் மீது எட்டு சுபசித்திரங்கள் ஏழு மணிகளால் சித்திரிக்கப்பட்டிருந்தன. இடை யிடையே விலங்குகளின் உருவங்கள் காணப் பட்டன.

38. குடையின் விளிம்பில் வெள்ளியாலான சிறு மணிகள் வரிசையாகத் தொங்கின. மாளிகை, குடை, சிம்மாசனம், மண்டபம் இவையனைத் துமே விலை மதிக்க முடியாதவை.

39. தகுதிக்கேற்ப விலையுயர்ந்த படுக்கைகளும் ஆசனங்களும் போடப்பட்டன. அதிக விலை யுள்ள கம்பளத்தை நெடுக விரிக்கச் செய் தான்.

40. கால் கழுவும் பாத்திரமும் உத்தரணியும் கூட தங்கத்தினால் செய்யப்பட்டதாக இருந்தன.

எட்டு சுப சித்திரங்கள்: சிங்கம், எருது, யானை, செம்பு, விசிறி, சங்கு, விளக்கு, கொடி.

இதர பாத்திரங்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா?

41. அழகிய சுற்றுச் சுவருடனும், நான்கு வாயில்களுடனும் திகழ்ந்த பாஸாதா, முப்பத்து மூன்று தேவர்களின் சொர்க்கத்திலுள்ள மண்டபம் போல் கம்பீரமாக ஜொலித்தது.

42. பாஸாதா செம்புத் தகட்டினால் மூடப்பட்டிருந்தது. அதன் காரணமாக அதற்கு 'செம்பு மாளிகை' என்ற பெயரும் உண்டு.

43. லோக பாஸாதா தயாரானதும் அரசன் பிக்குகள் சபையைக் கூட்டினான். மாரிஸவதி விஹாரத்தின் அபிஷேக விழாவுக்கு வந்தது போலவே இதற்கும் பிக்குகள் வந்து கூடினர்.

44. சாதாரண பிக்குகள் முதல் மாடியில் நின்றனர். திரிபிடகங்களைக் கற்றவர்கள் இரண்டாவது மாடியில் நின்றனர்.

45. விமோசனத்துக்கான மனப்பக்குவம் அடைந்தவர்கள் அவரவர்கள் தகுதிக்குரிய மாடிகளில் நின்றனர். எல்லாவற்றுக்கும் மேலாக இருந்த நான்கு மாடிகளில் அரஹந்தர்கள் இருந்தனர்.

46 நீரை தாரைவார்த்து அரசன் பாஸாதாவை பிக்குகளின் சங்கத்துக்குக் கொடுத்ததும் முன்போலவே ஒருவார காலத்துக்குத் தாராள மாகப் பரிசுகள் வழங்க ஏற்பாடு செய்தான்.

47. விலைமதிக்க முடியாத பொருள்களை விட்டு விட்டுப் பார்த்தால், தாராள சிந்தையுள்ள மன்னன் இந்த பாஸாதாவுக்காக செலவிட்ட தொகை முப்பது கோடியாகும்.

48. பிறருக்குக் கொடுப்பது எவ்வளவு பெருமை யானது என்பதை யறிந்தவர்கள், பொருளைச் சேர்த்து வைப்பதைப் பயனற்றதாகக் கருதி, தாராளமாக வழங்குவார்கள். ஆசையிலிருந்து விடுபட்டதாக அவர்களுடைய மனம் இருக்கும். மக்களின் நலனே அவர்களது நாட்டமாக இருக்கும்.



**மகாவம்சத்தில் இருபத்தி ஏழாவது அத்தியாயமான லோகபாஸாதா அபிஷேகம் முற்றும்.**

## இருபத்தெட்டாவது அத்தியாயம்

# மகாஸ்தூபம் கட்ட ஏற்பாடு

1. நூருயிரம் பணம் செலவழித்து அரசன் மகா போதி விருட்சத்துக்காக ஒரு மாபெரும் விழா நடத்த ஏற்பாடு செய்தான்.

2. நகருக்குள் நுழையும்போது எதிர்காலத்தில் ஏற்படப்போகும் ஸ்தூபம் பற்றிக் குறிப்பிட்ட கல்தூணைப் பார்த்த அவன் தனது கடமையை நினைத்துக் கொண்டு மகிழ்ந்தான்.

3. 'மகாஸ்தூபத்தை நான் கட்டுவேன்' என்று கூறிய அவன் அரண்மனைக்குச்சென்று உண வருந்தி விட்டுப் படுத்துக் கொண்டவாறே இவ் வாறு எண்ணமிட்டான்.

4. 'தமிழர்களை வெற்றி கொள்வதற்காக இந்த மக்களை ஒடுக்க வேண்டியதாயிற்று. எனவே அவர்களுக்கு வரிபோடுவது சாத்தியமல்ல.

5. "ஆயினும் வரி போடாமல் மகாஸ்தூபத்தைக் கட்டுவதானல் இதற்கு வேண்டிய கற்களை எப்படி தயார் செய்வது?'

6. இவ்வாறு அவன் சிந்தித்தபோது, வெண் கொற்றக்குடையின் தேவதை இவன் எண்ணத்தை தேவர்கள் அறியும்படி செய்தது. சக்கன் இதையறிந்ததும் விஸ்வகர்மாவிடம் சொன்னன்.

7. 'சேதியத்துக்கான கற்கள் தயார் செய்வது பற்றி காமனி யோசித்துக் கொண்டிருக்கிருன். நீ போய் நகரத்திலிருந்து ஒரு யோஜனை தூரத் திலுள்ள கம்பீர நதிக்கரையில் கற்களைத் தயார் செய்வாயாக'

8. சக்கனல் இவ்வாறு உத்தரவிடப்பட்ட விஸ்வ கர்மா அனுராத புரத்துக்கு வந்து அந்த இடத் தில் கற்களைத் தயார் செய்தான்.

9. காலையில் ஒரு வேட்டைக்காரன் தன்னுடைய நாயுடன் காட்டுக்குச் சென்றுன். அவ்வனத் தின் தேவதை அவன் முன்பு பெரிய உடும்பு உருவில் காட்சியளித்தது.

10. வேடன் அதைப் பின் தொடர்ந்து சென்றுன். கற்கள் இருந்த இடத்துக்கு வந்ததும் தேவதை மறைந்து விட்டது.

11. கற்களைப் பார்த்த அவன் 'நமது அரசர் மகாஸ்தூபத்தைக் கட்ட எண்ணியுள்ளார். அதற்கு வேண்டிய கற்கள் இதோ உள்ளன' என நினைத்தான். பின்னர் அரசனிடம் சென்று இதைத் தெரிவித்தான்,

12. மக்கள் நலனையே பெரிதெனப் போற்றிய மன்னவன், வேடன் வந்து சொன்னதைக் கேட்டு மகிழ்ந்து அவனுக்கு நிறையப் பரிசளித் தான்.

13. நகரத்தின் வடகிழக்குத் திசையில் மூன்று யோசனை தூரத்தில் ஆசாரவிதி கிராமத்துக் கருகில் பதினறு கரிசை பரப்புள்ள நிலத்தில்,

14. பல விதமான அளவுகளில் தங்கக் கட்டிகள் கிடைத்தன. இவற்றில் பெரியது ஒரு சாண் அளவும் சிறியது ஒரு விரற்கடை அளவும் இருந்தது.

15. எங்கும் தங்கக் கட்டிகளாக இருப்பதைக் கண்ட கிராம மக்கள் அவற்றுள் சிலவற்றை எடுத்து ஒரு தங்கப் பேழையில் வைத்து

எடுத்துக்கொண்டு அரசனிடம் சென்று இவ் விஷயத்தைத் தெரிவித்தனர்.

16. நகரத்தின் கிழக்குத் திசையில் ஏழு யோஜனை தூரத்தில் நதியின் மறுகரையில் தாம்ரபிடத் துக் கருகில் செம்பு கிடைத்தது.

17. அக்கிராமத்தில் வசித்த மக்கள் செம்புக் கட்டி களை ஒரு பேழையில் வைத்து எடுத்துக் கொண்டு அரசனிடம் சென்று இவ்விஷயத் தைக் கூறினர்.

18. நகரத்தின் தென் கிழக்குத் திசையில் நான்கு யோஜனை தூரத்தில் சுமணவாபி என்ற கிரா மத்துக்கருகில் விலையுயர்ந்த பல கற்கள் கிடைத்தன.

19. மரகதம், மாணிக்கம் போன்ற அவற்றைக் கண்ட கிராம மக்கள் ஒரு பேழையில் வைத்து எடுத்துக்கொண்டு அரசனிடம் சென்று விஷ யத்தைக் கூறினர்.

20. நகரத்தின் தெற்குத் திசையில் எட்டு யோஜனை தூரத்தில் அம்பத கோள குகையில் வெள்ளி கிடைத்தது.

21. மலயத்திலிருந்து இஞ்சி ஏற்றிக்கொண்டு வரு வதற்காக ஒரு வியாபாரி பல வண்டிகளுடன் அங்கு சென்றுகொண்டிருந்தான்.

22. குகைக்கு அதிக தூரமில்லாத ஒரு இடத்தில் வண்டிகளை நிறுத்தினன். சாட்டைக்கு கம்பு கள் தேவைப்பட்டதால் மலைமீது சென்ருன்.

23. அங்கு மரத்தில் ஒரே ஒரு கனி மட்டும் இருக்கக் கண்டான். அது பெரிய குடம் அளவு பெரிய தாக இருந்தது. அதன் பாரம் தாங்காமல் கிளை கீழே தொங்கிக்கொண்டிருந்தது.



24. அந்தக் கனியை கிளையிலிருந்து வெட்டி எடுத் தான். முதலில் பிட்சையளிப்போம் என் றெண்ணியவனுக உணவு நேரத்தை அறிவித் தான். அதைக் கேட்டு ஆசவங்களைக் கடந்த நான்கு தேரர்கள் அங்கு வந்தனர்.

25. அவர்களை அன்புடன் வரவேற்றுப் பணிவுடன் அமரச் செய்தான். கனியின் மேற்புறத்தை மட்டும் நறுக்கினன்.

26. அதிலிருந்து வடிந்த சாற்றை நான்கு தேரர்க ளுடைய பிட்சா பாத்திரத்திலும் நிரப்பிக் கொடுத்தான்.

27. அவர்கள் அதை ஏற்றுக்கொண்டு போய்விட் டனர். பிறகு மற்ருெரு முறை உணவு நேரத்தை அறிவித்தான். ஆசவங்களை வென்ற நான்கு தேரர்கள் அவன் முன்னே தோன்றினர்.

28. அவர்களுடைய பிட்சா பாத்திரத்தை வாங்கிக் கொண்டு கனியின் சதைப் பகுதியை அறுத்து அவைகளில் இட்டு நிரப்பிக் கொடுத்தான். அதைப் பெற்றுக்கொண்டு மூன்று பேர் போய் விட்டார்கள். ஒருவர் மட்டும் போகவில்லை.

29. அவனுக்கு வெள்ளிக் கட்டிகளைக் காட்ட வேண்டுமென்பதற்காக அவர் கீழே சென்று குகைக்கு அருகில் அமர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தார்.

30. வியாபாரியும் எஞ்சியிருந்த பழத்தைச் சாப் பிட்டு மீதியை மூட்டைக்குள் வைத்தபின்பு தேரர் சென்ற வழியே கீழே இறங்கி வந்தான்.

31. தேரர் இருக்குமிடம் வந்ததும் வழக்கப்படி அவருக்கு மரியாதை செய்தான். தேரர் குகை வாயிலுக்குப் போவதற்கு அவனுக்குப் பாதை யைக் காண்பித்துக் கொடுத்தார்.

32. 'இதே வழியில் போ' என்று அவனிடம் கூறினார். தேரருக்கு வணங்கிவிட்டு அவ்வழியே சென்ற அவன் குகையைக் கண்டான்.

33. குகை வாயிலில் நின்றுகொண்டு உள்ளே இருந்த கட்டிகளைக் கண்ட அவன் அதை கோடரியால் வெட்டிப் பார்த்தான்.

34. அவை வெள்ளிக் கட்டிகள் என்பதை யறிந்ததும் அவற்றில் ஒரு குவியலை எடுத்துக் கொண்டு தன் வண்டிகள் நின்ற இடத்துக்கு சென்றான். பின்பு வண்டிகளைப் பின்னால் விட்டு விட்டு வெள்ளிக் கட்டிகளுடன் அவ் வியாபாரி விரைந்தான்.

35. அவசரமாக அனுராதபுரத்துக்குச் சென்று அரசனைக் கண்டு வெள்ளியைக் காட்டி விஷயத்தைச் சொன்னான்.

36. நகரத்தின் மேற்குத் திசையில் ஐந்து யோஜனை தூரத்தில் கப்பல் துறையான உருவேலா அருகில் பெரிய முத்துக்களும், பவளங்களும்,

37. ஆறு வண்டியளவு தாமாக கடலிலிருந்து கரையில் ஒதுங்கின. இதைக்கண்ட செம்படவர்கள் அவற்றை ஒரு குவியலாகக் குவித்து வைத்தனர்.

38. பிறகு கொஞ்சம் முத்துக்களையும் பவளங்களையும் ஒரு பாத்திரத்தில் எடுத்துக்கொண்டு அரசனிடம் சென்று இவ் விஷயத்தைக் கூறினர்.

39. நகரத்துக்கு வடக்குத்திசையில் ஏழு யோஜனை தூரத்தில் பேலிவாபிககாமா குளத்திலிருந்த ஒரு குகை வாயிலில் மண்ணுக்கு மேலாக,

**பேலிவாபி**—இப்போது வாவுனிக்குளம் என்றழைக்கப்படுகிறது. அனுராதபுரத்துக்கு வடக்கே 50 **மைலில்** உள்ளது.



40. நான்கு பெரிய மாணிக்கங்கள் ஒரு சிறிய இயந்திரக்கல் அளவுக்கு தோன்றிக் காணப்பட்டன. அழகுடன் அவை ஒளிவீசின.

41. நாயுடன் சென்ற ஒரு வேடன் இதைக் கண்டு அரசனிடம் வந்து விஷயத்தைச் சொன்னான்.

42. இந்த எல்லா விஷயங்களையும் மகா ஸ்தூபத்துக்கு வேண்டிய கற்களும் மற்ற பொருள்களும் ஒரே நாளில் தோன்றியதை அரசன் ஒரே நாளில் கேள்விப்பட்டான்.

43. இதனால் மகிழ்ந்தவனாகி செய்தி சொன்னவர்களுக்கு உரிய பரிசளித்தான். பின்பு அவற்றையெல்லாம் எடுத்துவரச் செய்தான்.

44. உள்ளத்தில் நம்பிக்கையுடன், உடலின் தீமையைப் பொருட்படுத்தாமல் ஒருவன் தேடிச் சேர்த்த பெருமை நூற்றுக்கணக்கான பலன்களை அளிக்கும். அவை இன்பச் சுரங்கம் போன்றவை. எனவே உள்ளத்தில் நம்பிக்கையுடன் பெருமைக்குரிய காரியங்களைச் செய்ய வேண்டும்.

**மகாவம்சத்தில் இருபத்தெட்டாவது அத்தியாயமான மகாஸ்தூபம் கட்ட ஏற்பாடு முற்றும்.**

## 29-வது அத்தியாயம்

# மகாஸ்தூப வேலை ஆரம்பம்

1. கட்டுவதற்கான பொருள்கள் இவ்வாறு சேகரிக்கப்பட்டதும் வைகாசி மாதம் பௌர்ணமி தினத்தன்று விசாக நட்சத்திரம் தோன்றியதும் அவன் மகா ஸ்தூபம் கட்டும் வேலையைத் தொடங்கினான்.

2. கல்தூணை அகற்ற உத்திரவிட்டதும் நாடாளும் அரசன் ஸ்தூபத்துக்கான இடத்தை, அது எல்லா வழிகளிலும் உறுதியாக இருக்க வேண்டுமென்பதற்காக ஏழு முழ ஆழத்துக்கு தோண்டச் செய்தான்.

3. படை வீரர்களைப் பெருங் கற்களைக் கொண்டு வரச் செய்து, அவற்றைச் சம்மட்டியினால் உடைத்துச் சிறு கற்களாகச் செய்தான்.

4. அடித்தளம் உறுதியாக இருப்பதற்காக, எது சரியானது, எது தவறானது என்பதையறிந்த அவன் கீழே இக் கற்களையிட்டு, தோல்களால் கட்டப்பட்ட யானையின் பாதங்களைக்கொண்டு மிதிக்கச் செய்தான்.

5. தெய்வீக கங்கை பூமியில் விழும் இடத்தில் முப்பது யோஜனை பரப்புக்கு அருமையான களிமண் கிடைத்தது. அது எப்போதும் ஈரமாக இருக்கும்.

6. அதனுடைய மிருதுத் தன்மையின் காரணமாக அதற்கு 'வெண்ணெய்க் களிமண்' என்று பெயரும் உண்டு. ஆசவங்களை வென்ற துறவிகள் அவ்விடத்திலிருந்து களிமண்ணை இங்கு கொண்டு வந்து சேர்த்தனர்.



7. சரளைக்கல் பாவிய இடத்துக்குமேல் இக் களிமண்ணைப் பரவலாக இடுமாறு அரசன் பணித்தான். அதன்மீது கற்களை அடுக்கவும் உத்தரவிட்டான்.

8. இதன்மீது காறையும், அதன்மீது குருவிந்தக் கல்லும், இதன்மீது இரும்புக் கம்பிகளும் இடச் செய்தான்.

9. இமாலயத்திலிருந்து துறவிகள் கொணர்ந்த நறுமணமுள்ள மரும்பாவைத் தெளிக்கவும் ஏற்பாடு செய்தான்.

10. இதன்மீது மலைக் கற்களை இடச் செய்து இவற்றின்மீது கற்களைப் பரப்ப காவலன் ஆணையிட்டான். மலைக் கற்களின் அடுக்குக்குமேலாக இது இருந்தது.

11. கட்டிட வேலை முழுவதற்கும் 'வெண்ணெய்க் களிமண்' என்றழைக்கப்பட்ட களிமண் சாந்தாகப் பயன்பட்டது. கபித மரக் கோந்தை இளநீரில் கரைத்து அதைக்கொண்டு அரசன் கற்களுக்கு மேலாக,

12. எட்டு அங்குல கனமுள்ள செம்புத் தகட்டைப் பதித்தான். இதற்குமேலாக எண்ணெயில் குழைத்த செந்தூரத்தைத் தடவி ஏழு அங்குல கனம் உள்ள வெள்ளித் தகட்டைப் பதித்தான்.

13. மனம் மகிழ்ந்தவனாகி மன்னன், மகா ஸ்தூபம் கட்டப்பட வேண்டிய இடத்தில் இவ்வாறாக ஏற்பாடுகளைச் செய்ததும்,

14. ஆடி மாதம் சுக்கில பட்சம் பதினான்காவது நாளன்று பிக்குகள் சங்கக் கூட்டத்துக்கு ஏற்பாடுசெய்து அதில் இவ்வாறு பேசினான்:

15. 'வணக்கத்துக்குரியவர்களே! நாளை மகா சேதியத்தின் அஸ்திவாரக் கல்லை நாட்டப் போகிறேன். நமது சங்கத்தைச் சேர்ந்த பிக்குகள் அனைவரும் இங்கு கூடுவார்களாக!

16. 'மக்களின் நலனைக் கருதி விழா ஒன்று நடத்துவோம். மக்கள் விழாக் கோலத்துடனும், நறுமண மலர்கள் போன்றவற்றுடனும்,

17. 'நாளை மகாஸ்தூபம் கட்டப்படப் போகும் இடத்துக்கு வருவார்களாக.' இவ்வாறு கூறிய அரசன் சேதியத்தின் இடத்தை அலங்கரிக்கும் பொறுப்பை மந்திரிகளிடம் ஒப்படைத்தான்.

18 அரசனால் உத்தரவிடப்பட்ட அவர்கள் புத்தரிடம் பெரும் பக்தியுடன் அவ்விடத்தைப் பல விதங்களில் அலங்காரம் செய்தனர்.

19. நகரம் முழுவதும் இங்கு வந்து சேரும் எல்லா சாலைகளிலும் பலவிதமாக அலங்காரம் செய்ய அரசன் உத்தரவிட்டான்.

20. அடுத்த நாள் காலை நகரின் நான்கு வாயில்களிலும் பல நாவிதர்களையும், குளிப்பதற்கு உதவி செய்ய வேலையாட்களையும் இருக்கச் செய்தான்.

21. மக்களுடைய நலனுக்காக அங்கெல்லாம் உடைகளும், இனிய உணவுகளும், நறுமண மலர்களும் வைக்க ஏற்பாடு செய்தான்.

22. இவ்வாறு அங்கு வைக்கப்பட்ட பொருள்களைத் தங்கள் விருப்பம்போல் எடுத்துக்கொண்டு நகர மக்களும், கிராம மக்களும் ஸ்தூபத்துக்கான இடத்துக்குச் சென்றனர்.

23. தங்கள் தகுதிக்கேற்ப விலை மதிப்புள்ள ஆடைகளை யணிந்த மந்திரிகள் உடன் இருக்கவும்,



24. தேவதைகளைப்போல உயர்ந்த ஆடையணிகள் பூண்ட பல நாட்டியக்காரர்கள் சூழவும்,

25. தான் ராஜ உடை தரித்தும், நாற்பதாயிரம் பேர் புடைசூழ வரவும், தேவராஜனைப் போலப் புகழ் படைத்த அவனைச் சுற்றி இன்னிசை முழங்கவும்,

26. உகந்த இடம் எது, ஒவ்வாத இடம் எது என்பதை அறிந்த அவன் மாலையில் மகாஸ்தூபம் கட்டப்பட இருந்த இடத்துக்குச் சென்று தரிசனமளித்ததன் மூலம் மக்களை மகிழ்வித்தான்.

27. ஆயிரத்து எட்டு வண்டி நிறையத் துணிகளை மூட்டையாகக் கட்டி அரசன் நடுவில் வைத்தான். நான்கு புறங்களிலும் ஏராளமான துணிகளைக் குவித்து வைத்தான்.

28. மேலும் தேன், தூய வெண்ணெய், சர்க்கரை போன்றவற்றையும் விழாவுக்காக சேகரித்து அங்கு வைத்தான்.

29. பல நாடுகளிலிருந்தும் பெருவாரியான பிக்குகள் இங்கு வந்து சேர்ந்தனர். அப்படியிருக்க இத்தீவிலேயே வசித்த பிக்குகள் இங்கு வந்து சேர்ந்ததைப்பற்றிச் சொல்லத் தேவையும் உண்டா?

30. ராஜக்ரகப் பிரதேசத்திலிருந்து ஒரு மாபெரும் பிரிவின் தலைவரான இந்திரகுப்த தேரர் எண்பதாயிரம் பிக்குகளுடன் வந்தார்.

31. இசி பட்டணத்திலிருந்து* மகா தேரர் தர்மசேனருடன் பனிரெண்டாயிரம் பிக்குகள் சேதியத்தின் இடத்துக்கு வந்தனர்.

* இஸி பட்டணம் — முதலில் வனமாகவும் பின்னர் மடமாகவும் இருந்தது. வாரணாசிக் கருகிலுள்ளது. புத்தர் இங்குதான் முதன் முதலில் தமது தர்மத்தைப் போதித்தார்.

32. ஜேதராமா விஹாரத்திலிருந்து மகா தேரர் பிரியதரிசி அறுபதாயிரம் பிக்குகளுடன் இங்கு வந்தார்.

33. வைசாலியிலுள்ள மகாவன விஹாரத்திலிருந்து உரு புத்த ராக்கித தேரர் பதினெட்டாயிரம் பிக்குகளுடன் வந்தார்.

34. கௌஸாம்பியிலுள்ள கோசிதாராமாவிலிருந்து உரு தர்ம ராக்கித தேரர் முப்பதாயிரம் பிக்குகளுடன் வந்தார்.

35. உஜ்ஜயினியிலுள்ள தக்ஷிணகிரியிலிருந்து உரு சங்க ராக்கித தேரர் நாற்பதாயிரம் துறவிகளுடன் வந்தார்.

36. புஷ்பபுரத்திலுள்ள அசோகாராமாவிலிருந்து மித்திரை என்னும் பெயருடைய தேரர் நூற்றி அறுபதாயிரம் பிக்குகளுடன் வந்தார்.

37. உத்தின தேரர் காஷ்மீர நாட்டிலிருந்து இரு நூற்றியெண்பதாயிரம் பிக்குகளுடன் வந்தார்.

38. பல்லவ போகத்திலிருந்து அறிஞர் மகாதேவர் நானூற்று அறுபதாயிரம் பிக்குகளுடன் வந்தார்.

39. யவனர்களின் நகரமான அலசந்தாவிலிருந்து யோன மகா தர்மராக்கித தேரர் முப்பதாயிரம் பிக்குகளுடன் வந்தார்.

40. விந்திய மலைக் காட்டுப் பகுதியிலிருந்து உத்தர தேரர் என்பவர் அறுபதாயிரம் பிக்குகளுடன் வந்தார்.

41. மகா தேரர் சித்ரகுப்தர், போதிமந்த விஹாரத்திலிருந்து முப்பதாயிரம் பிக்குகளுடன் வந்தார்.

பல்லவ போகம்—பாரசீகம்.

அலசந்தா—அலக்ஸாண்ட்ரியா. யவனர்-கிரேக்கர்.



42. மகா தேரர் சந்திரகுப்தர் வனவாச நாட்டிலிருந்து எண்பதாயிரம் துறவிகளுடன் வந்தார்.

43. கேலாச விஹாரத்திலிருந்து மகா தேரர் சூரிய குப்தர் தொண்ணூற்றாயிரம் பிக்குகளுடன் இங்கு வந்தார்.

44. நாலா புறத்திலிருந்தும் வந்து கூடிய தீவில் வசித்த பிக்குகளின் எண்ணிக்கையைப்பற்றி முன்னோர்கள் சரியாகக் கணக்கிட்டுக் குறிப்பிடவில்லை.

45. அங்கு வந்து கூடிய எல்லாப் பிக்குகளிடையேயும் ஆசவங்களை வென்றவர்கள் மட்டும் தொண்ணூற்று ஆறு கோடி என்று கூறப்படுகிறது.

46. மத்தியில் அரசனுக்காக ஒரு இடத்தைக் காலியாக விட்டுவிட்டு இந்த பிக்குகள் மகாஸ்தூபத்தின் இடத்தைச் சுற்றி அவரவர்கள் தகுதிப்படி நின்றனர்.

47. இந்த இடத்துக்கு வந்து நின்றுகொண்டு அரசன் மக்களைப் பார்த்து உள்ளத்தில் நம்பிக்கை ஒளி திகழ மகிழ்வுடன் அவர்களை வரவேற்றான்.

48. பின்னர் அவர்களுக்கு நறுமண மலர்களை அளித்து மும்முறை வலம் வந்ததும் இடது புறம் திரும்பி மத்தியிலுள்ள பிரதிஷ்டா பீடத்துக்குச் சென்றான்.

49. பிறகு உடனே உவகையினால் உந்தப்பட்டவனாகி ஜீவராசிகளின் நன்மையிலே நாட்டம் கொண்ட நாட்டின் காவலன்,

போதிமந்த விஹாரம்—கௌதமர் புத்த ஞானம் பெற்ற இடத்தில் கட்டப்பட்ட மடம். கயாவில்

வனவாச நாடு—தென்னிந்தியா.

50. தங்கத்தினாலான மூளையில் கட்டப்பட்ட (வட்டமாக சுற்றிலும் எல்லைக் கோட்டை வரைவதற்கு) வெள்ளித் தண்டை உயர்குடிப் பிறந்த மந்திரி ஒருவரைப் பிடித்துக் கொள்ளச் செய்தான்.

51. விழாவுக்கேற்ற விசேஷ ஆடையணிகளைப் பூண்டிருந்தார் அவர். சேதியத்துக்கு ஏராளமான இடத்தை ஒதுக்கிவிடத் தீர்மானித்த அரசன் அவரை கோடுவரையும் தண்டுடன் ஏற்கனவே தயாரிக்கப்பட்ட இடத்தைச் சுற்றி வரச்செய்தான்.

52. அரசன் இவ்வாறு செய்ததை அற்புத சக்திகள் படைத்தவரும் தீர்க்கதரிசியுமான மகா தேரர் சித்தார்த்தர் தடுத்தார்.

53. 'அரசன் இவ்வளவு பெரிய ஸ்தூபத்தைக் கட்டத் தொடங்கினால் அது கட்டி முடிவதற்குள் அவனுக்கு மரணம் நேரிட்டு விடும். அதனால் ஸ்தூபம் கட்டி முடிவு பெறாது.

54. 'மேலும் அவ்வளவு பெரிய ஸ்தூபத்தைப் பழுது பார்ப்பதும் கடினமாகும்' என்று அவர் மனதில் எண்ணினர். எனவே எதிர்காலத்தை உணர்ந்து அவர் அவ்வளவு பெரிய அளவில் ஸ்தூபம் கட்டுவதிலிருந்து அரசனைத் தடுத்தார்.

55. தேரரிடம் கொண்ட பக்தியினாலும், பிக்குகளின் சம்மதத்துடனும் அரசன் மிகப் பெரியதாகவே ஸ்தூபத்தைக் கட்ட விரும்பியபோதிலும் தேரருடைய வார்த்தையைச் செவிமடுத்து அவரது யோசனைப்படி நடந்து,

56. கணிசமான அளவு இடத்தை சேதியத்துக்காக ஒதுக்கி அஸ்திவாரக் கல்லை நாட்டச் செய்தான்.



57. குன்றாத உணர்வுடன் எட்டு குடம் வெள்ளியையும் எட்டு குடம் தங்கத்தையும் அவன் நடுவில் வைத்தான்.

58. இதைச் சுற்றிலும் வட்டமாக ஆயிரத்து எட்டு புதிய குடங்களை வைத்தான். இதேபோல் இவை ஒவ்வொன்றைச் சுற்றியும் நூற்றியெட்டு துணிகளை வைத்தான்.

59. பின்பு ஒவ்வொன்றுக்கும் இடைவெளி விட்டு எட்டு அற்புதக் கற்களை வைத்தான்.

60. இந்த சடங்குக்கென நியமிக்கப்பட்ட ஒருவரை இவற்றுள் ஒன்றை எடுக்கச் சொல்லி ஆணையிட்டு அதைக் கிழக்குப்புறம் வைத்தான்.

61. பல சடங்குகள் செய்து புனிதப்படுத்தப்பட்ட இவ்விடத்தில் முதலாவது அஸ்திவாரக் கல்லை நறுமணம் வீசும் களிமண் மீது வைத்தான். அந்த இடத்துக்கு மல்லிகை மலர் தூவி அர்ச்சித்ததும் பூமி அதிர்ந்தது.

62. பின்பு இதர ஏழு கற்களையும் எடுத்துவைக்குமாறு ஏழு மந்திரிகளைக் கேட்டுக்கொண்டான். பிறகு அபிஷேக சடங்கை நடத்தச் செய்தான்.

63. இவ்வாறாக ஆடி மாதம் சுக்கில பட்சம் பதினைந்தாவது உபோசத தினத்தன்று குறிப்பிட்ட நாளில் கற்களை இட ஏற்பாடு செய்தான்.

64. நான்கு தெய்விக திசைகளிலும் நின்ற ஆசவங்களைக் கடந்த நான்கு மகா தேரர்களையும் பணிவுடன் வரவேற்றுப் பரிசு வழங்கிக் கௌரவித்ததும்,

65. அரசன் பெருமகிழ்வுடன் வட கிழக்குத் திசைக்கு வந்து ஆசவங்களிலிருந்து விடுபட்ட மகாதேரர் பிரியதரிசியை வணங்கிப் பின்பு அவர் அருகில் அமர்ந்தான்.

66. விழாவைப் புகழ்ந்து பேசிய தேரர் அவனுக்கு உண்மையான மார்க்கத்தைப் போதித்தார். மக்களுக்குப் பேரருள் செய்வதாக அப்பெருமானின் போதனை இருந்தது.

67. இதைக் கேட்டு நாற்பதாயிரம் பேர் உண்மை மார்க்கத்துக்கு மாறினர். மேலும் நாற்பதாயிரம் பேர் புனிதமடைவதற்கான மனப்பக்குவம் பெற்றனர்.

68. ஆயிரம் பேர் பிறவிக் கடலின் முதல் கட்டத்தைத் தாண்டியவர்களாயினர். மேலும் ஆயிரம் பேர் இரண்டாவது கட்டத்தைத் தாண்டியவர்கள் ஆயினர். ஆயிரம் பேர் பிக்குகளாவதற்கு தகுதியுடையவர்களாக ஆயினர்.

69. பதினெட்டாயிரம் பிக்குகளும், பதினாலாயிரம் பிக்குணிகளும் அரஹந்த நிலையடைந்தனர்.

70. இதே போல் மும்மணிகளில் இதய ஈடுபாடு கொண்ட ஒவ்வொருவரும் தாராளமாக வழங்கும் தன்மையுள்ள மனிதகுல ரட்சகன் ஒருவன் மூலம் நன்மை பெற்று, உலகமும் அதன் மூலம் அருள் பெற முடியும். பல குண நலன்கள் அமையப் பாடுபட முடியும்.

**மகாவம்சத்தில் 29-வது அத்தியாயமான மகாஸ்தூப வேலை ஆரம்பம் முற்றும்.**

## முப்பதாவது அத்தியாயம்

# தாதுகர்ப்பம் தயாரிப்பு

1. மாமன்னன் பிக்குகளைப் பணிவுடன் வணங்கி வரவேற்று இவ்வாறு சொன்னான்: 'சேதியம் கட்டி முடியும் வரை என்னிடம் பிட்சை ஏற்றுக் கொள்ள வேண்டும்.'

2. பிக்குகள் இதற்குச் சம்மதிக்கவில்லை. மேலும் மேலும் அவர்களைப் பணிவுடன் வேண்டிக் கொண்டு ஒரு வார காலத்துக்கு மட்டுமாவது பிட்சை ஏற்றுக் கொள்ள வேண்டி அவர்களுடைய சம்மதத்தைப் பெற்றான்.

3. ஒரு வார காலத்துக்கு அவர்களில் பாதிப்பேர் மட்டுமே பிட்சை ஏற்றுக் கொள்ளச் சம்மதித்தனர். இந்த அனுமதியைப் பெற்றதும் அவன் திருப்தி அடைந்தவனாக,

4. ஸ்தூபத்தின் இடத்தைச் சுற்றிப் பதினெட்டு இடங்களில் கூடாரங்கள் அமைக்கச் செய்து அங்கு ஒருவார காலத்துக்குத் தாராளமாக பிக்குகளுக்கு வழங்க ஏற்பாடு செய்தான். பின்பு அவர்களுக்குப் போவதற்கு விடை கொடுத்தனுப்பினான்.

5. பிறகு கட்டிடக் கலை வல்லுனர்களை முரசறைந்து அதிவிரைவில் திரட்டக் கட்டளையிட்டான். அப்படிச் சேர்ந்தவர்கள் ஐநூறு பேர்கள்.

6. 'நீ எப்படி ஸ்தூபத்தைக் கட்டுவாய்?' என்று அவர்களில் ஒருவனிடம் அரசன் கேட்டான்.

7. ‘நூறு தொழிலாளர்களைக் கொண்டு ஒரு நாளைக்கு ஒரு வண்டி மணலை உபயோகப்படுத்துவேன்’ என்று அவன் பதிலளித்தான். அவனை உபயோகமில்லாதவன் என்று அரசன் நிராகரித்து விட்டான். பிறகு அவர்கள் அதில் பாதியளவு மணலை உபயோகிக்கலாமென்றும், அதன் பிறகு அதிலும் பாதியளவு மணலை உபயோகிக்கலாமென்றும் கூறினர். கடைசியாக ஒருவன் இரண்டு அம்மண மணலை உபயோகிப்பதாகக் கூறினான்.

8. இந்த நான்கு கட்டிடக்கலை வல்லுனர்களையும் அரசன் நிராகரித்து விட்டான். அனுபவமும் புத்திக் கூர்மையும் உடைய ஒருவன் பின்னர் அரசனிடம் இவ்வாறு கூறினான்.

9. ‘மணலை நன்றாக அரைத்துச் சலித்த பின்பு இயந்திரத்திலிட்டுப் பொடித்து அதிலிருந்து ஒரே ஒரு அம்மண மணலை மட்டும் உபயோகிப்பேன்.’

10. இந்திரனைப் போன்ற நெஞ்சுரம் கொண்ட மன்னன், இவ்வார்த்தைகளைக் கேட்டதும் ‘புல் பூண்டுகள் நமது சேதியத்தில் இராது’ என்று எண்ணியவனாக அதற்குச் சம்மதித்தான்.*

11. பிறகு அவனிடம் ‘சேதியத்தை எந்த உருவத்தில் அமைப்பாய்?’ என்று கேட்டான். அச்சமயம் விசுவகர்மா அவனுடைய உடலில் ஆவிர்ப்பவித்தான்.

12. அந்தக் கட்டிடக் கலை வல்லுனர் ஒரு தங்கக் கிண்ணத்தில் நீர் நிரப்பி எடுத்துக் கொண்-

* மணல் அதிகமாக உபயோகித்தால் கட்டிடம் உறுதியாக இராது என்பதை வற்புறுத்துவது இது.

**அம்மண:** இது 704 கைநிறைய மணல் அளவைக் குறிப்பது.



டார். பின்பு தம் கையில் கொஞ்சம் நீரையெடுத்து கிண்ணத்திலுள்ள நீர்ப்பரப்பில் ஊற்றினார்.

13. ஒரு பெரிய குமிழ் எழுந்தது. பளிங்கினாலான அரைக் கோளமாக அது தோற்றமளித்தது. ‘இவ்வாறு ஸ்தூபத்தைக் கட்டுவேன்’ என்று அவர் சொன்னார்,

14. மிகவும் திருப்தியடைந்த மன்னன் ஆயிரம் பணம் மதிப்புள்ள இரண்டு உடைகளையும், காலணிகளையும் அவருக்களித்து பனிரெண்டாயிரம் கஹப்பணமும் கொடுத்தான்.

15. ‘மக்களுக்குக் கஷ்டம் தராமல் கற்களை எப்படிக் கொண்டு வந்து சேர்ப்பது?’ என்று இரவில் அரசன் சிந்தித்தான்.

16. இதைத் தேவர்கள் அறிந்ததும் ஒவ்வொரு இரவும் கற்களை எடுத்து வந்து ஒவ்வொரு நாளைக்கும் தேவையான அளவு சேதியத்தின் நான்கு வாயில்களிலும் வைத்தனர்.

17. அரசன் இதைக் கேள்விப்பட்டதும் மகிழ்வடைந்து ஸ்தூப வேலையைத் தொடங்கினான். ‘கூலி பெறாமல் இங்கு வேலை செய்யக் கூடாது’ என்று எல்லோருக்கும் அறிவித்தான்.

18. ஒவ்வொரு வாயிலிலும் பதினாறு நூறாயிரம் கஹபணமும், பலவிதமான உடைகளும், ஏராளமான அணிகளும்,

19. உணவு வகைகளும், பானங்களும், நறுமண மலர்களும், சர்க்கரை போன்றவைகளையும், வாயிலில் இடுவதற்கான ஐந்து வாசனைப் பொருள்களையும் வைக்குமாறு அரசன் கட்டளையிட்டான்.

20. 'விரும்பிய அளவு வேலைசெய்து இஷ்டம்போல் வேண்டியதை இதிலிருந்து அவர்கள் எடுத்துக் கொள்ளட்டும்' என்ற அரசனுடைய உத்தரவுக் கிணங்க தொழிலாளர்கள் தமது கூலியைப் பெற்றுக் கொண்டனர்.

21. ஸ்தூபத்தின் கட்டிட வேலையில் பங்கு கொள்ள விரும்பிய ஒரு பிக்கு தாமே கலந்த ஒரு கையளவு காறையுடன் சேதியத்தின் இடத்துக்குச் சென்றார்.

22. அரசனுடைய ஆட்களை ஏமாற்றிவிட்டு அதை ஒரு தொழிலாளியிடம் கொடுத்தார். அதைப் பெற்றுக்கொண்டதுமே அவன் அதைக் கண்டு பிடித்து விட்டான்.

23. பிக்குவின் நோக்கத்தை அவன் புரிந்துகொண்டு விட்டான். இதனால் அவர்களுக் கிடையே தர்க்கம் வளர்ந்தது. அரசன் பின்னர் இதைக் கேள்விப்பட்டதும் அங்கு வந்து அத் தொழி லாளியைக் கேட்டான்.

24. 'ஒரு கையில் மலர்களை வைத்துக்கொண்டு பிக்குகள் மறு கையினால் காறையைத் தருவது வழக்கம்.

25. 'ஒரு பிக்கு இந்த நாட்டவரா அல்லது வெளி நாட்டினரா என்பதை மட்டுமே என்னால் கூற முடியும்' என்று அவன் பதிலளித்தான்.

26. அரசன் இதைக் கேட்டதும், காறையைக் கொடுத்த துறவியைத் தனக்குக் காட்டும்படி ஒரு மேற் பார்வையாளனை நியமித்தான். அந்தப் பிக்குவைக் கண்டுபிடித்து அவன் அரச னுக்குத் தெரிவித்தான்.

27. புனித போதி விருட்சமிருந்த முற்றத்தில் மூன்று கூடை நிறைய மல்லிகை மலர்களை



வைத்து அதை அந்தப் பிட்சுவுக்குக் கொடுக்கு மாறு அரசன் கூறினான்.

28. எதையும் கவனியாது அங்கு நின்றுகொண்டு இருந்த பிக்குவிடம் அவற்றைக் கொடுத்து மேற்பார்வையாளன் விவரத்தைக் கூறினான். பின்னரே துறவிக்குப் புரிந்தது.

29. சொத்திவால மாவட்டத்திலுள்ள பியாங்கலம் என்ற இடத்தில் வசிப்பவரும் கட்டிடத் தொழி லாளி ஒருவனுடைய உறுவினருமான ஒரு தேரர் தாமும் சேதிய வேலையில் பங்குகொள்ள விரும்பினார்.

30. அவர் இங்கு வந்து ஸ்தூபம் கட்டப் பயன் படும் கல்லின் அளவைத் தெரிந்துகொண்டு அதேபோலத் தாம் ஒன்று செய்தார்.

31. ஆட்களை ஏமாற்றிவிட்டு அவர் அதைத் தொழி லாளியிடம் கொடுத்தார். அவன் அதை இதர கற்களுடன் வைத்துக் கட்டி விட்டான். பின்னரே இதுபற்றித் தெரிய வந்தது.

32. அரசன் இதையறிந்ததும் அவனைக் கூப்பிட்டு 'அந்தக் கல்லை உன்னால் அடையாளம் காட்ட முடியுமா?' என்று கேட்டான். அவனுக்கு அது தெரிந்தபோதிலும் அரசனிடம் 'அது சாத்தியம் இல்லை' என்று பதிலளித்தான்.

33. 'அந்த தேரரை உனக்குத் தெரியுமா?' என்ற கேள்விக்கு அவன் 'தெரியும்' என்று பதில் அளித்தான். அவரைத் தெரிந்து கொள்வதற் காக அரசன் அத் தொழிலாளி அருகில் ஒரு மேற் பார்வையாளனை இருக்கச் செய்தான்.

34. மேற்பார்வையாளன் அவர் யார் என்பதைத் தெரிந்துகொண்டதும் அரசனுடைய அனுமதி யுடன் கத்தஹால பரிவேணவுக்குச் சென்று அந்த தேரரைச் சந்தித்து அவரிடம் பேசினான்.

35. அவர் அங்கிருந்து எங்கு செல்கிறார் எப்போது செல்கிறார் என்பதைத் தெரிந்துகொண்ட பின்பு 'நானும் தங்களுடன் தங்கள் கிராமத்துக்கு வருகிறேன்' என்று அவரிடம் கூறி விட்டு அரசனிடம் வந்து யாவற்றையும் கூறினான்.

36. ஆயிரம் பணம் மதிப்புள்ள ஒரு ஜோடி உடைகளையும், விலையுயர்ந்த சிவப்புத் தொப்பியையும் அவருக்களிக்க அரசன் உத்தரவிட்டான்.

37. சமணர்கள் உபயோகிக்கும் பல பொருள்களையும், சர்க்கரையையும், நறுமண எண்ணெயையும் அளிக்கவும் உத்தரவிட்டான்.

38. அவன் தேரருடன் சென்றான். பியாங் கலகம் நெருங்கியதும் அருகில் நீர் உள்ள குளிர்ந்த நிழல் அடர்ந்த இடத்தில் தேரரை உட்காரச் செய்தான்.

39. பானகம் பருகக் கொடுத்து, நறுமணத் தைலத்தினால் அவருடைய பாதங்களைத் தேய்த்து விட்டு காலணியை மாட்டி இதர தேவைகளை அளித்தான்.

40. 'எனது இல்லத்துக்கு விஜயம் செய்யும் தேரருக்கு இவற்றை நான் எடுத்து வந்தேன். இரண்டு உடைகளும் என்னுடைய மகனுக்காகும். ஆயினும் இவற்றையெல்லாம் இப்போது உங்களுக்குத் தருகிறேன்.'

41. இவ்வாறு கூறி அவன் அப்பொருள்களைத் தேரரிடம் கொடுத்தான். அதை அவர் பெற்றுக் கொண்டதும் அரசனுடைய வார்த்தைகளிலேயே அவனுடைய கட்டளையைத் தெரிவித்து விட்டு அவரிடம் விடை பெற்றுக் கொண்டான்.

42. மகாஸ்தூபம் கட்டப்பட்டபோது, அங்கு கூலிக்காக வேலைசெய்த ஏராளமான பேர் புத்த



மார்க்கத்தைத் தழுவிப் புனித சொர்க்கத்தை அடைந்தனர்.

43. உள்ளொளியின் மூலமே சுவர்க்கத்துக்கான பாதையைக் காண முடியும் என்பதை உணரும் புத்திசாலிகள் ஸ்தூபத்துக்குக் காணிக்கை செலுத்துவார்களாக.

44. இங்கு கூலிக்கு வேலைசெய்த இரண்டு மாதர்கள் முப்பத்திமூன்று தேவர்களின் சொர்க்கத்தில் மறு பிறவி யெடுத்தனர்.

45. ஸ்தூபம் முடிவடைந்தபோது அவர்கள் தாங்கள் முன்பு செய்தது பற்றிச் சிந்தித்தனர். தங்கள் செய்கைக்குப் பெற்ற பரிசை உணர்ந்து கொண்ட அவர்கள் நறுமண மலர்களுடன் ஸ்தூபத்துக்குப் பூஜைசெய்ய வந்தனர்.

46. மலர்களால் அர்ச்சித்து சேதியத்தை அவர்கள் பணிவுடன் வணங்கி வழிபட்டனர். இச் சமயத்தில் பாதி வங்கத்தில் வசித்த மகாசிவ தேரர் வந்தார்.

47. 'இரவு நேரத்தில் ஸ்தூபத்தை வணங்க வேண்டும்' என்ற எண்ணத்துடன் வந்தார் அவர். சப்த பர்ண மரம் ஒன்றின்மீது சாய்ந்து நின்று கொண்டிருந்த அவர்,

48. அந்த மாதர்களைப் பார்த்தார். தன்னை அவர்கள் பார்க்க முடியாதபடி மறைந்து நின்றுகொண்டு அவர்களுடைய அற்புத எழிலைக் கண்டு வியந்தார். பின்பு அவர்களைக் கேட்டார்:

49. 'உங்கள் தேக காந்தியினால் இத் தீவு முழுவதும் பொலிவு பெற்றுத் திகழ்கிறது. இவ்வுலகை விட்டு தேவருலகை அடையும்படியாகத் தாங்கள் செய்த வேலைதான் என்ன?'

50. மகாஸ்தூபம் கட்டும் வேலையில் தாங்கள் பங்கு கொண்டது பற்றித் தேவதைகள் அவரிடம் கூறினர். ததாகதரிடம் நம்பிக்கை வைப்பது இவ்வாறாக பெரும் பாக்கியத்தை அளிக்கிறது.

51. ஸ்தூபத்தின் மூன்று மலர்ப் பீடங்களையும் அதிசய சக்தி படைத்த தேரர்கள் அவைகள் கற்களால் கட்டப்பட்டதுமே தரைமட்டத்துக்குப் பூமியில் அமிழ்ந்து போகும்படி செய்தனர்.

52. அவை கட்டப்பட்டபோது ஒன்பது முறை அமிழ்ந்து போகும்படி செய்தனர். பின்னர் அரசன் பிக்குகளின் சபையைக் கூட்டினான்.

53. எண்பதாயிரம் பிக்குகள் கூடினர். அரசன் அவர்களை வரவேற்றுப் பலவிதமாக உபசரித்துப் பணிவுடன் வணங்கினான்.

54. பீடங்கள் அமிழ்ந்து போவதற்கான காரணத்தை அவர்களிடம் கேட்டான். 'ஸ்தூபம் தானே அமிழ்ந்து போகாமல் இருப்பதற்காகவே அற்புத சக்தி படைத்த பிக்குகள் இவ்வாறு செய்தனர்.

55. 'மா மன்னா! இனிமேல் செய்யமாட்டார்கள். எவ்வித மாற்றமும் செய்யாமல் மகாஸ்தூபத்தைக் கட்டி முடிப்பாயாக' என்று அவர்கள் பதிலளித்தனர்.

56. அரசன் இதைக் கேட்டதும் உள்ளம் மகிழ்ந்தவனாக ஸ்தூப வேலையைத் தொடர்ந்து நடக்கச் செய்தான். பத்து மலர்ப் பீடங்களுக்கும்* பத்து கோடி செங்கற்கள் உபயோகிக்கப்பட்டன.

*அமிழ்ந்துபோன மலர்ப் பீடங்கள் ஒன்பது மேலே கட்டப்பட்டது ஒன்று. ஆகப்பத்து. இவை புஷ்பதானம் எனப்படும்.



57. 'சேதியத்தில் தாதுகர்ப்பத்தை அமைப்பதற்கு பொன் நிறக் கற்களைக்கொண்டு வாருங்கள்' என்று உத்தரன், சுமணன் ஆகிய இரு துறவிகளுக்கு பிக்குகள் கட்டளையிட்டனர்.

58. அவர்கள் உத்தர குருக்களின் நாட்டுக்குச் சென்று அங்கிருந்து ஆறு பெரும் பொன் நிறக் கற்களைக் கொண்டு வந்தனர்.

59. எண்பது முழ நீளமும், எண்பது முழ அகலமும் சூரியனைப் போன்ற பிரகாசமும், எட்டு அங்குல கனமும், காந்தி மலர் போன்ற பொலிவும் உடையதாக அவை இருந்தன.

60. அவற்றுள் ஒன்றை மலர்ப்பீடத்தின் மத்தியில் வைத்து நான்கு புறமும் நான்கு கற்களை வைத்து பெட்டி போல் செய்தனர்.

61. அதிசய சக்தியுள்ள தேரர்கள் ஆறாவது கல்லைப் பின்னால் மூடியாகப் பயன்படுத்துவதற்காகக் கிழக்குப் புறத்தில் கண்ணுக்குப் புலப்படாதபடி வைத்தனர்.

62. தாது கர்ப்பத்தின் நடுவில் எல்லாவிதத்திலும் பெருமை வாய்ந்த ரத்தினங்களால் ஆன போதி மரம் ஒன்றை அரசன் வைத்தான்.

63. அதனுடைய உயரம் பதினெட்டு முழம் ஆகும். ஐந்து கிளைகளுடன் கூடியது. பவளத்தால் ஆன வேர் மரகதத்தின் மீது பாய்ந்திருந்தது.

64. மரத்தின் தண்டு சுத்தமான வெள்ளியினாலானது. ரத்தினங்களாலான இலைகள் அதனை அணி செய்தன. பழங்களும் உலர்ந்த இலைகளும் தங்கத்தினாலும், வேர்கள் பவளத்தினாலும் அமைந்திருந்தன.

65. எட்டு சுப உருவங்களும் தண்டின் மீது பொறிக்கப்பட்டிருந்தன. மலர்த் தோரணங்கள் நாற்

கால் பிராணிகளின் வரிசைகள் வாத்துக்களின் வரிசைகள் அதன்மீது அழகாகப் பொறிக்கப் பட்டிருந்தன.

66. அதன்மீது இருந்த விதானத்தின் விளிம்பில் அழகாகக் கோத்த பவள மணிகளும், தங்க மணிகளும் காணப்பட்டன.

67. விதானத்தின் நான்கு மூலைகளிலும் ஒவ்வொன்றும் 900 ஆயிரம் பணம் பெறுமான முள்ள முத்துச் சரங்களின் கொத்து தொங்க விடப்பட்டு இருந்தது,

68. சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், பல வகையான தாமரை மலர்கள் ஆகியவற்றின் ரத்தினங்களாலான உருவங்கள் விதானத்தில் கட்டப்பட்டு இருந்தன.

69. விலைமதிப்புள்ளதும், விதவித வர்ணங்களில் உள்ளதுமான ஆயிரத்தெட்டு வெவ்வேறு பொருள்கள் விதானத்தில் தொங்கவிடப்பட்டிருந்தன.

70. போதி மரத்தைச் சுற்றி எல்லாவிதமான ரத்தினங்களாலுமான வேதிகை அமைந்திருந்தது. இடையிலுள்ள இடத்தில் நன்முத்துக்கள் பதிக்கப்பட்டிருந்தன.

71. ரத்தினங்களாலான தொட்டிகள் பல வரிசைகளாக வைக்கப்பட்டிருந்தன. இவற்றுள் சில காலியாக இருந்தன. சில மலர்களால் நிரப்பப்பட்டிருந்தன. சில நான்கு விதமான நறுமண நீர் நிறைந்திருந்தன. இவையனைத்தும் போதி மரத்தின் அடியில் வைக்கப்பட்டிருந்தன.

72. ஒரு கோடி மதிப்புள்ள சிம்மாதனத்தின் மீது அவன் ஒளி பரப்பும் புத்தருடைய தங்கச் சிலையொன்றை வைத்தான். போதி மரத்துக்கு கிழக்குப் புறத்தில் இது அமைந்திருந்தது.



73. இந்த சிலையின் உடலும் அங்கங்களும் அழகாக ஒளிவிடும் பலவண்ண ரத்தினங்களால் அமைந்திருந்தன.

74. மகா பிரம்மா அங்கே வெண்கொற்றக் குடை பிடித்து நின்றார். விஜயுத்தர சங்கினால் சக்கன் அபிஷேகம் செய்தான்.

75. பஞ்சசிகன்* கையில் யாழுடனும், காலநாகன் தனது நடனப் பெண்களுடனும் ஆயிரம் கரம் படைத்த மாறன் யானையுடனும் இருந்தனர்.

76. கிழக்குப்புறம் இருந்த சிம்மாதனத்தைப் போலவே சொர்க்கத்தின் இதர ஏழு திசைகளையும் நோக்கி ஒவ்வொன்றும் ஒரு கோடிமதிப்புள்ள சிம்மாதனங்கள் அமைக்கப்பட்டன.

77. இதுபோல் போதி மரம் மேலே இருக்கும்படியாக ஒரு கட்டில் அமைக்கப்பட்டது. எல்லா விதமான ரத்தினங்களாலும் செய்யப்பட்ட இதன் மதிப்பும் ஒரு கோடியாகும்.

78. ஏழு வாரத்தில் நடந்த நிகழ்ச்சிகளை* அரசன் இங்கும் தாது கர்ப்பத்திலும் சித்திரிக்கச் செய்தான்.

79. பிரமனுடைய பிரார்த்தனை‡தர்ம சக்கரத்தை சுழலச் செய்தல், யாசரைப் பிக்குவாக அனுமதித்தது, பத்ரவாக்யர்களுடைய துறவு, ஜடிலர்களை அடக்கியது,

80. பிம்பிசாரனுடைய விஜயம், ராஜக்ரகத்தில் நுழைதல், வேணுவனத்தை ஏற்றுக்கொள்ளுதல், எண்பது சீடர்கள்,

*பஞ்சசீகன்—தேவலோக கவிஞன். எப்போதும் இந்திரனுடன் இருப்பான்.

*சம்போதிக்குப் பிறகு புத்தர் போதி மரத்துக்கருகில் ஏழுவார காலம் தங்கியிருந்தார்.

‡பிரமனும் மற்ற தேவர்களும் தாம் கண்ட உண்மையை உலகுக்குப் போதிக்கும்படி புத்தரிடம் வேண்டுதல்.

81. கபிலவாஸ்துவுக்குப் போதல், அங்கு நடந்த அற்புதம், ராகுலன், நந்தன் ஆகியவர்களது துறவு, ஜேதவனத்தை ஏற்றுக்கொள்ளுதல்.

82. மாமரத்தின் அடியில் நிகழ்ந்த அற்புதம், தேவர்கள் சொர்க்கத்தில் உபதேசம் செய்தல், தேவர்கள் இறங்கி வந்த அதிசயம்,

83. மகா சமய சித்தாந்தம், ராகுலனுக்கு உபதேசம், மகா மங்கள சுத்தம், தனபாலனுடன்* போர், ஆலவகனை அடக்குதல்.

84. அங்குலிமாலாவையும், அபலாலனையும் அடக்குதல், பாராய நாகர்களைச் சந்தித்தல், உயிரை விடுதல்†

85 பன்றி இறைச்சியை ஏற்றுக்கொள்ளுதல்* இரண்டு பொன்நிற ஆடைகளை ஏற்றல் (1) தூய நீரை அருந்துதல் (2) பரி நிர்வாணமடைதல்.

---

எண்பது சீடர்கள்—சாரிபுத்ரனையும், மாகாலனையும் சேர்த்துக்கொண்ட பிறகு இருந்த சீடர்களின் சிறு கோஷ்டி.

கபிலவாஸ்து அற்புதம்—புத்தர் வானில் ரத்தினங்களாலான பாதையை யமைத்து அதன்மீது நடந்துகொண்டே சாக்கியர்களுக்கு உபதேசம் செய்தார்.

*புத்தரைக் கொல்வதற்கு தேவதத்தன் அவர்மீது தனபாலன் என்ற யானையை ஏவுகிறான். புத்தர் யானையை சாந்தத்தினால் அடக்குகிறார்.

†இறப்பதற்கு மூன்று மாதங்களுக்குமுன்பு புத்தர் குறிப்பிட்ட அந்தக் காலத்தின் முடிவில் நிர்வாண மடைவது என்று முடிவு செய்தார்.

*சுந்தன் என்பவனால் புத்தருக்கு அளிக்கப்பட்ட உணவு. இதனால் நோய் வாய்ப்பட்டு இறுதியில் மரணம் நேர்ந்தது.

(1) மன்ன புக்குசன் என்பவனால் புத்தருக்கு இரு ஆடைகள் பரிசளிக்கப்படுகின்றன. ஆனந்தன் அவைகளை புத்தருடைய உடலின் மேல் போர்த்தியதும் நெருங்கிவரும் மரணத்துக்கு அறிகுறியாக விசேஷமாக ஒளிவிட்டுப் பிரகாசித்தது.

(2) காகுத்த நதியின் கலங்கிய நீர் குருநாதருக்காக ஆனந்தன் கொஞ்சம் அதிலிருந்து எடுத்ததும் தெளிந்து தூய்மை பெற்றது.



86. தேவர்களும் மனிதர்களும் புலம்புதல், தேரர் பாதத்தை வணங்குதல் (3) உடலை எரித்தல், தீ அடங்குதல் (4) ஈமச் சடங்குகள்.

87. தோணா அஸ்தியைப் பிரித்துக் கொடுத்தல் (5) ஜாதகக் கதைகள், மற்றும் நம்பிக்கை யூட்டக் கூடிய வேறு பலவற்றையும் அங்கு நிறையச் சித்திரித்து வைக்கச் செய்தான்.

88. வெஸந்தர ஜாதகத்தை முழுவதும் சித்தரிக்குமாறு அரசன் உத்தரவிட்டான். அதேபோல் துசித சொர்க்கத்தையும், போதி மரத்தையும் சித்தரிக்கச் செய்தான் (6)

89. நான்கு திசைகளிலும் நான்கு காவலர்(7)களின் உருவங்கள் நிறுத்தி வைக்கப்பட்டன. முப்பத்திமூன்று தேவர்களும், முப்பத்து இரண்டு தெய்விகப் பெண்களும்,

---

(3) இறந்துவிட்ட குருநாதருக்கு இறுதி வணக்கம் செலுத்துவதற்காக மகா காச்யப தேரர் பாவாவிலிருந்து வந்துகொண்டிருந்தார். அதனால் புத்தருடைய சடலம் கிடந்த சிதைக்கு யாராலும் நெருப்பு வைக்க முடியவில்லை. மகா காச்யபர் வந்து சிதையை மும்முறை வலம்வந்து வணங்கியதும் அது தானே பற்றியெரியத் தொடங்கியது.

(4) சொர்க்கத்திலிருந்து நீர் அருவிபோல் கொட்டி தீயை அணைத்தது.

(5) புத்தருடைய அஸ்தியைப் பிரித்துக்கொள்வதுபற்றி பெரும் சச்சரவு உண்டாகும் போல் இருந்தது. அப்போது தோணா என்னும் பிராமணர் அஸ்தியை எட்டு பங்காகப் பிரித்து சச்சரவு ஏற்படாமல் தடுத்தார்.

(6) புத்தருடைய கடைசி பூவுலக வாசம் வெஸந்தரன் உருவிலாகும். இதிலிருந்து அவர் துசித சொர்க்கத்தை அடைகிறார். அதனால் இந்த ஜாதகம் விசேஷ முக்கியத்வம் வாய்ந்ததாகும். துசிதர் எனப்படுவோர் தேவர்களில் ஒரு வகையினர்.

(7) நான்கு திசைக் காவலர்கள் வடக்கு—தத்தராத்தர். தெற்கு - விருலஹர். மேற்கு - விருபாக்ஷர். கிழக்கு-வேசவனர். இவர்கள் லோகபாலர் எனப்படுவர்.

90. இருபத்தியெட்டு யக்ஷர் தலைவர்களும் சித்தரிக்கப்பட்டனர். இவற்றுக்கு மேலே கூப்பிய கரங்களுடன் இருந்த தேவர்கள் உருவம் பொறிக்கப்பட்டிருந்தது.

91. மலர்கள் நிரம்பிய தொட்டிகள், நடனமாடும் தேவதைகள், இசைக் கருவிகளை இயக்கும் தேவதைகள், கையில் கண்ணாடியுடன் நிற்கும் தேவர்கள், மலர்கள் கிளைகளுடன் நிற்கும் தேவர்கள், கையில் தாமரை மலர்களுடன் நிற்கும் தேவர்கள்,

92. வேறு விதமான தேவர்கள், மணிகளால் ஆன வளைவு வரிசைகள், தர்ம சக்கரங்கள், கையில் வாளுடன் நிற்கும் தேவர் வரிசைகள்,

93. குடத்துடன் நிற்கும் தேவர்கள் உருவங்கள் சித்தரிக்கப்பட்டிருந்தன. இதற்கு மேலாக ஐந்து முழ உயரமுள்ள நறுமண எண்ணெய் நிரம்பிய குடங்கள் இருந்தன.

94. இவற்றில் இடப்பட்டிருந்த திரிகள் தொடர்ந்து எரிந்து கொண்டிருந்தன. பளிங்கிலான வளைவு ஒன்றின் நான்கு மூலைகளிலும் ஒவ்வொன்றிலும் நான்கு பெரிய ரத்தினங்கள் இருந்தன.

95. மேலும் நான்கு மூலைகளிலும் ஒளிவீசும் தங்கம் குவித்து வைக்கப்பட்டிருந்தது. விலையுயர்ந்த கற்கள், முத்து, வைரம் ஆகியவைகளும் வைக்கப்பட்டிருந்தன.

96. ஒளி வீசும் கற்களாலான சுவற்றில் குறுக்கும் நெடுக்குமாகக் கோடுகள் வரையப்பட்டிருந்தன. இது தாதுகர்ப்பத்துக்கு அலங்காரமாக விளங்கியது.

97. பிரமாண்டமான பசும் பொன்னிலான இந்த மனங்கவரும் தாதுகர்ப்பத்தில் இந்த எல்லா



உருவங்களையும் சித்தரிக்கும்படி அரசன் பணித்தான்.

98. அசாதாரணமான ஆறு சக்திகளைப் படைத்தவரும் அறிஞருமான மகாதேரர் இந்திரகுப்தர் இவ்வேலைகளனைத்தையும் மேற்பார்வையிட்டு செய்யுமாறு உதவினர்.

99. அரசனுடைய அதிசய சக்தி, தேவதைகளுடைய அற்புத சக்தி, தேரர்களுடைய ஆச்சரிய சக்தி ஆகியவற்றின் காரணமாக இவ்வேலைகள் அனைத்தும் எவ்வித இடைஞ்சலும் இன்றி இனிது முடிவடைந்தன.

100. உள்ளத்தில் நம்பிக்கை உள்ளவன் அருள் பெற்ற ஞானி புத்தருக்கு, வணக்கத்துக்குரியவர்களில் தலையானவருக்கு, உலகின் உன்னதமானவருக்கு, இருளிலிருந்து விடுபட்டவருக்கு அவர் உயிரோடிருக்கும் போதே வணக்கம் செய்திருந்தால் தம்மால் எல்லா இடங்களுக்கும் பகிர்ந்தளிக்கப்பட்ட அவருடைய அஸ்திக்கும் மனித குலத்தின் விமோசனத்தை மனதில் கொண்ட அவரைப் புரிந்து கொண்டால் சம மதிப்புத் தருவான். அப்போதுதான் புத்தர் வாழ்ந்த காலத்தில் அவரை வணங்கியது போலவே அம்மாமுனிவரின் அஸ்திக்கு மரியாதை செய்வான்.

**மகாவம்சத்தில் முப்பதாவது அத்தியாயமான**
**தாது கர்ப்பம் தயாரிப்பு முற்றும்.**

முப்பத்தொன்றுவது அத்தியாயம்

## தாது பிரதிஷ்டை

1. எதிரிகளை அடக்கிய அரசன் தாது கர்ப்பத்தின் வேலையை முடித்ததும் பிக்குகளின் சபையைக் கூட்டி அவர்களிடம் பேசினுன்.
2. 'தாது கர்ப்பத்தில் செய்யவேண்டிய வேலைகள் என்னுல் பூர்த்தி செய்யப்பட்டுவிட்டன. நாளைக்கு தாதுவைப் பிரதிஷ்டை செய்ய முடியும். வணக்கத்துக்குரியவர்களே! தாங்கள் தாதுவைப் பற்றி யோசித்தீர்களா?' எனக் கேட்டான்.
3. இவ்வாறு கேட்ட அரசன் பின்னர் நகரத்துக்கு சென்றுவிட்டான். பிக்குகளின் சபை தாதுவை இங்கு கொண்டு வருவதற்கு யாரைத் தேர்ந்தெடுக்கலாம் என்று பரிசீலனை செய்தது.
4. பூஜா பரிவேணுவில் வசித்து வருபவரும், அசாதாரண சக்திகள் ஆறும் படைத்தவருமான சோனுத்தாரர் என்பவரைத் தேர்ந்தெடுத்து அவரிடம் தாதுவைக் கொண்டு வரும் பொறுப்பை ஒப்படைத்தது.
5. உலகத்தின் உய்வுக்காகக் குருநாதர் பூவுலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்தபோது கங்கைக் கரையில்,
6. நந்துதாரன் என்ற பிராமணன் சம்புத்தரை பிக்குகளுடன் வரவேற்று உபசாரம் செய்தான். பிரயாகைக்கு அருகில் குருநாதர் பிக்குகளுடன் கப்பலில் ஏறினர்.

பிரயாகை—கங்கையும் யமுனையும் ஒன்று சேரும் இடம். அலகாபாத்.

7. அப்போது அற்புத சக்திகள் படைத்தவரும் அசாதாரண சக்திகள் ஆறும் அமைந்தவருமான தேரர் பத்தாஜி என்பவர் ஓரிடத்தில் நீர் சுழித்துக்கொண்டு போவதைக் கண்டார். அவர் பிக்குகளிடம் சொன்னுர்:
8. 'மகாபநாகத்தின் மன்னனுக நான் இருந்த போது வசித்த இருபத்தைந்து யோஜனை அளவுள்ள பொன் மாளிகை இந்த இடத்தில் அமிழ்ந்திருக்கிறது,
9. 'கங்கையின் நீர் இதன் அருகில் வரும்போது சுழித்துக்கொண்டு போகிறது' இவ்வாறு அவர் கூறியதை நம்பாத பிக்குகள் இதைக் குருநாதரிடம் தெரிவித்தனர்.
10. 'பிக்குகளின் சந்தேகத்தைப் போக்குவாயாக' என்று குருநாதர் சொன்னுர். பிரம்மலோகத்திலும் அதிகாரம் செலுத்தக்கூடிய சக்தியை அவர் காட்ட விரும்பினுர்.
11. தமது அற்புத சக்தியினுல் அவர் காற்றில் மேலே எழும்பி ஏழு தாள உயரத்தில் மிதந்து கொண்டே பிரம்மலோகத்திலிருந்து தூஸஸ்தூபத்தைத் தமது கையை நீட்டி எடுத்தார்.
12. அதை இங்கு கொண்டு வந்து அவர்களுக்குக் காட்டினுர். பின்னர் அது இருந்த இடத்தில் அதை வைத்துவிட்டார்.
13. பிறகு அவர் தமது அற்புத சக்தியால் கங்கையில் குதித்து மூழ்கி அரண்மனை கோபுரத்தைத் தமது காலால் தெம்பி மேலே தூக்கினுர். அதை அவர்களுக்குக் காட்டியதும் மீண்டும் தன்னிடத்தில் அதை விழுமாறு விட்டுவிட்டார்.
14. இந்த அதிசயத்தைக் கண்ட பிராமணனுகிய நந்ததாரன், 'மற்றவர்கள் வசமுள்ள

தாதுவை அடையும்படியான சக்தியை நான் பெறுவேனாக' என்று வேண்டிக் கொண்டான்

15. அதன் காரணமாகவே சோனுத்தாரனுக்கு அப்போது பதினாறு வயதே ஆகியிருந்த போதிலும் பிக்குகள் அவரிடம் பொறுப்பை அளித்தனர்.*

16. 'எங்கிருந்து நான் தாதுவைக் கொண்டு வரட்டும்?' என்று அவர் பிக்குகளைக் கேட்டார். அதன்பேரில் பிக்குகள் தாது பற்றி இவ்வாறு விவரித்துக் கூறினர்.

17. மரணப் படுக்கையில் கிடந்த உலக நாயகர் தமது தாதுவின் மூலம் உலக உய்வுக்கு வழி பிறக்குமென்றெண்ணி தேவராஜன் சக்கனிடம் இவ்வாறு கூறினர் :

18. 'தேவராஜனே! என்னுடைய அஸ்தி எட்டு டோணாவில், ஒரு டோணா ராமகாமாவில் கோலியர்களால் பேணிப் பூஜிக்கப்படும். பின்பு அது நாகர் நாட்டுக்கு எடுத்துச் செல்லப்படும்.

19. 'அங்கு நாகர்களால் பூஜிக்கப்பட்ட பிறகு இலங்கைத் தீவில் மகா ஸ்தூபத்தில் பிரதிஷ்டை செய்யப்படும்.'

20. தீர்க்கதரிசியும் பேரறிஞருமான மகா காச்யப தேரர்* தர்ம அசோகன் பின்னல், அஸ்தியைப் பிரித்துக் கொடுக்கப் போவதை முன்பே உணர்ந்தார்.

---

கோலியர்—சாக்கியர்களுக்கு உறவு முறையுள்ள ஒரு குடியினர்.

* சோனுத்தாரன்தான் முன் பிறவியில் நந்துதாரனாக இருந்தவர்.

டோணா—ஒரு அளவு

*புத்தருடைய மறைவுக்குப் பின்பு சங்க தேரராக இருந்தவர். முதலாவது மகா சபையின் தலைவர்.



21. அஸ்தியின் பெரும் பகுதியை ராஜக்ரகத்தில் பாதுகாப்புடன் பேணி வைக்க ஏற்பாடு செய்தார்.

22. அரசன் அஜாத சத்ரு ஏழு டோணா அஸ்தியை அங்கு எடுத்து வந்தபோது நடந்தது இது. குருநாதரின் எண்ணத்தை யறிந்த அவர் ராமகாமாவில் இருந்த ஒரு டோணா அஸ்தியை எடுக்கவில்லை.

23. பேணிப் பாதுகாத்து வைக்கப்பட்டிருந்த பெருமளவு தாதுவைக்கண்ட தர்ம அசோகன் எட்டாவது டோணாவையும் (ராமகாமாவில் இருந்த அஸ்தி) இங்கு எடுத்துவர எண்ணினான்.

24. மகா ஸ்தூபத்தில் பிரதிஷ்டை செய்யப்படுவதற்காக அது குருநாதரால் விதிக்கப்பட்டது என்பதை உணர்ந்த ஆசவங்களை வென்ற பிக்குகள் தர்ம அசோகனைத் தடுத்தனர்.

25. கங்கைக் கரையில் ராஜகாமாவில் கட்டப்பட்ட ஸ்தூபம் கங்கை வெள்ளத்தினால் அழிந்து போய்விட்டது.

26. ஆனல் தாது இருந்த பேழை கடலை அடைந்து அங்கு ரத்தினங்களால் அமைக்கப்பட்ட ஆசனத்தில் ஒளிவீச அமர்ந்திருந்தது.

27. நாகர்கள் இந்தப் பேழையைக் கண்டனர். உடனே நாக மன்னன் காலநாகனுடைய மஞ்சேரிக மாளிகைக்குச் சென்று இதைக் கூறினர்.

28. அவன் பத்தாயிரம் கோடி நாகர்களுடன் அந்த இடத்துக்குச் சென்றான். அந்தப் பேழையைத் தன் மாளிகைக்கு எடுத்து வந்து வழிபட்டான்.

29. பின்னல் அதை வைத்து அதன்மீது ரத்தினங்களாலான ஸ்தூபத்தைக் கட்டினன். அதன்

பிறகு ஸ்தூபத்தின்மீது ஆலயமெழுப்பி இடைவிடாது பூஜைக்கு ஏற்பாடு செய்தான்.

30. அங்கு பலத்த காவல் இருக்கிறது. அந்த இடத்துக்குப்போய் தாதுவைக் கொண்டுவர வேண்டும். நாளைய தினம் அரசன் தாதுப் பிரதிஷ்டைக்கு ஏற்பாடு செய்வான்' என்றனர்.

31. பிக்குகள் இவ்வாறு கூறியதைக் கேட்ட அவர் (சோனுத்தரர்) 'அப்படியே கொண்டு வருகிறேன்' என்று கூறிவிட்டு தமது இடத்துக்கு வந்து எப்போது புறப்படுவது என்பதுபற்றிச் சிந்திக்கலானர்.

32. 'நாளைய தினம் தாது பிரதிஷ்டை நடைபெறும்' —இவ்வாறு அரசன் பறையறைந்து நகரில் அறிவிக்கச் செய்தான். செய்ய வேண்டிய வேலைகளுக்கான ஏற்பாடுகள் நடக்கலாயின.

33. நகரம் முழுவதும், சாலைகளும் கவனமாக அலங்கரிக்கப்பட வேண்டும். எங்கும் விழாக் கோலம் நிலவவேண்டும் என்று அரசன் கட்டளையிட்டான்.

34. தேவர்களின் அரசனை சக்கன், விஸ்வகர்மாவைக் கூப்பிட்டு இலங்கைத் தீவு முழுவதையும் பலவிதங்களிலும் அலங்கரிக்குமாறு பணித்தான்.

35. நகரத்தின் நான்கு வாயில்களிலும் நாடாளும் மன்னவன் உடைகள், உணவு போன்றவற்றை மக்களின் உபயோகத்துக்காக வைத்தான்.

36. பதினைந்தாவது உபோசத தினத்தன்று மாலையில், தனது கடமைகளை நன்குணர்ந்த காவலன் உள்ளம் மகிழ்ந்தவனாக அணிகளைப் பூண்டான்.

37. சுற்றிலும் நடனப் பெண்களும், கவசம் அணிந்த படை வீரரும் சூழ்ந்துவர,



38. ஏராளமான படை வீரர்களும், பலவிதமாக அலங்கரிக்கப்பட்ட யானைகளும், குதிரைகளும், ரதங்களும் உடன் வர, நான்கு உயர்ஜாதி சிந்துப் புரவிகள் பூட்டப்பட்ட ராஜ ரதத்தில் ஏறிக் கொண்டான்.

39. அழகாக அலங்கரிக்கப்பட்டிருந்த பட்டத்து யானை கந்துலன் வெண்கொற்றக் குடைக்கீழ் இருந்த ஒரு தங்கப் பேழையை ஏந்திக் கொண்டு மெதுவாக முன்னல் நடந்து சென்றது.

40. நகரத்தின் ஆயிரத்தெட்டு அழகிய மாதர்கள் நிரம்பிய குடங்களுடன் ரதத்தைச் சூழ்ந்திருந்தனர்.

41. அதே அளவு பெண்கள் பலவிதமான மலர்கள் நிரம்பிய கூடைகளைத் தாங்கி வந்தனர். அதே அளவு பெண்கள் தீபங்களை ஏந்தி வந்தனர்.

42. விழாக் கோலத்தில் விளங்கிய ஆயிரத்தெட்டு பாலர்கள் பல வண்ணக்கொடிகளைப் பிடித்துக் கொண்டு வந்தனர்.

43. இசைக் கருவிகளின் முழக்கமும், யானைகள், குதிரைகள், ரதங்கள் போன்றவற்றின் இரைச்சலுமாக ஒன்றுசேர்ந்து பூமியே அதிர்வது போல் இருந்தது.

44. தேவர்களின் அரசனைப்போல் புகழ்பெற்ற பேரரசன் கம்பீரமாக மகா மேக வனத்துக்குச் சென்றான்.

45. தமது இடத்தில் இருந்தவாறே இசை ஒலியைக் கேட்டார் துறவி சோனுத்தரர். அரசன் புறப்பட்டதும்,

46. பூமிக்குள் புகுந்து அவர் நாகர்களின் அரண்மனையை அடைந்து வெகு குறுகிய காலத்தில் நாகராஜன் முன்பு தோன்றினர்.

47. நாகராஜன் தன் இருக்கையிலிருந்து எழுந்து அவரை வரவேற்று உபசரித்து சிம்மாதனத்தில் அமருமாறு கேட்டுக்கொண்டான். விருந்தினருக்கு செய்யும் மரியாதைகள் அனைத்தையும் செய்தபின் 'எந்த நாட்டிலிருந்து வருகிறீர்கள்?' என்று கேட்டான்.

48. அவர் சொன்னதும் வந்த காரணத்தைக் கேட்டான். அவர் முழு விவரத்தையும் கூறி பிக்குகளின் செய்தியையும் தெரிவித்தார்.

49. 'உன் வசம் இங்குள்ள தாது, மகா ஸ்தூபத்தில் பிரதிஷ்டை செய்யப்படுவதற்காகப் புத்தரால் நிர்ணயிக்கப்பட்டது. அதை என்னிடம் கொடுப்பாயாக' என்றார்.

50. இதைக் கேட்ட நாகராஜன் மனம் குழம்பிப் போய்க் கவலையுற்றான். அவன் மனம் இவ்வாறு எண்ணமிட்டது. 'என்னிடமிருந்து தாதுவை பலவந்தமாக எடுத்துக்கொண்டு போய்விடக் கூடிய சக்தி இத்துறவிக்கு இருக்கக்கூடும்.

51. 'எனவே தாதுவை வேறிடத்துக்குக் கொண்டு போய் விடவேண்டும்'—இவ்வாறு கருதிய அவன் அங்கிருந்த தன்னுடைய மருமகனிடம் சைகை மூலம் ரகசியமாகத் தனது எண்ணத்தைத் தெரிவித்தான்.

52. வாசுலதத்தன் என்னும் பெயருடைய அவன் சைகையைப் புரிந்துகொண்டு சேதியத்துக்கு சென்றான். தாது இருந்த பேழையை விழுங்கி,

53. சினேரு *மலையடிவாரத்துக்குச் சென்று வட்டமாக உடலைச் சுற்றிக்கொண்டு படுத்திருந்தான். அவனுடைய உடல் ஒரு யோஜனை சுற்றளவும் படுத்திருந்த வட்டம் முன்னூறு யோஜனை நீளமும் இருந்தது.



54. அதிசய சக்தி படைத்த அந்த நாகன் ஆயிரக் கணக்கான படங்களை எடுத்துக் கொண்டு நெருப்பையும் புகையையும் கக்கிக்கொண்டிருந்தான்.

55. தன்னைப் போலவே ஆயிரக்கணக்கான நாகங்களைச் சிருஷ்டித்து தன்னைச் சுற்றிலும் படுத்திருக்கச் செய்தான்.

56. 'இருவருக்கும் நடைபெறப்போகும் சண்டையைப் பார்ப்போம்' என்றெண்ணியவர்களாக பல நாகர்களும், தேவர்களும் அங்கு வந்து சேர்ந்தனர்.*

57. தன்னுடைய மருமகனால் தாது எடுத்துச் செல்லப்பட்டு விட்டதையறிந்த மாமன் 'என்னிடம் தாது எதுவும் கிடையாது' என்று தேரரிடம் கூறினான்.

58. ஆரம்பத்திலிருந்து தாது அவனிடம் வந்து சேர்ந்தது வரையுள்ள விவரத்தைக் கூறிவிட்டுத் தேரர் நாகராஜனிடம் 'அந்த தாதுவை கொடுப்பாயாக' என்றார்.

59. அவரை வேறு வழிகளில் திருப்திப்படுத்துவதற்காக நாகராஜன் அவரைத் தன்னுடன் கூட்டிக்கொண்டு சேதியத்துடன் இருந்த ஆலயத்துக்குச் சென்றான்.

60. 'ஓ பிக்குவே! இதோ பாருங்கள். விதவிதமான ரத்தினங்களைக் கொண்டு பல வழிகளிலும் அழகுறக் கட்டப்பட்டிருக்கும் இந்த சேதியத்தையும் ஆலயத்தையும் பாருங்கள்.

61. 'இலங்கைத் தீவின் முழுவதும் உள்ள எல்லா ரத்தினங்களும் இந்தப் படிக்கட்டுகளின்

*வாசுலதத்தனுக்கும், சோனுத்தாரருக்கும் நடக்கப் போகும் சண்டை.

சினேரு—மேரு மலை.

கீழுள்ள சந்திரகாந்தக் கல்லுக்கு இணையாகாது.

62. 'உன்னதமான ஓரிடத்திலுள்ள தாதுவைக் குறைந்த கௌரவமுள்ள வேறிடத்துக்கு எடுத்துச் செல்வது சரியல்ல' என்றான்.

63. 'நாகர்களிடையே உண்மையைப்* பற்றிய தெளிவு கிடையாது. உண்மையைப் புரிந்துகொண்டவர்கள் இருக்கும் இடத்தில் தாது இருப்பது தான் பொருத்தமாகும்.

64. 'சம்சாரத்திலிருந்து விடுதலையளிப்பதற்காகவே ததாகதர்கள் அவதரிக்கின்றனர். புத்தருடைய நோக்கமும் அதுதான். எனவே நான் தாதுவை எடுத்துச் செல்கிறேன்.

64. 'இன்றே அரசன் தாதுவைப் பிரதிஷ்டை செய்ய ஏற்பாடு செய்திருக்கிறான். தாமதம் செய்யாமல் விரைவில் தாதுவைக் கொடுப்பாயாக' என்றார் தேரர்.

65. 'வணக்கத்துக்குரியவரே! தாது உங்கள் கண்ணில் பட்டால் எடுத்துச் செல்லுங்கள்' என்று நாகராஜன் கூறினான். தேரர் இவ்வார்த்தைகளை மூன்று முறை திருப்பிச் சொல்லும்படி செய்தார்.

67. பிறகு தேரர் அந்த இடத்தில் நின்றவாறே தமது கையை நீளுமாறு செய்தார். நீண்ட அவரது கை மருமகனுடைய தொண்டைக்குள் சென்று நுழைந்தது.

68. தாதுவுடன் இருந்த பேழையைக் கையில் எடுத்துக் கொண்ட அவர் 'நாகா! நில்' என்று

*உண்மைகள்—இவை புத்த தர்மத்தின் அடிப்படை உண்மைகளான நான்கினைக் குறிக்கும். அவை வருமாறு. 1. துக்கம், 2. துக்கத்துக்கான காரணம், 3. துக்கநிவர்த்தி 4. துக்க நிவர்த்திக்கான மார்க்கம்.



இரைந்துவிட்டு பூமிக்குள் புகுந்து மறைந்து தமது இடத்தில் வந்து தோன்றினார்.

69. 'நம்மால் ஏமாற்றப்பட்டு பிக்கு இங்கிருந்து போய்விட்டார்' என்றெண்ணிய நாகராஜன் தாதுவைக் கொண்டு வருமாறு மருமகனுக்குச் சொல்லியனுப்பினான்.

70. தன் வயிற்றுக்குள் மறைத்து வைத்துக்கொண்டிருந்த பேழையைக் காணாத மருமகன் அழுது புலம்பிக்கொண்டே அரசனிடம் வந்தான்.

71. விஷயத்தையறிந்து நாகராஜனும் அழுது புலம்பினான். 'நாம் ஏமாற்றப்பட்டு விட்டோம்' என்று எல்லா நாகர்களுமாகக் கூடி அரற்றினர்.

72. பிக்குவின் வெற்றியில் மகிழ்வடைந்த தேவர்கள் ஒன்றாகக் கூடி தாதுவைப் பூஜித்தவாறே தேரருடன் வந்து சேர்ந்தனர்.

73. நாகர்கள் பிக்குகளின் சங்கத்துக்கு வந்து தங்களிடமிருந்து தாது எடுத்துச் செலலப்பட்டு விட்டதைக் கூறி வருத்தந்தாளாமல் அழுதனர்.

74. பிக்குகள் அவர்களிடம் இரக்கம் கொண்டு சில தாதுக்களை அவர்களிடம் கொடுத்தனர். இதனால் திருப்தியும் மகிழ்வும் அடைந்து நாகர்கள் சென்றனர். ஏராளமான ரத்தினங்களைக் காணிக்கை செலுத்தினர்.

75. ரத்தினங்களாலான ஓர் ஆசனத்துடனும் தங்கப் பேழையுடனும் சக்கன், தேவர்களுடன் அங்கு வந்திருந்தான்.

76. தேரர் பூமியிலிருந்து வெளிப்பட்ட இடத்தில் விசுவகர்மாவினால் அமைக்கப்பட்ட மணி மண்டபத்தில் ஆசனத்தை அமைத்தான்.

77. தேரருடைய கையிலிருந்து தாது இருந்த பேலாவை வாங்கிப் பொன் பேழையில் வைத்ததும் அதை ஆசனத்தின் மீது வைத்தான்.

78. பிரம்மா வெண் கொற்றக் குடை பிடித்தார். சம்தூசிதர் சாமரம் வீசினார். சுயாமா ரத்தினங்கள் பதித்த விசிறியை ஏந்தி நின்றார். சக்கன் புனித நீருடன் இருந்த சங்கினைத் தாங்கி இருந்தான்.

79. லோகபாலர்கள் நால்வரும் வாள் ஏந்தி நின்றனர். அற்புத சக்தி படைத்த முப்பத்தி மூன்று தேவர்களும் மலர்க் கூடைகளுடன் நின்றிருந்தனர்.

80. பாரிஜாத புஷ்பங்களைக் காணிக்கை செலுத்திவிட்டு தேவ மாதர்கள் முப்பத்திரண்டு பேர்களும் தீபங்களைத் தாங்கி நின்றனர்.

81. கொடியவர்களான யக்ஷர்களால் இடைஞ்சல் நேராமல் இருக்க இருபத்தெட்டு யக்ஷர் தலைவர்களும் காவல் காத்து நின்றனர்.

82. பஞ்சசீகன் யாழை மீட்டி இசைத்துக்கொண்டிருந்தார். தும்புரு மேடை அமைத்து இசைக்கேற்ப பாடிக்கொண்டிருந்தார்.

83. பல தேவர்கள் இனிய குரலில் பாடிக்கொண்டிருந்தனர். நாகராஜன் மகா காலன் புகழ் பாடி நின்றான்.

84. தெய்வீக இசைக் கருவிகள் ஒலித்தன. தெய்வீக கானம் கேட்டது. தேவர்கள் நறுமண மலர் மாரி பெய்யச் செய்தனர்.

85. மாறன் நெருங்காமல் இருக்க இந்திரகுப்த தேரர் பிரபஞ்சம் அளவு பெரியதான செம்புக் குடையொன்றைச் சிருஷ்டித்தார்.



86. தாது இருந்தவிடத்துக்குக் கிழக்குப் பகுதியில் இங்குமங்குமாக ஐந்து இடங்களிலும் பிக்குகள் கோஷ்டி கானம் பாடினர்.

87. மாமன்னன் துஷ்டகாமனி மனம் மகிழ்ந்தவனாக இந்த இடத்துக்குச் சென்றான். தாதுவுடன் இருந்த பேழையைத் தன் தலைமீது சுமந்து வந்த பேழையில் வைத்தான்.

88. பின்னர் அதனை ஆசனத்தில் இட்டு கூப்பிய கரங்களுடன் நின்றவாறே பூஜை செய்தான்.

89. தெய்விகக் குடையையும், மலர்களையும் மற்றவைகளையும் தெய்விக கானத்தையும் கண்டும் கேட்டும் மன்னன் மகிழ்வடைந்தான்.

90. பிரம்மதேவர்களை அவன் காண முடியாதபோதிலும், அந்த அதிசயத்தைக்கண்டு வியந்தவனாக தாதுவை வணங்கினான். அதற்கு வெண் கொற்றக் குடையைக் காணிக்கை செலுத்தி இலங்கையின் அரசுரிமையை வழங்கினான்.

91. 'உலக நாயகருக்கு, சுவர்க்கக்குடை, பூலோகக் குடை, விமோசனக் குடை ஆகிய முக்குடைகளையும் தாங்கி நிற்கும் தயாபரருக்கு,

92. 'என்னுடைய அரச பதவியை மும்முறை அபிஷேகம் செய்கிறேன்'. இவ்வாறு கூறி மகிழும் இதயத்துடன் தாதுவுக்கு இலங்கையின் அரசுரிமையை மூன்று முறை அர்ப்பணித்தான்.

93. இவ்வாறு, தேவர்களும், மக்களும் கூடி நின்று பலவிதமாக வழிபட அரசன், பேழையில் இருந்த தாதுவை அப்படியே தூக்கித் தலையில் வைத்துக்கொண்டான்.

94. பிக்குகள் சூழ்ந்து நிற்க, ஸ்தூபத்தை இடப்புறமாகச் சுற்றி மூன்று முறை வந்ததும், கிழக்குப்புறமாக மேலேறி தாது கர்ப்பத்தில் இறக்கி வைத்தான்.

95. மகத்தான அந்த ஸ்தூபத்தைச் சுற்றிக் கூப்பிய கரங்களுடன் தொண்ணூற்ருறு கோடி அரஹந்தர்கள் நின்றிருந்தனர்.

96. மனதில் மகிழ்வு நிரம்பிய மன்னன் தாது கர்ப்பத்தின்மீது ஏறியதும் 'விலை உயர்ந்ததும், அழகியதுமான மஞ்சத்தில் வைப்போம்' என்றெண்ணினன்.

97. தாது இருந்த பேழை அவன் தலையின் மேலிருந்து வானில் ஏழு தாள உயரத்துக்கு எழும்பி மிதந்தவாறு நின்றது.

98. பின்பு பேழையின் மூடி தானுகத் திறந்து கொள்ள உள்ளேயிருந்த தாது மட்டும் வெளிப்பட்டு சகல லட்சணங்களும் கூடிய புத்தர் உருவில் ஒளிவிட்டுப் பிரகாசித்தது.

99. புத்தருடைய வாழ்நாளில் கந்தம்ப விருட்சத்தின்கீழ் நிகழ்ந்த இரட்டைத் தோற்ற அற்புதம் அப்போதும் நிகழ்ந்தது.

100. உள்ளத்தில் நம்பிக்கையுடனும், களிப்புடனும் இந்தக் காட்சியைக் கண்ட பனிரெண்டு கோடி தேவர்களும் மானிடர்களும் அரஹந்த நிலையினை அடைந்தனர்.

101. விமோசனம் பெறுவதற்கான மூன்று மனப் பக்குவ நிலையை அடைந்தவர்களுடைய எண்ணிக்கைக்குக் கணக்கே இல்லை. புத்தருடைய உருவத்தை விடுத்து தாது மீண்டும் பேழையில் சென்றடைந்தது.

102. பிறகு வானில் எழுந்து நின்ற பேழை கீழே இறங்கி வந்து மீண்டும் மன்னனுடைய சென்னி மீதமர்ந்தது. பிறகு இந்திரகுப்த தேரருடனும், நடன மாதர்களுடனும் அரசன் தாது கர்ப்பத்தை வலம் வந்தான்.



103. பின்னர் புகழ் மிக்க பேரரசன் அப்பேழையை ரத்தின மஞ்சத்தில் வைத்தான்.

104. உள்ளத்தில் உவகை பொங்க நறுமணங் கமழும் நன்னீரில் கைகளைக் கழுவிக்கொண்ட காவலன் பேழையைத் திறந்தான்.

105. மக்களின் நலத்தையே நாடிய அம் மாமன்னன் தாதுவைக் கையிலெடுத்துக்கொண்டு இவ்வாறு மனதில் எண்ணினன்:

106. 'யாராலும் எவ்வித இடையூறுமின்றி இந்த தாது இங்கு இருக்குமானல், அல்லலுறும் மக்களுக்கு அபயமளிப்பதாக இருக்குமானல்,

107. 'குருநாதர் மரணப் படுக்கையில் கிடந்த நிலையில் இந்த முறையாக அமைக்கப்பட்ட விலையுயர்ந்த மஞ்சத்தில் இருப்பதாக!'

108. இவ்வாறு எண்ணி அவன் தாதுவை அற்புதமான அம் மஞ்சத்தில் வைத்தான். அவன் விரும்பிய உருவிலேயே அது காட்சியளித்தது.

109. ஆடி மாதம் சுக்கில பட்சம் பதினைந்தாவது உபோசத தினத்தன்று உத்தர நட்சத்திர நல்லோரையில் தாது இவ்வாறு பிரதிஷ்டை செய்யப்பட்டது.

110. தாது பிரதிஷ்டை செய்யப்பட்டபோது மாநிலம் அதிர்ந்தது. பலவிதமான அற்புதங்கள் அப்போது நிகழ்ந்தன.

111. வெண்கொற்றக் குடையொன்றைத் தாதுவுக்கு காணிக்கையாக அளித்தும், இலங்கையின் ஆதிக்க உரிமையை ஏழு தினங்களுக்கு அளித்தும் உள்ளத்தில் குன்ருத நம்பிக்கையுடன் அரசன் வழிபட்டான்.

112. தன் மேனியில் குடியிருந்த மணி அணிகளையெல்லாம் அவன் தாது கர்ப்பத்தில் காணிக்கை

செலுத்தினன். அதேபோல் நடன மாதர்களும், மந்திரிகளும் மற்றுமுள்ள பரிவாரத்தினரும் தேவதைகளும் செய்தனர்.

113. பிக்குகளுக்கு உடைகள், சர்க்கரை, வெண்ணெய் போன்றவற்றை வினியோகித்ததும், அரசன் அவர்களை இரவு முழுவதும் புனித புத்தருடைய புகழ் பாடச் செய்தான்.

114. விடிந்ததும் மக்களுடைய நலனை மனதிற் கொண்டு அம்மன்னன் 'எல்லா மக்களும் இவ்வார முழுவதும் தாதுவை வழிபட வேண்டும்' என்று பறைசாற்றச் செய்தான்.

115. மகத்தான சக்திகள் படைத்த மகா தேரர் இந்திரகுப்தர் இவ்வாறு உத்தரவிட்டார்:

116. 'தாதுவை வழிபட விரும்பும் இலங்கைத் தீவிலுள்ள மக்கள் ஒரு கணத்தில் இங்கு வந்து சேர்வார்களாக! வந்து வழிபட்டதும் அவரவர் வீடுகளையடைவார்களாக!' அவரது உத்தரவுப் படியே நடந்தது.

117. பெரும் புகழ்படைத்த அப்பேரரசன் இடைவிடாது அவ்வாரம் முழுவதும் பிக்குகளுக்கு பிட்சை அளிக்கக் கட்டளையிட்டான்.

118. 'தாது கர்ப்பத்துக்குச் செய்யவேண்டியதையெல்லாம் நான் செய்து முடித்துவிட்டேன். இப்போது தாது கர்ப்பத்தை மூடும் பொறுப்பினைப் பிக்குகள் ஏற்றுக்கொள்வார்களாக!' என்று பிரகடனப்படுத்தினன்.

119. பிக்குகள் இரண்டு சமணர்களிடம் இப்பொறுப்பை ஒப்படைத்தனர். ரத்தினக் கற்களால் ஆன தாதுப் பேழையை மூடிவிட்டு அவர்கள் இவ்வாறு மனதில் எண்ணினர்:



120. 'இங்கேயுள்ள மலர்கள் என்றும் வாடாமல் இருக்குமாக! வாசம் மங்காமல் இருக்குமாக! தீபங்கள் அணைந்து போகாமல் இருக்குமாக! எதுவுமே அழிந்து போகாமல் இருப்பதாக!

121. 'ஆறு ரத்தினக் கற்களும் என்றென்றும் சேர்ந்து இருக்குமாக!' ஆசவங்களை வென்ற தேரர்கள் கட்டளைப்படி இவை அப்படியே நடந்தது.

122. 'மக்கள் முடிந்த அளவு தாதுக்களைப் பிரதிஷ்டை செய்யலாம்' என்று மக்கள் நலத்தை மனதில்கொண்ட மன்னன் அறிவித்தான்.

123. மக்கள் தங்களால் முடிந்த அளவு ஆயிரக் கணக்கான தாதுக்களைப் பிரதிஷ்டை செய்தனர்.

124. இவையனைத்தும் தன்னுள் மூடிஅடக்கிய ஸ்தூபத்தை மன்னன் கட்டி முடித்தான். மேலும் சேதியத்தின் மீது சதுரமான கட்டிடத்தையும் கட்டி முடித்தான்.*

125. இவ்வாறு புத்தர்கள் புரிந்துகொள்ள முடியாதவர்கள், புத்தர்களுடைய தன்மை புரிந்து கொள்ளமுடியாதது. புரிந்துகொள்ள முடியாததில் நம்பிக்கை கொண்டவர்கள் பெறும் பரிசும் புரிந்துகொள்ள முடியாததாகும்.

*பௌத்த ஆலயங்கள் தகபா எனப் பெயரிட்டு அழைக்கப்படுகின்றன. தாது கர்ப்பம் என்பதின் சிதைவே தகபா என்பது. இதன் அமைப்பு மூன்று பிரதான அம்சங்களைக் கொண்டதாகும். மேலே அரைக் கோள வடிவில் உள்ள அமைப்பு கோபுரமாகும். இது உருளையான அடிப் பீடத்தின் மீது உயர்த்துக் கட்டப்பட்டிருக்கும். இதன் மேற்பகுதியில் தாதுப் பேழை இருக்கும். ஆலயத்தின் இரண்டாவது பகுதி சதுரமான மேடை போல் அமைந்திருக்கும். இதற்கு 'டீ' என்று பெயர். சதுரசகாய என்றும் சொல்வார்கள். இது கூருருளை வடிவில் இருக்கும். குடை போன்ற அமைப்புக்குப் பீடமாக இருக்கும்.

126. இவ்வாருக பக்தியுள்ளவர்கள் பேரருளைப் பெறுவதற்காகப் பெருமை தரும் நற்காரியங்களைச் செய்கிருர்கள். அவர்கள் தூய இதயத்துடன் மற்றவர்களையும் பெருமை தரும் நற்காரியங்களைச் செய்யத் தூண்டுகிருர்கள். பல விதமானவர்களை வெற்றி கொள்கிருர்கள்.

**மகாவம்சத்தில் 31-வது அத்தியாயமான தாதுப் பிரதிஷ்டை முற்றும்.**

## முப்பத்திரெண்டாவது அத்தியாயம்

# தூசித சுவர்க்கத்தை அடைதல்

1. சேதியத்தின் மீது காறைப் பூச்சு வேலைகள் முடிவடையு முன்பே அரசன் நோய்வாய்ப்பட்டான்.

2. தீக வாபியிலிருந்து தன்னுடைய தம்பி தீசனை வரவழைத்து அவனிடம் 'பூர்த்தி பெருமல் இருக்கும் ஸ்தூப வேலைகளைச் செய்து முடிப்பாயாக!' என்று சொன்னன்.

3. தீசன் சக்தியற்றவனுக இருந்ததால் இவ் வேலையைத் திறம்படச் செய்யவில்லை. அவன் வெள்ளைத் துணியைக் கொண்டு சேதியத்தை மூடச் செய்தான்.

4. பிறகு ஓவியர்களைக் கொண்டு வேதிகைகளையும் வண்ணப் பூ வரிசைகளையும் வரையச் செய்தான்.

5. மூங்கில் பத்தைகளினுல் குடையைச் செய்து வேதிகையின் மேற்புறம் சூரியன், சந்திரன் உருவங்களை வரையச் செய்தான். பல்வேறு செடிகளும் அங்கு இடம் பெற்றன.

6. இவ்வாறு தந்திரமாக அரக்கையும், காவியையும் கொண்டு ஸ்தூபத்துக்கு வர்ணம் பூசச் செய்ததும் அரசனிடம் வந்து 'ஸ்தூபத்தில் செய்யவேண்டிய வேலைகள் முடிந்துவிட்டன' என்று கூறினன்.

7. பல்லக்கிலே படுத்தவாறே மன்னன் அந்த இடத்துக்குச் சென்ருன். பல்லக்கில் இருந்த

படியே ஸ்தூபத்தைச் சுற்றி வந்த அவன் தெள் புற வாயிலில் அதற்கு வணக்கம் செய்தான்.

8. பின்பு வலப்புறம் திரும்பிப் படுத்துக்கொண்டு மகத்தான அம் மகா ஸ்தூபத்தைக் கண்டு களித்தான்.

9. பிறகு இடப்புறம் திரும்பிப் படுத்து லோஹ பாஸாதாவைத் தரிசித்தான். பிக்குகள் அவனைச் சூழ்ந்து நின்றுகொண்டிருந்தனர். அவனுடைய உள்ளம் உவகையினால் நிறைந்திருந்தது.

10. அரசனுடைய உடல்நிலை பற்றி அறிந்துபோக அங்குமிங்குமிருந்து வந்து கூடியிருந்த பிக்குகள் அங்கு தொண்ணூற்றி ஆறு கோடிப் பேர் இருந்தனர்.

11. பிக்குகள் கோஷ்டி கோஷ்டியாக கானம் பாடினர். பிக்குகளிடையே தேர புத்திர அபயனைக் காணாத அரசன் மனதுக்குள் இவ்வாறு எண்ணினான்:

12. 'என்னுடன் இருபத்தெட்டு பெரும் போர்களில் உடனிருந்து போரிட்ட மாவீரர், எப்போதும் தோல்வியடையாதவர்—

13, 'மரணப் படுக்கையில் போராடிக் கொண்டிருக்கும் எனக்கு உதவ இப்போது வரவில்லையே. என்னுடைய தோல்வியை முன் கூட்டியே அறிந்துகொண்டு விட்டார்போலும்.'

14. பஞ்சாலி பர்வதத்தில் கரிந்த நதி உற்பத்தியாகும் இடத்தில் வசித்துவந்த தேரர் மன்னன் மனதில் இருப்பதை உணர்ந்தார்.

15. ஆசவங்களைக் கடந்த ஐநூறு பிக்குகளுடன் தமது அதிசய சக்தியால் ஆகாய மார்க்கமாக வந்து அரசனைச் சூழ்ந்திருந்தவர்களின் மத்தியில் நின்றார்.



16. அவரைக் கண்டதும் களிப்படைந்த காவலன் தன் முன்னே வந்து அமரச் செய்து 'முன்பு பத்து மாவீரர்களின் துணையுடன் போர் நடத்தினேன்.

17. 'இப்போது மரணத்துடன் நடத்தும் போரில் தனியே ஈடுபட்டிருக்கிறேன். மரணமென்ற எதிரியை என்னால் வெல்லமுடியாது' என்றான்.

18. 'அரசே! அஞ்ச வேண்டாம். பாவம் என்ற எதிரியை வெல்லாவிட்டால் மரணம் என்ற எதிரியை வெல்ல முடியாது.

19. 'உலகில் தோன்றிய யாவும் அழியத்தான் வேண்டும். இருப்பவை யாவும் அழியக்கூடியவை என்று தான் குருநாதர் போதித்திருக்கிறார்.

20. 'வெட்கமோ பயமோ இன்றி மரணம் புத்தர்களையும் வெற்றி கொண்டிருக்கிறது. எனவே எண்ணிப் பார். இருப்பவை யாவும் அழியக்கூடியவை; துயரம் நிரம்பியவை; அசத்தியமானவை.

21. 'முன் பிறவியிலே உண்மை மார்க்கத்திடம் நீ கொண்டிருந்த பற்று மகத்தானதாகும். சொர்க்க பதவி உன் எதிரில் நின்றது.

22. 'ஆயினும் அதை வேண்டாமென்று ஒதுக்கி விட்டு இவ்வுலகில் மீண்டும் பிறந்தாய். பெருமைக்குரிய பலவிதமான பணிகளைப் புரிந்தாய். மேலும் நாடு முழுவதும் நின் ஆட்சியை நிலை நாட்டியதன் மூலம் நமது மார்க்கத்துக்குப் பெருமை ஏற்பட வழி செய்தாய்.

23. 'பெரும் புகழ்பெற்ற அரசனே! இன்று வரை நீ செய்துள்ள பெருமைக்குரிய காரியங்களை எண்ணிப் பார். பின்பு எல்லாமே தானாக சரியாகி விடும்' என்று தேரர் பதிலளித்தார்.

24. தேரர் இவ்வாறு சொன்னதைக் கேட்டதும் அரசன் உள்ளம் மகிழ்ந்து 'தனியே நான் நடத்தும் இந்தப் போரிலும் துணையாக இருந்துவிட்டீர்கள்' என்றான்.

25. பிறகு புகழ் தரும் செயல்களைக் குறிக்கும் புத்தகத்தைக் கொண்டுவரக் கட்டளையிட்டு அதை உரக்கப் படிக்குமாறு கூறினான். ஒருவன் அதைப் படித்தான்.

26. 'மாமன்னனால் தொண்ணூற்றி ஒன்பது விஹாரங்கள் கட்டப்பட்டன. பத்தொன்பது கோடி செலவில் மாரிசவதி விஹாரம் கட்டப்பட்டது.

27. 'முப்பது கோடி செலவில் மாபெரும் லோக பாஸாதா கட்டப்பட்டது. மகா ஸ்தூபத்துக்காகச் செய்யப்பட்ட விலையுயர்ந்த அரிய பொருள்களின் மதிப்பு இருபது கோடியாகும்.

28. 'மகா ஸ்தூபத்துக்கு அரசன் செய்த மற்ற பொருள்களின் மதிப்பு ஆயிரம் கோடியாகும்.

29. 'கோட்டா மலைப் பிரதேசத்தில் அக்க காயிக பஞ்சம் எனப்பட்ட கோரப் பஞ்சம் ஏற்பட்ட போது அரசனால் இரண்டு அரிய குழைகள் அளிக்கப்பட்டன.

30. 'இதைக்கொண்டு ஆசவங்களை வென்ற ஐந்து மகா தேரர்களுக்குக் கஞ்சி வாங்கி அளிக்கப்பட்டது.

31. 'சூளங்கணியப் போரில் தோல்வி அடைந்து பின் வாங்கியபோது உணவு நேரத்தை அறிவித்து,

32. 'ஆகாய மார்க்கமாக வந்து சேர்ந்த ஆசவங்களைக் கடந்த தீச தேரருக்கு தன் பசியைப் பற்றிக் கவலைப்படாமல் உணவளித்தான்.'



33. 'மாரிஸவதி விஹாரத்தின் பிரதிஷ்டை விழாவின்போதும், லோக பாஸாதா அபிஷேகத்தின்போதும் மகா ஸ்தூபத்தின் வேலைகள் தொடங்கிய வாரத்தில் தாது பிரதிஷ்டை செய்யப்பட்டபோதும்,

34. 'நாலா திசைகளிலுமிருந்து வந்த ஏராளமான தேரர்களுக்கும், பிக்குகளுக்கும் தாராளமாக பிட்சை வழங்க என்னால் ஏற்பாடு செய்யப்பட்டது.

35. 'இருபத்தி நான்கு விசாகத் திருவிழாக்களை நடத்தினேன். தீவிலுள்ள பிக்குகளுக்கு மூன்று தடவை சீவர உடைகளை அளித்தேன்.

36. 'ஐந்து முறை, ஒவ்வொரு முறையும் ஏழு தினங்களுக்கு புத்த தர்மத்துக்கு இத் தீவின் அரசனுக்கு உள்ள உரிமையை அளித்தேன்.

37. 'பனிரெண்டு இடங்களில் வெள்ளைத் திரியிட்ட எண்ணெய் விளக்குகள் புத்த பெருமானின் சந்நிதியில் நிரந்தரமாக எரியச் செய்தேன்.

38. 'பதினெட்டு இடங்களில், வைத்தியர்கள் கட்டளைப்படி நோயாளிகளுக்குத் தேவையான உணவுகளையும், மருந்துகளையும் அளிக்கச் செய்தேன்.

39. 'நாற்பத்தி நான்கு இடங்களில் தேன் கலந்த அன்னத்தை நிரந்தரமாக வழங்க ஏற்பாடு செய்தேன். அதே அளவு இடங்களில் எண்ணெய் கலந்த அன்னம் வழங்க ஏற்பாடு செய்தேன்.

40. 'அவ்வளவு இடங்களில் வெண்ணெயில் தயார் செய்த ஜாலபூவாவை அன்னத்துடன் வழங்க செய்தேன்.

41. 'உபோசத விழாக்களுக்கு தீவிலுள்ள எட்டு விஹாரங்களில் மாதத்தில் ஒருநாள் விளக்கு களுக்கான எண்ணெய் வினியோகிக்கச் செய்தேன்.

42. 'பொருளைத் தானமாக வழங்குவதைவிட போதனைகளை வழங்குவது பெருமைக்குரியது என்பதைக் கேட்டு லோக பாஸாதாவில் பிக்கு கள் மத்தியில் போதகருடைய ஆசனத்தில் அமர்ந்து மங்கள சுத்தத்தை உபதேசம் செய் வேன் என்று சொன்னேன்.

43. 'ஆனல் அந்த ஆசனத்தில் அமர்ந்துகொண்ட தும் பிக்குகளிடம் மரியாதையின் காரணமாக என்னல் உபதேசம் செய்ய இயலவில்லை.

44. 'அப்போது முதல் இலங்கையிலுள்ள விஹாரங் களில் எல்லா இடங்களிலும் மார்க்கத்தைப் போதிக்க ஏற்பாடு செய்தேன். போதகர் களுக்குப் பரிசுகள் வழங்கினேன்.

45. 'தர்மத்தைப் போதித்த ஒவ்வொருவருக்கும் ஒரு நாழியளவு வெண்ணெயும், வெல்லப் பாகும், சர்க்கரையும் தருமாறு கட்டளை யிட்டேன்.

ஜாலபூவா—என்பது என்னவென்று தெரியவில்லை. ஒரு வகை தின்பண்டமாக இருக்கவேண்டும்.



46. 'மேலும் அவர்களுக்கு கைநிறையகாடியும்* ஒரு ஜோடி உடைகளும் வழங்கினேன். ஆயினும் நான் அரசாண்டபோது வழங்கிய இவை எதுவும் என் உள்ளத்தில் களிப்பு ஏற்படுத்த வில்லை.

47. 'நான் கஷ்டத்தில் இருந்தபோது, என்னுடைய உயிரையும் பொருட்படுத்தாது கொடுத்த இரு கொடைகள்தான் என் இதயத்தை மகிழ் விக்கிறது'.

48. அபய தேரர் இதைக்கேட்டதும் மன்னனுடைய மனதில் களிப்பேற்படுத்துவதற்காக அந்த இரண்டு கொடைகள் பற்றிய விவரத்தை எடுத்துரைத்தார்.

49. 'அந்த ஐந்து தேரர்களில் ஒருவரான|| மலய மகாதேவ தேரர் புளித்த கஞ்சியைப் பெற்றுக் கொண்டு அதை சுமணகூட பர்வதத்திலுள்ள தொள்ளாயிரம் பிக்குகளுக்கு வினியோகித்து,

50. 'அதில் ஒரு பகுதியைத் தாமும் உண்டார். பூமி யையே அதிரச் செய்யக்கூடிய சக்தி படைத்த தர்மகுப்த தேரர்,

51. 'கல்யாணிக விஹாரத்திலிருந்த ஐநூறு பிக்கு களுடன் அதைப் பகிர்ந்துகொண்டு தாமும் உண்டார்.

52. 'தலங்காவில் வசித்துவந்த தர்மதின தேரர், பியாங்கு தீபத்திலுள்ள பனிரெண்டாயிரம் பிக்குகளுக்குக் கொடுத்துத் தாமும் உண்டார்.

53. 'மங்கனைவில் வசித்த அதிசய சக்தி படைத்தவ ரான குத்த தீச தேரர், கேலாஸ விஹாரத்தில் இருந்த அறுபதாயிரம் பிக்குகளுக்குக் கொடுத் துத் தாமும் உண்டார்.

*யஸ்திமதுகா. ||இதே அத்தியாயம் 30-வது பிரிவில் சொல்லப்பட்ட தேரர்கள்.

54. 'மகா வியாக்ய தேரர் உக்க நகர விஹாரத்தி லிருந்த எழுநூறு பிக்குகளுக்குக் கொடுத்து தாமும் உண்டார்.

55. 'தமது பாத்திரத்தில் உணவைப் பெற்றுக் கொண்ட தேரர் பியாங்குதீபத்திலுள்ள பனி ரெண்டாயிரம் பிக்குகளுக்கு வழங்கி விட்டுப் பின் தாமும் உண்டார்.'

56. இதுபோன்ற வார்த்தைகளால் அபய தேரர் மன்னனுடைய உள்ளத்தில் உவகை யூட்டி ஞர். மனமகிழ்ந்த மன்னன் இவ்வாறு சொன்ஞன் :

57, 'பிக்குகளின் போஷகஞக இருபத்திநான்கு வருட காலமாக நான் இருந்து வந்திருக் கிறேன். என்னுடைய உடலும் பிக்குகளுக்கு போஷகஞக இருப்பதாக.

58. 'மகாஸ்தூபத்தைப் பார்க்கக்கூடிய இடத்தில், பிக்குகளின் சடங்குகளுக்காக ஒதுக்கப்பட் டுள்ள மாலகத்தில், பிக்குகளின் சேவகஞன என்னுடைய உடலை எரிப்பீர்களாக.'

59. தன்னுடைய தம்பியிடம் அரசன் இவ்வாறு சொன்ஞன் : 'முடிவுபெருமல் நிற்கும் மகா ஸ்தூபத்தின் வேலைகள் அனைத்தையும் கவன முடன் செய்து முடிப்பாயாக.

60. 'காலையிலும் மாலையிலும் மகா ஸ்தூபத்துக்குச் சென்று மலர்களை அர்ச்சிப்பாயாக. பகலில் மூன்று கால பூஜைக்கு ஏற்பாடு செய்வாயாக.

61. 'அருள்பெற்ற ஞானியின் அறவழியைப் பெரு மைப்படுத்த என்ஞல் தொடங்கப்பட்ட எல்லா சடங்குகளையும் எவ்விதக் குறையும் வைக்கா மல் இனிதே நடத்தி வருவாயாக.



62. 'அன்புக்குரியவனே! பிக்குகளுக்குச் செய்ய வேண்டிய கடமைகளில் எப்போதும் தளர்ச்சி அடையாதே' இவ்வாறு தம்பியிடம் சொன் னதும் அரசன் மௌனமாஞன்.

63. இச்சமயம் பிக்குகள் கோஷ்டி கானம் பாடத் தொடங்கினர். தேவதைகள் அங்கு ஆறு தேவர்களுடன் ஆறு ரதங்களைக்கொண்டு வந்தனர்.

64. ரதங்களில் நின்றவாறே தேவர்கள் 'அரசே! இன்பமிகும் எங்கள் எழில் உலகுக்கு வருவீர் களாக!' என்றழைத்தனர்.

65. அரசன் இவ் வார்த்தைகளைக் கேட்டதும், கையிஞல் ஜாடை காட்டிப் பொறுக்குமாறு சொன்ஞன். 'தர்மத்தை நான் கேட்கும் வரை சற்றுக் காத்திருங்கள்' என்ருன்.

66. கோஷ்டி கானத்தை நிறுத்த வேண்டுமென அரசன் விரும்புவதாக எண்ணிய பிக்குகள் தமது கானத்தை நிறுத்தினர். அரசன் இதற் குக் காரணம் என்னவென்று கேட்டான்.

67. 'நிறுத்தச் சொல்லி ஜாடை காட்டியதால் நிறுத்திஞேம்' என்று பிக்குகள் பதிலளித் தனர். 'வணக்கத்துக்குரியவர்களே! உங்களைச் சொல்லவில்லை' என்ற அரசன் நடந்ததைக் கூறிஞன்.

68. 'மரண பயத்திஞல் பீடிக்கப்பட்டு பேச்சில் தடுமாறுகிருன்' என்று சிலர் கருதினர்.

69. தங்கள் சந்தேகத்தைப் போக்கிக் கொள்வ தற்காக அபய தேரர் அரசனிடம் இவ்வாறு கூறிஞர். 'இங்கு ரதங்கள் வந்திருப்பதாகக் கூறுவதை நாங்கள் அறியும்படி செய்வது எப்படி?'

70. அறிவாளியான அரசன் மலர்மாலைகளை வானில் வீசி எறியச் செய்தான். அவை தேர்களின் முனைகளில் அகப்பட்டுக்கொண்டு அந்தரத்தில் தொங்குவதுபோலக் காட்சி தந்தன.

71. காற்றில் மாலைகள் மிதப்பதைக் கண்ட அவர்கள் சந்தேகம் நீங்கியவர்களாக ஆயினர்.

72. 'வணக்கத்துக் குரியவரே! தேவலோகங்களில் மிகவும் அழகானது எது?' என்று அரசன் தேரரைக் கேட்டான். 'தூசிதர் உலகம்தான்' என்று தேரர் பதிலளித்தார்.

73. 'அரசே! அதுதான் மிகவும் அழகானது. சாதுக்கள் அப்படித்தான் கருதுகிறார்கள். புத்தராவதற்கு உரிய சமயத்தை எதிர்பார்த்துக்கொண்டு கருணையுருவான போதிசத்துவ மைத்ரேயர்* தூசித லோகத்தில்தான் வசித்து வருகிறார்.'

74. மிகவும் புத்திசாலியான மன்னன் தேரருடைய இவ் வார்த்தைகளைக் கேட்டதும் மகா ஸ்தூபத்தை ஒருமுறை பார்த்துவிட்டுத் தன் கண்களை மூடினான்.

75. அவன் உயிர் பிரிந்த அதே கணத்தில் மறு பிறவி யெடுத்துத் தேவர் உருவில் தூசித லோகத்திலிருந்து வந்த ரதத்தில் நின்று கொண்டிருப்பதைக் காண முடிந்தது.

76. தான் செய்த பெருமைக்குரிய காரியங்களின் பயனைப் பெற்ற பரிசை மற்றவர் அறியும்படி செய்ய அவன் ரதத்தில் ஒளி திகழச் சென்றான்.

77. மக்கள் அவன் மதிப்பைக் காணும் விதத்தில் ரதத்தில் இருந்தவாறே மகா ஸ்தூபத்தை

*மைத்ரேயர் வருங்கால புத்தராகக் கருதப்படுபவர். கௌதம புத்தருக்கு வாரிசு இவர்.



இடதுபுறமாக மூன்று முறை சுற்றி வந்தான். பின்பு ஸ்தூபத்துக்கும் பிக்குகளுக்கும் வணக்கம் செய்ததும் தூசித சொர்க்கத்தை அடைந்தான்.

78. அங்கு வந்திருந்த நடன மாதர்கள் தமது தலைகளில் அணியும் ஆபரணங்களைக் கழட்டிவைத்த இடத்தில் பின்பு மகுட முற்ற சாலா என்ற மண்டபம் கட்டப்பட்டது.

79. அரசனின் சடலம் சிதையில் கிடந்த இடத்தில் மக்கள் விம்மியழுதவாறே கூடி நின்று இருந்த இடத்தில் ரவிவதி சாலா கட்டப்பட்டது.

80. அரசனுடைய உடல் எரிக்கப்பட்ட இடம் ராஜமாலகம் என்று பெயர் பெற்றுத் திகழ்கிறது.

81. அரசன் என்ற பெயருக்குத் தகுதி உடையவனை மாமன்னன் துஷ்டகாமணி, மைத்ரேயருடைய முதல் சீடராக இருப்பார்.

82. அரசனுடைய தந்தை *அவருடைய தந்தையாகவும், தாய் அவருடைய தாயாகவும் இருப்பர். தம்பி சத்தா தீசன் அவருடைய இரண்டாவது சீடனாக இருப்பான்.

83. அரசனுடைய குமாரனை சாலி ராஜகுமாரன், மைத்ரேயருடைய மகனாக இருப்பான்.

84. நல்வாழ்வு நடத்திப் பெருமைக்குரிய செயல்களைப் புரிபவர்கள் தீய காரியங்களை விடுத்து தமது சொந்த வீட்டில் நுழைபவர்களைப் போல சொர்க்கத்தை அடைவார்கள். அதனால் அறிவுள்ளவர்கள் பெருமைக்குரிய காரியங்களைச் செய்வதில் பெரு மகிழ்ச்சி கொள்வார்களாக!

**மகா வம்சத்தில் 32-வது அத்தியாயமான தூசித சொர்க்கத்தை அடைதல் முற்றும்.**

*மைத்ரேயருடைய

## முப்பத்தி மூன்றுவது அத்தியாயம்

# பத்து அரசர்கள்

1. துஷ்டகாமனி மன்னனுடைய ஆட்சியில் நாட்டிலுள்ள மக்கள் மகிழ்வுடன் வாழ்ந்தார்கள். சாலி ராஜகுமாரன் அவனுடைய புகழ்பெற்ற புதல்வனுவான்.

2. பெரும்பேறு பெற்ற அவன் பெருமைக்குரிய காரியங்களைச் செய்வதில் மகிழ்வு கொண்டான். பேரழகியான ஒரு சண்டாளப் பெண்ணை அவன் பெரிதும் நேசித்தான்.

3. அசோக மாலாதேவி என்ற அந்தப் பெண் முன் பிறவியொன்றில் அவனுக்கு மனைவியாக இருந்தவள். அவளிடம் கொண்ட காதலின் காரணமாக அரச பதவியைப் பற்றிக்கூட அவன் கவலைப்படவில்லை.

4. எனவே துஷ்டகாமனியுடைய சகோதரன் சத்தா தீசன் காமனியின் மறைவுக்குப் பின்னர் பட்டாபிஷேகம் செய்துகொண்டு பதினெட்டு வருட காலம் ஆண்டான்.

5. மத நம்பிக்கைக்குப் பெயர்போன அவன் மகாஸ்தூபத்தின் எஞ்சிநின்ற வேலைகளைச் செய்து முடித்தான். அதனுலேயே அந்தப் பெயர் பெற்ருன்.*

6. பிரமாண்டமான லோக பாஸாதா ஒரு சமயம் தீக்கிரையாயிற்று. அவன் அந்த லோகபாஸாதாவை மீண்டும் புதிதாக ஏழு மாடி உயரத்துக்குக் கட்டினுன்.

7. இப்படிக் கட்டப்பட்ட பாஸாதாவின் மதிப்பு தொண்ணூறு லட்சமாகும். தட்சிணகிரி விஹாரத்தையும் கல்லகாலன விஹாரத்தையும் அவன் கட்டினுன்.

8. கலம்பக விஹாரம், பெதங்க வாலிக விஹாரம், வேலங்கா விதிகா விஹாரம், தூபலவாபி தீஸக விஹாரம்,

9. தூர தீசகவாபி, மாது விஹாரம் ஆகியவற்றை அவன் கட்டினுன். அனுராதபுரத்திலிருந்து தீகவாபி வரை ஒவ்வொரு யோஜனை தூரத்துக்கும் ஒரு விஹாரம் கட்டினுன்.

10. மேலும் தீகவாபி விஹாரத்தையும், சேதியத்துடன் கட்டினுன். ரத்தினங்கள் பதித்த வலை போன்ற அமைப்பினுல் சேதியத்தைப் போர்த்தினுன்.

11. வலையின் ஒவ்வொரு முடிச்சிலும் ரதச் சக்கரம் அளவு பெரியதான தங்க மலரைத் தொங்கவிடச் செய்தான்.

12. தர்மத்தின் எண்பத்தி நாலாயிரம் பிரிவுகளைப் பெருமைப்படுத்தும் முறையில் அரசன் எண்பத்தி நாலாயிரம் காணிக்கைகளைச் செலுத்தினுன்.

13. இவ்வாறு பெருமைக்குரிய பல காரியங்களைச் செய்த பின்னர் அரசன் இறந்த பின்பு தூசித தேவர்களிடையே மறு பிறவி யெடுத்தான்.

14. பேரரசன் சத்தா தீசன் தீகவாபியில் வசித்துக் கொண்டிருந்தபோது அவனுடைய மூத்த மகன் லங்காதீசன் கிரிகும்பிலா என்ற அழகிய விஹாரத்தைக் கட்டினுன்.

15. இதே அரசனுடைய இளைய மகனை தூலதானு என்பவன் கண்டர விஹாரத்தைக் கட்டினுன்.

*சத்தா என்ருல் நம்பிக்கை என்று பொருள்.

16. அவனுடைய தந்தை (சத்தா தீசன்) அண்ணனிடம் (அனுராதபுரத்திலிருந்த துஷ்ட காமணியிடம்) சென்றபோது தூலதானகனும், பிக்ஷுகளின் உபயோகத்துக்காக இடமளிப்பதற்காகச் சென்ருன்.

17. சத்தா தீசன் இறந்தபோது மந்திரிகள் அனைவரும் கூடி தூபராமாவில் பிக்குகளனைவரையும் கூட்டினர்.

18. அவர்கள் பிக்குகளின் அனுமதியுடன் தூலதானுவை அரசனுகச் செய்து அவனுக்குப் பட்டாபிஷேகம் நடத்தினர்.

19. லங்கா தீசன் இதைக் கேள்விப்பட்டதும் அனுராதபுரத்துக்கு வந்து அவனை வென்று ஆட்சியைக் கைப்பற்றினுன். ஒரு மாதம் பத்து தினங்களுக்கு மட்டுமே தூலதானு அரசனுக இருந்தான்.

20. வயதுக் கிரமப்படி அரசனைத் தேர்ந்தெடுக்கவில்லை என்ற காரணத்திஞல் லங்கா தீசன் பிக்குகளை மூன்று வருட காலம் அலட்சியப்படுத்தி வந்தான்.

21. பின்னர் பிக்குகளுடன் சமாதானம் செய்து கொண்டு பிராயச்சித்தமாக அவன் முன்னூறு ஆயிரம் பணம் செலவிட்டு,

22. மகா ஸ்தூபத்துக்கு மூன்று மலர்ப் பீடங்களைக் கட்டினுன். பின்னர் அரசன் நூருயிரம் செலவு செய்து,

23. மகா ஸ்தூபத்துக்கும், தூபராமாவுக்கும் இடையே பள்ளத்தை நிரப்பி மட்டமாகச் செய்தான். மேலும் தூப ராமாவிலுள்ள ஸ்தூபத்துக்கு அற்புதமான கல் பாகை ஒன்றும் அமைத்தான்.



24. தூபராமாவுக்கு கிழக்கே ஒரு சிறிய ஸ்தூபத்தையும், பிக்குகளுக்காக லங்காகாசன மண்டபத்தையும் கட்டினுன்.

25. மேலும் கந்தக தூபத்துக்கும் கற்பாகை ஒன்று அமைத்தான். சேதிய விஹாரத்துக்கு நூருயிரம் செலவிட்டதும்,

26. கிரிகும்பில விஹாரை அபிஷேக விழாவின் போது அறுபதாயிரம் பிக்குகளுக்கு ஆறு உடைகளை* அளிக்குமாறு கட்டளையிட்டான்.

27. அரித விஹாரத்தையும், குஞ்ச ராஹிகை விஹாரத்தையும் அவன் கட்டினுன். கிராமங்களிலுள்ள பிக்குகளுக்கு மருந்துகளை வினியோகித்தான்.

28. பிக்குணிகளுக்கு அவர்கள் விரும்பிய அளவு அரிசி கொடுக்கச் செய்தான். ஒன்பது வருடமும் ஒன்றரை மாத காலமும் அவன் அரசாண்டான்.

29. லங்காதீசன் இறந்ததும் அவனுடைய தம்பி கல்லாதநாகன் என்பவன் ஆறு வருட காலம் ஆட்சி நடத்தினுன்.

30. லோக பாஸாதாவைச் சுற்றி, அதை மேலும் அருமையானதாகச் செய்வதற்காக அவன் மிகவும் அழகியதான முப்பத்திரண்டு பாஸாதாக்களைக் கட்டினுன்.

31. மகா ஸ்தூபத்தில் அழகிய ஹேம மாலியைச் சுற்றிப் பாதையையும், சுவரையும் அமைத்தான்.

*பிக்குகளின் உடை திரிசீவரம் எனப்படும். இவை அந்தர வாசக (உள்ளாடை) உத்தர சங்க (மேலாடை) சம்கதி (பாகை) எனப்படும். இங்கு ஆறு உடைகள் என்றது ஒரு ஜோடி திரிசீவரத்தைக் குறிக்கும்.

32. மேலும் அவன் குருந்தவா சோக விஹாரத்தை யும், பெருமைக்குரிய வேறு பல காரியங்களை யும் செய்து முடித்தான்.

33. படைத் தளபதியான கம்மஹா ரதகன் என்ப வன் அரசன் கல்லாதநாகனைத் தலைநகரிலேயே வெற்றி கொண்டான்.

34. ஆனால் அரசனுடைய தம்பியான வத்த காமனி என்பவன் துரோகியான அந்தத் தளபதியைக் கொன்று ஆட்சியைத் தான் மேற்கொண்டான்.

35. அண்ணன் கல்லாதநாகனுடைய புதல்வனை மகா சூலிகனை அவன் தன் மகனாகச் செய்து கொண்டான்.

36. அக்குழந்தையின் தாயான அனுலாதேவியைத் தன்னுடைய ராணியாகச் செய்துகொண்டான். இவ்வாறு அவன் தந்தையின் ஸ்தானத்தை மேற்கொண்டதால் அவனை பிதிர் ராஜா என்று அழைப்பார்கள்.

37. அவன் அரசனாக முடி சூட்டிக்கொண்ட ஐந்தா வது மாதத்தில் ரோஹணாவில் வசித்துவந்த தீசன் என்ற பிராமணன்,

38. ஆட்சிக்கெதிராகக் கிளர்ச்சி செய்யத் தொடங் கினான். நாளுக்கு நாள் அவனுடைய ஆதர வாளர்கள் பெருகிக்கொண்டு வந்தனர்.

39. அதே சமயத்தில் ஏழு தமிழர்கள் தமது படை களுடன் மகா திட்டு என்ற இடத்தில் வந்து இறங்கினர். தீசனும், தமிழர்கள் எழுவரு மாகச் சேர்ந்துகொண்டு,

40. 'ஆட்சியை ஒப்படைத்து விடு' என்று அரச னுக்குச் செய்தி எழுதி யனுப்பினர். கூர்த்தமதி படைத்த கொற்றவன் தீசனுக்குத் தனியே செய்தி எழுதி அனுப்பினான்.



41. 'இந்த அரசு இப்போது உன்னுடையது. தமிழர் களைப் போரிட்டு வெல்வாயாக' என்று அரசன் கேட்டுக்கொண்டான். 'அப்படியே ஆகட்டும்' என்று பதிலிறுத்த தீசன் தமிழர்களை எதிர்த் துப் போரிட்டான். ஆனால் அவர்கள் அவனை வென்று விட்டனர்.

42. அதன் பிறகு தமிழர்கள் அரசனுடன் போர் தொடுத்தார்கள். கோலம்பாலகத்துக்கருகில் நடைபெற்ற போரில் அரசன் வெல்லப் பட்டான் (தித்தாராமா வாயிலுக்கருகில் அவன் ரதத்திலேறிக்கொண்டு தப்பியோடி னான். தித்தாராமா பாண்டு அபயனால் கட்டப் பட்டது).

43. அரசன் தப்பியோடுவதைக் கண்ட கிரி என் னும் பெயருடைய ஒரு நிகந்தர்* 'கருப்புச் சிங்கம் ஓடுகிறது' என்று உரக்கக் கத்தினார்.

44. இதைக் கேட்ட அரசன், 'என்னுடைய விருப் பம் நிறைவேறினால் இந்த இடத்தில் ஒரு விஹாரத்தைக் கட்டுவேன்' என்று மனதில் எண்ணினான்.

45. கர்ப்பிணியாக இருந்த அனுலாதேவியைப் பாதுகாக்க வேண்டும் என்று எண்ணியவனாக அவன் அவளுடனும், மகா சூலனுடனும், தன் னுடைய மகன் மகாநாகனுடனும் சென்றான்.

46. ரதத்தினுடைய பாரத்தைக் குறைப்பதற்காக அரசன் (தனது இரண்டாவது மனைவியான) சோமதேவியை அவளுடைய சம்மதத்துடன் ரதத்திலிருந்து இறங்கச் செய்தான்.

47. பயத்துடனே போருக்குச் சென்ற அவன் தன் இரு மனைவிகளையும் மகனையும் உடனழைத்துச்

*நிகந்தர் - திகம்பர ஜைனர். தித்தாராமா பௌத் தர்களல்லாதவர்கள் (ஜைனர்கள்) வசித்து வந்த இட மாகும்.

சென்றிருந்தான். போரில் தோற்றுப்போகவே தப்பி ஓடினான்.

48. புத்தர் உபயோகித்த பிட்சா பாத்திரத்தைத்* தன்னுடன் எடுத்துச்செல்ல இயலாதவனாக அவன் வேசகிரிக் காட்டில் ஒளிந்துகொண்டான்.

49. குபிகல விஹாரத்தைச் சேர்ந்த மகாதீச தேரர் அவனை அங்கு பார்த்தபோது அவனுக்கு உணவளித்தார்.

50. இதனால் மகிழ்வடைந்த மன்னன், பிக்குகளின் உபயோகத்துக்காக இந்த விஹாரத்துக்கு நிலக்கொடை வழங்கி அதைக் கேடக பத்திரத்தில்* பதித்தான்.

51. பிறகு அங்கிருந்து அவன் சிலாசோப கந்தகத்துக்குச் சென்று தங்கினான். பின்பு சாம கல்லத்துக்கருகிலுள்ள மாட்டுவிலங்கத்துக்குச் சென்று,

52. அங்கு ஏற்கனவே சந்தித்திருக்கும் தேரர் குபிகல மகா தீசரைக் கண்டான். தேரர் அரசனைக் கவனமுடன் தம்முடைய சீடரான தான சிவனிடம் ஒப்படைத்தார்.

53. தனது பிரஜையான தான சிவனுடைய வீட்டில் அவனால் பராமரிக்கப்பட்டு அரசன் பதினான்கு வருட காலம் வசித்து வந்தான்.

54. ஏழு தமிழர்களில் ஒருவன் சோமதேவியிடம் தீராக் காதல்கொண்டு அவளைத் தன்னுடையவளாக்கிக்கொண்டு தன் நாட்டுக்குத் திரும்பிச் சென்றான்.

*தேவனம்பிரிய தீசன் காலத்தில் இந்தியாவிலிருந்து இலங்கைக்குக் கொண்டு வரப்பட்டது.

*அரசனுடைய கொடைகள் முறைப்படி செப்பேட்டில் தான் பொரிக்கப்படுவது வழக்கம். வெள்ளி, பொன் தகடுகளில் பொறிப்பதும் உண்டு.



55. மற்றொருவன் பத்து அதிசய சக்திகள் படைத்த குருநாதருடைய பிட்சா பாத்திரத்தை அனுராதபுரத்திலிருந்து எடுத்துக்கொண்டு மிகவும் திருப்தி அடைந்தவனாக தன் நாட்டுக்குத் திரும்பினான்.

56. ஆனால் புலஹதன் என்ற தமிழன், பாஹியா என்ற தமிழனைத் தன்னுடைய படைத் தலைவனாக வைத்துக்கொண்டு மூன்று வருட காலம் ஆண்டான்.

57. பாஹியா, புலஹதனைக் கொன்றுவிட்டு இரண்டு வருட காலம் ஆட்சி செய்தான். இவனுக்கு பணயமாறன் என்பவன் படைத் தலைவனாக இருந்தான்.

58. பணயமாறன், பாஹியாவைக் கொன்றுவிட்டு ஏழு வருட காலம் அரசாண்டான். இவனுடைய படைத் தலைவனாக பிழையாமாறன் என்பவன் இருந்து வந்தான்.

59. பிழையா மாறன், பணயமாறனைக் கொன்றுவிட்டு ஏழு மாத காலம் ஆட்சி நடத்தினான். இவனுக்கு தாதிகன் என்பவன் படைத் தலைவனாக இருந்து வந்தான்.

60. தாதிகன் என்ற தமிழன் பிழையா மாறனைக் கொன்றுவிட்டு அனுராதபுரத்தில் இரண்டு வருட காலம் அரசாட்சி செய்தான்.

61. இவ்வாறாக இந்த ஐந்து தமிழ் மன்னர்கள் அரசாண்ட காலம் பதினான்கு வருடம், ஏழு மாதமாகும்.

62. ஒருநாள் மலயாவில் இருக்கும்போது அனுலா தேவி தன் தினசரி உணவை வாங்கி வரச் சென்றபோது தனசிவனுடைய மனைவி அவள் கூடையைத் தன் காலினால் உதைத்தாள்.

63. அவள் கோபமடைந்தவளாக அழுதுகொண்டே அரசனிடம் வந்தாள். தனசிவன் இதை அறிந்ததும் வில்லை யெடுத்துக்கொண்டு விரைந்து புறப்பட்டான்.

64. ராணி சொன்னதை அரசன் கேட்டதும் தன் மனைவியையும், இரு புதல்வர்களையும் அழைத்துக்கொண்டு வெளியே புறப்பட்டான்.

65. வில்லில் அம்பைத் தொடுத்து எதிரே வந்த சிவனை எய்து கொன்ருன். பின்பு அரசன் தான் யாரென்பதைப் பிரகடனப்படுத்தி வீரர்களைத் திரட்டத் தொடங்கினன்.

66. எட்டு புகழ்பெற்ற வீரர்கள் அவனுக்கு மந்திரிகளாக அமையக் கிடைத்தனர். போர் வீரர்களுடைய தொகை மேலும் பெருகியது.

67. புகழ்பெற்ற அம்மன்னன் குபிகலத்திலிருந்த மகா தீச தேரரைக் கண்டு, அச்சகல விஹாரத்தில் புத்தரைப் பெருமைப்படுத்த விழா ஒன்று நடத்த ஏற்பாடு செய்தான்.

68. மந்திரி கபிதீசன் என்பவர் ஆகாச சேதியத்தைப் பெருக்கிவிட்டு கீழிறங்கி வந்து ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தார்.

69. அப்போது ராணியுடன் மேலே ஏறிச் சென்று கொண்டிருந்த அரசன் மந்திரி அங்கு உட்கார்ந்துகொண்டிருப்பதையும், தன்னைக் கண்டும் காலில் விழுந்து வணங்காமல் இருப்பதையும் கண்டு கோபம் அடைந்து கபிதீசனைக் கொன்று விட்டான்.

70. இதனல் அரசனிடம் கோபம் கொண்ட இதர ஏழு மந்திரிகளும், அவனிடமிருந்து விலகி மனம் போன இடம் நோக்கிச் செல்லத் தொடங்கினர்கள்.



71. வழியில் கொள்ளைக்காரர்கள் அவர்களிடம் இருந்ததை யெல்லாம் பறித்துக்கொண்டனர். பின்னர் அவர்கள் ஹம்பு கலக விஹாரத்தைச் சரண் அடைந்து அங்கு பேரறிஞரான தீசதேரரைத் தரிசித்தனர்.

72. நான்கு நிகாயங்களையும் நன்கு கற்றறிந்தவரான தேரர் அவர்களுக்கு உணவு, உடை, சர்க்கரை, எண்ணெய், அரிசி முதலியவற்றைப் போதுமான அளவு அளித்தார்.

73. அவர்களை ஆசுவாசப்படுத்திக் களைப்பைப் போக்கியதும் 'எங்கே போகிறீர்கள்?' என்று தேரர் கேட்டார். அவர்கள் தாங்கள் யாரென்பதைத் தெரிவித்து நடந்தவற்றையும் கூறினர்.

74. பின்னர் தேரர் அவர்களை, 'யாருடன் இருந்தால் புத்த தர்மத்தைப் பரப்ப முடியும்? தமிழர்களுடன அரசனுடன?' என்று கேட்டார்.

75. 'அரசனுடன் இருந்தால் தான் இது சாத்தியமாகும்' என்று அவர்கள் பதிலளித்தனர். இவ்வாறு அவர்களைத் திருப்திப்படுத்தியதும் தீசன், மகாதீசன் ஆகிய இரு தேரர்களும்,

76. அவர்களை அங்கிருந்து அழைத்துக்கொண்டு அரசனிடம் வந்து பரஸ்பரம் சமாதானம் செய்து வைத்தனர்.

77. 'எங்கள் முயற்சி வெற்றி பெற்றதும் செய்தி அனுப்புகிருேம். அப்போது தாங்கள் வர வேண்டும்' என்று மன்னனும் மந்திரிகளும் வேண்டிக் கொண்டனர். தேரர்கள் அதற்குச் சம்மதித்துத் தத்தம் இடங்களுக்குத் திரும்பிச் சென்றனர்.

78. புகழ்பெற்ற மன்னன் அனுராதபுரத்துக்கு வந்து தமிழன் தாதிகனைக் கொன்று ஆட்சியை வசப்படுத்திக் கொண்டான்.

79. உடனே நிகந்தர்களுடைய ஆராமாவை அழித்து விட்டு அங்கு பனிரெண்டு அறைகளுடன் ஒரு விஹாரத்தைக் கட்டினன்.

80. மகா விஹாரத்தை அமைத்து இருநூற்று பதினேழு வருடம், பத்து மாதம், பத்து நாட்கள் கடந்ததும்,

81. அரசன் பக்தி மேலிட்டவனுக அபயகிரி விஹாரத்தைக் கட்டினன்.

82. இரண்டு தேரர்களுக்கும் செய்தி யனுப்பி வரவழைத்து தனக்கு முதலில் உதவி செய்த மகா தீச தேரருக்கு அவரைப் பெருமைப்படுத்தும் முறையில் விஹாரத்தைச் சமர்ப்பணம் செய்தான்.

83. கிரி ஆராமா இருந்த இடத்தில் அரசன் அபயன் அதைக் கட்டியதால் அது அபயகிரி என்ற பெயர் பெற்றது.

84. சோமதேவியை வரவழைத்து மீண்டும் அவளை அவளுக்குரிய ஸ்தானத்தில் அமர்த்தி, அவளைப் பெருமைப்படுத்தும் விதத்தில் சோமாராமாவைக் கட்டினன்.

85. ரதத்திலிருந்து இறங்கிய இப்பேரழகி, கதம்ப மலர்க்காட்டில் மறைந்துகொண்டிருந்தபோது,

86. சமணர் ஒருவரைச் சந்தித்தது பற்றிக் கூறினள். இதைக் கேட்ட அரசன் அந்த இடத்தில் ஒரு விஹாரத்தைக் கட்டினன்.

87. மகா ஸ்தூபத்துக்கு வடபுறத்தில் இதே அரசன் சிறந்த ஓர் இடத்தில் சிலா சோப கந்தகம் எனப் பெயர்பெற்ற சேதியத்தை அமைத்தான்.

88. (அரசனுடைய) ஏழு படைத் தலைவர்களில் ஒருவனுன உதியன் என்பவன் நகரத்தின் தென் புறத்தில் தக்ஷிண விஹாரத்தைக் கட்டினன்.



89. அதே இடத்தில் மூலன் என்னும் பெயரினையுடைய மந்திரி மூலவோகாச விஹாரத்தைக் கட்டினன்.

90. சாலியன் என்னும் மந்திரி சாலியா ராமாவைக் கட்டினன். பர்வதன் என்னும் மந்திரி பர்வதா ராமாவைக் கட்டினன்.

91. தீசன் என்னும் பெயருடைய மந்திரி உத்தர தீசா ராமாவைக் கட்டினன். அழகிய விஹாரங்கள் கட்டி முடிந்ததும் அவர்கள் தீச தேரரை வரவழைத்து,

92. 'தங்கள் அன்புக்கு நன்றியாக எங்களால் கட்டப்பட்ட இந்த விஹாரங்களைத் தங்களுக்கு அளிக்கிறோம்' என்று கூறி அவரிடம் அளித்தனர்.

93. தேரர், பல பிக்குகளை அவரவர் தகுதிக்கேற்ப இவ்விஹாரங்களில் இருக்கச் செய்தார். மந்திரிகள், பிக்குகளுக்கு உபயோகமான பல்வேறு பொருள்களை அவர்களுக்கு வழங்கினர்.

94. தனது விஹாரத்தில் வசித்த பிக்குகளுக்கு அரசன் குறையில்லாத விதத்தில் தேவையான எல்லாப் பொருள்களையும் வழங்கினன். அதனல் அங்கு நிறையப் பேர் இருந்தனர்.

95. அஞ்ஞானிகளுடைய குடும்பங்களுக்கு அடிக்கடி விஜயம் செய்ததால் மகா தீசன் என்னும் பெயருடைய ஒரு தேரர் மஹா விஹாரத்திலிருந்து வெளியேற்றப்பட்டார்.

96. அவருடைய சீடரான பஹலமஸ்ஸு தீசதேரர் என்பவர் கோபமடைந்து அபயகிரி விஹாரத்

துக்குச் சென்று அங்கு தங்கி யிருந்தார். அவரைப் பின்பற்றி ஒரு தனிக் கோஷ்டி ஏற்பட்டது.

97. அதற்குப் பின்னர் இந்தப் பிக்குகள் மகா விஹாரத்துக்கு வருவது இல்லை. இவ்வாருக அபயகிரி விஹாரத்தில் வசித்த பிக்குகள் தேர வாதத்திலிருந்து பிரிந்து சென்றனர்.

98. அபயகிரி விஹாரத்திலிருந்த துறவிகளிடமிருந்து, தக்ஷிண விஹாரத்திலிருந்த துறவிகள் பின்னல் பிரிந்து சென்றனர். இவ்வாருக தேர வாதத்திலிருந்து பிரிந்த பிக்குகள் இரு பிரிவாயினர்.

99. அதிகப்படியான பேர் தங்குவதற்கு வசதியாக அரசன் விஹாரத்தைப் பெரிதுபடுத்திக் கட்டினன். 'இதன் மூலம் பிரிந்து சென்றவர்கள் திரும்பி வருவார்கள்' என்று அவன் எண்ணினன்.

100. திரி பிடகங்களையும், அத்த கதையையும் பேரறிவாளர்களான பிக்குகள் அதுவரை வாய் மொழியாகவே போதித்து வந்தனர்.

101. மக்களிடையே மதப்பற்று குறைந்து வருவதைக்கண்ட பிக்குகள் ஒன்றுகூடி சத்தியதர்மம் நிலைத்திருப்பதற்காக அவற்றைப் புத்தகங்களாக எழுதி வைத்தனர்.

102. இவ்வாருக அரசன் வத்தகாமனி அபயன் பனிரெண்டு வருட காலம் ஆட்சி செய்தான். மேலும் ஆரம்பத்தில்* ஐந்து மாத காலம் ஆண்டான்.

103. இவ்வாருக, அறிவுள்ளவர்கள், ஆட்சிக்கு வரும்போது மற்றவர்கள் மகிழ்ச்சிக்காகவும்,

*தமிழர்களிடம் தோல்வி யடைவதற்குமுன்பு.



தம்முடைய மகிழ்ச்சிக்காகவும் பாடுபடுகிருர்கள். ஆனல் அறிவில்லாதவர்கள் தாங்கள் பெற்ற செல்வத்தை தாமும், பிறரும் மகிழப் பயன்படுத்துவது இல்லை. மேலும் செல்வம் சேர்க்க வேண்டும் என்ற பேராசையே அதற்குக் காரணமாகும்.

**மகாவம்சத்தில் 33-வது அத்தியாயமான பத்து அரசர்கள் முற்றும்.**

முப்பத்து நான்காவது அத்தியாயம்

# பதினேரு அரசர்கள்

1. அவனுடைய மறைவுக்குப் பின்னர் மகாசூலி மகாதீசன் பக்தியுடனும், நீதி வழுவாமலும் பதினன்கு வருட காலம் ஆட்சி செய்தான்.
2. உழைத்து ஒரு காரியத்தைச் செய்து முடிப்பது பெருமைக்குரியது என்பதைக் கேட்டறிந்த அவன் ஆட்சிக்கு வந்த முதல் ஆண்டிலேயே,
3. யாருமறியாமல் மாறுவேட மணிந்து சென்று வயலில் வேலை செய்தான். அதற்குக் கூலியாகக் கொடுத்ததைக்கொண்டு மகா சுமண தேரருக்கு பிட்சையளித்தான்.
4. ஸ்வர்ணகிரியிலுள்ள சர்க்கரை ஆலை ஒன்றில் மூன்று வருட காலம் வேலை செய்து, அதற்குக் கூலியாக சர்க்கரை பெற்ருன்.
5. சர்க்கரையை எடுத்துக்கொண்டு தலைநகருக்குத் திரும்பிய அரசன் பிக்குகளுக்கு நிறைய பிட்சை வழங்கினன்.
6. முப்பதாயிரம் பிக்குகளுக்கும், பனிரெண்டாயிரம் பிக்குணிகளுக்கும் உடைகளை வழங்கினன்.
7. நிலவுலகின் காவலன் நன்கு திட்டமிட்ட ஒரு விஹாரத்தைக் கட்டி முடித்ததும் அறுபதாயிரம் பிக்குகளுக்கு ஆறு உடைகளை அளித்தான். அதே போல் முப்பதாயிரம் பிக்குணிகளுக்கும் கொடுத்தான்.
8. இதே அரசன் மந்தவாபி விஹாரத்தையும், அபய கல்லக விஹாரத்தையும் கட்டினன்.



9. வங்க வத்தக கல்ல விஹாரம், தீகபாஹு கல்லக விஹாரம், ஜாலகாம விஹாரம் ஆகியவைகளும் இவனல் கட்டப்பட்டவைகளாகும்.
10. நம்பிக்கையினல் உந்தப்பட்டு பல வழிகளிலும் பெருமைக்குரிய காரியங்களைச் செய்து முடித்தும் பதினன்காவது வருட முடிவில் சுவர்க்கத்தை அடைந்தான்.
11. மகா சூலனுடைய ஆட்சிக் காலத்தில் வத்தகாமனியுடைய மகன் சோர நாதன் என்பவன் ஆட்சியை எதிர்த்துக் கிளர்ச்சி செய்து வந்தான்.
12. மகா சூலன் மறைந்ததும் அவன் ஆட்சியைத் தன் வசப்படுத்திக் கொண்டு அரசாண்டான்.
13. கிளர்ச்சிக்காரனக இருந்த போது தனக்கு புகலிடம் கிடைக்காத பதினெட்டு விஹாரங்களை இந்த மூடன் அழித்து விட்டான். சோர நாகன் பனிரெண்டு வருட காலம் ஆண்டான்.
14. மனைவி தந்த விஷம் கலந்த உணவை உண்டு மரித்த இத் தீயவன் லோகந்தரிக நரகத்தில் மறு பிறவி யெடுத்தான்.
15. இவனுடைய மறைவுக்குப் பின் மகா சூலனுடைய மகன் மூன்று வருட காலம் அரசனக இருந்தான். அவனுக்கு தீசன் என்று பெயர்.
16. சோர நாகனுடைய மனைவியான கொடியவள் அனுலா அரண்மனைக் காவலன் ஒருவனிடம் கொண்ட காதலால் தன் கணவனுக்கு விஷமிட்டுக் கொன்ருள்.
17. இந்தக் காதலின் காரணமாகவே அனுலா இப்போது தீசனையும் விஷமிட்டுக் கொன்று விட்டு ஆட்சிப் பொறுப்பைக் காதலனுக்கு அளித்தாள்.

18. அரண்மனையின் தலைமைக் காவலனாக இருந்த அனுலாவுடைய காதலன் பெயர் சிவன் என்பதாகும். அவன் அனுலாவைத் தன் ராணியாகச் செய்து கொண்டு ஒரு வருடம் இரண்டு மாத காலத்துக்கு ஆட்சி செய்தான்.

19. அனுலா பின்னர் வடுகன் என்ற தமிழனிடம் காதல் கொண்டு, சிவனை விஷமிட்டுக் கொன்று விட்டு வடுகனிடம் ஆட்சியை அளித்தாள்.

20. தலைநகரில் தச்சு வேலை செய்து வந்த வடுகன் அனுலாவைத் தனது ராணியாகச் செய்து கொண்டு,

21. ஒரு வருடம் இரண்டு மாத காலத்துக்கு ஆட்சி செய்தான். ஆனால் அனுலா தன் வீட்டுக்கு ஒரு நாள் வந்த விறகு வெட்டியைக் கண்டு அவனிடம் காதல் கொண்டு விட்டாள்.

22. உடனே அவள் வடுகனை விஷமிட்டுக் கொன்று விட்டு ஆட்சியை விறகு வெட்டியிடம் ஒப்படைத்தாள். தீசன் என்ற பெயருடைய அவன் அனுலாவைத் தன் ராணியாகச் செய்து கொண்டு ஒரு வருடம் ஒரு மாத காலம் ஆண்டான்.

23. அவன் அதிவிரைவில் மகாமேக வனத்தில் ஒரு ஸ்னானக் குளத்தை அமைத்தான்.

24. நிலியன் என்ற தமிழனிடம் அனுலா இப்போது காதல் கொண்டாள். அவன் அரண்மனைப் புரோகிதனாக இருந்த பிராமணனாவான்.

25. விறகு வெட்டி தீசனை விஷமிட்டுக் கொன்று விட்டு நிலியனிடம் ஆட்சிப்பொறுப்பை ஒப்படைத்தாள். அவன் அனுலாவைத் தன் ராணியாகச் செய்து கொண்டான்.

26. அவளுடைய ஆதரவில் அனுராத புரத்தில் ஆறு மாத காலம் நிலியன் ஆட்சி செய்தான்.



27. அரண்மனைக் காவலர்கள் முப்பத்திரண்டு பேர்களுடன் தன் இஷ்டம் போல் இன்பம் அனுபவித்துக் கொண்டிருந்த அனுலா பின்னர் நிலியனையும் விஷமிட்டுக் கொன்று விட்டுத் தானே நான்கு மாதகாலம் ஆட்சி செய்தாள்.

28. மகா சூலனுடைய இரண்டாவது மகன் குதகண்ண தீசன் என்பவன் அனுலாவிடம் கொண்ட பயத்தால்,

29. ஓடிப்போய் தீட்சை பெற்று வசித்து வந்தவன் இப்போது தலைநகருக்குத் திரும்பி வந்து ஒரு படையைத் திரட்டினான்.

30. கொடியவளான அனுலாவைக் கொன்று விட்டு அவன் இருபத்திரண்டு வருட காலம் ஆட்சி செய்தான். சேதிய பர்வதத்தில் உபோசத விழாவுக்காக அவன் ஒரு பெரிய கட்டிடத்தைக் கட்டினான்.

31. இந்தக் கட்டிடத்துக்குக் கிழக்குப் பகுதியில் அவன் கல் ஸ்தூபம் ஒன்றை அமைத்தான். அதே இடத்தில் சேதிய பர்வதத்தில் ஒரு போதி விருட்சத்தை நட்டான்.

நதிகளுக்கிடையே யுள்ள பிரதேசத்தில் பேலகாம விஹாரத்தை யமைத்து அதே இடத்தில் வண்ணகம் என்ற பெரும் கால்வாயையும் அமைத்தான்.

33. அம்பாதுர்க்க குளத்தையும், பாயோலு பாலத்தையும் அமைத்தான். மேலும் நகரைச் சுற்றி ஏழு முழ உயரத்துக்குச் சுவரையும், அகழியையும் அமைத்தான்.

34. கொடியவளான அனுலாவை அரண்மனையில் எரித்துவிட்டு அதற்கு அப்பால் சற்றுத் தூரத்தில் புதிதாக ஒரு அரண்மனையைக் கட்டிக் கொண்டான்.

35. நகரத்திலேயே பதுமாஸ்ஸ வனத்தை அமைத் தான். அவனுடைய தாய் பௌத்த மதத் துறவியானாள்.

36. தன் குடும்பத்தினருக்குச் சொந்தமான ஒரு இடத்தில் தாயாருக்காக அவன் ஒரு மடத்தை அமைத்தான். இது தந்தகேஹா என்றழைக் கப் படலாயிற்று.

37. அவனுடைய மறைவுக்குப் பின்னர் அவனு டைய மகன் பாதிகாபயன் இருபத்தெட்டு வருட காலம் ஆட்சி செய்தான்.

38. மகாதாதிகனுடைய சகோதரனை இந்த பக்தி மிக்க மன்னன் தீவில் பாதிகா ராஜன் என்ற பெயரால் புகழ் பெற்றான்.

39. இங்கு (அனுராத புரத்தில்) அவன் லோக பாஸாதாவைப் பழுது பார்க்கும் வேலையைச் செய்து முடித்தான். மகாஸ்தூபத்துக்கு இரண்டு வேதிகைகளைக் கட்டினான். தூபராமா வில் உபோசத மண்டபத்தை நிறுவினான்.

40. தன் செலவுகளுக்கென விதிக்கப்பட்ட வரியை அவன் நீக்கிவிட்டு நகரத்தைச் சுற்றி ஒரு யோஜனை யளவு நிலத்தில் சுமண, உஜ்ஜுக* மலர்ச்செடிகளை நட்டான்.

41. மகா சேதியத்தில் அடிப்பீடத்திலுள்ள வேதிகையிலிருந்து மேலேயுள்ள குடை வரை,

42. நான்கு விரல் கனத்துக்கு நறுமண சாந்து பூசச் செய்து மலர்களை நடச் செய்தான். சேதியம் மலர்க்கோளமாகக் காட்சி யளித்தது.

43. மற்றொரு சமயம் சேதியத்தின்மீது எட்டு விரல் கனத்துக்கு நறுமணச் சாந்து பூசச் செய்து மலர்ப் போர்வை போர்த்தினான்.

* இருவகை மல்லிகைச் செடிகள்.



44. மேலும் ஒரு சமயம் சேதியத்தின் அடிப்பீடத்தி லிருந்து குடை வரை புஷ்பச் சாத்து முறை செய்தான்.

45. பிறகு அபயவாபியிலிருந்து யந்திரங்கள் மூலம் நீரை மேலே கொண்டு வந்து ஸ்தூபத்தின்மீது ஊற்றி அபிஷேகம் செய்வித்தான்.

46. மற்றொரு முறை ஸ்தூபத்தின்மீது சாந்து பூசச் செய்து நூறு வண்டி முத்துக்களைக் கொண்டு வந்து பதிக்கச் செய்தான்.

47. பவளமணிகளைக் கோத்து வலைபோல் பின்னி சேதியத்தின்மீது போர்த்தச் செய்தான். ஆங் காங்கே ரதச் சக்கரம் அளவு பெரியதான பொன்னாலான தாமரை மலர்களைத் தொங்க விடச் செய்தான்.

48. பொற்றாமரை மலர்களுக்குக் கீழே முத்துக் களைக் கொத்துக் கொத்தாகக் கட்டி வைக்கக் கட்டளையிட்டான். பின்பு மகா ஸ்தூபத்துக்கு விசேஷ பூஜைகள் நடத்தி வழிபட்டான்.

49. ஒருநாள் தாது கர்ப்பத்திலிருந்து அரஹந்தா கள் கோஷ்டி கானம் பாடுவதை அவன் கேட் டான். 'அதைப் பார்க்கும் வரை இந்த இடத்தைவிட்டுப் போக மாட்டேன்' என்று முடிவு செய்தான்.

50. கிழக்குப் புறத்தில் கல் ஸ்தூபத்துக்குக் கீழே உணவு கொள்ளாமல் உறுதியுடன் விரதம் இருந்தான். தேரர்கள் ஒரு வழியை ஏற் படுத்தி அவனைத் தாது கர்ப்பத்துக்குள் அழைத்துச் சென்றனர்.

51. தாது கர்ப்பத்திலிருந்த அலங்காரப் பொருள் கள் அனைத்தையும் கண்ட மன்னன் அவை களைப்போலவே மண்ணினால் செய்த உருவங் களைச் செய்து காணிக்கை செலுத்தினான்.

52. தேனடைகள், வாசனைப் பொருள்கள், மலர்த் தொட்டிகள், ரசங்கள்,

53. நறுமணச் சாந்துகள், தாமரை மலர்கள் போன்றவற்றைப் பெருமளவில் காணிக்கை செலுத்தினான். சேதியத்தின் முற்றத்தில் குதிகாலளவுக்குத் தாமரை மலர்கள் பதிப்பிக்கப்பட்டிருந்தன.

54. மலர்ப் படுக்கை விரித்தாற்போல் எங்கும் காட்சியளித்தது.

55. நெய் விளக்குகள் நெடுகிலும் எரிந்து ஒளி தந்தன. எண்ணெய் விளக்குகளின் எண்ணிக்கைக்குக் கணக்கே கிடையாது.

56. இவ்வாறு விதவிதமான ஏற்பாடுகளால் விழாக்கோலம் பூணச் செய்து,

57. மகா ஸ்தூபத்துக்கு மன்னன் ஏழுமுறை பூஜை நடக்கச் செய்தான்.

58. மேலும் பக்தி மேலிட்டு, ஆண்டுதோறும் ஸ்தூபத்தைப் புதுப்பிக்கும் உற்சவத்தையும் போதி விருட்சத்தை கௌரவிக்கும் விழாவையும் நடத்தச் செய்தான்.

59. மேலும் இருபத்தெட்டு பெரும் விசாக உற்சவங்களையும், எண்பத்திநாலாயிரம் சிறு விழாக்களையும் நடத்தச் செய்தான்.

60. மகா ஸ்தூபத்தைப் பெருமைப்படுத்தும் விதத்தில், விதவிதமான இசை, நாட்டிய விழாக்களுக்கும் ஏற்பாடு செய்தான்.

61. தினந்தோறும் மூன்று முறை புத்தரை வழிபட அவன் அங்கு சென்றான். தினம் இருமுறை மலர்ச் சாத்துமுறை செய்வித்தான்.



62. பிக்குகளுக்குத் தாராளமாக உணவும், மற்றும் துறவிகளுக்குத் தேவையான எண்ணெய், வெல்லப்பாகு, உடை போன்ற பொருள்களையும் வழங்கினான்.

63. எல்லா இடங்களிலுமுள்ள சேதியங்களுக்கு அரசன் நிலங்களை வழங்கினான்.

64. சேதிய பர்வத விஹாரத்தில் ஆயிரம் பிக்குகளுக்கு உணவுச் சீட்டு அளித்து பிட்சை வழங்கி வந்தான்.

65. ஐந்து இடங்களில்—அதாவது பிக்குகளை வரவேற்று உபசரிக்கும் சிட்ட, மணி, முகால ஆகிய மூன்று இடங்களிலும், பதும மாளிகையிலும் அழகிய சத்த பாஸாதாவிலும்,

66. புனித தர்மத்தைக் காக்கும் பொறுப்பை மேற்கொண்ட பிக்குகளுக்குத் தேவையானதையெல்லாம் ஏராளமாக வழங்கினான்.

67. மதத்துக்காகப் பழைய மன்னர்கள் புரிந்த பெருமைக்குரிய காரியங்கள் அனைத்தையும் பாதிகனும் செய்தான்.

68. பாதிகராஜன் இறந்துபோனதும், அவனுடைய தம்பி மகா தாதிக மகாநாகன் என்பவன் பனிரெண்டு வருட காலம் ஆட்சி செய்தான்.

69. பெருமைக்குரியதான பல காரியங்களை அவன் செய்தான். மகா ஸ்தூபத்தின் முற்றத்தில் கிஞ்சிகக்* கற்களைப் பதிக்கச் செய்தான்.

70. ஸ்தூபத்தைச் சுற்றியிருந்த மணற் பாதையை அகன்ற முற்றமாகச் செய்தான். எல்லா விஹாரங்களிலும் உபதேசகர்கள் அமர்வதற்கான உயர்ந்த ஆசனங்களை அமைத்தான்.

71. அம்பதல ஸ்தூபத்தை இந்த அரசன் கட்டினான்.

*ஒருவகை சலவைக்கல்.

72. தன்னுயிரையும் பொருட்படுத்தாமல் ஸ்தூபத்தை உறுதி வாய்ந்ததாக அமையச் செய்தான்.

73. இவ்வாறு கட்டிடத்தை உறுதியாகச் செய்து சேதியத்தைக் கட்டி முடித்ததும் நான்கு வாயில்களிலும் ரத்தினங்கள் பதித்த வளைவுகளை அமைத்தான். தேர்ந்த சிற்பிகளால் நன்கு திட்டமிட்டு அமைக்கப்பட்ட வளைவுகள் ஜாஜ்வல்யமாகப் பிரகாசித்தன.

74. சேதியத்தின் மீது போர்த்துவதற்காக சிவப்புப் பொருளாலும் தங்கப் பந்துகளாலும் ஒரு போர்வை அமைத்தான். முத்துக்களாலான தோரணங்கள் கட்டச் செய்தான்.

75. சேதிய பர்வதத்தைச் சுற்றி ஒரு யோஜனை பரப்புக்கு நிலத்தைச் செப்பனிட்டு நான்கு வாயில்களை அமைத்தான்.

76. பர்வதத்தைச் சுற்றி நல்ல சாலைகளையமைத்து, சாலைகளின் இரு புறத்திலும் கடைகளை அமைத்தான். ஆங்காங்கே கொடிகளையும் தோரணங்களையும், வெற்றி வளைவுகளையும் கட்டி சாலைகளை அழகுபடுத்தினான்.

77. வரிசை வரிசையாக விளக்குகளை யமைத்து தீபாலங்காரம் செய்தான். இசை, நடன விழாக்களுக்கு ஏற்பாடு செய்தான்.

78. கடம்ப நதியிலிருந்து சேதிய பர்வதத்துக்குப் பரிசுத்தமான பாதங்களுடன் மக்கள் செல்ல வேண்டுமென்பதற்காக சாலையில் கம்பளம் விரிக்கச் செய்தான்.

79. தேவர்களும்கூட விரும்பி அங்கு வந்து விழாக் கொண்டாடும்விதத்தில் எல்லா ஏற்பாடுகளும் இனிது அமைந்திருந்தன. தலைநகரின் நான்கு வாயில்களிலும் நிறைய தானம் வழங்கினான்.



80. தீவு முழுவதும் இடைவிடாமல் அவன் தீபச் சரங்களை அமைத்தான். நீர் மேலும்கூட சுற்றிலும் ஒரு யோஜனை தூரத்துக்கு தீபச் சரங்களை அமைத்தான்.

81. சேதியத்தின் அபிஷேக தினத்தன்று இவையனைத்தும் அவனால் செய்யப்பட்டன. அப்போது நடந்த மகத்தான விருந்துக்கு இந் நாட்டில் கிரிபந்த பூஜை என்று பெயர்.

82. விழாவுக்கு ஏராளமாக வந்து கூடியிருந்த பிக்குகளுக்கு எட்டு இடங்களில் பிட்சையளிக்க அரசன் ஏற்பாடு செய்தான்.

83. பின்பு பொன்னாலான எட்டு முரசுகளைக் கொட்டி அறிவித்து இருபத்திநாலாயிரம் பிக்குகளுக்கு தாராளமாகப் பரிசுகளை வழங்கினான்.

84. ஆறு உடைகளை அவன் வினியோகித்தான். சிறையிலிருந்த கைதிகளுக்கு தண்டனை காலத்தைக் குறைத்தான். நான்கு வாயில்களிலும் நாவிதர்களை அமைத்தான்.

85. மேலும் பழைய மன்னர்கள் செய்த பெருமைக்குரிய பல காரியங்களையும், அண்ணன் செய்த காரியங்களையும் எதையும் அலட்சியம் செய்துவிடாமல் நிறைவேற்றினான்.

86. தன்னையும், தன் ராணியையும், இரு புதல்வர்களையும், பட்டத்து யானையையும், குதிரையையும் பிக்குகளின் உடைமையாகச் செய்தான். பிக்குகள் தடுத்ததையும் அவன் பொருட்படுத்தவில்லை.

87. பிக்குகளுக்கு அவன் அறுநூறாயிரம் பெறுமான பரிசுகளை வழங்கினான். பிக்குணிகளுக்கு நூறாயிரம் பெறுமான பரிசுகளை வழங்கினான்.

88. கொடுக்கும்போது அதற்கான முறையை அறிந்து அவர்களுக்குத் தேவையானதைக் கொடுத்தான்.

89. காலாய கண்ணிகத்தில் அரசன் மணி நாக பர்வத விஹாரம் என்ற பெயர்பெற்ற விஹாரத்தைக் கட்டினன். கலந்த என்னும் பெயருடைய விஹாரத்தையும் அமைத்தான்.

90. மேலும் குபுகந்த நதிக் கரையில் சமுத்ர விஹாரத்தையும், ஹுவாச கண்ணிகத்தில் சூலாநாக பர்வதம் எனப்பட்ட விஹாரத்தையும் அமைத்தான்.

91. தானே கட்டிய பாசாண தீபகத்தில் குடிக்க நீர் கொடுத்து உதவிய ஒரு சமணருடைய சேவையில் மனமகிழ்வடைந்தவனுக,

92. அரசன் அந்த விஹாரத்துக்கு பிக்குகளின் உபயோகத்துக்காக அரை யோஜனை அளவுள்ள நிலத்தைக் கொடையாக அளித்தான்.

93. மந்தவாபி விஹாரத்தில் சேவைபுரிந்த ஒரு சமணருடைய நடத்தை கண்டு மகிழ்வடைந்தவனுக இந்த விஹாரத்துக்கும் அரசன் பிக்குகளின் உபயோகத்துக்காக நிலக் கொடை வழங்கினன்.

94. கர்வத்தையும், சோம்பேறித் தனத்தையும் வென்ற, ஆசையெனும் பாசத்திலிருந்து தம்மை விடுவித்துக்கொண்ட நல்ல அறிவுள்ளவர்கள் பெரும் பதவியை அடையும்போது மக்களுக்குத் தீங்குசெய்யாமல் பெருமைக்குரிய காரியங்களைச் செய்வதில் மகிழ்வுகொண்டு பக்தியுடன் பல நற்காரியங்களைச் செய்வார்கள்.

**மகா வம்சத்தில் முப்பத்தி நான்காவது அத்தியாயமான பதினேரு அரசர்கள் முற்றும்.**

## முப்பத்தி ஐந்தாவது அத்தியாயம்

# பனிரெண்டு அரசர்கள்

1. மகா தாதிகனுடைய மரணத்துக்குப் பின்பு அவனுடைய மகன் ஆமந்தகாமணி அபயன் ஒன்பது வருடம், எட்டு மாத காலத்துக்கு ஆட்சி செய்தான்.

2. மகா ஸ்தூபத்தில் குடைக்கு மேலாக ஒரு குடை அமைக்க இவன் ஏற்பாடு செய்தான்.|| அங்கு கீழும், மேலும் ஒரு வேதியைக் கட்டினன்.

3. இதேபோல் லோகபாஸ தாவுக்கு உள்முற்றம் ஒன்றையும் நடை பாதை யொன்றையும் அமைத்தான். தூபராமாவிலுள்ள உபோசத மாளிகைக்கும் இதேபோல் செய்தான்.

4. இரண்டுக்கும் ரத்தினங்கள் பதித்த மண்டபங்கள் கட்டினன். ராஜதலின விஹாரத்தையும் கட்டினன்.

5. (அனுராதபுரத்துக்கு) தென்புறத்தில் மகா காமேந்தி குளத்தை அமைத்ததும், பெருமைக்குரிய காரியங்களைச் செய்வதில் வல்லவனை அரசன் அதைத் தக்ஷிண விஹாரத்துக்கு அளித்தான்.

6. தீவு முழுவதும் உயிர்க் கொலை கூடாது என்று அரசன் உத்தரவிட்டான். எல்லா இடங்களிலும் திராட்சைக் கொடிகளைப் பயிரிட்டான்.

---

*இப்போது ரிடி விஹாரம் எனப்படுகிறது.

||அதாவது கோபுரத்தை மேலும் உயரமுள்ளதாகச் செய்தான்.

7. பிட்சா பாத்திரங்களைக் கும்பந்தகப் பழங்களால் நிரப்பி அரசன் ஆமந்தியன் உடைகளுடன்,

8. பக்திமேலிட்டு பிக்குகளுக்கு வழங்கினன். இதன் காரணமாகவே அவனுக்கு ஆமந்தகாமன் என்னும் பெயர் வழங்குவதாயிற்று.

9. இவனுடைய தம்பி கணிராஜானு தீசன் என்பவன் அண்ணனைக் கொன்றுவிட்டு மூன்றுவருட காலம் ஆட்சி செய்தான்.

10. சேதிய விஹாரத்திலிருந்த உபோசத மண்டபம் பற்றிய வழக்கை அவன் முடிவு செய்தான். துரோகக் குற்றம் செய்த அறுபது பிக்குகளை,

11. அரசன் கைதுசெய்ய உத்தரவிட்டான். அவர்களுடைய உடைமைகள் யாவும் கைப்பற்றப்பட்டன. இவர்களை கணிரக் குகையில் அடைக்கச் செய்தான்.

12. கணிராஜானு தீசனுடைய மரணத்துக்குப் பின்னர், ஆமந்தகாமனியுடைய மகன் சூலாபயன் ஒரு வருட காலத்துக்கு அரசாண்டான்.

13. இந்த அரசன் தலைநகருக்குத் தெற்கே சோணக நதிக் கரையில் சூலகல்லக விஹாரத்தைக் கட்டினன்.

14. சூலாபயனுடைய மறைவுக்குப் பின்பு அவனுடைய தங்கையும் ஆமந்தனுடைய மகளுமான சீவலி நான்கு மாத காலம் அரசாண்டான்.

---

கும்பந்தகம் என்பது பறங்கிப்பழம் போன்ற ஒன்று. ஆமந்த என்றும் இதைச் சொல்வதுண்டு. இந்தப் பழங்களை பிக்குகளுக்கு வழங்கியதால் அரசன் ஆமந்தகாமன் எனப்பட்டான்.



15. ஆமந்தனுடைய மருமகனை இளநாகன் என்பவன் சீவலியின் ஆட்சியைக் கவிழ்த்து தனது ஆட்சியை நிலைநாட்டினன்.

16. ஒருநாள், அவனது ஆட்சியின் முதல் வருடத்தில் தீசவாபிக்குச் சென்றான். அப்போது லம்பகர்ணர்கள்* பலர் அவனைக் கைவிட்டு தலைநகருக்குச் சென்றனர்.

17. இதைக் கண்ட அரசன் கோபமடைந்து அதற்குத் தண்டனையாக மகா ஸ்தூத்துக்கு அங்கிருந்து பாறையமைக்கும் வேலையை விதித்தான்.

18. அவர்களுக்கு மேற் பார்வையாளர்களாக சண்டாளர்களை நியமித்தான். இதனால் கோபம் கொண்ட லம்பகர்ணர்கள் அனைவரும் ஒன்று கூடினர்.

19. அரசனைக் கைது செய்து, அரண்மனையில் சிறை வைத்துத் தாங்களே ஆட்சியை நடத்த வந்தனர்.

20. அரசனுடைய மனைவி தன்னுடைய மகள் சந்தமுக சிவனுக்கு விசேஷ உடைகளை அணிவித்து தன் வேலைக்காரியிடம் ஒப்படைத்து பட்டத்து யானையிடம் ஒரு செய்தியுடன் அனுப்பி வைத்தான்.

21. வேலைக்காரி பட்டத்து யானையிடம் சென்று ராணி சொல்லி யனுப்பியதை அதனிடம் கூறினள்.

22. 'இவன் உன்னுடைய எஜமானருடைய புதல்வன். உனது எஜமானர் சிறையில் இருக்கிருர். எதிரிகளிடம் சிக்கி இருப்பதைவிட இச் சிறுவன் உன்னல் மரணமடைவதே மேல்.

---

*இலங்கையிலுள்ள ஒரு முக்கிய இனத்தினர்.

23. 'இவனைக் கொன்றுவிடு. இது ராணியின் உத்தரவு' என்று கூறி வேலைக்காரி சிறுவனை யானையின் காலடியில் வைத்தாள்.

24. யானை மிகவும் வருந்திக் கண்ணீர் வடித்தது. தன்னைச் சங்கிலியினால் பிணைத்துக் கட்டியிருந்த முளையைத் தகர்த்தெறிந்துவிட்டுக் கோபத்துடன் அரண்மனைக்குள் சென்றது.

25. அரசன் சிறைவைக்கப்பட்டிருந்த அறைக் கதவைத் தகர்த்தெறிந்துவிட்டு அரசனைத் தன் முதுகின் மேலேற்றிக்கொண்டு மகாதிட்டை நோக்கிச் சென்றது.

26. அங்கு யானை அரசனை ஒரு கப்பலில் ஏறச் செய்து மேற்குக் கரையில் கொண்டுவிடச் செய்தது. பின்பு தான் மட்டும் மலயத்தை நோக்கிச் சென்றது.

27. அரசன் மறு கரையில் மூன்று வருட காலம் தங்கி யிருந்தபின் ஒரு படையைத் திரட்டிக் கொண்டு கலத்திலேறி ரோஹணவுக்குச் சென்றான்.

28. சஹரசோபா என்ற துறையில் இறங்கி ரோஹணவில் ஒரு பெரும் படையைத் திரட்டினான்.

29. அப்போது மலயத்திலிருந்து பட்டத்து யானை அரசனுக்கு சேவை செய்வதற்காக ரோஹணவுக்கு வந்து சேர்ந்தது.

30. துலாதார விஹாரத்தில் இருந்த மகா பதும தேரரிடம் கபி ஜாதகத்தைக் கேட்டதால் போதி சத்துவரிடம் பக்திமேலிட்டு,

31. அவன் நாக மகா விஹாரத்தை மீட்டு அதை விரிவுபடுத்த ஏற்பாடு செய்தான். எண்ணூறு அடி நீளமுள்ளதாக செய்தான்.



32. ஸ்தூபத்தை அப்போது இருந்ததைவிடப் பெரியதாகக் கட்டினான். தீச வாபியையும், தூர வாபியையும் வெட்டினான்.

33. படை திரட்டியதும் அரசன் போருக்குப் புறப்பட்டான். இதை யறிந்த லம்பகர்ணர்கள் தாமும் போருக்குத் தயாராயினர்.

34. கபால கந்த வாயிலுக் கருகில் ஹங்கார பித்தி திடலில் இரு தரப்புப் படைகளும் போரிட்டன. இதனால் இரு சாராரும் நாசமடைந்தனர்.

35. கடல் பயணத்தால் களைப்புற்றிருந்த அரசனுடைய வீரர்கள் பின் வாங்கத் தொடங்கினர். அதனால் அரசன் தான் யாரென்பதைப் பிரகடனப் படுத்திவிட்டு படையுடன் முன்னேறினான்.

36. இதனால் பயந்து போன லம்பகர்ணர்கள் தரையில் விழுந்து அரசனைப் பணிந்தனர்.

37. இதைக் கண்ட அரசன் இரக்கம் கொண்டான். 'அவர்களைக் கொல்ல வேண்டாம். உயிரோடு பிடித்து சிறைப்படுத்துங்கள்' என்றான்.

38. போரில் வெற்றி பெற்று தலைநகரை அடைந்து தனது ஆட்சியை நிலை நாட்டிய பின்னர் அரசன் தீசவாபியில் நடைபெற்ற ஒரு திருவிழாவுக்குச் சென்றான்.

39. நீர் விழாவிலிருந்து திரும்பியதும் தான் பெற்ற பேறை எண்ணிப்பார்த்தான்.

40. தன்னை எதிர்த்த லம்பகர்ணர்களைப் பற்றியும் நினைத்தான். அதனால் கோபம் கொண்டு அவர்களை இரண்டிரண்டு பேர்களாக நுகத்தடியில் பிணைத்து தன் ரதத்தில் கட்டக் கட்டளையிட்டு நகருக்குள் சென்றான்.

41. அரண்மனை வாயிலை யடைந்ததும் அரசன் இவ்வாறு உத்தரவிட்டான்: 'இந்த வாயிற்படியில்

இவர்களுடைய தலைகளை வெட்டி விடுங்கள் வீரர்களே.'

42. 'இவர்கள் உனது ரதத்தில் பூட்டப்பட்ட காளைகளைப் போன்றவர்கள். எனவே கொம்பையும், குளம்பையும் வெட்டினாலே போதும்.''

43. என்று தாயார் கூறக் கேட்ட மன்னன் தலையை வெட்டுமாறு பணித்தான்.

44. யானை தங்கியிருந்த இடத்தை அரசன் அதற்கே கொடுத்து விட்டான். அதனாலேயே அந்த இடத்துக்கு ஹத்தி போகம் என்று பெயர்.

45. இளநாகன் அநுராத புரத்தில் ஆறு வருட காலம் ஆட்சி நடத்தினான்.

46. இளநாகனுடைய மரணத்துக்குப் பின்பு அவனுடைய மகன் சந்தமுக சிவன் எட்டு வருடம், ஏழுமாத காலத்துக்கு அரசனாக இருந்தான்.

47. இவன் மணிகார காமகத்துக் கருகில் ஒரு குளத்தை அமைத்ததும் இஸார சமண விஹாரத்துக்கு அதை அளித்தான்.

48. இந்த அரசனுடைய மனைவிக்கு தமிழ தேவி என்று பெயர். அவள் அந்தக் கிராமத்திலிருந்து தனக்குக் கிடைத்த வருமானத்தை அந்த விஹாரத்துக்கே கொடுத்து விட்டாள்.

49. தீசவாபியில் நடைபெற்ற விழாவின்போது சந்தமுக சிவனைக் கொன்றுவிட்டு அவனுடைய தம்பி யசலாலகதீசன் என்பவன்,

50. அனுராத புரத்தில் இலங்கையின் திருமுகமெனத் திகழும் அவ்வின்ப புரியில் ஏழு வருடம், எட்டுமாத காலத்துக்கு ஆட்சி செய்தான்.



51. தத்தன் என்னும் பெயருடைய வாயிற்காப்போனுடைய மகன் சுபா என்பவன். இவனும் காவலாளியாகவே வேலை பார்த்து வந்தான். அரசனைப் போலவே முகச்சாயலும், உருவ அமைப்பும் கொண்டவனாக இவன் இருந்தான்.

52. அரசன் யசலாலகன் இவனுக்குத் தன்னுடைய ராஜ உடைகளை அணிவித்து சிம்மாதனத்தில் அமர்த்தி,

53. தான் அவனுடைய உடைகளை அணிந்து கொண்டு கையில் தடியுடன் வாயிலில் நின்று கொண்டு வேடிக்கை செய்வது வழக்கம்.

54. சிம்மாதனத்தில் அமர்ந்திருக்கும் சுபாவுக்கு மந்திரிகள் வணக்கம் செய்வதைக் கண்டு அரசன் மகிழ்வான். அடிக்கடி இந்த தமாஷை செய்து அனுபவிப்பது அவனுடைய வழக்கம்.

55. ஒருநாள் இந்த வேடிக்கையைச் செய்து சிரித்துக் கொண்டிருந்த (காவலாளியின் உடையிலிருந்த) அரசனைப் பார்த்து (சிம்மாதனத்தில் ராஜ உடையிலிருந்த) சுபா 'இந்தக் காவலாளி என்னெதிரில் ஏன் இப்படிச் சிரிக்கிறான்?' என்று சீறினான்.

56. சுபா, அரசனுடைய தலையைச் சீவுமாறு கட்டளையிட்டு விட்டுத் தானே அரசனாக சுபராஜன் என்ற பெயருடன் ஆறுவருட காலம் ஆண்டான்.

57. இரண்டு மகா விஹாரங்களிலும்* சுபராஜன் தனது பெயரில் வரிசையாகப் பல அறைகளைக் கட்டுவித்தான்.

58. உருவேலா அருகில் வாலி விஹாரத்தையும், கங்கையின் முகத்துவாரத்தில் நந்தி காமக விஹாரத்தையும் கட்டினான்.

* அபயகிரி, மகாவிஹாரம்.

59. லம்பகர்ணர் இனத்தைச் சேர்ந்தவன் வசபன் என்பவன். வடபகுதியில் வசித்து வந்த இவன் படைத்தலைவனுக இருந்த தனது மாமனிடம் வேலைபார்த்து வந்தான்.

60. 'வசபன் என்றபெயருடைய ஒருவன் அடுத்து அரசனுக வருவான்' என்று ஜோதிடர்கள் கூறினர். எனவே தீவில் வசபன் என்னும் பெயர்கொண்ட எல்லோரையும் கண்டுபிடித்து கொன்று விடுமாறு அரசன் கட்டளையிட்டான்.

61. 'நம்மிடமிருக்கும் வசபனை மன்னனிடம் ஒப்படைத்து விடவேண்டும்' என்றெண்ணிய படைத் தலைவன் தன் மனைவியிடம் இது குறித்துப் பேசிவிட்டு அதிகாலையில் அரசனிடம் சென்ருன்.

62. அவனுடன் சென்ற வசபனைக் காப்பாற்ற எண்ணிய படைத்தலைவனுடைய மனைவி சுண்ணும்பு இல்லாமல் வெற்றிலையை மட்டும் அவனிடம் கொடுத்தனுப்பினுள்.

63. அரண்மனை வாயிலை அடைந்ததும் வெற்றிலை போட எண்ணிய படைத்தலைவன் சுண்ணும்பு இல்லாததைக் கண்டு, வீட்டுக்குப் போய் சுண்ணும்பு கொண்டு வருமாறு வசபனை அனுப்பினுன்.

64. சுண்ணும்பு பெற்றுப்போக வீட்டுக்கு வந்த வசபனிடம் படைத்தலைவனுடைய மனைவி ரகசியமாக விஷயத்தைச் சொல்லி அவனிடம் ஆயிரம் பணம் கொடுத்து எங்காவது ஓடிப் போய் விடுமாறு கூறினுள்.

65. வசபன் மகா விஹாரத்துக்குச் சென்ருன். தேரர்கள் அவனுக்கு உணவும் உடையும் அளித்தனர்.



66. 'நீ அரசனுகப் போகிருய்' என்று மீண்டும் ஒரு குஷ்டரோகி சொல்லக் கேட்ட வசபன் மனம் மகிழ்ந்து கிளர்ச்சிக்காரனுக மாறுவது என்று முடிவு செய்தான்.

67. இதற்கு வேண்டிய ஆட்களைத் திரட்டியதும் ஒவ்வொரு கிராமமாகத் தன் வசப்படுத்திக் கொண்டு ரோஹணுவை அடைந்தான்.

68. இப்படியே கொஞ்சங் கொஞ்சமாகத் தன் வசப்படுத்திக் கொண்டு இரண்டு வருடங்களுக்குப்பின் தேவையான படைவீரர்களுடன் தலைநகரை நோக்கிச் சென்ருன்.

69. போரில் சுபராஜனை, வசபன் வெற்றி கொண்டதும் தலைநகரில் தன்னுடைய ஆட்சியை நிலை நாட்டினுன்.

70. அவனுடைய மாமன், போரில் இறந்து விட்டான். தனக்கு முதலில் உதவி செய்தவளும் மாமன் மனைவியுமான போதாவை, வசபன் ராணியாகச் செய்து கொண்டான்.

71. ஒரு சமயம் தன்னுடைய ஆயுள் காலம் குறித்து ஒரு ஜோதிடரைக் கலந்தாலோசித்தான். 'பனிரெண்டு வருடகாலம் மட்டுமே வாழ்வாய்' என்று அவன் ரகசியமாகக் கூறினுன்.

72. இதை யாரிடமும் சொல்லாமல் ரகசியமாக வைத்திருக்குமாறு கூறி அவனுக்கு ஆயிரம் பணம் கொடுத்தனுப்பிய பின்பு அரசன் பிக்குகள் சபையைக்கூட்டி வணங்கி உபசரித்தான்.

73. 'வணக்கத்துக் குரியவர்களே! வாழ்நாளை நீடிக்க வழியேதும் இருக்கிறதா?' என்று அவர்களைக் கேட்டான். 'இருக்கிறது' என்று பிக்குகள் பதில் சொன்னர்கள்.

74. நீண்ட ஆயுளுக்குத் தடையாக உள்ளவற்றைப் போக்குவதற்காக வழியையும் கூறினர்.

‘வடிகட்டிகளையும்,* வீடுகளையும், வியாதியஸ்தர்களுக்கு வேண்டிய சாதனங்களையும் வழங்க வேண்டும்.

75. ‘அதே போல் பாழடைந்த கட்டிடங்களைப் புதுப்பிக்க வேண்டும். ஐந்து புனித தத்துவங்களை மேற்கொண்டு அதனைக் கவனமாகப் பேண வேண்டும்.

76. ‘உபோசத தினத்தன்று பக்தியுடன் விரதம் இருக்க வேண்டும்’ என்று பிக்குகள் கூறினர். ‘நல்லது அப்படியே செய்வேன்’ என்று கூறிய மன்னன் இவற்றையெல்லாம் நிறைவேற்றினான்.

77. மூன்று வருடங்களுக்கொரு முறை தீவிலுள்ள எல்லா பிக்குகளுக்கும் மூன்று ஆடைகளை வழங்கினான்.

78. தூர இடங்களில் வசித்த தேரர்களுக்கு உடைகளை அனுப்பி வைத்தான். முப்பத்திரண்டு இடங்களில், பால் சோறும், தேனும் வழங்க ஏற்பாடு செய்தான்.

79. அறுபத்து நான்கு இடங்களில் பலவிதமான விலையுயர்ந்த பொருள்களைக் கொடையாக அளிக்க ஏற்பாடு செய்தான். நான்கு இடங்களில் ஆயிரம் தீபங்களை ஏற்றிவைத்தான்.

80. அநாவது சேதிய பர்வதம், தூபராமாவிலுள்ள சேதியம், மகாஸ்தூபம், போதி விருட்சம் இருந்த ஆலயம் ஆகிய நான்கு இடங்களில்.

81. சீதளகூட விஹாரத்தில் அவன் அழகிய ஸ்தூபங்கள் பத்து கட்டினான். தீவு பூராவிலுமுள்ள பழுதடைந்த கட்டிடங்களைச் சீர்படுத்தினான்.

* வடிகட்டி - பிக்குகளுக்கு அவசியமான பொருள்களில் ஒன்று. குடிதண்ணீரை வடிகட்டிக் குடிக்கப் பயன்படுவது.



82. வள்ளியேர விஹாரத்திலிருந்த ஒரு தேரரிடம் பக்தி மேலிட்டு மகாவள்ளி கூடம் என்ற விஹாரத்தைக் கட்டினான்.

83. மேலும் மகாகாமா அருகில் அநுராராமா விஹாரத்தைக் கட்டி அதற்கு ஹேலிகாமத்தில் ஆயிரத்தெட்டு கரிசை நிலத்தை மானியமாக வழங்கினான்.

84. தீசவர்த்தமானகத்தில் முஸல விஹாரத்தைக் கட்டியதும் அதற்கு ஆலிசாரக் கால்வாய் நீரில் ஒரு பங்கை அளித்தான்.

85. கலம்ப திட்டத்திலிருந்த ஸ்தூபத்துக்குத் தீப கோபுரத்தை அமைத்தான். உபோசத மண்டபம் ஒன்றையும் கட்டினான்.

86. ஆயிரம் கரிசை நிலத்துக்கு நீர்ப்பாசன வசதி அளிக்கும் ஏரி ஒன்றை வெட்டி, அதிலிருந்து கிடைக்கும் வருமானத்தை தீபங்களை ஏற்ற எண்ணெய்க்கு வழி செய்தான்.

87. கும்பிகல்லக விஹாரத்தில் அவன் உபோசத மண்டபத்தை அமைத்தான். இதே போல் அரசன் இஸராசமணக விஹாரத்திலும் உபோசத மண்டபம் கட்டினான்.

88. தூபராமாவில் ஒரு ஸ்தூப ஆலயத்தை அமைத்தான். மகாவிஹாரத்தில் மேற்குத் திசையை நோக்கி வரிசையாக அறைகளைக் கட்டினான். பாழடைந்துபோன சதுஸ்ஸாலா மண்டபத்தைப் புதுப்பித்தான்.

89. அழகான நான்கு புத்தருடைய உருவச் சிலைகளைச் செய்து மகாபோதி விருட்சத்தின் முன்பு சிலைகளை வைக்க ஒரு ஆலயத்தைக் கட்டினான்.

90. அரசனுடைய மனைவி போதா என்பவள் அதே இடத்தில் ஒரு அற்புதமான ஸ்தூபத்தையும், அழகிய ஆலயத்தையும் அமைத்தாள்.

91. அரசன் தூபராமாவில் ஆலயத்தைக் கட்டி முடித்ததும் ஒரு விழா நடத்தித் தாராளமான நன்கொடைகளை வழங்கினான்.

92. புத்தருடைய போதனையைக் குறைவறக் கற்றறிந்த பிக்குகளுக்குத் தேவையான பொருள்களை வினியோகித்தான். தர்மத்தைப் போதித்து வந்த பிக்குகளுக்கு வெண்ணெயும், வெல்லப்பாகும் வழங்கினான்.

93. நகரின் நான்கு வாயில்களிலும் ஏழைகளுக்கு உணவளிக்க ஏற்பாடு செய்தான். உடல் நலிவுற்ற பிக்குகளுக்கு உபயோகமான உணவுப் பொருள்களை வழங்கினான்.

94. சயந்தி, ராஜுபல, வாக, கோலம்பகாமக, மகாநிக்கவதி, மகாராமேதி, கோஹல, காளி,

95. சம்புதி, சாதமங்கன, அக்கிவர்த்தமனக — இந்தப் பதினொரு குளங்களையும், பனிரெண்டு கால்வாய்களையும் அமைத்தான்.

96. இதன் மூலம் நிலங்களை வளமுடையதாக்கினான். பாதுகாப்புக்காக நகரைச் சுற்றி உயரமான சுவர் எழுப்பினான்.

97. நான்கு வாயில்களிலும் கோட்டை கோபுரங்களை அமைத்தான். ஒரு அரண்மனையைக் கட்டினான். பூங்காவில் குளத்தை வெட்டி அன்னங்களை விட்டான்*

98. தலைநகரில் இங்கு மங்குமாகப் பல ஸ்னானக் குளங்களை நிர்மாணித்ததும் அவைகளுக்குக் கால்வாய்கள் மூலம் நீர் பாயச் செய்தான்

99. இவ்வாறு பெருமைக்குரிய பல காரியங்களைச் செய்து அரசன் வசபன் நீண்ட ஆயுளுக்குத் தடையாக உள்ளவற்றைப் போக்கினான்.

* பௌத்தர்களுக்கு அன்னம் புனிதமான பறவையாகும்.



100. நல்ல காரியங்களைச் செய்வதில் நிரந்தரமாக மகிழ்ச்சியடைந்தவனாக அவன், நாற்பத்தி நான்கு வருட காலம் ஆட்சி செய்தான். நாற்பத்தி நான்கு விசாக விழாக்களுக்கும் அவன் ஏற்பாடு செய்தான்.

101. சுபராஜன் உயிருடன் இருக்கும்போதே வசபனால் ஆபத்து ஏற்படக்கூடும் என்று பயந்தவனாக தன்னுடைய மகளை ஒரு செங்கல் செய்யும் தொழிலாளியின் பொறுப்பில் விட்டு வைத்து இருந்தான்.

102. தன்னுடைய ராஜ முத்திரையையும் அவளிடம் கொடுத்திருந்தான். சுபராஜன் வசபனால் கொல்லப்பட்டதும் செங்கல் செய்யும் தொழிலாளி சுபராஜனுடைய மகளைத் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்று விட்டான்.

103. அவளைத் தன் சொந்த மகளாகக் கருதி சீருடன் வளர்த்து வந்தான். அவன் வேலை செய்யுமிடத்துக்கு அவள் உணவு கொண்டு வந்து கொடுப்பது வழக்கம்.

104. ஒருநாள் அவள் கடம்ப மலர்ப் புதர் ஒன்றில் ஒரு துறவியைக் கண்டாள். அவர் ஏழாவது நாள் நிரோதத்தில்* இருந்தார்.

108. புத்திசாலியான அந்தப் பெண் அவருக்குத் தான் கொண்டுவந்த உணவைப் படைத்தாள். பிறகு மீண்டும் சமைத்துத் தன் தந்தைக்கு எடுத்துக்கொண்டு போனாள். தாமதத்துக்குக் காரணம் கேட்ட தந்தையிடம் நடந்ததைக் கூறினாள்.

106. அது கேட்டு மகிழ்வடைந்த அவன் அன்றாடம் அதுபோலவே செய்து வருமாறு கேட்டுக்

*ஸ்மரணையற்று தியானத்தில் இருத்தல். இந்நிலை ஏழு நாட்களுக்குமேல் நீடித்தால் மரணத்தில் முடியும்.

கொண்டான். தேரர் தியானத்திலிருந்து மீண்டு கண் விழித்ததும் அப்பெண்ணின் எதிர் காலத்தைத் தமது விசேஷ சக்தியால் உணர்ந்தார்.

107. 'ராஜ அந்தஸ்தை நீ அடையப் போகிருய். அப்போது என்னை நினைத்துக்கொள்' என்று கூறி விட்டு தேரர் இறந்துவிட்டார்.

108. வசபனுடைய மகன் வங்கநாசிக தீசன் பருவக் காளையாக வளர்ந்திருந்தான். வசபன் அவனுக்கு ஏற்ற மனைவியைத் தேடிக்கொண்டிருந்தான்.

109. பெண்களின் சுப லட்சணங்களை அறிந்தவர்கள் செங்கல் தொழிலாளியிடம் வளர்ந்து வரும் பெண்ணைப்பற்றி,

110. அரசனிடம் வந்து சொன்னர்கள். அரசன் அவளை அழைத்துவர ஆளனுப்பினன். செங்கல் தொழிலாளி 'இவள் ஒரு ராஜகுமாரி' என்று வசபனிடம் கூறினன்.

111. சுபராஜனுடைய மகள் என்பதைக் கூறி அடையாளமாக ராஜ முத்திரையைக் காட்டினன். இதுகேட்டு மகிழ்வடைந்த மன்னன் அவளைத் தன் மகனுக்கு மணம் செய்து வைத்தான்.

112. வசபனுடைய மறைவுக்குப் பின்பு அவனுடைய மகன் வங்கநாசிக தீசன் அனுராதபுரத்தில் மூன்று வருட காலம் ஆட்சி செய்தான்.

113. கோண நதிக்கரையில் அரசன் வங்கநாசிக தீசன் மகா மங்கள விஹாரத்தைக் கட்டினன்.

114. அவனுடைய மனைவி மகா மாதா, தேரர் சொன்ன வார்த்தைகளை நினைவில் கொண்டு ஒரு விஹாரத்தைக் கட்ட நிதி திரட்டினள்.



115. வங்கநாசிக தீசனுடைய மறைவுக்குப் பின்னர் அவனுடைய மகன் கஜபாகு காமனி இருபத்திரண்டு வருட காலம் ஆட்சி செய்தான்.

116. அன்னையின் வேண்டுகோளுக்கிணங்க இவன் கடம்ப மலர்ப்புதர் இருந்த இடத்தில் மாது விஹாரத்தைக் கட்டினன்.

117. அவனுடைய அறிவுள்ள தாய் இந்த விஹாரத்தைக் கட்டுவதற்கு நூறுயிரம் பணம் கொடுத்தாள்.

118. அவன் அங்கு ஒரு கல் ஸ்தூபத்தை அமைத்து பிக்குகளின் உபயோகத்துக்கு நிலங்களைப் பலரிடமிருந்து விலை கொடுத்து வாங்கி வழங்கினன்.

119. அபயுத்தர ஸ்தூபத்தை அவன் பிரமாண்டமானதாகக் கட்டினன். நான்கு வாயில்களிலும் நடை பாதைகளை அமைத்தான்.

120. காமனி தீச குளத்தை வெட்டி அதை அபயகிரி விஹாரத்துக்குக் கொடையாக அளித்தான்.

121. மாரிஸவதி ஸ்தூபத்துக்கு ஒரு கவசத்தை அமைத்ததுடன் நூறுயிரம் பணம் கொடுத்து நிலங்களை வாங்கி பிக்குகளின் உபயோகத்துக்காகக் கொடுத்தான்.

122. கடைசி ஆண்டில் அவன் ராமுக விஹாரத்தை அமைத்து நகரில் மஹிஜாசன சாலா மண்டபத்தைக் கட்டினன்.

123. கஜபாகுவின் மரணத்துக்குப் பின்பு அவனுடைய மைத்துனன் மஹலக நாகன் ஆறு வருட காலம் ஆட்சி செய்தான்.

124. கிழக்கே விஜாலக விஹாரம், தெற்கே கோத பர்வத விஹாரம், மேற்கே தாக பாசான

விஹாரம், நாக தீபத்தில் சாலி பர்வத விஹாரம்,

125. பீஜகாமத்தில் தனவேலி விஹாரம், ரோஹணை வில் தோபால நாக பர்வத விஹாரம், கிரி ஹாலிக விஹாரம்,

126. இந்த ஏழு விஹாரங்களை அரசன் மஹல்லநாகன் தன்னுடைய குறுகிய ஆட்சிக் காலத்தில் கட்டினான்.

127. இந்த வழியில் அறிவுடையவர்கள் பெருமைக்குரிய பல காரியங்களைச் செய்து பயனற்ற செல்வத்தைக்கொண்டு மதிப்பிட முடியாத அளவு பயன் பெறுகிறார்கள். ஆனால் மூடர்கள் குருட்டுத்தனமாக இன்பத்தை அனுபவிப்பதற்காகப் பெருந் தீமைகளைப் புரிகிறார்கள்.

**மகாவம்சத்தில் 35 வது அத்தியாயமான பனிரெண்டு அரசர்கள் முற்றும்**

## முப்பத்திஆறுவது அத்தியாயம்

# பதிமூன்று அரசர்கள்

1. மகல்ல நாகனுடைய மறைவுக்குப் பின்பு அவனுடைய மகன் பாதிக தீசன் இலங்கையில் இருபத்திநான்கு வருடம் ஆட்சி செய்தான்.

2. மகா விஹாரத்தைச் சுற்றி அவன் ஒரு சுவர் எழுப்பினான்.

3. அரசன் கவர தீச விஹாரத்தைக் கட்டியதும் மகாமணி குளத்தை வெட்டி அதை விஹாரத்துக்குக் கொடையாக அளித்தான்.

4. மேலும் பாதிக தீச விஹாரம் எனப்பட்டதையும் அவன் கட்டினான். அழகிய தூபராமாவில் உபோசத மண்டபம் ஒன்றை அமைத்தான்.

5. ரந்தகந்தக குளத்தையும் அவன் வெட்டினான். மக்களிடம் இரக்கமும், பிக்குகளைக் கௌரவிப்பதில் உற்சாகமும் கொண்ட பூவுலக மன்னன் தாராளமாக பிட்சையளிக்க உத்தரவிட்டான்.

6. பாதிக தீசனுடைய மறைவுக்குப் பின்பு அவனுடைய தம்பி கனித தீசகன் இலங்கைத் தீவில் பதினெட்டு வருட காலம் ஆட்சி செலுத்தினான்.

7. பூதாராமாவிலிருந்த மகா நாக தேரரிடம் பெருமதிப்புக்கொண்ட அவன் அவருக்காக அற்புதமான முறையில் அபயகிரியில் ரத்தின பாஸாதாவைக் கட்டினான்.

8. மேலும் அபயகிரியில் பெரிய சுவற்றையும் பரிவேணையையும் அமைத்தான். அதுபோல் மலிசோம விஹாரத்திலும் அமைத்தான்.

9. அந்த இடத்தில் சேதியத்துக்கு ஒரு ஆலயத்தைக் கட்டினான். அதேபோல் அம்பாதல ஸ்தூபத்திலும் அமைத்தான். நாகதீபத்திலுள்ள ஆலயத்தைப் புனர்நிர்மாணம் செய்தான்.

10. மகா விஹாரத்தைச் சுற்றியிருந்த சுவரையெடுத்துவிட்டு, அந்த இடத்தில் குகுதகிரி எனப் பெயர்பெற்ற வரிசையான அறைகளைக் கட்டி அங்கு வேண்டிய எல்லாப் பொருள்களும் இருக்க ஏற்பாடு செய்தான்.

11. மகா விஹாரத்தில் மாமன்னன் நான்கு பக்கங் கொண்ட மாபெரும் பாசாதங்கள் பனிரெண்டு அமைத்தான்.

12. காண்போர் வியக்கும் கவினுடையதாக அது திகழ்ந்தது. தக்ஷிண விஹாரத்திலுள்ள ஸ்தூபத்துக்கு ஒரு கவசத்தை அளித்தான். மகாமேகவன விஹாரத்தின் சுவர்களை எடுத்துவிட்டு அங்கு உணவு விடுதிகளை அமைத்தான்.

13. மகா விஹாரத்திலிருந்து, தக்ஷிண விஹாரத்துக்கு ஒரு சாலையமைத்தான்.

14. பூதராம விஹாரத்தையும் ராமகோணக விஹாரத்தையும் நந்ததீசாராமாவையும் அமைத்தான்.

15. கிழக்குப் புறத்தில் அரசன் கங்கராஜி என்ற இடத்தில் அனுலதீச பர்வத விஹாரத்தைக் கட்டினான். நியிலதிசாராமாவையும், பீலபித்தி விஹாரத்தையும், ராஜ மகா விஹாரத்தையும் கட்டினான்.



16. இதேபோல் மூன்று இடங்களில் உபோசத மண்டபங்களைக் கட்டினான்.

17. கல்யாணிக விஹாரம், மந்தலகிரி விஹாரம், துபலவாபிதீச விஹாரம் ஆகிய மூன்று இடங்களே அவை.

18. கணித தீசனுடைய மறைவுக்குப் பின்னர் அவனுடைய மகன் குஜநாகன் என்பவன் ஒரு வருட காலம் ஆட்சி செய்தான்.

19. குஜநாகனுடைய தம்பி குஞ்சநாகன் என்பவன் அண்ணனைக் கொன்றுவிட்டு அரசனாகி இலங்கையை இரண்டு வருட காலம் ஆண்டான்.

20. ஏகநாழிகைப்* பஞ்சத்தின்போது ஐநூறு பிக்குகளுக்கு தவறாமல் உணவளிக்க ஏற்பாடு செய்தான் இந்த அரசன்.

21. குஞ்சநாகனுடைய மனைவியின் தம்பி ஸ்ரீ நாகன் என்பவன் படைத் தலைவனாக இருந்து வந்தான்.

22. அவன் அரசனுக்கெதிராகக் கிளர்ச்சி செய்யத் தொடங்கினான். போதிய படை வீரர்களைத் திரட்டியதும் தலைநகரைத் தாக்கினான்.

23. அரசனுடைய படைகளுடன் போரிட்டு குஞ்சநாகனைத் தோற்று ஓடும்படி செய்தான். இலங்கையின் ஆட்சியைத் தன் வசப்படுத்திக் கொண்டு அனுராதபுரத்தில் பத்தொன்பது வருட காலம் ஆண்டான்.

24. அற்புதமான முறையில் பொன்மூலாம் பூசிய குடையொன்றை மகா ஸ்தூபத்துக்குக் காணிக்கை செலுத்தினான்.

*நாழி என்பது கையளவைக் குறிக்கும் ஒரு அளவை. ஒரு கவளம் சோறுகூடக் கிடைக்காமல் மக்கள் திண்டாடும் அளவுக்குப் பஞ்சம் நிலவியதால் அதற்கு ஏகநாழிகைப் பஞ்சம் என்று பெயர்.

25. ஐந்து மாடி உயரமுள்ளதாக லோக பாஸா தாவைக் கட்டினன். மகா போதி விருட்சத் துக்குச் செல்லும் நான்கு வாயில்களிலும் படி களைப் புதுப்பித்துக் கட்டினன்.

26. இந்த இரண்டையும் செய்து முடித்ததும் அதற் கான அபிஷேக விழா ஒன்று நடத்தச் செய் தான். இரக்கம் மிகுந்தவனாக அவன் இலங் கைத் தீவு முழுவதிலுமுள்ள குடும்பத்தினர் செலுத்திய வரியைக் குறைத்தான்.

27. ஸ்ரீநாகனுடைய மறைவுக்குப் பின்பு அவ னுடைய மகன் தீசன் நீதிநெறி யுணர்ந்து இருபத்திரண்டு வருட காலம் ஆண்டான்.

28. தண்டனையாக அங்கஹீனப்படுத்துவதை சட் டத்தின்மூலம் அவன் தடை செய்ததன் காரண மாக வோஹாரிக தீசன் எனப் பெயர் பெற்ருன்.

29. கப்புக காமத்தில் வசித்த தேவ தேரருடைய போதனைகளைக் கேட்டபின் ஐந்து விஹாரங் களைப் புதுப்பித்தான்.

30. அனுரா ராமாவில் வசித்த மகாதீச தேரரிடம் மதிப்புக்கொண்டு முஸில பட்டணத்தில்* பிட்சையளிக்க ஏற்பாடு செய்தான்.

31. இரண்டு மகா விஹாரங்களிலும் தீசராஜன் மண்டபங்களைக் கட்டியதும், மகா போதி விருட்ச ஆலயத்தில் இரு வெண்கலச் சிலைகளை அமைத்ததும்,

*முஸில பட்டணம் என்பது வெண்கலத்திலான கப்ப லுடைய பெயராகும். இதில் காணிக்கை செலுத்தப்படுவது வழக்கம். இதுபோன்ற கல்லாலான கப்பல்கள் பல அனுராதபுரத்தில் காணப்படுகின்றன.



32. சதபர்ணக பாஸாதாவை அமைத்ததும் மகா விஹாரத்துக்கு மாதந்தோறும் ஆயிரம் பணம் அளிக்க ஏற்பாடு செய்தான்.

33. அபயகிரி விஹாரத்திலும், தக்ஷிணமூல விஹா ரத்திலும், மாரிசவதி விஹாரத்திலும், குலாலி தீச விஹாரத்திலும்,

34. மஹியங்கன விஹாரத்திலும் மகா காமனக விஹாரத்திலும், மகா நாகதீச விஹாரத்திலும், கல்யாணிக விஹாரத்திலும் அவைகளின் எட்டு ஸ்தூபங்களிலும் குடைகளை அமைத்தான்.

35. மூலநாக சேனபதி விஹாரத்திலும், தக்ஷிண விஹாரத்திலும்,

36. மாரிசவதி விஹாரத்திலும், புத்தபாக விஹாரத் திலும், இஸர சமண விஹாரத்திலும் நாக தீபத்திலுள்ள தீச விஹாரத்திலும்—

37. இந்த ஆறு விஹாரங்களிலும் அவன் சுவர் எழுப்பினன். அனுராராமா விஹாரத்தில் ஒரு உபோசத மண்டபத்தையும் கட்டினன்.

38. ஆரிய வம்சம்* படிக்கப்படும் சமயங்களில் தீவு முழுவதும் சத்திய மார்க்கத்துக்கு வணக்கம் தெரிவிக்கும் முறையில் பிட்சை அளிக்க ஏற்பாடு செய்தான்.

39. முந்நூருயிரம் பணம் செலவிட்டு தர்மரட்சக னை இம்மன்னன் கடன்பட்டிருந்த பிக்குகளை அக்கடன் தொல்லையிலிருந்து விடுவித்தான்.

40. பெரிய அளவில் விசாக விழா ஒன்று நடத்தச் செய்து தீவு முழுவதும் வசித்த பிக்குகளுக்கு மூன்று ஆடைகளை வழங்கினன்.

*ஆரிய வம்சம் என்பது புத்தமதப் பெரியோர்களுடைய வரலாற்றைக் கூறுவது. மக்களைப் புனிதப்படுத்துவதற்காக இது உரக்கப் படிக்கப்படுவது வழக்கம்.

41. வேதுலியக்* கொள்கையை வளரவிடாமல் தடுத்து, மந்திரி கபிலன் மூலம் மதக் கொள்கைக்கு எதிரிகளை அடக்கினான். இதன் மூலம் உண்மை மார்க்கம் ஒளிபெற்றுத் திகழச் செய்தான்.

42. இந்த அரசனுடைய தம்பி அபயநாகன் என்பவன் ராணியின் காதலனாக இருந்தான். இது அரசனுக்குத் தெரிந்துவிட்டது.

43. அதனால் அண்ணனுக்குப் பயந்து அவன் வேலைக்காரர்களுடன் பாலாதித்தத்துக்கு ஓடிவிட்டான். அங்கிருந்த மாமனிடம் கோபம் கொண்டவனைப்போல அவனுடைய கையையும் காலையும் வெட்டி விட்டான்.

44. அவனை அரசைப் பிளவுபடுத்துவதற்காக அங்கேயே விட்டுவிட்டுத் தன் ஆட்களுடன் சென்றான்.

45. நாயைப்போல் நன்றியுடன் நடந்துகொள்ள வேண்டும் என்று தன் ஆட்களுக்குக் கூறிவிட்டு அபயன் கப்பலேறி மறுகரைக்குச் சென்றான்.

46. மாமன் சுபதேவன் மன்னனிடம் சென்று அவனிடம் நண்பனைப்போல் நடந்துகொண்டு அரசில் பிளவு ஏற்படுத்தினான். இதை அவன் அறிவதற்காக அபயன் அவனிடம் ஒரு ஆளை அனுப்பினான்.

47. சுபதேவன் அவனைக் கண்டதும் தன் கையிலிருந்த ஈட்டியினால் ஒரு பாக்குமரத்தை சுற்றியிருந்த மண்ணைக் கீறிவிட்டு அதைக் கையினால் ஓங்கி யடித்துக் கீழே விழச் செய்தான்.

48. பிறகு செய்திகொண்டு வந்தவனை மிரட்டி விரட்டிவிட்டான். அவன் அபயனிடம் சென்று நடந்ததைக் கூறினான்.

* வேதுலியக் கொள்கை—மகாயானக் கொள்கை.



49. அபயன் இதை யறிந்ததும் பல தமிழர்களைத் தன்னுடன் அழைத்துக்கொண்டு அண்ணனுடன் போர் புரியத் தலைநகரை நோக்கிப் படையுடன் புறப்பட்டான்.

50. இதை யறிந்ததும் அரசன் தன் மனைவியுடன் ஒரு குதிரைமேலேறித் தப்பி மலயத்தை அடைந்தான்.

51. தம்பி அவனைத் தொடர்ந்தான். மலயத்தில் அரசனைக் கொன்றபின் ராணியுடன் தலைநகருக்குத் திரும்பி அரசனாகி எட்டு வருட காலம் ஆண்டான்.

52. இந்த அரசன் மகாபோதி விருட்சத்தைச் சுற்றி கல் மேடை யொன்று அமைத்தான். லோகபாஸாதாவின் முற்றத்தில் ஒரு மண்டபம் கட்டினான்.

53. இருநூறாயிரம் பணத்துக்கு எல்லாவிதமான உடைகளையும் வாங்கி தீவிலுள்ள எல்லா பிக்குகளுக்கும் வழங்கினான்.

54. அபயனுடைய மரணத்துக்குப் பின்பு அவனுடைய அண்ணன் தீசனுடைய மகன் ஸ்ரீநாகன் இலங்கையில் இரண்டு வருட காலம் ஆட்சி செய்தான்.

55. மகா போதி விருட்சத்தைச் சுற்றி இருந்த சுவரை இவன் புதுப்பித்தான்.

56. பின்பு அதன் ஆலயத்தில் முசிலமரத்துக்குத் தெற்கே அழகிய ஹம்சவதத்தையும், ஒரு பெரும் மண்டபத்தையும் கட்டினான்.

57. தந்தையின் மறைவுக்குப் பின்பு ஸ்ரீநாகனுடைய மகன் விஜயகுமாரன் என்பவன் ஒரு வருட காலம் ஆட்சி செய்தான்.

58. அச்சமயம் மஹியங்கணையில் மூன்று லம்பகர்ணர்கள் நண்பர்களாக வாழ்ந்து வந்தனர்.

சங்கதீசன், சங்கபோதி, கோதகாபயன் என்பது அவர்களுடைய பெயராகும்.

59. அரசனிடம் சேவை செய்வதற்காக அவர்கள் அனுராதபுரத்துக்கு வந்து கொண்டிருந்த போது தீசவாபியருகில் ஒரு குருடனைக் கண்டார்கள். நடக்கப் போவதை யறியும் சக்தி படைத்திருந்த அக்குருடன் அவர்களது காலடி யோசையைக் கேட்டதும்,

60. 'மூன்று மன்னர்களை இந்த மண் தாங்குகிறது' என்று கத்தினான். பின்னால் நடந்து வந்து கொண்டிருந்த அபயன் இதைக் கேட்டதும் அவன் கூறியதன் பொருள் என்னவெனக் கேட்டான்.

61. குருடன் தான் சொன்னதை மீண்டும் ஒரு முறை கூறினான். 'யாருடைய வம்சம் நிலைக்கும்?' என்று அபயன் கேட்டான். 'கடைசியாக வந்தவனுடையது' என்றான் குருடன். இதைக் கேட்டதும் அவன் மற்றவர்களுடன் மேலே நடந்து சென்றான்.

62. தலைநகரை யடைந்ததும் மூவரும் அரசனுடைய நம்பிக்கைக்குரிய ஆலோசகர்களாக அமர்ந்து ராஜசேவகம் செய்து வந்தனர்.

63. அவர்கள் ஒன்றுசேர்ந்து அரண்மனையிலேயே விஜயனைக் கொன்றனர். மற்ற இருவரும் சங்கதீசனை அரசனாக முடிசூட்டினர்.

64. சங்கதீசன் புகழ்மிக்க அனுராதபுரத்தில் நான்கு வருட காலம் ஆட்சி செய்தான்.

65. அவன் மகாஸ்தூபத்துக்கு பொன்முலாம் பூசிய குடையைக் காணிக்கை செலுத்தினான். மேலும் ஒவ்வொன்றும் நூறாயிரம் பணம் மதிப்புள்ள நான்கு ரத்தினங்களையும் அளித்தான்.



66. இவற்றை ஸ்தூபத்தின் நான்கு புறங்களிலும் பதித்து ஸ்தூபத்தைச் சுற்றிப் பளிங்கினாலான வளையம் அமைத்தான்.

67. இதற்கெனக் கொண்டாடப்பட்ட அபிஷேக தினத்தன்று நாற்பதாயிரம் பிக்குகளுக்கு ஆறு உடைகளை வழங்கினான்.

68. ஒருநாள் தாமஹாலகத்தில் வசித்துவந்த மகாதேவ தேரரிடம் இந்த அரசன் கந்தகத்தைச்* சொல்லக் கேட்டான்.

69. அரிசிக் கஞ்சி வழங்குவதின் பெருமையை அதிலிருந்து தெரிந்துகொண்ட அரசன் மகிழ்வடைந்து பக்தியுடன் நகரின் நான்கு வாயில்களிலும் பிக்குகளுக்கு நல்ல முறையில் தயாரிக்கப்பட்ட அரிசிக் கஞ்சியைத் தாராளமாக வழங்கினான்.

70. அரசன் அவ்வப்போது அரண்மனைப் பெண்களுடனும், மந்திரிகளுடனும் பாசீன தீபகத்துக்கு** நாவல்பழத்தை அருந்தப் போவது வழக்கம்.

71. இவன் வருவதை விரும்பாத அங்கிருந்த மக்கள் அரசன் பழங்களைப் பறித்துண்ணும் நாவல் மரத்துக்கு விஷமூட்டி விட்டனர்.

72. விஷமூட்டிய பழத்தைத் தின்ற அரசன் அந்த இடத்திலேயே உடனே இறந்து விட்டான். படைகளின் தலைவனாக இருந்து வந்த சங்கபோதிக்கு அபயன் பட்டாபிஷேகம் செய்து வைத்தான்.

*வினய பிடகத்தில் ஒரு பகுதி.

**இதற்கு கிழக்குத் தீவு என்று பொருள். இலங்கையின் ட முனைக்கும் இந்தியாவுக்கு மிடையேயுள்ள ஒரு தீவு இது

73. ஸ்ரீ சங்கபோதி என்னும் பெயருடன் இவன் அனுராதபுரத்தில் பஞ்ச சீலங்களையும் கடைப் பிடித்து இரண்டு வருட காலம் ஆண்டான்.

74. மகா விஹாரத்தில் இவன் அழகிய சலாகா விடுதியொன்றை அமைத்தான். பஞ்சத்தின் காரணமாக மக்கள் கஷ்டப்படுவதை இவன் அறிந்தான்.

75. இரக்கத்தினால் மனம் உருகிய மன்னன் மகா ஸ்தூபத்தின் முற்றத்தில் படுத்து ஒரு பிரதிக்ஞை எடுத்துக் கொண்டான்.

76. 'தேவர்கள் மழைபொழியச் செய்து இந்த இடத்திலிருந்து என்னை எழுப்பினாலன்றி இங்கிருந்து போக மாட்டேன். இங்கேயே இறந்து போவதானாலும் சரி.'—இதுவே பிரதிக்ஞை,

77. உடனே தேவர்கள் தீவு முழுவதும் மழை பொழியச் செய்து வறண்ட மண்ணுக்கு வள மூட்டினர்.

78. தான் மிதக்கும் அளவுக்கு நீர் உயரவில்லை யென்று அப்போதும் அரசன் எழுந்திருக்க வில்லை. அதன்பேரில் மந்திரிகள் வடிகால்களை அடைத்தனர்.

79. இப்போது மிதக்கும் அளவுக்கு முற்றத்தில் நீர் நிரம்பிவிடவே அரசன் எழுந்தான். இரக்கத் தின் காரணமாக இவ்வழியில் அவன் தீவில் பஞ்ச அபாயத்தைப் போக்கினான்.

80. 'இங்குமங்கும் சிலர் கிளர்ச்சி செய்கின்றனர்' என்ற செய்தி கேட்டதும் அவன் அவர்களைப் பிடித்துக்கொண்டு வருமாறு செய்தான். ஆனால் அவர்களை ரகசியமாக விடுவித்து விட்டான்.



81. ரகசியமாக சில சவங்களைக் கொண்டுவரச் செய்து அவற்றைப் பகிரங்கமாக எரித்து மக்கள் மனதில் பயமூட்டி கிளர்ச்சிக்காரர்களை அடக்கினான்.*

82. ரத்தகி என்னும் பெயருடைய யக்ஷன் இங்கு வந்து மக்களுடைய கண்களைச் சிவப்பாகச் செய்துகொண்டிருந்தான்.

83. ஒருவர்க்கொருவர் கண் சிவந்திருப்பதைப் பற்றிப் பேசினாலே உடனே மடிந்து விடுவர். பயமின்றி யக்ஷன் அவர்களை விழுங்கி வந்தான்.

84. அரசன் இதைப்பற்றிக் கேள்விப்பட்டதும், மனதில் கவலையடைந்தவனாக உபோசத நியமங் களைக் கடைப்பிடித்து உண்ணாவிரதம் மேற் கொண்டான்.

85. 'யக்ஷனைக் காணும் வரை விரதத்தைக் கைவிட மாட்டேன்' என்று சபதம் செய்தான். அவ னுடைய பக்தியின் சக்தியால் யக்ஷன் அவ னிடம் வந்தான்.

86. 'நீ யார்?' என்று அரசன் கேட்டதற்கு, 'நான் தான் யக்ஷன்' என்று பதிலளித்தான்.

87. 'என்னுடைய குடிகளை ஏன் கொல்கிறாய்? அவர்களை விழுங்காதே' என்று அவனிடம் அரசன் வேண்டிக் கொண்டான். 'ஏதாவது ஒரு பகுதி மக்களை எனக்குக் கொடுத்துவிடு. மற்றவர்களை விட்டுவிடுகிறேன்' என்றான்

*உண்மையில் கிளர்ச்சி செய்தவர்கள்தான் எரிக்கப்பட் டனர் என்று எண்ணி மக்கள் ஏமாறும் விதத்தில் ஒரு நாட கம் நடத்தினான்.

ரத்தகி என்றால் சிவப்புக் கண் என்று பொருள். அந்த யக்ஷன் ஒரு பயங்கர ஜுரத்தை ஏற்படச் செய்தான். ஜுரம் வருமுன் கண்கள் வீங்கிச் சிவந்து போகும். 'Scarlatina' என்னும் ஜுரம்.

யக்ஷன். 'அது முடியாது' என்று அரசன் பதில் அளித்தான்.

88. யக்ஷன் படிப்படியாகத் தனது கோரிக்கையைக் குறைத்துக்கொண்டே வந்து கடைசியில் 'ஒரே ஒரு மனிதனைக் கொடு' என்றான். 'என்னைத் தவிர வேறு யாரையும் உனக்கு நான் தர முடியாது. என்னை வேண்டுமானால் விழுங்கு' என்றான் அரசன். 'அது முடியாது' என்று கூறிய யக்ஷன் கடைசியாக எல்லாக் கிராமத்திலும் தனக்குப் படையல் போடுமாறு வேண்டினான்.

89. 'சரி அப்படியே யாகட்டும்' என்றான் மன்னன். பிறகு தீவு முழுவதும் படையல் போடுமாறு கட்டளையிட்டான்.

90. இவ்வாறு உயிர்களிடம் இரக்கம் கொண்ட இம் மகாத்மாவினால் தீவில் கொள்ளைநோய்க்கு முடிவேற்பட்டது.

91. அரசனுடைய மந்திரியாக இருந்த கோதகாபயன் கிளர்ச்சிக்காரனாக மாறி வடக்கேயிருந்து தலைநகர் நோக்கிப் படையெடுத்தான்.

92. தன்னுடைய நீர் வடிகட்டியை எடுத்துக் கொண்டு அரசன் தான் மட்டும் தனியாக மற்றவர்களுக்கு கஷ்டம் நேரக்கூடாது என்பதற்காக தென் வாயில் வழியே தப்பி ஓடினான்.

93. சாலை வழியே கூடையில் உணவுடன் எதிரே வந்த ஒருவன் உணவருந்துமாறு அரசனைப் பணிவுடன் பலமுறை வேண்டினான்.

94. இரக்கம் மிக்க அரசன் நீரை வடிகட்டி உணவருந்தியதும் அன்புடன் இவ்வாறு சொன்னான்.

95. 'நான்தான் சங்கபோதி அரசன். என்னுடைய தலையைக் கொண்டுபோய் கோதகாபயனிடம் காட்டு. அவன் உனக்கு நிறையப் பொன் தருவான்' என்றான்.



96. இவ்வாறு செய்ய அவன் மறுத்தான். அவனுக்கு உதவுவதற்காக அரசன் உட்கார்ந்து தன் உயிரை நீத்தான்.

97. மற்றவன் அரசனுடைய தலையைக் கொண்டு போய் கோதகாபயனிடம் காட்டினான். அவன் வியப்படைந்தவனாக அவனுக்கு நிறையப் பொன் கொடுத்தனுப்பி இறந்தவனுக்குரிய ஈமச் சடங்குகளைச் செய்தான்.

98. மேகவர்ண அபயன் என்றும் அழைக்கப்பட்ட கோதகாபயன் இலங்கையில் பதிமூன்று வருட காலம் ஆட்சி செய்தான்.

99. அவன் ஒரு அரண்மனையைக் கட்டினான். அரண்மனை வாயிலில் ஒரு மண்டபத்தைக் கட்டி அங்கு தினந்தோறும் ஆயிரத்தெட்டு பிக்குகளை வரவழைத்து,

100. அமர்த்தி, உபசரித்து, அரிசிக் கஞ்சியும் இதர நல்லுணவுகளும் அளித்து மகிழ்ந்தான்.

101. உடைகளையும், இதர பொருள்களையும் ஏராளமாகக் கொடுத்தான். இவ்வாறு இருபத்தோரு நாட்களுக்கு அவன் செய்தான்.

102. மகா விஹாரத்தில் அவன் அற்புதமான கல் மண்டபம் ஒன்றை அமைத்தான். லோகபாஸாதாவின் தூண்களைப் புதுப்பித்தான்.

103. போதி விருட்சத்துக்குக் கல்மேடை ஒன்றை இவன் அமைத்தான். வடபுற வாயிலில் வளைவை அமைத்தான். முற்றத்தின் நான்கு மூலைகளிலும் தர்ம சக்கரம் பொறித்த தூண்களை நட்டான்.

104. மூன்று வாயில்களில் அவன் மூன்று கற்சிலைகளை அமைத்தான். தெற்கு வாயிலில் கல்லாசனம் ஒன்றை அமைத்தான்.

105. மகா விஹாரத்துக்கு மேற்குப் புறத்தில் தியானப் பயிற்சிக்கான ஒரு இடத்தை அமைத்தான். தீவு முழுவதும் சேதமடைந்த விஹாரங்களைப் புதுப்பித்தான்.

106. தூபராமாவில் தூப ஆலயத்தை புதுப்பித்துக் கட்ட உத்தரவிட்டான். அம்பாதல மடத்தையும் புதுப்பித்தான்.

107. மணிசோம ஆராமாவிலும், தூபராமாவிலும், மாரிசவதி விஹாரத்திலும் தக்ஷிண விஹாரத்திலும் உபோசத மண்டபங்களைப் புதுப்பித்தான்.

108. மேகவர்ண அபய விஹாரம் என்ற புதிய விஹாரம் ஒன்றையும் அவன் அமைத்தான்.

109. இந்த விஹாரத்தின் அபிஷேக தினத்தன்று அவன் தீவில் வசித்த முப்பதாயிரம் பிக்குகளைக் கூட்டி அவர்களுக்கு ஆறு உடைகளை வழங்கினன். அப்போது பெருமளவில் விசாக விழாவுக்கும் ஏற்பாடு செய்தான்.

110. ஆண்டுதோறும் பிக்குகளுக்கு ஆறு உடைகளை வழங்கினன்.

111. கொள்கைக்கு மாறுனவர்களை அடக்கியதன் மூலம் மதத்தைப் புனிதப்படுத்தினன். அபய கிரி விஹாரத்தில் இருந்த அறுபது பிக்குகளைக் கைது செய்தான்.

112. வேதுல்லியக் கொள்கையை மேற்கொண்ட அவர்கள் புத்தருடைய போதனைகளுக்கு கேடு பயப்பவர்களாக இருந்தனர். அவர்களை மதப் பிரஷ்டம்செய்து மறுகரைக்கு நாடுகடத்தினன்.



113. சோழ நாட்டைச் சேர்ந்த சங்கமித்திரன் என்ற ஒரு பிக்கு பேயோட்டுவது போன்ற மந்திரங்களைக் கற்றவர். நாடு கடத்தப்பட்ட தேரர் ஒருவருக்குச் சீடராக இவர் இருந்து பின்னர் மஹா விஹார பிக்குகளிடம் வெறுப் படைந்தவராக இங்கு வந்தார்.

114. தூபராமாவில் கூடியிருந்த பிக்குகள் கூட்டத்தில் வலிய நுழைந்து அங்கு சங்கபால பரிவேணவில் வசித்த தேரர் சொன்ன வார்த்தைகளை மறுத்துப் பேசினர்.

115. அந்த தேரருடைய பெயர் கோதாபயன் என்பதாகும். இவர் அரசனுக்குத் தாய் மாமன்.

116. இவர் அரசனுடைய மாளிகையில் நிரந்தர விருந்தாளியாகத் தங்கியிருந்தார். அவரிடம் மிகவும் திருப்தியடைந்திருந்த மன்னன் தன்னுடைய மூத்த மகன் ஜேக தீசனையும், இளைய மகன் மகா சேனனையும் பிக்குவின் பொறுப்பில் விட்டிருந்தான்.

117. பிக்கு இரண்டாவது மகனிடம் விசேஷ அன்பு பாராட்டி வந்ததால் ஜேகதீசன் அவரிடம் விரோதம் கொண்டிருந்தான்.

118. தந்தையின் மறைவுக்குப் பின்னர் ஜேத தீசன் அரசனாக வந்தான். அரசனுடைய ஈமச் சடங்கின்போது தன்னுடன் ஊர்வலத்தில் வராத மந்திரிகளை அவன் தண்டிக்க எண்ணினன்.

119. முதலில் தம்பியைப் போகவிட்டு பின்னல் சடலத்தை எடுத்துச் செல்லச் செய்தான்.

120. அதற்குப் பின்னல் மந்திரிகளை வரச் செய்து ஊர்வலத்தின் கடைசியில், தான் வந்தான். தம்பியும் சடலமும் வாயிலைக் கடந்து வெளியேறியதும் சட்டென்று கதவை மூடச் செய்தான்.

121. பின்பு துரோகிகளான மந்திரிகளைக் கொன்று தந்தையின் சிதையைச் சுற்றி அவர்கள் உடல்களைக் கம்பத்தில் நட்டு வைக்கச் செய்தான்.

122. இவ்வாறு செய்ததன் காரணமாக 'கொடிய' என்ற அடைமொழியால் அவன் அழைக்கப்பட்டான்.

123. பிக்கு சங்கமித்திரர் அரசனிடம் பயம் கொண்டவராக அவனுடைய பட்டாபிஷேகத்தின் போது மறுகரைக்குச் சென்று விட்டார். மகாசேனனைக் கலந்துகொண்டே இவ்வாறு செய்த அவர், அவன் பட்டத்துக்கு வரும் காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

124. தந்தையினால் முடிக்கப்படாமல் விடப்பட்டிருந்த லோகபாஸாதாவை ஏழு மாடி உயரமுள்ளதாக ஜேத தீசன் கட்டினான். இப்போது அதனுடைய மதிப்பு ஒரு கோடியாயிற்று.

125. அறுபதாயிரம் பணம் பெறுமான ஒரு ரத்தினத்தை அதற்குக் காணிக்கையாக அளித்ததும் ஜேத தீசன் அதற்கு மணி பாஸாதா எனப் பெயரிட்டான்.

126. மகா ஸ்தூபத்துக்கு விலை மதிப்புள்ள இரண்டு ரத்தினங்களைக் காணிக்கை செலுத்தினான். மகா போதி விருட்ச ஆலயத்துக்கு அவன் மூன்று வாயில்களை யமைத்தான்.

127. பாசீன தீசபர்வத விஹாரத்தைக் கட்டியதும் அரசன் அதைப் பிக்குகளுக்கு வழங்கினான்.

128. தேவனம்பிரிய தீசன் தூபராமாவில் பிரதிஷ்டை செய்த பழைய அழகான கற்சிலையை,

129. ஜேததீசன் அங்கிருந்து அப்புறப்படுத்தி பாசீன தீச பர்வத ஆராமாவில் பிரதிஷ்டை செய்தான்.



130. காலமதிக வாபியை சேதிய பர்வத விஹாரத்துக்குக் கொடுத்தான்.

131. மகத்தான விசாக விழா ஒன்றினை நடத்தி முப்பதாயிரம் பிக்குகளுக்கு ஆறு உடைகளை வழங்கினான். ஆலம்பகாம வாபியையும் ஜேத தீசன் ஏற்படுத்தினான்.

132. பாஸாதா கட்டுவதிலிருந்து தொடங்கி இவ்வாறு பெருமைக்குரிய பல காரியங்களைச் செய்த மன்னன் பத்து வருட காலம் அரசாண்டான்.

133. அரசுரிமை, பெருமைக்குரிய பல காரியங்களைச் செய்வதற்கு ஆதாரமாக இருப்பதுபோலவே பல அநீதிகளுக்கும் காரணமாக இருக்கிறது. இதை உணர்ந்து நடக்கும் பக்திமான்கள் அரச போகம் குறித்து ஆனந்தம்கொள்ள மாட்டார்கள். விஷததுடன் கலந்த இனிய உணவாகக் கருதியே நடப்பார்கள்.

**மகாவம்சத்தில் 36-வது அத்தியாயமான பதிமூன்று அரசர்கள் முற்றும்**

## முப்பத்து ஏழாவது அத்தியாயம்

# மகாசேன மன்னன்

1. ஜேத தீசனுடைய மரணத்துக்குப் பின்னர் அவனுடைய தம்பி மகாசேனன் இருபத்தேழு வருட காலம் அரசனாக இருந்தான்.

2. அவனை அரசனாகப் பட்டாபிஷேகம் செய்வதற்கு மறு கரையிலிருந்து சங்கமித்திர தேரர் இங்கு வந்தார்.

3. பட்டாபிஷேகத்தையும் வேறு பலவிதமான சடங்குகளையும் செய்துமுடித்ததும் மகா விஹாரத்தை அழிக்க விரும்பிய கட்டுப்பாடில்லாத அந்தப் பிக்கு,

4. இவ்வாறு கூறி அரசனைத் தம் வசப்படுத்திக் கொண்டார். 'மகா விஹாரத்தில் வசிப்பவர்கள் உண்மையான வினயத்தைப் போதிப்பது இல்லை. நாங்கள் தான் உண்மையான வினயத்தைப் போதிப்பவர்கள்.'

5. இதன்பேரில் அரசன் 'மகா விஹாரத்தில் வசிக்கும் பிக்குகளுக்கு யார் உணவு அளித்தாலும் அவர்களுக்கு நூறு பணம் அபராதம் விதிக்கப்படும்' என்று கட்டளை பிறப்பித்தான்.

6. மகா விஹாரத்தில் வசித்த பிக்குகளுக்கு இதனால் பஞ்சம் ஏற்பட்டது. அதனால் அவர்கள் அதை விட்டுவிட்டு மலயத்துக்கும் ரோஹணவுக்கும் சென்று விட்டனர்.

7. இவ்வாறு பிக்குகள் போய்விடவே மகா விஹாரம் ஒன்பது வருட காலத்துக்குக் காலியாகக் கிடந்தது.

8. 'உடையவர்கள் இல்லாத இடம் அரசனுக்குரியது' என்று புத்தியற்ற அரசனைக் கூறுமாறு அறிவற்ற அத்தேரர் செய்தார்.

9. பின்பு மகா விஹாரத்தை அழிக்க அரசனுடைய அனுமதியைப் பெற்றுக்கொண்டு இந்த பிக்கு மனதில் விரோத எண்ணத்துடன் அதை அழிக்க ஆட்களை ஏவி விட்டார்.

10. சங்கமித்திர தேரருடைய சீடனும் அரசனுடைய அபிமான மந்திரியுமான சோண என்பவனும், வெட்கம் இல்லாத பிக்குகளும்,

11. ஏழு மாடி உயரமுள்ள மகத்தான லோக பாஸாதாவை அழித்ததும் அங்கிருந்த பொருள்கள் யாவற்றையும் அபயகிரிக்குக் கொண்டு சென்றனர்.

12. மகா விஹாரத்திலிருந்து எடுத்துச் சென்ற பொருள்களால் அபயகிரி விஹாரம் வளம் மிக்கதாக ஆயிற்று.

13. தீய நண்பரான சங்கமித்திரர், சோண ஆகியவர்களுடைய சொற்படி கேட்டு அரசன் பல தீய காரியங்களைச் செய்தான்.

14. பாசீன தீச பர்வதத்திலிருந்த பெரிய கற்சிலையைக் கொண்டுவரச் செய்து அபயகிரி விஹாரத்தில் பிரதிஷ்டை செய்தான்.

15. அந்தச் சிலைக்கு ஒரு கட்டிடம் அமைத்தான். போதி விருட்சத்துக்கு ஒரு ஆலயம் எழுப்பினான். அழகிய தாது மண்டபம் ஒன்றை அமைத்தான். குகுட பரிவேணவைப் புதுப்பித்துக் கட்டினான்.

16. இரக்கமின்றி நடந்துகொண்ட சங்கமித்திர தேரரால் அபயகிரி விஹாரம் காட்சிக்கு இனியதாக அமைந்து விட்டது.

17. மேகவர்ண அபயன் என்னும் பெயருடைய மந்திரி அரசனுக்கு உற்றவனாக இருந்தான். மகா விஹாரம் அழிக்கப்பட்டதால் அவன் அரசனிடம் கோபம் கொண்டான்.

18. அவன் கிளர்ச்சிக்காரனாக மாறி மலயத்தை யடைந்து பெரும் படை திரட்டி தூர தீசக வாபி அருகே படையுடன் முகாமிட்டான்.

19. அரசன் இதை யறிந்து அவனுடன் போர் செய்யப் புறப்பட்டு அங்கு சென்று படை யுடன் முகாமிட்டான்.

20. மற்றவனிடம் மலயத்திலிருந்து கொண்டு வந்திருந்த நல்ல பானமும் உணவும் இருந்தன. 'நண்பனான அரசனுக்குக் கொடுக்காமல் நாம் சாப்பிடக் கூடாது' என்றவன் எண்ணினான்.

21. அவற்றில் சிறிதளவு எடுத்துக்கொண்டு தானே தனியாக இரவில் அரசனுடைய கூடாரத்தை யடைந்தான். அரசனிடம் தான் வந்த காரணத்தைச் சொன்னான்.

22. அரசன் அவன் கொண்டுவந்த உணவை உண்டதும் 'ஏன் கிளர்ச்சிக்காரனாக மாறினாய்?' என்று அவனைக் கேட்டான்.

23. 'தங்களால் மகா விஹாரம் அழிக்கப்பட்டதன் காரணமாக' என்று அவன் பதிலளித்தான். 'மகா விஹாரத்தை மீண்டும் வசிப்பதற்குரிய தாகச் செய்துவிடுகிறேன். என் தவறை மன்னித்துவிடு' என்றான் அரசன்.

24. இதனால் அரசனிடம் கோபம் தீர்ந்தவனானான் மந்திரி. அவன் யோசனைப்படி அரசன் தலை நகருக்குத் திரும்பினான்.

25. ஆனால் மேகவர்ண அபயன் அரசனுடன் தலை நகருக்குத் திரும்பவில்லை. மகா விஹாரத்தைப் புதுப்பித்துக் கட்ட வேண்டிய பொருள்களைத் திரட்டும் வேலையில் அவன் ஈடுபட்டான்.



26. அரசனுடைய மனைவிமார்களில் ஒருத்தி மகா விஹாரம் அழிக்கப்பட்டதால் மிகவும் மன வருத்தம் அடைந்திருந்தாள்.

27. இதனால் வெறுப்புக் கொண்ட அவள் விஹாரத்தை அழித்த தேரரைக் கொன்றுவிட ஒரு ஆளை ஏற்பாடு செய்தாள்.

28. தூபராமாவை அழிப்பதற்கு சங்கமித்திர தேரர் வந்துகொண்டிருந்தபோது அவரைக் கொன்றுவிடச் செய்தாள். இதே போல் முறைகேடாக நடந்துகொண்ட சோனாவும் கொல்லப்பட்டான்.

29. மேகவர்ண அபயன் பல பொருள்களைத் திரட்டிக்கொண்டு வந்து மகா விஹாரத்தில் பல பரிவேணைக்களைக் கட்டினான்.

30. அபயனால் பயம் நீங்கப்பெற்ற பிக்குகள் பல இடங்களிலிருந்தும் மீண்டும் வந்து மகா விஹார்த்தில் வசிக்கத் தொடங்கினர்.

31. அரசன் இரண்டு வெண்கலச் சிலைகளைச் செய்து மகா போதி விருட்ச ஆலயத்தின் மேற்குப்புறத்தில் பிரதிஷ்டை செய்தான்.

32. தக்ஷிணராமாவில் வசித்த தீச தேரர் என்பவர் சதிகாரரான சங்கமித்திரருடைய நண்பர் ஆவார்.

33. இவர், எச்சரிக்கை செய்ததையும் பொருட் படுத்தாது மகா விஹாரத்தின் எல்லைக்குள் ஜோதி வனத்தில் ஜேதவன விஹாரத்தைக் கட்டினார்.

34. இதன் காரணமாக பிக்குகள் மகா விஹாரத்தை விட்டு மீண்டும் போய்விட்டனர்.

35. அவர்கள் பல்வேறு இடங்களிலும் மறைவாக வசித்து வந்தனர்.

36. இவ்வாறு மகா விஹாரம் மீண்டும் ஒன்பது மாதங்களுக்குப் பிக்குகளால் கைவிடப்பட்டு விட்டது.

37. முறைகேடாக நடந்தவர்கள் ஆக்ரமிப்பு நின்ற பிறகே, பிக்குகள் மீண்டும் இங்கு வந்து வசிக்கத் தொடங்கினர்.

38. பெருங்குற்றம் புரிந்துவிட்டதாக தீச தேரர் மீது பிக்குகள் சங்கத்தில் புகார் எழுந்தது.

39. நீதி வழுவாதவர் எனப் பெயர்பெற்ற பிரதான மந்திரி இதுபற்றி விசாரணை செய்து அரசனுடைய விருப்பத்துக்கும் மாறாக அத்தேரரை சங்கத்திலிருந்து வெளியேற்றினர்.

40. மணிஹிர விஹாரத்தையும் அரசன் கட்டினன். பிரமதேவதைகளின் கோயில்களை அழித்து மூன்று விஹாரங்களை அமைத்தான்.

41. கோகர்ண விஹாரம், ஏரகாவிலத்தில் ஒரு விஹாரம், கலந்தன் என்ற பிராமணனுடைய கிராமத்தில் ஒரு விஹாரம் ஆகியவற்றை அமைத்தான்.

42. மிககாம விஹாரத்தையும், கங்கா சேன பர்வதத்தையும் கட்டினன். மேற்குப் பகுதியில் தாதுசேன பர்வத் விஹாரத்தைக் கட்டினன். கோகவாத விஹாரத்தையும் அமைத்தான்.

43. தூபராம விஹாரத்தையும் ஹுளபிதி விஹாரத்தையும் கட்டினன். உத்தர, அபய எனப் பட்ட இரு பிக்குணி மடங்களை நிர்மாணித்தான்.

44. காலவேல யக்கனுடைய இடத்தில் ஒரு ஸ்தூபத்தை அமைத்தான். தீவில் பாழடைந்த பல ஆலயங்களைப் புதுப்பித்தான்.



45. ஆயிரம் பணம் மதிப்புள்ள பொருள்களை ஆயிரம் சங்க தேரர்களுக்கு வினியோகித்தான். பிக்குகளனைவருக்கும் உடைகளை வழங்கினன்.

46. அவன் வழங்கிய உணவுப் பொருளகளுக்குக் கணக்கே கிடையாது.

47. நாட்டை மேலும் வளமுடையதாகச் செய்ய அவன் பதினாறு குளங்களை வெட்டினன். மணிஹிர, மகாகாம, கல்லூர, கானு, மகாமணி,

48. கோகவாத, தர்மராம, கும்பாலக, வாஹன, ரத்னமால கந்தக, திசவர்த்தமானக, வேலங்க விதி, மகா கல்லக,

49. சீர, மகாதார கல்லக, காலபாஸண-ஆகியவை அவன் வெட்டிய பதினாறு குளங்களாகும்.

50. கங்கையில் அவன் பர்வதந்தா எனப் பெயர் பெற்ற பெரும் கால்வாயைக் கட்டினன்.

இவ்வாறு அவன் பெரும் புகழும் பெரும் பாவமும் தேடிக்கொண்டான்.

மகாவம்சம்
முற்றும்